உ

சிவமயம்.

# திருக்கழுக்குன்றப்புராணம்.

இத்தலத்துக்கணித்தான-உழலூர்

அந்தகக்கவிவீரராகவமுதலியாரவர்கள்

செய்தருளிய மூலமும்

பேரம்பலத்தம்பிரான்சந்தானம்

ஷை தேவஸ்தானதர்மவிசாரணைக்

கர்த்தர்களிலொருவராகிய

உருத்திரகோடித்தம்பிரானது முயற்சியினால்

வித்துவான்-காஞ்சீபுரம்

**சபாபதிமுதலியார்**

இயற்றியபொழிப்புரையும்

புங்கத்தூர்

**கந்தசாமிமுதலியாரால்**


பு-ம. சபாபதிமுதலியாரவர்களது

கல்விவிளக்க அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன

துந்துபி வரு - தைமீ.

சென்னைமாநகரம்

உ

# புராண அட்டவணை.

| சருக்கங்கள் [illegible] | பக்கம். | பாட்டுத் தொகை. |
|---|---|---|
| பாயிரம் | ௩ | ௧௮ |
| நாட்டுப்படலம் | ௧௫ | ௩௫ |
| நகரச்சருக்கம் | ௨௯ | ௨௯ |
| கயிலாயச்சருக்கம் | ௪௧ | ௩௦ |
| காருடச்சருக்கம் | ௫௩ | ௩௭ |
| வேதகிரிச்சருக்கம் | ௬௫ | ௨௯ |
| உருத்திரகோடிச்சருக்கம் | ௭௭ | ௬௦ |
| நந்திதவச்சருக்கம் | ௯௬ | ௬௩ |
| மாயீசச்சருக்கம் | ௧௧௯ | ௧௦ |
| காமதேனுச்சருக்கம் | ௧௨௩ | ௩௪ |
| நாரதச்சருக்கம் | ௧௩௩ | ௨௩ |
| இந்திரச்சருக்கம் | ௧௪௩ | ௫௦ |
| நாராயணச்சருக்கம் | ௧௬௦ | ௩௨ |
| சதுமுகச்சருக்கம் | ௧௭௧ | ௨௩ |
| வசுதேவச்சருக்கம் | ௧௭௮ | ௯௩ |
| தினகரச்சருக்கம் | ௨௧௪ | ௨௦ |
| முனிகணச்சருக்கம் | ௨௨௩ | ௧௫ |
| திருமணச்சருக்கம் | ௨௨௯ | ௩௯ |
| கங்காசலச்சருக்கம் | ௨௪௩ | ௫௦ |
| பசுவராகச்சருக்கம் | ௨௬௦ | ௩௬ |
| தீர்த்தச்சருக்கம் | ௨௭௨ | ௩௯ |
| தலவிசிட்டச்சருக்கம் | ௨௮௭ | ௫௧ |
| சுரகுருச்சருக்கம் | ௩௦௬ | ௧௬ |

திருச்சிற்றம்பலம்.

உ

# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨௫ | ——— | ௨௫ | தடாங்க | தடாகங் |
| ௭௨ | ௨௧ | ௧ | பிரிது | பிறிது |
| ௮௭ | ——— | ௪ | தானர் | தானவர் |
| ௯௪ | ௫௫ | ௫ | நன் | நண் |
| ,, | ——— | ௧௭ | பேமொலி | பேமொளி |
| ௧௨௦ | ௪ | ௫ | யெனு | யேனு |
| ௧௨௨ | ௧௦ | ௪ | றற்ற | ரற்ற |
| ௧௫௩ | ——— | ௧௬ | பரவ | பாவ |
| ௧௫௨ | ——— | ௧௨ | மூன்று | மூன்றிலுறு |
| ௧௫௯ | ——— | ௧௬ | வரயை | வரையை |
| ௧௬௫ | ௮ | ௫ | தாணு | தானு |
| ௧௬௬ | ௨௨ | ௨ | கூல்றில்னெ | கூன்றினன் |
| ௧௬௯ | ——— | ௮ | நாளிவ் | நாளில் |
| ௧௭௫ | ——— | ௭ | மிழ்ந் | மிழந் |
| ௨௨௪ | ——— | ௨௪ | விதியா | வியா |
| ௨௨௭ | ௧௧ | ௧ | தரவள | தாவள |
| ௨௪௫ | ——— | ௧௧ | இரவர | இரவா |
| ,, | ௫ | ௧ | பார்ந் | பார்த் |
| ௨௪௪ | ௪ | ௫ | சூழ்பர் | சூழ்பவர் |
| ,, | ——— | ௨௫ | பெற்றினை | பேற்றினை |
| ௨௪௮ | ——— | ௧௭ | மேலே | மலே |
| ௨௪௯ | ௮ | ௫ | கோ | கொ |
| ௨௬௧ | ——— | ௨௫ | யுங்கள் | யுங்க |
| ௨௬௫ | ——— | ௨௧ | ள் -ள் | இ-ள் |
| ௨௬௭ | ——— | ௧௧ | க | கலே |
| ௨[illegible]௮ | ——— | ௨௬ | எ-லு | எ-று |
| ௨[illegible]௧ | ௫௬ | ௫ | யுய்ந்த | யுய்ந்தன |
| ௨௮௫ | ௫௫ | ௫ | போக்க | போக |
| ௫௦௫ | ——— | ௧௫ | விருந்தால் | விருத்தல் |
| ,, | ——— | ௧௭ | தகாவர்கள் | தகாதவர்கள் |
| ௫௦௯ | ௧௫ | ௨ | போலல் [று | பொலன் |
| ௫௨௦ | ௧௬ | ௧ | னெல்றே | னென்றே |
| ,, | ,, | ௨ | ரேந்சகயிற் | ரேந்சனைந்கயிற் |



உ

சிவமயம்.

வித்துவான்காஞ்சீபுரம்

# சபாபதிமுதலியாரவர்கள்.

மாணாக்கர்-புரசை-அஷ்டாவதானம்.

## சபாபதிமுதலியார்செய்த

# சிறப்புப்பாயிரம்.



நிலம்பயின்மாந்தர்நலம்பயில்சிவநெறி
புலங்கொளநாளும்பொற்புடனோர்ந்து
கடைப்பிடித்துய்வான்காட்டுங்காட்டெனப்
படைப்பியலறிருன்பன்மாண்காட்சி
முநியர்முன்னிட்டமுனிவருங்காணுஉ
மதியுறவோங்குமறைகளின்வடிவாய்
அலகில்பல்காழ்த்திரளவையெலாந்தழீஇக்
குலவுமாதனக்குவடிதெனத்திகழ்
பான்மைத்தாகிப்பாதகவசுரர்தம்
மேன்மைத்தன்மையைவீழ்த்திடவுன்னி
யுருத்திரகோடியொருங்கினிதெய்தி
யருத்தியிற்பூசையாற்றியதாகிக்
கயிலையிற்போந்தகருடன்செருக்கற்
றயர்வுறவியற்றியரன்மொழிமறுத்த
நந்திதேவர்நாரதமாமுனி
யிந்திரனாராயணனெடுசதுமுகன்
எண்மர்வசுக்களீராறுதினகரர்
உண்மகிழ்முனிக்கணமுயர்தருஞ்சுரர்கள்
எனுமிவர்மாதவமியற்றியதாகி
மனுமொருபவரய்மாதிரிலாத்தலமே

பற்றியசாபமும்பன்றிவடிவாய்
மற்றோரக்கண்மாயீகனென்பவன்
தேய்ந்தசாபமுந்தொலைந்திடச்சுரகுரு
வேந்தனால்விளங்குமியல்பினதாகி
யம்மன்னவனுக்கடுத்தகோக்கொலை
யிம்மெனநீங்கவினிதினிருந்தவன்
பூசையுஞற்றும்பொற்பினதாய்த்திணா
வீசம்பாலிவியனதிவளந்தருந்
தொண்டைநாட்டகத்துச்சொலுமெண்ணானெனச்
சண்பையர்பெருமானாண்டகவேந்து
வண்ணொண்டர்தந்திருவாய்மலர்ந்தருள்சீர்
துன்றுபதிகம்பெறுந்தூய்தலங்களில்
அடுத்திடுமொருதலமாகிப்புலியதள்
உடுத்தவிறைதருமொளிர்மறைப்பாதுகை
வாதவூரடிகள்வைத்துப்பதிகம்
ஓதக்குருவடிவொளிரக்காட்டிய
பேசுந்தலமுமாகியேபிறழும்.
மாசில்கங்காசலமான்மியமியாவும்
வகுத்துரைசெய்யும்வடநூறன்னைப்
பகுத்தியாவரும்பண்புடனுணர்வான்
புரிநிதிவேணியிற்புவிக்கெலாம்பயக்கும்
விரியொளிமுகத்தின்வியனின்றியமையாக்
கனவுறுமிடற்றிற்காதல்கூர்போகமும்
வினவருஞானமும்விளக்கும்வித்தகத்
திருவடிவிண்கண்சிறப்பக்காண்வரும்
ஒருவனிருபதமுக்காலமுமுனிப்
பூசித்துள்ளதுபுகலுமிருவகை
நேசித்துணர்வருநெடுநூலுறையு
ளாந்திருவேதாசலத்தருகண்மிய
பூந்திருமகளும்புனையிசைமடந்தையும்
புல[illegible]தென்றும்பொருந்திவீற்றிருப்ப

வலர்வாயாயிரமணித்தளமாளிகை
யனந்தமேற்கொடரும்பெறணித்தில
வினந்திவளொளிசெயவிமிழ்திரைத்தண்டுறை
திழலூர்தேம்பொழில்உழலூர்ப்பதியினன்
மிக்கவேளாண்குலமேதகுதவமென
இக்கடற்புவியிலெழில்பெறவந்தோன்
கண்ணினுமுயர்மனக்கண்ணினொருவரும்
உண்ணிலாவியற்றமிழியல்பெலாமகங்கை
யுட்கனிபோன்மெனவொருங்கினிதுணர்ந்தோன்
நட்புறுகலைமகணடநவினாவினன்
சொல்லுவோர்சொல்வனதுகளறநோக்குறின்
ஒல்லுவசிலபலவொல்லாவெனுமொழி
பிற்படவுட்பரிந்தற்புறயாவருந்
தேவரும்வியப்பமூவரும்பொருட்பகர்
கண்டகத்திலைக்காணுதுணாத்தாங்
கெண்டருபுலவருளிதமுற்பெற்றுளா
ரித்தகையோன்றனேயெனறுவலும்
அத்தகைநீளிடையவனியிற்பாவ
வாணக்கன்றுமணிவளநாடிந்
தானப்பெருவளந்தங்குமீழ
நன்னாட்டரசனின்முன்னாட்பெற்றுள
கவிவீரராகவனென்னுங்கவிஞன்
புவியோர்பிறந்தபொருவினயன்கொளீஇ
வாணுடமக்குவீணுட்படாஅமை
நற்கதிதற்கோர்சொற்குறித்துணையாய்ப்
பொருட்சுவைசொற்சுவைபொதுளத்தமிழாற்
றிருக்கழுக்குன்றச்சிவபுராணமெனப்
பன்மணிப்பொதிபோற்பகர்ந்துளதாலதன்
றொன்மைசால்பொருளெலாந்தோன்றவுரைக்கென
அத்தலத்தாதியினளவிறிருப்பணி
யெத்தலத்தவருமேத்தவியற்றியோன்

# சிறப்புப்பாயிரம்.

சிவநிறிப்பயோததிசெறிவளங்கைக்கொளுந்
தவநிதியெனும்பொம்பலத்தம்பிரான்
திருமரபினனுருத்திரகோடியென்னத்
தருமிபற்பெயர்பெறுந்தம்பிரான்புகலப்
பெரியோர்மொழிந்தபெருங்காவியத்துள்
விரிவாய்ப்பொதிந்துளவிழுச்சீரொத்துணை
யத்துணைவளனெலாமுற்றடைகிடக்குஞ்
சீர்செழுகாஞ்சித்திருநகரொன்ன
வேர்செழுமணியினெழிற்கதிரொளவருங்
காட்சிகூரண்ணலகற்றுணர்புலமை
மாட்சியோர்மதிக்கும்வாய்மைசால்பெருந்தகை
அருந்தமிழ்மகோததியளந்ததனிவ்வளந்
திருந்தியகற்குந்தெள்ளியோர்க்குதவு
முயர்துணையாய்த்தன்னுயர்நட்பொருவிலா
தியலுமெய்ம்பொலிக்கிருஞ்செம்நிதியாய்த்
தணவிலாவருள்கூர்சபாபதிவள்ளல்
மணமிகுவான்மியூர்மருந்தீசருளால்
றுறப்பருநன்மையோர்சூழ்ந்துளநயப்பச்
சிறப்புறும்பொழிப்புரைசெய்துதந்ததனை
மலர்வயற்பணிலமருவுபுங்கத்தூர்
நிலவுங்குவளைநிறைநெடுமார்பினன்
அருணாசலவேளளித்ததநயன்
பெருநாவலர்குழாம்பிரியாநண்பு
மிகுகந்தசாமிவிறலோன்முயன்று
சகமெங்குநல்லிசைதவழ்தந்துலாவ
மதித்தினிதச்சுப்பதித்துநல்கினனே.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

# திருக்கழுக்குன்றப்புராணம்.

## காப்பு.

### விநாயகர் துதி.

வாழத்தானனத்தான்மக வான்கட
லாழத்தானநத் தானரு மாதவர்
சூழத்தானனத் தானச் சுரர்தொழும்
வேழத்தானனத் தான்பத மேற்கொள்வாம்.

(இதன்பதப்பொருள்.) வாழத்தான் அனத்தான் - அன்னவாக
னமுள்ள பிரமதேவனானவன்- தான்வாழவும்-மகவான் - தேவேந்தி
ரனும்- கடல்- ஆழத்து ஆன- சமுத்திரத்திலுண்டாகிய - நத்தான்
சங்கமேந்திய திருமாலும் - அருமாதவர் - அருமையாகிய தவமு
னிவர்கள்- சூழ- சூழும்படி- நன- தெளிவுள்ள- தானம்- சுவர்க்க
லோகத்திருக்கும்- சுரர்- தேவர்களும் - தொழும் - தொழுகின்ற
வேழத்து- ஆனனத்தான் - யானையின்முகமுள்ள விநாயகருடைய
பதம்- திருவடிகளை - மேற்கொள்வாம் -எம்முடைய சிரசின்மேல்
தரித்துக்கொள்வாம்—என்றவாறு.

பிரமன்- தேவேந்திரன்- திருமால் - முனிவர்கள் - தேவர்க
ள் - என்னுமிவர்கள்தாம்வாழும்படி தொழுகின்றவிநாயக மூர்த்

தியினுடைய திருவடிகளை வணங்குகிறோம் - என்பது தாற்பரியம் - வாழ என்பதனை ஆங்காங்குக்கூட்டிக்கொள்க- நூறு அசுவமேதஞ்செய்து - இந்திரபட்டம் - அடையத்தக்கதாகையால் -தேவேந்திரனுக்குமகவான்- என்று ஒருபெயர் - சதமகன் என்னும்பெயரினானுமுணர்க - சதம் - என்பது- நூறு - மகம்- என்பது- யாகம்-ஆழ்ந்தகடலென்பதுதோன்ற கடலாழம் என்றார்- சூழத்தான் என்பதைச்சேர்ந்த - தான் - என்பது - இடைச்சொல் - நனவு என்னுஞ்சொலீண்டுவிகாரவகையால் நன-என- நின்றது - தேவர்கள் - சாக்கிராவஸ்தை யுள்ளவர்களாதலால் - நனத்தானச்சுரர்-எனவிசேடித்துக்கூறினர். (க)

வாழ்த்து.

வையகம் விளைகயாண்டு மதியின்மும் மாரிபெய்க
செய்யதண்டகநன்றுடுஞ் சிவன்கழுக் குன்றும்வாழ்க
மெய்யகம் வளர்கசைவவெண்ணீறுசிறக்கவேள்விக்
கையணிதழைக்கசெங்கோற்காவலுமலிகமன்னோ

(இ-ள்) இவ்வுலகமெங்கும்பயிர்கள்செழுமையுடன்விளைவனவாக - மாதந்தோறு மும்மாரிபெய்வனவாக - செவ்விதான நல்ல தண்டகநாடும்-பரமசிவம் - திருக்கோவில்கொண்டு வீற்றிருந்தருளுந்திருக்கழுக்குன்றமென்னுந் தலமும்வாழ்வனவாக- உண்மையான - உள்ளங்கள் விர்த்தியடைவனவாக - வெண்மை - நிறமுள்ள திருநீறு சிறப்படைவதாக- செங்கோல்செலுத்தும் அரசன்காவலுயர்நிலைபெற்றிருப்பதாக—எ-று. (உ)

மன்- அசை- ஒ- ஈற்றசை - துண்டீரனென்பவன்- அரசாட்சிசெய்ததனால்- துண்டீரநாடு-தண்டகன்-அரசுசெய்ததால்-தண்டகநாடு - ஆதொண்டைச்சோழன் - அரசுசெய்ததினால் - தொண்டைநாடு-என- இந்தநாட்டுக்குப் பெயர்வழங்குகின்றன - அரசன் காவல்முறைபிறழாதிருக்குமாயின்- உலகியல்புந்தவறுதலின்றி நடக்குமாதலால்செங்கோற்காவல்- மல்கவென இறுதியில்வைத்துக்கூறினார்- இதனை-வாழ்கவந்தணர்- வானவர்- ஆனினம்- வீழ்கதண்புனல்- வேந்தனும்-ஓங்குக எனத்திருஞானசம்பந்த சுவாமிகள்அருளிச்செய்த திருப்பாசுரத்தினுங்காண்க- திருப்பாசுரத்தின் உட்கருத்தினைச் சேக்கிழார்சுவாமிகள்வெளியிட்டதனுள் ஆறுமன்ன

னவாழ்த்தியதரிச்சனை- மூனுமற்றிவைகாக்கு முறைமையால்- என்றதனுனுமுணர்க - அரசனுற் செலுத்தப்படுகிற நீதி - ஒருபக்ஷத்தில் சாயாமல் செவ்விதானதராசுக்கோல்போலிருக்கத் தக்கதாகலின் - செங்கோலெனக்கூறப்பட்டது - இதனைச்செங்கோன்மையென்னுந்திருக்குறள் - அதிகாரத்துக்குப் பரிமேலழகர்செய்த உரையானுமுணர்க - தன்னாலுந்தன்பரிசனத்தாலும் பகைவராலும்- கள்வராலும்- துஷ்டசெந்துகளாலும் - உயிர்களுக்கு இடையூறு வாராமல் காப்பதேகாவல் - இவ்வாறுகாக்கும் - அரசன்காவலனெனப்படுவனென்பது தோன்றச்செங்கோற்காவலனென்றார் இதனை.

மாநிலங்காவலனுவான்மன்னுயிர்காக்குங்காலை
தானதனுக்கிடையூறுதன்னாற்றன்பரிசனத்தா
லூனமிகும்பகைத்திறத்தாற்கள்வராலுயிர்தம்மா
லானபயமைந்துந்தீர்த்தறங்காப்பானல்லனோ

என்னும்பெரியபுராணத்திருவிருத்தத்தானுமுணர்க

# பாயிரம்.

## கடவுள்வாழ்த்து.

### (வேதகிரீசர்துதி.)

சீர்பூத்தவுருவகைநான்கருவகைநான் கிருவகையின்செ
யற்கையொன்று,யேர்பூத்தநவப்பொருட்குமுதற்பொ
ருளாமொருபொருள்வந்தெம்மைக்காப்பான்,வேர்பூத்
தகிளைகிளைத்துமெய்ஞ்ஞானமணம்பொதுளிவெளிநின்
றோங்குஞ், சூர்பூத்தவேரதமலைவேதமலைக்கொழுந்தை
முடிசூடிக்கொள்வாம்.

(இ-ள்.) சிறப்பினையுடைய - உருவவகைநான்காகியும் - அருவவகை நான்காகியும்-இவ்விருவகையின் செயற்கையொன்றாய்-அழகு பொருந்திய - இந்த ஒன்பதுபொருட்கும்- முதற்பொருளாகிய- ஒருபொருள்வந்து - எம்மைக்காக்க - வேர்பூத்தகிளைகள்கிளைத்து - மெய்ஞ்ஞானமாகிய மணம் நிறைந்து - ஆகாயத்தில் நின்றோங்கிய தெய்வத்தன்மைபொருந்திய - கங்கைவெள்ளம்- அலைத்

தோடும்படியானவேதமலைக்கொழுந்தை - எம்முடைய முடியில் தரித்துக்கொள்வாம்—எ-று.

உருவகைநான்காவன - பிரமன் - திருமால் - உருத்திரன் - மகேசுவரன் - அருவகைநான்காவன - சத்தி - சிவம் - விந்து- நாதம்-இவ்விருவகையின்செயற்கையொன்றுவது-உருவமும்- அருவமுமின்றிஉருவாருவமாயிருப்பது-அதுவேசதாசிவம் - சிவலிங்கப்பெருமானென்றுஞ்சொல்லப்படும்- அதன்விவரம்பாதாதிகேசங்களாகிய-உறுப்புகளுடன் பார்வைக்குக்காணப்படுவது - உருவம்-பார்வைக்குக்காணப்படாதது- அருவம்- சிவலிங்கப்பெருமான்பார்வைக்குக்காணப்படினும் திருமுகமுதலிய - உறுப்புகளின்றிக்காணப்படுவதினால்-உருவாருவமெனக்கொள்க - வேதமேமலையாக-அதனுச்சியில் - பரமசிவம்சிவலிங்கமூர்த்தமாய்க்கிளைத்திருப்பதினால்வேதமலைக்கொழுந்தென்றும்கொழுந்தென்றதற்கேற்ப வேரும்மணமுங் கூறினர் வேதமேமலையானமையால் - அதற்குவேர் பிரணவம் பரமசிவத்துக்கு ஞானமேதிரு மேனியானமைபற்றி ஞானமணமெனக்கூறினர் (க)

( மலைச்சொக்கநாயகிதுதி. )

பஞ்சொக்கநெகிழ்ந்தன்னப் பரிசொக்க நடக்குமடிப்
பசுந்துழாயோன், றுஞ்சொக்கவிளங்குதரத்துசொக்க
மிலைந்தமுலைச்சுடர்ப்பூந்திங்கட், பிஞ்சொக்கவயங்குநு
தற்பிரசொக்கமொழியுமொழிப்பேரண்டஞ்சூழ், மஞ்
சொக்கவளாரளகமலைச்சொக்கநாயகியைவணக்கஞ்செய்
வாம்.

(இ-ள்) செம்பஞ்சிக்கொப்பாகமிருதுத்தன்மைபொருந்திஅன்னப்பக்ஷியினடையை-யொத்துநடக்கும்.திருவடிகளையும்- பசுமைநிறமுள்ள துளசிமாலையணிந்த திருமாலறிதுயிலமர்ந்திருக்கும் ஆலிலைபோன்ற வயிற்றினையும் உத்தரீயம் பொருத்தும்படி - அணிந்ததிருத்தனபாரங்களையும் பிரகாசமுள்ள பொலிவாகிய இளம்பிறைக்கொப்பாக - விளங்குகின்ற நெற்றியினையும் -தேனுக்கொப்பாக வசனிக்கும்.திருமொழியினையும் பெரிய ஆகாயத்திற்சூழ்கின்றமேகத்துக்கொப்பாகநிறம்வளர்கின்ற-அளகபாரத்தையுமுடைய-மலைச்சொக்கநாயகியம்மையை யாம் வணங்குதல்செய்வாம் -எ-று.

இருப்பு என்பது-வசிக்குமிடத்தைக்காட்டுவதுபோல- துஞ்சுஎன்பது-திருமால்பள்ளிகொள்ளுமிடமாகிய - ஆலிலையைக்காட்டிநின்றது-பிரசம் எனற்பாலது -பிரசு-எனநின்றது-தேன் - மதுரத்துக்கும்-மேகம்-கருமைக்கும்-உவமையாய்நின்றன. (௨)

(வண்டுவனப்பிள்ளையார்துதி.)

பூவேழம்போதிகளாம்புரவேழும்பூவழியிற் பொழியும்
பைந்தேன், காவேழம்புதமென்னுங்கருவேழம்பரத்தி
னொடுங்காக்குங்காவற், கோவேழம்பயந்தமுத்தங்கொடு
த்தகனிக்கடுத்தகனிக்குவையோடப்ப, மாவேழம்படை
த்தவண்டுவனவேழம்புரக்கவென்றுவணக்கஞ்செய்வாம்

(இ-ள்) பூவேழ்-எழுலகங்கள்- அம்பொதிகளாம்புரவேழ் -சமுத்திரங்களாகியஎழு அரண்கள்- அம்பூவழியில்- அழகிய பூவின்வழியாக-பைந்தேன்பொழியும்-பசியதேனைப்பொழியும்படியாகிய-கா வேழ்-சோலையேழ்- என்னுமிவைகளை -அம்பரத்தினொடும் - ஆகாயத்துடனும்-காக்கும்-காக்காநின்ற-காவல்- காவல்தொழிலையுடைய கோ-தேவேந்திரனானவன் -வேழம்-மூங்கிலானது.- பயந்த - ஈன்ற முத்தம்- முத்தமாகிய பரமசிவம்-கொடுத்த- முன்னொருகாலத்தில் கொடுத்தருளிய-கனிக்கு -மாம்பழத்துக்கு- அடுத்த-ஒப்பாகிய - கனிக்குவையோடு-பழத்திரள்களுடன்- அப்பம்- அபூபவர்க்கங்களும்- மாவேழம்- பெரியகருப்புகளும்- படைத்த-நிவேதித்த - வண்டுவனவேழம்- வண்டுவனப்பிள்ளையார் - புரக்கவென்று - நம்மைரட்சிக்கக்கடவரென்று - வணக்கஞ்செய்வாம் - அவரைவணங்குதல்செய்வாம்—எ-று.

முத்தமுண்டாகும் மூங்கிலடியிற்றோன்றினமை பற்றிப்பரமசிவத்தைவேயீன்றமுத்தமெனச்சான்றோர்கூறுகின்றனர் - சமுத்திரம் இவ்வுலகத்திற்குக்காவலாய்ச்சூழ்ந்திருப்பதினால் - புரவு-எனக்கூறினர் -புரவு-என்பது - தொழிற்பெயர் - கனிக்குலவ-வாழை-மா - பலா-என்னுமுக்கனிக்குவை - பரமசிவத்தினாற்கொடுக்கப்பட்ட கனிக்கடுத்தகனியென்றது - மதுரமிகுதியைப்பற்றி-பரமசிவம் - விநாயகமூர்த்திக்கு மாங்கனிகொடுத்தருளியசரிதம் பெரும்பாலும்வழங்குகின்றமையின்காரணமெழுதாமல் விடப்பட்டது - எழுதப்புகின்பெருகும் - காவேழாவது - ஒருசமுத்திரத்துக்கும்

அதற்கப்புறமிருக்குமற்றொருசமுத்திரத்துக்குமத்தியிலுமாகஏழு கடலுக்கும்- இடைநடுவிலிருப்பது -வண்டுவன்பிள்ளையாரத்தல த்துவிநாயகர். (௩)

(சுப்பிரமணியசுவாமிதுதி-)

வெருவேலஞ்ஞூற்றிரட்டிவிழியுடைத்தாயமரரொடும் விடாதுதுன்ப,மருவேலமழைநிறத்தாய்மலரகத்தாயெ னத்தனதுமலர்க்கண்சாத்திப், பெருவேலைபொருதலைக் குங்கருவேலைக்கவுணர்கணப்பெருகுவேலைக், கொருவே லைவிடுத்தானையிருவேலையுத்தமியேற்குணரவேலை.

(இ-ள்) ஆயிரம்விழிகளையுடைய இந்திரனே-தேவர்களுடனீய ஞ்ச வேண்டுவதில்லை - அழகியமேகநிறமுள்ளமாயவனே- நீயெப் போதுந்துன்பம் பொருந்தாமலிருக்கக்கடவை - தாமரைப்பூவி ல்வீற்றிருக்கும்பிரமனே-நீயுந்துன்பம்பொருந்திருக்கக்கடவை யென்றுதிருவாய்மலர்ந்து - தம்முடையதாமரைமலர்போன்றதி ருநோக்கத்தைச்சாத்தி - பெரியகரையை மோதியலைக்காநின்றகரு நிறமுடையசமுத்திரத்துக்கும் அவுணர்கூட்டமாகிய பெருகுசமு த்திரத்துக்கும்-ஒப்பற்ற வேலாயுதத்தை விடுத்த சுப்பிரமணியக்க டவுளைக்காலைசந்தியென்னு மிரண்டுகாலத்திலுந்தியானிக்கும்படி எளியேனுக்குத்தொழிலாம்—எ-று.

பானுகோபனெனவன்மாயாஸ்திரத்தினால்வீரவாகுதேவர்முத லானவர்களைக்கட்டிக்கடலி லிடக்கண்டு-கலங்கின - விஷ்ணுமுதலா னதேவர்கள்துன்பம் நீங்கும்பொருட்டு அக்கடலினிடத்து வேலா யுதத்தைவிட-அதுமாயத்தைநீக்கிவீரவாகுதேவனையும்-மற்றஎல்லா ரையுமீட்டருளினதாலும்- சூரன்முதலியவர்களிறக்கும்படியேவி னதாலும்கருவேலைக்கும் - அவுணர்கணப் பெருவேலைக்கும்-ஒரு வேலைவிட்டானைஎன்றுகூறினார் - இருவேலையுமெனக்கூறினானேனு ம் - ஒருமொழிபொழிதனினங்கொளற்குரித்தேயென்னுஞ்சூத்தி ரவிதியால் - காலையுச்சிஅந்தியென்னுமுக்காலமும் அமைத்துக் கொள்க. (௪)

(நந்திதேவர்துதி)

கண்ணனையுங்கமலமலர்க்கண்ணனையுமமரரையுங் ககன வாசி - விண்ணனையுமுமைபாகனவைவயகத்தேநிரந்தர

றும்விலக்குந்தோறுந், தண்ணனைய துழாய்மணமுந்தா
மரையின்விரைமணமுந் தாருத்தாரின், வண்ணனையின்
மணமுமணர்துடையபிரம்புடையானைவணக்கஞ்செய்வாம்.

(இ-ள்) கண்ணனையும். தேனால்நனையப்பட்ட தாமரைமலர் போன்றநேத்திரங்களுள்ளதிருமாலையும் - தேவர்களையும் - ஆகாயவாசியாகியசுவர்க்கலோகத்துள்ள இந்திரனையும் - பார்வதிதேவியாரையிடப்பாகத்திற்கொண்டருளியகயிலாசபதியின் சபையினிடத்தில்நெருங்கவொட்டாமல் விலக்குங்காலமெல்லாம் - குளிர்ச்சியுடன்தேனையுமுடையதாகிய துளசியின்மணமும் - தாமரைமலர்மாலையின்வாசனையும் -வளப்பம்பொருந்திய கற்பகமலர்மாலையின்வாசனையும் - பரிமளித்துக்கொண்டிருக்கும்படியாகிய வெள்ளிப்பிரம்பினையுடைய நந்திதேவரையாம்வணங்குதல்செய்வாம் -எ-று.

விரைமணம் - ஒருபொருள்குறித்தஇருபெயரொட்டு - தாரு-கற்பகம்-தார்-மாலை- முன்னிருக்கும்-நனை-தேன்- பின்னிருக்கும்நனை அரும்பு-மலரும்பக்குவமுள்ள அரும்புகளால் தொடுக்கப்படுமாலையேசிறந்ததென்பதுதோன்றநனையென்றார் -கயிலாயபதியின் சபையில் நெருங்கவொட்டாமல்பிரம்பாலடிக்கும்போது விஷ்ணுமுதலியதேவர்கள்மகுடமாலையில்தாக்கி அம்மாலையின்மணம்வெள்ளிப்பிரம்பில்கமழ்ந்துகொண்டிருக்குமென்றுணர்க-சிலாதரமுனிவருடையதிருமைந்தராக அவதரித்துத்திருவையாறு என்னும் க்ஷேத்திரத்தில்தவஞ்செய்து பரமசிவத்தின்திருவருளால்சுரிகையும்வெள்ளிப்பிரம்பும் கயிலாயத்தைக்காக்குங் காவற்றலைமையும்பெற்றருளினர் நந்திதேவரென்றறிக. (௫)

(திருஞானசம்பந்தசுவாமிகள் துதி.)

கண்ணைப்பாடசையுமிருகனங்குழையைக்கமழ்குழலைக்
கனகச்செப்பை, விண்ணைப்பாடகத்தாளைக்கழைத்தோ
ளைக்கலந்துதிருமேனிதோன்றப், பண்ணைப்பாடலத்தா
றுபதம்பாடும்பொழின்மயிலைப்பதியென்பாய; பெண்
ணைப்பாடியபுகலிப் பிள்ளையைப்பாடித்துயரம்பெயர
ச்செய்வாம்.

(இ-ள்.) கண்களையும் - பக்கத்திலசைந்துகொண்டிருக்கும் கனத்த இரண்டுகுழைகளையும் - பரிமளிக்கும் அளகத்தையும் - பொற்செப்பினையொத்ததனங்களையும் - ஆகாயவெளிபோன்ற இடையினையும்- பாடகங்கள் பூண்டபாதங்களையும் - பசியமூங்கிலையொத்த தோட்களையும்பொருந்திக்குடத்திலிருந்துதிருவுருவந்தோன்றும்படி எலும்பாகிய பெண்ணைக்குறித்துத் திருப்பதிகம் அருளிச்செய்த சீர்காழியில்- திருவவதாரஞ்செய்தருளியதிருஞானசம்பந்தசுவாமிகளைப் பாடித்துதிசெய்து எம்முடைய பிறவித்துயரம் நீங்கும்படிசெய்வாம்—எ-று.

கனகச்செப்பினையொத்த தனத்தைக் கனகச்செப்பென்றதும் - விண்ணையொத்த இடையை விண்ணென்றதும்-உவம ஆகுபெயர்-ஆகுபெயராவது- ஒன்றன் பெயர்மற்றொன்றற்காகும்படி கூறுதல் - இடைஅறிய நுண்ணியதாய்ப்பார்ப்பவர்கள் கண்களுக்குத் தெரியவரிதாயிருப்பதென்பது தோன்றவிண்ணையென்றார் - திருஞானசம்பந்தசுவாமிகள் திருமயிலையில்எலும்புபெண்ணாக

மட்டிட்டபுன்னையங்கானன்மடமயிலைக்
கட்டிட்டங்கொண்டான்கபாலீச்சரமமர்ந்தா
னொட்டிட்டபண்பினுருத்திரபல்கணத்தார்க்
கட்டிட்டல்காணுதேபோதியோபூம்பாவாய்.

எனப்பதிகமோதியபோது சுவாமிகளுடைய திருவாக்காகிய அமுதம் அவ்வெலும்பினிடத்தில் பொருந்துதலால்உறுப்புகள் ஒவ்வொன்றாகவந்துவந்து முன்னீங்கிய ஆவியு நிறைந்துகுடத்திலிருந்துதிருமேனிஎழுந்தமையால் - கண்முதலாகிய அங்கங்களைக்கலந்து - திருமேனிதோன்ற- என்பாயபெண்ணைப்பாடியவென்றார்.

(திருஞானசம்பந்தசுவாமிகள்புராணம்)

மன்னுவார்சடையாளைமுன்னொருதுமட்டிட்ட
என்னுநற்பதிகத்தினிற்போதியோவென்னும்
அன்னமெய்த்திருவாக்கெனுமமுதமவ்வங்கந்
துன்னவந்துவந்துருவமாய்த்தொக்கதக்குடத்துள்.

என்னுந்திருப்பாட்டானுமுணர்க. (௬)

(அப்பர்சுவாமிகள் துதி.)

குறித்தகுலத்திலதவல்லிக்கிளைவளைப்பவளைப்புண்டுகொ
டியநாகம்,பறித்தகுருந்தினைமீட்டுநீற்றறையின்வன்னி
வென்றுபடருங்கோட்டு,வெறித்தமதமாக்களையும்விலக்
கிமுழங்கியவத்திமீதேகுண்டர், செறித்தகல்லால்மிதந்
துவருந்திருநாவுக்கரசுநிழற்சேர்ந்துவாழ்வாம்.

(இ-ள்) குறித்ததங்கள் குலத்திற் பிறந்ததிலத வல்லியாரென்னு
ம் பெயருள்ள சுற்றமாகிய அக்காள் - பரமசிவத்தின் திருவருளா
ல் சேர்ப்பிக்க - சைனசமயம் விட்டுச் சைவசமயத்தில் சேர்ந்து-
கொடியதானசர்ப்பந்தீண்டியிறந்த இளமைப்பருவமுள்ள அப்பூ
திநாயனாருடைய மூத்தபுத்திரனது பிராணனைமீட்டும் - நீற்றறை
யில்நெருப்பைவென்றும்- நீண்டகொம்பினையுடையதாய்மதவெறி
கொண்டயானையாகியகளையைவிலக்கியும்- ஒலிக்கா நின்றகடலின்
மேல் சமணர்கள் கட்டியிட்டகற்றூணே தெப்பமாகமிதந்துவந்
துகரைசேர்ந்த திருநாவுக்கரசுசுவாமிகளுடைய திருவடி நிழலில்
சேர்ந்துவாழ்வாம்— எ-று.

அரசு - எனஒருவிருக்ஷத்தின் பெயர்விளங்கச் சிலேடையா
கக்கூறினமைக்கேற்ப - நிழல் கூறி அதனால் நிகழ்ந்த - செய்கைக
ளைக்குறித்துச் சொல்லுஞ் சொற்களையும் மரப்பெயர் விளங்கச்சி
லேடையாகக்கூறினர் - அவை-திலதவல்லி- ஒருவகைக்கொடி-நாகம்
புன்னை - குருந்து - குருந்தமரம் - வன்னி-வன்னிமரம்-மா-மாமர
-ம் - அத்தி-அத்திமரம் - கல்லால்-கல்லாலமரம் - குருந்து என்பதற்
குப்புத்திரனெனப் பொருள்படுத்தியது- இளமைப்பருவத்தைப்ப
ற்றியஆகுபெயர். (௭)

(சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.)

வழிவிடுத்ததொருநதியொண் பொன்கொணர்ந்ததோ
ராறுவரும்பொன்வாங்கிச். சுழிகொடுத்ததொருபொய்
கையளித்ததொருகயங்கரவுகரந்த சேயை,மொழிவசத்
திற்கவைபோவிப்பாவையிணங் குவதரிதுமுதல்வாவெ

ன்று,விழிதரித்துமரிகாணுப் பாதனைத்தூதேவினனைவி
ழைந்துவாழ்வாம்.

(இ-ள்.) என்சொல்வசத்தினுல் ஒருநதி வழிவிட்டது - ஒரு நதி நாளிட்ட ஒள்ளிய பொருளைக் கொண்டு வந்தது - அவ்வாறு வந்தபொன்னைத்தான் வாங்கிக்கொண்டு மிகுதியாக ஒரு தடாகங் கொடுத்தது - முதலைவிழுங்கிய பிராமணப்பிள்ளையை - ஒரு குளங்கொடுத்தது - இறைவனே - அம்முறைமைகள்நீங்கி - பரவையானது - என் சொல்லுக்கிணங்குவ தரிதாயிருக்கின்றதென்று குறையிரந்து - மகாவிஷ்ணு கண்ணைத்தரித்துங் காணவொண்ணுத பரமசிவத்தை -அந்தப்பரவையினிடத்துக்குத் தூதாக ஏவின சுந்தரமூர்த்திசுவாமிகளை விருப்பித் துதிசெய்து வாழ்வாம்.—எ-று.

ஒருநதிவழிவிட்டதாவது - சுந்தரமூர்த்திசுவாமிகளும்- சேரமான்பெருமாள் நாயனுரும் - திருவையாற்றுக் கெழுந்தருளித் தரிசிக்க உத்தேசித்துக் காவிரியில் வெள்ளமிகுதியாக வரக்கண்டு பதிகமோத-வந்தவெள்ளம் அணைபோட்டுத் தடுத்ததுபோல நின்றுவழிவிட்டது - ஒருநதி பொன்கொணர்ந்ததாவது- விருத்தாசலத்தில் - பரமசிவம்-கொடுத்தருளியபொன்னை - மணிமுத்தாநதியிலிட - அந்தநதி திருவாரூருக்குக் கொண்டுவந்தது - அப்பொன்னை ஒருபொய்கைகொடுத்ததாவது - திருவாரூர்க்கமலாலயமென்னுந்தீர்த்தங்கொடுத்தது - ஒருநயம்பிள்ளையைக்கொடுத்தது-உரையால்விளங்குவதைக் கண்டுகொள்க-ஆறு-குளங் கூறியதற்கேற்பச் சமுத்திரங்கூறவேண்டிப் பரவையும் அமைத்துக்கூறினர்-திருவொற்றியூரில் சங்கிலிநாச்சியாரை விவாகஞ்செய்துகொண்டதை யறிந்து பரவைநாச்சியார்ஊடல்கொண்டு இணங்காதிருந்தமையா லவ்வூடலைநீக்கச்சுவாமியைத்தூதுவிட்டது - நதியிலிட்டபொருளின் தொகை குறையாமல்கொடுத்ததினுல் சுழிகொடுத்ததென்றுர்-சுழி-யென்பது- மிகுதியைக்காட்டுமோருரிச்சொல். (அ)

(மாணிக்கவாசகசுவாமிகள் துதி.)

வழுக்கின்றித்தன்சிரத்தேவைத்துதிருவடியிரண்டும்வைத்
திட்டானை, யெழுக்கொன்றுமொருநாலாயிரமடிமேற்

பலவடிவைத்தோதினானை, யிழுக்கென்றுமில்லாமலேற்
றானைநரிப்பரிமீதேற்றினானைக், கழுக்குன்றத்தரியிரமர்
காணானைக்கண்டானைக்கருத்துள்வைப்பாம்.

(இ-ள்.) தவறுதலின்றித் தமது சிரத்தில் பரமசிவம் திருவடியி ரண்டையும் வலிவிற் சூட்டத்தரித்துக் கொண்டவரை - ஒழுக்கம் பொருந்திய நாலாயிரமடிமேலும் பலஅடிவைத்துத் திருவாசகம் ஓதியருளியவரை - எந்நாளும் பழிப்பில்லாமல்- ரிஷபவாகனமுள் ள பரமசிவத்தை நரிப்பரிமீதேற்றினவரை - பிர்மவிஷ்ணுக்களா லுங் காணவொண்ணாத பரமசிவத்தைத்திருக்கழுக்குன்றத்தினிடத் திற்குருமூர்த்தமாகக்கண்டுதரிசித்தவரை எம்முடைய இருதயத்து ள் வைப்பாம்.—எ-று. (௬)

(தண்டீசர்மற்றுமுள்ளநாயன்மார்துதி.)

தந்தைதாளெறிந்துகுகன்றந்தைதாளடைந்ததிருத்தண்
டியாதி,முந்தையோர்திருத்தொண்டர்யாவரையும்வேத
கிரிமுதூர்வைகுஞ்,சிந்தைநான்மறைச்சைவத்திறநெறி
நின்றோரையுமச்சிலம்பினுச்சி, யெந்தையாளுடையக
ழுகெனுமுனிவ ரிருவரையுமிறைஞ்சிவாழ்வாம்.

(இ-ள்.) பிதாவின்கால்களைவெட்டிச் சுப்பிரமணியக் கடவுளு டையதந்தையாகிய பரமசிவத்தின் திருவடிகளையடைந்த தண்டீ சர்முதல்முன்னோர்களாகிய திருத்தொண்டர்களெல்லாரையும்-வே தகிரியென்கிறபழமையாகிய தலத்தில்வசிக்குஞ் சித்தமுடையவர்க ளாய்-நான்குவேதசம்பந்தமாகியவைதிகத்திலும்சைவசமயாசாரத்தி லும்நிற்பவர்களையும் அந்தவேதகிரியினுச்சியில்வீற்றிருந்தருளும் எம்மையனாகிய பரமசிவத்தினாலாட்கொள்ளப்பட்ட கழுகுகளாகிய முனிவர்களிருவரையும்வணங்கிவாழ்வாம்—எ-று. (௭)

பாயிரமுற்றியது.

(பதிகம்.)

ஈசனந்திக்கந்நந்தியெமதுசனற்குமாரற்குச்சனற்குமார
னாசரியவியாதற்குவியாதமுனிசூதற்குச்சூதனென்பான்
மாசணுகாநைமிசாரணியத்தார்க்குரைத்தநெறிமறித்துநந்தி
தேசிகனுப்மலரோற்குவிளம்பியதுகழுச்குன்றச்சிறப்புமாதோ.

(இ-ள்) பரமசிவம் - நந்திதேவருக்கும் - அந்த நந்திதேவரானவர் எம்முடைய சனற்குமாரமுனிவருக்கும் - அந்தச் சனற்குமார முனிவர் - குற்றமில்லாதவியாதமுனிவர்க்கும் - அந்தவியாதமுனிவர் - சூதமுனிவர்க்கும் - அந்தச்சூதமுனிவர் - குற்றம்அணுகாத நைமிசாரணிய முனிவர்களுக்குமாகச் சொல்லியமுறைமைப்படி மறுபடியும் நந்திதேவர் - குருமூர்த்தமாய் - பிரமதேவனுக்கு அருளிச்செய்தது - இந்தத் திருக்கழுக்குன்றமான்மியம்—எ-று.

ஆதியில் சிலமுனிவர்கள்தவஞ்செய்ய இடஞ்சொல்லவேண்டுமென்னப்பிரமதேவன் - ஒருதருப்பையைவட்டமாக முடிந்து - நிலத்தில்விட்டுருட்டியிதுபோய் நின்றவிடத்தில் - நீங்களுந்தொடர்ந்துபோய்த்தங்கித்தவஞ்செய்யுங்களென்ற காரணத்தினால் அது நைமிசாரணியமெனப் பெயர்பெற்றது - வட்டமெனினும்நேமியெனினுமொக்கும் - நேமிசம்பந்தம் - நைமிசம்- இதனை- சிவசம்பந்தம் - சைவம் - விஷ்ணுசம்பந்தம்-வைஷ்ணவம்: வேதசம்பந்தம்- வைதிகமென்பனபோலக்கொள்க - நைமிச-அரணியம்- நைமிசாரணியமென்றாயிற்று. (௰௧)

இக்கழுக்குன்றத்தோற்றம்வேதமாயெழுந்தவாறு
மொக்கவேலாடவுணர்க்காய்ந்தவுருத்திரகோடியோரு
மிக்கநந்தியும்பூசித்தவாறும்விண்மடந்தைமீதுந்
தக்கமாயீகன்மீதுஞ்சாபம்வந்தடுத்தவாறும்.

(இ-ள்) இந்தக்கழுக்குன்றத்தின் தோற்றம்வேதமா யெழுந்தமுறைமையும்-அவுணர்களைச்சுற்றத்துடன்கொன்ற உருத்திரகோடியர்களும் நன்மையிருந்த நந்திதேவரும் - பூசித்த முறைமையும்- தேவமாதாகியதிலோத்தமையின்மேலும்- தகுதியுள்ள மாயீகனெனியவன்மேலும்-சாபம்வந்துபொருந்தியவாறும்—எ-று. (௰௨)

தேனுமுன்வசுக்கடம்மைச்செயிர்படச்செயிர்த்தவாறு
மாநிலத்தவர்தஞ்சாபநாரதன் மாய்த்தவாறும்
ஞானமார்க்கண்டன்கண்டபுரந்தரனறந்துமாயோன்
பூநறுமலரோனுந்திக்காதைகள்புகன்றவாறும்.

(இ-ள்) ஆதியில் காமதேனுவானது - அஷ்டவசுக்களுக்குத் துன்பம்நேரிடும்படி சபித்தமுறைமையும்- இந்தவுலகத்தில் அவர்க

ளுடையசாபத்தை நாரதமுனிவர் தொலைத்தமுறைமையும் ஞான முள்ள மார்க்கண்டமுனிவர் அவர்களைக்கண்டு தேவேந்திரன் - மகாவிஷ்ணு - பிரமதேவன் முதலானவர்களுடைய சரிதங்களைச் சொல்லிய முறைமையும்—எ-று.

நறுந்துழாயோன் - வாசனைபொருந்திய துளசிமாலை யணிந்தவிஷ்ணுவென்றும் - பூநறுமலரோன் - பொலிவாகியதேனிறைந்ததாமரைமலரிலிருப்பவனென்றும்பதப்பொருள்கொள்க. (௰௩)

காதையைவசுக்கள்கேட்டுக்கசிந்தருச்சித்தவாறும்
ஆதவர்பணிந்தவாறுமரியபாணினியத்தொன்னூன்
மாதவர்தெளிந்தவாறுமணமுமைக்கயர்ந்தவாறு
மேதமிலுகங்கடோறுமிருகழுகடுத்தவாறும்.

(இ-ள்) அந்தச்சரிதங்களைஅஷ்டவசுக்களுங்கேட்டு- உள்ளமுருகியருச்சித்தமுறைமையும் - துவாதசாதித்தர்கள்பூசித்தமுறைமையும்- அருமையும்பழமையுமானபாணினியமென்னும்வியாகரணசாஸ்திரத்தை முனிவர்களுணர்ந்த முறைமையும் - பார்வதிதேவியாருக்குத் திருமணஞ்செய்த முறைமையும் - பழுதில்லாத நாலுயுகங்கள் தோறும் இரண்டிரண்டுகழுகுகள்பொருந்திய முறைமையும்—எ-று. (௰௪)

சுரகுருவனம்புக்கெய்யப்பசுப்பன்றிதொலைந்தவாறு
மிரணியச்சேதாமேனிபிணிதணந்திமைத்தவாறும்
பரவுசம்பாதியென்போர்தீர்த்தமிப்பதிவிசிட்டம்
புரவலர்க்குரைத்தவாறுமவன்பவம்போயவாறும்.

(இ-ள்) சுரகுருவென்னும் அரசன் வனத்திற்சென்று பாணமெய்தமையால் - பசுவும் பன்றியுந் தொலைந்தவாறும் பொன்னிறமுள்ளபசுவின்மேனியின் பிணிநீங்கி விளங்கிய முறைமையும் - பரவுகின்ற சம்பு-ஆதி-யென்னுமுனிவர்கள்-தீர்த்தவிசேஷமும் இந்தத்தலவிசேஷமும் - அவ்வரசனுக்குச் சொல்லிய முறைமையும் அவன்செனனம்நீங்கியமுறைமையும்—எ-று. (௰௫)

பரசிவன்புராணம்பத்திற்பவுடியத்திலிங்கியத்தி
னுரைசெயுங்காந்தத்தன்னில்வேறுவேறுரைத்தவெல்லாம்

வரிசையி னொருங்குசேர்த்திவட னூலத் தென்னூலாகத்
துரிசறவெவர்க்குமையத் துளக்கறவிளங்கச்சொல்வாம்.

(இ-ள்.) சிவபுராணம்பத்திற்சேர்ந்தபவுடிய புராணத்திலும் - இலிங்கபுராணத்திலும் - சொல்லுகின்ற காந்தத்திலும் - தனித்தனியாகச்சொல்லியவற்றையெல்லாம் - வரிசையாகவொன்றுபடச் சேர்த்து - சமஸ்கிருதபாஷையிலிருக்கும் புராணத்தைத்தமிழ்ப்புராணமாக - இலக்கணப்பழுதறவும்யாவர்களுக்கும்சந்தேகமாகியகுற்றம்நீங்கவும்விளங்கும்படிசொல்வாம் — எ-று. (௰௬)

பதிகமுற்றியது.

(அவையடக்கம்.)

நந்தியம்பகவனாதி நான்மறைக்கிறைவரெல்லாம்
புந்தியிற்றரிக்கலாற்றாக்கழுக்குன்றப்புராணத்தோற்றஞ்
சிந்தையிற்சிறியேன்கூறத்தொடங்குதல்சேடன்சூடு
முந்தையவையகத்தைநான்சூழ்முடிப்பலென்றடுத்தவாறே.

(இ-ள்.) அழகியநந்திதேவர் முதல்நான்குவேதங்களுக்கு முதல்வர்களாகியமுனிவர்களெல்லாரும் - மனதில்தரிக்கவொண்ணாத திருக்கழுக்குன்றப்புராணத்தின்தோற்றத்தைச்சிறியேன்சொல்ல மனதினால் - நினைக்குதல் ஆதிசேஷன் பணாமுடியில்தாங்கிக்கொண்டிருக்கிறபழமையாகிய இவ்வுலகத்தைநாஒநாகப்பூச்சியானதுதன்முடியில் தாங்குவனென்று அடுக்குதல்போலாகும் — எ-று. (௰௭)

சாற்றியபுலமைப்புன்மைத்தமியன்யாப்புடையவேனு
நீற்றினன்கழுக்குன்றத்தை நிகழ்த்தலானிகழ்த்துஞ்சான்றோர்
மேற்றிகழ்நவையுமாற்றிவிரும்புவர்சேறுசேர்ந்துந்
தேற்றினுந்தேற்றிக்கொள்வர்தீம்புனல்வேட்டுண்பாரே.

(இ-ள்.) சொல்லுகின்ற அறிவினாலுமேழையேன் - கூறுஞ்செய்யுட்களிலக்கணக்குற்றமுடையவைகளாயிருப்பினும் விபூதியைத்திருமேனியில் தரித்தருளும்பரமசிவன் வீற்றிருக்குந்திருக்கழுக்குன்றமான்மியத்தைச்சொல்லுதலால் அதுபற்றி - விதிவிலக்குகள்

சொல்லுஞ்சான்றோர்கள் - இவற்றிலிருக்கு மிலக்கணக் குற்றங்களையுமாற்றி விருப்பமுடனேற்றுக்கொள்வார்கள்-மதுரமுள்ளநீரை விரும்பியுண்பவர்கள் அந்நீரில்சேறுகலந்திருந்தாலுந்தேற்றாங்கொட்டையினாலுந் தெளியவைத்துஉண்பார்கள்—எ-று.

நீரைவிரும்பி யுண்பவர்கள் அந்நீரில் சேறுகலந் திருந்தால் நீக்கிவிடாமல் சேறு அடியிற்படிந்துவிடும்படி இயல்பாகத்தெளிவித்தும் தேற்றாங்கொட்டையினால் தெளிவித்தும்உண்பதுபோல் இலக்கணக்குற்றத்தை நோக்காமல் இருக்கமூக்குன்றமான்மியத்தையேற்றுக் கொள்வார்களென்பது தாற்பரியம். (௰அ)

பாயிரச்சருக்கமுற்றியது

## நாட்டுப்படலம்.

வண்டுறைமலர்த்தேன்மாந் தும்பெண்ணையின்வடபால்வேழங்
கண்டுறாவங்கண்டார்க்குங்காளத்திவரையின்றென்பாற்
றண்டுறைப்புணரிமேல்பாற்பவளமாசயிலக்கீழ்பாற்
றுண்டுறைத்திருநாடென்னுமதன்வளந்தொகுத்துச்சொல்வாம்

(இ-ள்) வண்டுகள்குளிர்ச்சிபொருந்திய மலரிலுள்ள தேனையுண்ணும்படியாகிய பெண்ணையாற்றுக்குவடபக்கம் - சிங்கங்கள்யானைகளைக்கண்டுஆரவாரஞ்செய்யும்படியான காளத்திமலையின் தென்பக்கம்- குளிர்ச்சிபொருந்திய கரையையுடைய சமுத்திரத்தின்மேல் பக்கம். பெரியபவளமலையின்கீழ்ப்பக்கம் -என்னுமிந்தநாற்பாலெல்லைக்குட்பட்டதாய்ச்சிறப்புள்ள துண்டுறைநாடென்கிறநாட்டின்வளத்தைத்தொகுத்துச்சொல்வாம்—எ-று. (௧)

முக்கணான்கணநாதர்க்குமுதன்மைத்துண்டுறானுண்டு
மிக்கதுண்டுறைநாடாய்த்தண்டகவேந்தன்றாங்கித்
தக்கதண்டகநன்னாடாய்த்தபனன்மாகுலத்துச்சோழன்
றொக்கதார்த்தொண்டைமான்காத்தாயதுதொண்டைநாடே.

(இ-ள்) சோமசூரியாக்கினிகளாகிய திரிநேத்திரங்களுள்ள பரமசிவனுடைய கணநாதருக்குள் முதல்வனாகிய துண்டீரனென்பவனால் அரசாட்சிசெய்யப்பட்டு வளப்பமிகுந்த துண்டீரநாடென்னும் பெயர்பெற்றதாய்த் தண்டகராசனால் அரசாட்சிசெய்யப்பட்டுத் தகுதியுள்ள நல்லதண்டகநாடென்னும் பெயர்பூண்டு பெருமைபொருந்தியசூரியகுலோற்பவனாகிய ஆதொண்டைமலராற்றொடுக்கப்பட்டமாலையணிந்ததொண்டைமானால் அரசாட்சிசெய்யப்பட்டுத் தொண்டைநாடென்னும் பெயருடையதாயது இந்த நாடு—எ-று. (௨)

அறநெறியுரைத்தவாசானுமுதற்கடவுள்போந்து
மறைநெறிமலையோனீட்டிமலைக்கொழுந்தாகிவைகும்
புறவணிநகருமீண்டுபுகழொடும்பொலிந்திந்நாடு
திறல்கெழுநாட்டிற்கெல்லாந்தேசிகனிகர்த்ததம்மா.

(இ-ள்) தருமநெறியைச்சனகர்முதலாகியமுனிவர்க்குப்போதித்தருளியகுருவாகியபரமசிவங்கயிலாயத்தின்கணின்றுமெழுந்தருளி வேதங்களாகிய ஒருமலையையுண்டாக்கி அந்தமலையின் கொழுந்துபோல வீற்றிருந்தருளுகின்ற புறவணியினையுமுடைய வேதகிரியென்னுந்தலமும்பொருந்தியபுகழுடன்விளங்கி இந்தநாடானது வெற்றிபொருந்திய மற்றையநாட்டிற்கெல்லாங் குருமூர்த்தத்தை யொத்தது—எ-று. (௩)

ஆரணமுதனூல்யாவுமண்டமும்பயந்தவன்னை
பூரணியுளநாழிநெற்களாற்பரந்தெண்ணான்கு
காரணவறமும்போற்றுங்காஞ்சியும்படைத்திந்நாடு
தாரணிநாட்டிற்கெல்லாந்தாயெனத்தகைத்துமாதோ.

(இ-ள்) வேதமுதலாகிய எல்லாச்சாஸ்திரங்களையும் பல்லாயிர அண்டங்களையு மீன்றருளிய அன்னபூரணியாகிய பார்வதிதேவியார். இருநாழிநெற்களாற்புரந்து முப்பத்திரண்டு காரண அறங்களையும்போற்றிய காஞ்சிநகரத்தையும் இந்தநாடுதன்னிடத்திற்படைத்துக்கொண்டு இவ்வுலகத்திலிருக்கும் நாடுகளுக்கெல்லாந் தாயென்று சொல்லும்படியாகிய தலைமையினையுடையது—எ-று.

இக்காலத்துநிகழும் அறங்களுக்கெல்லாம் பார்வதிதேவியா ரால் வளர்க்கப்பட்டஅறங்கள்காரணமானமையால் காரணஅறமெ ன்றனர்.

குறிஞ்சிதென்கயிலைவெற்புமருணைப்பொற்குவடுமாக
நிறஞ்செயுமொற்றியூருமயிலையுநெய்தலாக
நறுஞ்செழுமுல்லைவாயினகுமுல்லைத்திணையதாக
வறஞ்செயுமருதநாப்பணுகப்பெற்றுளதந்நாடே.

(இ-ள்) தென்கயிலாயமாகியதிருக்காளத்திமலையும் அருணாசலமு ம்குறிஞ்சிநிலமாகவும்புகழைப்பொருந்தியதிருவொற்றியூரும்திரு மயிலையும் நெய்தல்நிலமாகவும் - செழுமையினையுடைய நல்லதி ருமுல்லைவாயில் விளங்குகின்ற முல்லைநிலமாகவும் தருமத்தைவளர் க்கத்தக்கமருதநிலமத்தியாகவும்பெற்றிருக்கின்றது அந்தநாடு-எ-று.

அத்திணைக்கயிலைப்பாம்பொன் றானையொன்றொருவில்
வேடன், மெய்த்துணைச்சிவனேயென்றெண்ணிறைஞ்சி
வீடடையப்பெற்றால், நித்தியனருணேசன்றானிலமக
ழ்ந்தேனமொன்று,பத்தியிற்றேடிற்றென்றாலிவற்றினு
ம்பலித்ததுண்டோ.

(இ-ள்)மேற்கூறியகுறிஞ்சித்திணையாகிய தென்கயிலையென்னுந் திருக்காளத்திமலையில்- ஒருபாம்பும்ஆனையும்ஒருவில்வேடனும்மெ. ய்ப்பாகிய துணையாவதுபரமசிவமேயெனக் கருதிப்பணிந்துமோக்ஷ ம் அடையப்பெற்றதென்றால் (இதுவுமன்றி)நித்தியராகிய அருணா சலேஸ்வரருடைய திருவடிகளையொருபன்றியானது அன்பினால்பூ மியைப்பிளந்து தேடிக்கொண்டுபோயிற்றென்றால் இவைகளைப் பார்க்கிலும்மோக்ஷம்பெற்றதெங்காகிலுமுண்டோ—எ-று. (௯)

நெய்தலம்பதியிரண்டேடிலஞ்சிநன்னிழற்கீழம்மா
னெய்தலைப்பெற்றதொண்டேநலன்பரன்பணிக்குப்பெண்ணா
மெய்நரச்சிறந்ததொண்டேநக்கீழ்முல்லைத்திணையில்வேந்த
னுய்தரத்தரித்ததொன்றேறவிவைக்குமொருவமையுண்டோ.

(இ-ள்) அழகுபொருந்திய நெய்தற்பதியிரண்டுள் நல்லமகிழ மரத்தின்கீழ் நம்மிறைவன்வீற்றிருப்பதைப் பொருந்திய தொன் ருனல், எனும்பான துபரமசிவத்தின் தொண்டுக்குப் பெண்ணுகும் மேனியைத்தரச்சிறந்ததொன்ருனல் விரும்புகின்ற முல்லைத்திணை யில் ஒருசோழராசன் உய்யும்படிதடுத்ததொன்ருனல் இத்திணைக ளுக்கும்வேரோருவமையுண்டோ—எ-று. (எ)

வாணியாழ்நாரதன்றும்புருநன்பாட்டுமாயன்
பாணியிற் * படகநந்திதண்ணுமைபதுமன்றாளம்
வேணிவான்கதிர்த்தூதும்வேயதாக்கொடுவாதாடுங்
காணியூரானுக்கிந்தநாட்டன்றிக்கருதிற்றுண்டோ.

(இ-ள்) சரஸ்வதி-வீணையும்-தும்புருநாரதர்கள்நல்ல இசைப்பாட லும்- திருமாலானவர் இசைப்பாடலுக்கொத்த-படகம் நந்திதேவர் முழவு- பிரமன்-தாளம்-ஆகாயத்திற் சஞ்சரிக்காநின்றசிறந்தசூரிய னுஞ்சந்திரனும்-ஊதுகின்றவேய்ங்குழலென்னுமிவைகளை வாசிக் கக்கொண்டு காளியுடன்வாதாடும் காணியாகியபதி யிந்தநாட்டிலல் லதுபரமசிவம்வேறேதிருவுளத்திற்கொண்டதுண்டோ—எ-று.(அ)

* படகம்-என்பதுஒருவாத்தியம்.

முகரிசேயாறுபாலிமுரறிைக்கம்பைபம்பை
யகருவேநாறும்பெண்ணையருந்திருநதியந்நாட்டின்
மகரவாரியினும்பொங்கிமடைதொறும்பிரிந்தொன்றாகு
நிகரிலான்பலதேவாயநிகரொனக்காக்குமன்றே.

(இ-ள்) பொன்முகரிநதி - சேயாறு - பாலாறு - அலைகளொலி க்கும் கம்பாநதி - பம்பையாறு-அகிலைகமழும்படியாகிய பெண் ணையாறு - என்னும்நதிகள் பெறுதற்கரியசெல்வமுள்ள அந்தநா ட்டில் - மகரமச்சமுலாவும் சமுத்திரத்தைப்பார்க்கிலும் அதிகமா கப்பெருகி மடைகளையுடையவயல்களெங்கும் தனித்தனிபிரிந்து ஒருமுதலாகி - தமக்கிணையில்லாதபரமசிவம் பலதேவர்களாய்க்காக் குமுறைமையையொக்குமென்றுசொல்லும்படி நாடுகளைக்காக்கு ம்—எ-று. (கூ)

சங்கெங்குமெகினமெங்குந்தடமெங்குந்தடங்காவெங்குங்
கொங்கெங்குநளினமெங்குங்குவளையங்குழாங்களெங்கும்

சங்கெங்குநதிகளெங்குங்கரும்பொடுநெற்காடெங்கு
மெங்கெங்குமிவைமற்றின்றியில்லையத்திருநாட்டெல்லை.

(இ-ள்.) சங்கங்களெவ்விடத்துமிருக்கும் - அன்னங்களெவ்விடத்துமிருக்கும் தடாகங்களெவ்விடத்துமிருக்கும் - பெரியசோலைகளெவ்விடத்து மிருக்கும் - தேன் எவ்விடத்தும்பெருகிக்கொண்டிருக்கும் - தாமரைகளெங்குமிருக்கும் - அழகிய நீலோற்பலக்கூட்டமெங்குமிருக்கும்-வரம்புகளெங்குமிருக்கும்- நதிகளெங்குமிருக்கும்-கரும்புகளுடன்நெற்பயிரெங்குமிருக்கும்- அந்தத்திருநாட்டெல்லையெங்கெங்கும்இவைகளேயன்றிவேறொன்றுமில்லை — எ-று. (௰)

மற்று - அசைநிலை - மிகுதிதோன்ற நெற்காடென்றார்.

மஞ்சடாப்பொதும்பரில்லை மதியடாப்புரிசையில்லை
நெஞ்சடாத்தருமமில்லை நெறியடாச்செயலொன்றில்லை
நஞ்சடாக்கயற்கணில்லை கயற்கண்ணார்நளினத்தாட்செம்
பஞ்சடாக்குஞ்சியில்லை பைதிரக்குமரர்க்கெல்லாம்.

(இ-ள்) மேகம்பொருந்தாத சோலைகளில்லை-சந்திரனைப்பொருந்தாதமதிலில்லை- தருமநெறியைப்பொருந்தாதமனமில்லை நீதியைப் பொருந்தாத செய்கையொன்றுமில்லை - விஷத்தையொவ்வாதகண்களில்லை-அந்தநாட்டுக்குமரருக்கெல்லாம்கயல்போன்ற கண்களுள்ள அம்மாதருடைய செந்தாமரைமலர்போன்ற பாதங்களிலூட்டிய செம்பஞ்சிக்குழம்புபொருந்தாதகேசமில்லை—எ-று. (௰௧)

தொடுநருமலத்தோடேற்றையுழுநருந்தொய்யற்செய்யி
னடுநருங்களையிற்காவிநலிநருநலிந்தகூலி
கொடுநரும்பசும்பொற்செந்நெற் குவிநருங்கொழுந்தீ
ங்கன்ன, லடுநருமாயமள்ளரதிர்ப்புவானதிர்க்குமாதோ

(இ-ள்) ஏரில்கடாக்களைப் பூட்டுகின்றவர்களும் - உழுகின்றவர்களும் - சேறுள்ளதானகழனியில் நாறுநடுகின்றவர்களும்- களையில் நீலோற்பலத்தைப் பறிப்பவர்களும் - களைபறித்த கூலிகொடுப்பவர்களும் - மாற்றுயர்ந்த பொன்னிறமுள்ள சம்பாநெல்லைக்குவிப்பவர்களும்-செழுமையுமதுரமுமுள்ளகருப்பஞ்சாற்றினைக்காய்ச்சுகின்றவர்களுமாகியபள்ளர்களுடையஆரவாரம்* ஆகாயத்தின்மட்டும்ஒலிக்கும்—எ-று.

* ஆகாயத்தினளவு-நீலநிறமாகத்தோன்றுகிறவளாயிலென்றுமு ல்லோர்களாற் கூறப்படுகின்றது. (௰உ)

தலையொடுநெடுந்தாணீக்கித் தாளங்கடெறிப்பமள்ள
ரிலைவயக்கூன்றாத்தாலெறிந்தெடுத்தாட்டியாட்டி
யலையெறிகருப்பஞ்சாறடும்புகைபொதும்பின்மூடி
மலைகளுமுகிலுமேய்ப்பவயின்வயின்வயங்குமன்றே.

(இ-ள்) கொழுந்தாடைகளையும்- நெடிய அடிக்கட்டைகளையும்- நீக்கிவிட்டு முத்துகள் சிதறும்படி தகடாகியவளைந்த வெற்றிபொருந்தியகொடுவாட்களினால்வெட்டிவெட்டி அந்தத்துண்டுகளையெடுத்துப்பலதரம்ஆலைபிலாட்டுதலால்பெருகிச்சால்களில்நிறைந்து அலைவீசிக்கொண்டிருக்கும்படியாகிய மதுரமுள்ளகருப்பஞ்சாற்றினைக்காய்ச்சுதலால்உண்டாகும்புகையானது சோலைகளில்மூடிமலைகளையும்அவைகளைச்சூழ்ந்தமேகங்களையும்ஒப்பாகஇடங்கள்தோறும்பிரகாசித்துக்கொண்டிருக்கும்—எ-று. (௰௩)

சோலை-மலையாகவும்-புகை-மேகமாகவுங்கொள்க.

அயலிடைக்கிடந்தயாமைமுதுகிடையரிவாடீட்டி
வயலிடைக்கொய்துகொய்துவான்றொடவடுக்கிமள்ளர்
செயலுடைக்கடாவிடுக்குஞ்செந்நெலஞ்செழும்போரீட்டம்
புயலுடைத்தாயசாரற்பொன்மலைமலைக்குமன்றே

(இ-ள்) அயலிலிருக்கும் ஆமைமுதுகில்அரிவாள்களைத்தீட்டிக்கொண்டு வயல்களினிடத்தில் அரியரியாக அறுத்துஆகாயத்தைத்தொடும்படி - அடுக்கி மள்ளர்கள் கடாக்களைப்பிணைகட்டியடிக்கும்படியாகிய சம்பாநெற்போர்க்கூட்டம் மேகங்கள் சூழ்ந்தசாரலையுடைய பொன்மலையை யொப்பாகும்—எ-று. (௰௪)

உழவர்க்குழத்திமார்க்குமொலிதருகருப்பஞ்சாற்றிற்
பழனத்துவிளைந்தசெந்நெற்பசியதாளிற்றுஞ்சேர்த்துங்
குழைவுற்றதடக்கைநாற்றம் விரும்பியகருப்பிற்கொள்
ளை, யிழைபொற்கைநளினமென்கை தெருட்டுகையெ
யிக்குமன்னே.

(இ-ள்) உழவர்களுக்கும் - உழத்தியர்களுக்கும் - ஓசையுடன் ஆலையிலிருந்து பாய்கின்றகரும்புரசத்தினாலும் வயல்களில் விளைந்த சம்பாப்பயிர்களின் பசுமையுள்ளதாளை அரிவதினாலும்பின்பு அவைகளைச்சுமைகளாகச் சேர்ப்பதினாலும் - குழைவுபொருந்திய பெரியகைகளிற்பற்றிய மணத்தைவிரும்பிமொய்க்கும்வண்டினங்கள் அவர்களுடையகைகளைத் தாமரைமலர்களென்றுசொல்லுதலைத் தெரிவிப்பதொப்பாகும்—எ-று.

உழவர்கைதாமரையென்று உழத்தியர்களுக்குத்தெரிவிப்பது போலவும் உழத்தியர்கைதாமரையென்றுஉழவர்களுக்குத்தெரிவிப்பதுபோலவுமிருக்கின்றதெனப் பொருள்கொள்க. (௰௫)

பரிசுடர்ப்பசும்பொற்செப்புப்பதித்தநீலத்தினோடுங்
கொடிபுரத்திரண்டுகொண்டு-கோடிசென்றுலாயதென்ன
அடுவிழிக்கடைசிமார்தமலர்முலைத்திதலைமீது
நடுவயற்றெறித்தசேற்றுத்தெறியொடுநடத்தல்செய்வார்.

(இ-ள்.) அனந்தங்கொடிகள்நீலமணிகள்பதித்துள்ளவைகளாய்ப் பிரகாசம்பொருந்திய இரண்டு பொற்செப்பிணைமார்பில்வைத்துக் கொண்டுசஞ்சரிப்பதுபோல - ஆடவர்க்குவருத்தஞ் செய்யத்தக்க கண்களையுடைய உழத்தியர்கள்தங்களுடைய அடிபரந்தெழுகின்ற தனங்களில்பரந்ததேமலின்மேல் நாறுகள்நடுகின்ற வயலிலிருந்து தெறித்திருக்கிறசேற்றுத்துளியுடனுலாவுவார்கள்-எ-று. (௰௬)

தனங்கள்செப்பாகவும்-சேற்றுத்துளி-நீலமணியாகவுங்கொள்க

இல்லுறைக்குழவியுள்ளியுள்ளிப் போமெருமையீட்டஞ்
செல்லுழிப்பொழிந்தபாலைத்தொடர்ந்துபோஞ்செங்காலன்ன,
மல்லலந்தீம்பாலாழிமடுத்தெழுமழைக்கார்ப்பின்னர்
நல்லெழிற்பனிவெண்டிங்கணடப்பதேகடுப்பதம்மா.

(இ-ள்.) வீட்டினிடத்திருக்குங் கன்றுகளை அடிக்கடி நினைத்துக் கொண்டு செல்லுகின்ற எருமைக்கூட்டம்பொழிந்தபாலை யுண்ணத்தொடர்ந்து போகின்ற செங்காலன்னங்கள் - வளப்பம்பொருந்தியதா யழகும் மதுரமுமுள்ள பாற்கடலிற் பாலுண்டுமேலெழுகின்ற மேகத்தின்பின்னர்-நல்ல அழகுங் குளிர்ச்சியும்வெண்மை நிறமுமுள்ளசந்திரனடப்பதையொப்பாகும்-எ-று. (௰௭)

கொய்தளவுகுத்தமெல்லென்கொழுமலர்க்குப்பை நாப்பண்
பெய்தனகவரிப்பாலும்பிரசமுப்பழத்தின்சேறு
மொய்தரத்தொண்டைநாட்டுமுதுகுடிப்பிறந்தசான்றோ
ரெய்தியவிருந்தையூட்டுமில்லெனப்பொலிந்தசோலை.

(இ-ள்.) கொய்யும்படியாகியமுல்லைக்கொடிகளுதிர்த்தமெத்தெ ன்றசெழுமையுள்ள மலர்க்குவைகளின்பத்தியில் பொழிந்தனவாகி ய கவரிமான்பாலும் - தேனும்-முப்பழங்களின் சாறும் நெருங்கின வைகளாய்த் தொண்டைநாட்டில் வாழ்கின்ற பழமையாகிய குடிக ளிற்பிறந்த சான்றோர்கள் தங்களிடத்தில் வந்தவிருந்தினர்களுக்கூ ட்டும்வீடுகள்போலச் சோலைகள்விளங்குகின்றன-எ-று.

முல்லைமலர்சோறாகக்கொள்க - தொன்றுதொட்டுச்சால்புத்த ன்மையுள்ளவர்களென்பதுதோன்றமுதுகுடியென்றார். (௰அ)

பழக்குவைதழைக்குந்தாழைப்பாகட்டகட்டிக்குப்பை
யெழக்குவிதன்னற்குன்றமிடுமலர்க்குவான்மற்றெல்லா
முழக்கியவறுகான்மொய்ப்பமருதத்துமுதல்வன்காய்ந்த
வழக்கமதஞ்சிநீலவரைபுரிவணக்கமேய்க்கும்.

(இ-ள்.) முப்பழக்குவைகளும் - தழைத்திராநின்றதென்னஞ்சா று காய்ச்சுதலாலுண்டாகிய வெல்லக்கட்டிக்குவைகளும் ஓங்கும் படி குவிந்திருக்கும் கருப்பஞ்சாறுகாய்ச்சுதலாலுண்டாகிய வெ ல்லக்கட்டிக்குன்றுகளும் - கீழ்ச்சிந்தியிருக்குமலர்க்குவைகளுமா கிய இவைகளேயன்றி மற்றுமுள்ளமதுரவஸ்துகளின்மேலெல்லா ம்-ஒலிக்காநின்ற வண்டுகள் மொய்த்துக்கொண்டிருப்பவை - மரு தநிலத்துக்கடவுளாகிய தேவேந்திரனானவன் - முன்னம்மலைகளின் சிறகுகளையரிந்தமுறைமைக்குப்பயந்து அவ்விந்திரனை நீலகிரிவண க்கஞ்செய்யுந்தன்மையையொப்பாகும்—எ-று.

முழங்கிய எனற்பாலதுவிகாரவகையால்முழக்கியவெனநின்ற து-மேற்கூறிய பழமுதலியபொருள்கள் மலைபோலிருக்கஅவைகள் மறையும்படி வண்டுகள்மொய்த்து ஒலித்துக்கொண்டிருப்பதால் நீ லமலையென உருவகஞ்செய்தனர். (௰௯)

கொம்புடைப்பொதும்பர்தோறுங்கொண்டல்கண்டுயின்று
வாசத், தம்புடைக்கொண்டுமீண்டுதனையிடைச்சொரியுமாற்று

லம்புடைப்போதுமன்றியளப்பிலுய்யானம்பூத்த
வம்புடைப்போதுநாறும்வாவிரணதிகள்யாவும்

(இ-ள்,) கொம்புகளையுடையசோலைகள்தோறும் - மேகங்கள்தங்கி யிருந்து அந்தச்சோலை மலர்களிலுள்ள வாசனையைத்தம்மிடத்தில் பொருந்தக்கொண்டு அங்கிருந்து நீங்கிப் பூமியினிடத்தில் மழை பொழியுமுறைமையால்அந்நீரிலுள்ளமலர்வாசனை பரிமளிப்பதுமல்லாமல்அளவில்லாதநந்தனவனங்களிற்பூத்தமலர்வாசனைகளையும்-தடாகங்களும்- நதிகளும்பரிமளித்துக்கொண்டிருக்கும் எ-று. (உ௰)

மாந்தளிர்நிறத்திளருமதனொத்தவடிவத்தாரும்
போந்திளம்பிடிகளோடுபொருகளிறாடியாங்குத்
தேந்தடங்குடையச்சிந்திச்சிதைந்தமான்மதத்தின்சேறுஞ்
சாந்தமுங்கமழ்ந்துவாளைதலைத்தலையுகளுமாதோ.

(இ-ள்.) மாந்தளிர்போன்ற நிறமுள்ள மாதர்களும்- மன்மதனை யொத்த அழகுள்ளஆடவர்களும் - இளம்பருவமுள்ளபெண்ணானை களுடன் ஆண்யானைகள் சென்றுவிளையாடுவதுபோல் மதுரமுள் ள நீர்த்தடாகங்களில் விளையாடுதலால் சிந்திக்கலங்கியிருக்கும் கஸ் தூரிக்குழம்புவாசனையும் - சந்தனவாசனையுமாகப் பரிமளித்துக் கொண்டு வாளைமீன்கள்இடங்கள்தோறும் தாவிக்கொண்டிருக்கும் —எ-று. (உக)

காவியங்கமலப்போதுங்கயிரவத்திரளுங்கான்ற
வாவியின்மதுவுண்டும்பர்வாவியவாளைக்கொள்ளை
யோவியத்தினியோர்கண்டத்துமுத்துநீலம்போலத்
தீவியகமுகிற்பாளையளியொடுசிதறுமன்றே.

(இ-ள்.) நீலோற்பலமலர்களும்- அழகியதாமரைமலர்களும்- செ வ்வல்லி மலர்களுஞ் சொரிந்ததடாகங்களிலிருக்குந் தேனையருந்தி ஆகாயத்தில்தாவிய வாளைக்கூட்டங்கள் சித்திரம்போலழகுள்ளமா தர்களுடைய கழுத்திலிருந்து உண்டாகும் முத்துகள்போலவும் அவர்கள்கழுத்தினிலணிந்திருக்கும் நீலமணிகள்போலவும்மதுரமு ள்ள கமுகமரங்களின் பாளைகளை அவைகளில்மொய்த்துக்கொண் டிருக்கும் வண்டுகளுடன் சிதறிவிடும்—எ-று

கழுகமர்த்தின்கழுத்துமாதர்களுடையகழுத்துக்குஉபமானமாகச்சொல்லப்படுவதாதலால்அம்மரத்திலிருந்து உதிருகிறபாளைப்பூக்களை மாதர்களுடையகண்டத்திலிருந்துஉதிருகிற முத்தெனக்கூறினர்.

முத்துகள்உற்பவிக்கிறஇடங்களைவகுத்துக்கூறில் பெருகுமாதலால் எழுதாது விடப்பட்டது. (உஉ)

பங்கயப்பவளச்சேக்கைப்பள்ளிகொண்டெழுந்தவன்னங்
கொங்கொளிர்சிறையிற்பின்போங்கொழுஞ்சுரும்பொழுங்கித்கோலஞ், செங்கையிற்கருங்கயிற்றுச்செழுந்துகிற்கதலிவிட்டான், மங்குலின்வருணனன்னவகுவபொய்கையெல்லாம்

(இ-ள்.)தாமரைமலர்களாகியசெம்மைநிறமுள்ள சேக்கையினிடத்துச் சயனித்துக்கொண்டிருந்தெழுந்த அன்னப்பக்ஷிகளினுடையவாசனைவீசுகின்ற சிறகின்பின்செல்லும்செழுமையுள்ளவண்டொழுங்கின் கோலமானது சிவந்தகையிற் பற்றிக்கொண்டிருக்குங்கருமைநிறமுள்ளகயிற்றினாலே செழுமையாகிய வஸ்திரக்காற்றுடியை வருணன்மேகமண்டலத்தில்விடுவதுபோல்தடாகங்களெங்கும்பொருந்தியிருக்கும்—எ-று.

வண்டொழுங்கு - கருங்கயிறாகவும் - அன்னங்கள் - வஸ்திரக்காற்றுடியாகவும் - தாமரையிலைகள் - மேகமாகவும் - தடாகத்துநீர்-வருணனாகவும்-அத்தடாகத்திலிருக்குஞ் செந்தாமரைமலர்கள் அவனுடையகையாகவுங்கொள்க.

இது இல்பொருளுவமை (உ௩)

ஆங்குலகனைத்துநோக்கியவாவினுக்கமைதராவாய்
நீங்குபனிருவர்கண்களறுநான்குநிரப்பநோக்க
வோங்குமித்திருநாட்டெல்லைபுட்படுகோட்டமெண்மூன்
றீங்குநல்வளத்திறேனும்மையவ்வைத்தனெனலாமன்றே. •

(இ-ள்.) உலகங்களையெல்லாம்பார்த்துப்பார்த்து ஆசைக்கு அமைவுபெறாமல் அவைகளைவிட்டுநீங்குகின்றபன்னிரண்டு சூரியர்களுடைய இருபத்துநான்குகண்களாலும் நிறையக்காணும்படி யோங்கியிருக்கிற இந்தத்தொண்டை நாட்டெல்லைக்குட்பட்ட இருபத்துநான்குகோட்டங்களையும் நல்லவளப்பத்துடன்மயனென்றுபெயருள்ள தேவதச்சன்வகுத்திருத்தனனென்று சொல்லலாம்—எ-று. (உ௪)

வேறு.

அன்னகோட்டமெண்மூன்றினுமான்றமை
நன்னர்வான்குடிநாதருமாதரு
முன்னைமாலுமளப்பிலன்முண்டகப்
பொன்னனாளுமளப்பிலள்போல்வரால்.

(இ-ள்.) அத்தன்மையாகிய இருபத்துநான்கு கோட்டங்களிலும் நிறைந்தமைந்திருக்கும் நன்மையுஞ் சிறப்புமுள்ள குடிகளாகிய ஆடவர்களுமாதர்களும். (செல்வத்தினாலும் அழகினாலும்) அளவில்லாதவிஷ்ணுக்களையும் தாமரைப்பூவில் வீற்றிருக்கும் அளவில்லாதலட்சுமிகளையும் ஒப்பாவர்கள்—எ-று. (உரு)

இருபத்துநான்குகோட்டமாவன- புழற்கோட்டம். (க) புலியூர்க்கோட்டம். (உ) ஈக்காட்டுக்கோட்டம். (ங) மணவூர்க்கோட்டம். (ச) செங்காட்டுக்கோட்டம். (ரு) பையூர்க்கோட்டம். (சு) எயிற்கோட்டம். (எ) தாமற்கோட்டம். (அ) ஊற்றுக்காட்டுக்கோட்டம். (கூ) களத்தூர்க்கோட்டம். (௰) செம்பூர்க்கோட்டம். (௰க) ஆமூர்க்கோட்டம். (௰உ) ஈதூர்க்கோட்டம். (௰ங) வெண்குன்றக்கோட்டம். (௰ச) பலகுன்றக்கோட்டம். (௰ரு) இளங்காட்டுக்கோட்டம். (௰சு) காலியூர்க்கோட்டம். (௰எ) சிறுகாரைக்கோட்டம். (௰அ) படுவூர்க்கோட்டம். (௰கூ) கடிகைக்கோட்டம். (உ௰) சந்திரிகைக்கோட்டம். (உக) குன்றப்பத்திரக்கோட்டம். (உஉ) வேங்கடக்கோட்டம். (உங) வேலூர்க்கோட்டம். (உச)

(புறவிருத்தம்.)

கோட்டமொரிருபானான்குங்கூறுநாடெழுபத்தொன்பான்
றோட்டெழிலாயிரத்துத்தொளாயிரநத்தமாகுந்
தாட்டெழுகோத்திரங்கள்சகத்திரம்பன்னிரண்டாம்
நாட்டில்வேளாளர்தம்மைநவின்றிடவடங்காலக்கம்.

---

கடியநாமத்தகாப்பும்வதுவையும்
வடிவுமேயல்லதில்லையவ்வைப்பெலாங்
கொடியவானவன்குன்றமுமாடமு
நெடியனாநிகழ்த்தலுமாமரோ.

(இ-ள்) கடியவென்னும் பெயரையுடையவை-காவலும் - கல்வியாணரும் நிதம்பழுமே யல்லது அந்தநாடெங்கும் -வேறேயில்லை -கொடியவென்னுஞ்சொல்லை அங்கிருக்கும் பரமசிவத்தின்மலைக்கும்வீடுகளுக்கும்-நீண்டகாடுகளுக்கும் - ஒருபக்ஷம்-சொல்லலாகும்—எ-று. (உசு)

ஊடும்போதும்வழாதவுரையினர்
நீடுங்கேள்வர்செயற்குநிழலனர்
சூடுமாமுல்லைத்தோகையர்மண்ணிடைக்
கோடிசாவிபிறந்தன்னகொள்கையார்.

(இ-ள்.)தத்தங்கணவர்களுடன் ஊடுகிறகாலத்திலும்-தவறுதலில்லாத வசனமுள்ளவர்கள் - நீடியகணவர்கள் செய்யும் அறங்கட்கு அவர்கள் நிழலையொத்தவர்கள்-முல்லைப்பூமாலை சூட்டிக்கொண்டிருக்கும் அந்தமாதர்கள் - இவ்வுலகத்தில் அநேகம் அருந்ததிகள்பிறந்திருத்தலை யொத்தவர்கள்—எ-று.

தத்தங்கணவர்கள் செய்கைகளுக்கு ஒத்துநடப்பதினால்- நிழலனென்றும் கற்புள்ளவர்களென்பதற்கு அடையாளமாக முல்லைக்கோதையரென்றுங் கூறினர் - கற்புஎன்னுஞ்சொல் முல்லைக்கும் பதிவிரதாதருமத்துக்கும் பொருள்படும். (உஎ)

கொழிக்குநூலினர்கோட்டமில்சிந்தையர்
பழிக்குமாநிலநல்கினும்பற்றிலார்
மழிக்கநீட்டவெனச்செயும்வண்மையை
யொழிக்கமாதவரொத்துளர்மாந்தரே

(இ-ள்.) அநேகம்நூல்களை ஆராய்ச்சிசெய்திருப்பவர்கள் - மாறுபடாத சிந்தையுள்ளவர்கள் - பெரிய பூமியைக் கொடுத்தாலும் பழியையேற்றுக்கொள்ளமாட்டார்கள்- தலையைமுண்டிதமாக மழித்தலும் சடைமுடியாக நீட்டலுமாகியவண்மையை ஒழிக்கத்தக்கமாதவர்களை யொத்திருப்பவர்கள் அந்தநாட்டின்மாந்தர்கள்—எ-று.

விரவுவண்மையர்மெய்மொழிக்கின்னுயி
ரூரவுநீரெனத்தீப்புக்குதவின
ராவின்வாயிற்கவர்ந்தவரதன
மிரவினீந்தவரொன்பிறவிகலார்.

(இ-ள்) பொருந்திய உதாரத்துவமுள்ளவர்கள் - தாங்கள்கூறிய சத்தியவார்த்தையின்பொருட்டுநீரிற்புகுவதுபோலத் தீக்குழியிற்புகுந்து தங்களினியஉயிரைக் கொடுத்தவர்கள் - பாம்பின்வாயிலிருந்துபெற்றமாணிக்கத்தைஇரவில்புலவருக்குக்கொடுத்தவர்கள் - இப்படிக்கொத்த தன்மையுடையவர்கள் - மற்ற எப்பொருளைத்தான் கொடார்கள்—எ-று.

தீப்புக்கு உயிரைக்கொடுத்தது- பழையனூரில் ஒருவணிகன் பொருட்டு - பாம்பின்வாயிற் கவர்ந்த மாணிக்கத்தைப் புலவருக்கீந்தவர் - அயனம்பாக்கம் சடையப்பமுதலியார் - அந்தச்சரிதங்களை விவரித்தெழுதப்புகின் பெருகும். (உக)

நிறையுங்கல்விக்ககன்கடனேர்பவர்
பொறையுமாற்றலும்பூமகள்போல்பவர்
மறையுமூழியுமன்னதோர்வாய்மைய
ருறையுமன்னுயிர்க்கன்னையொத்துளார்

(இ-ள்) நிறைந்தகல்வி கேள்விகளால் விசாலமாகிய சமுத்திரத்தையொத்தவர்கள் தாங்குந்தன்மையினாலும் பொறுமையினாலும் பூமிதேவிக்கொப்பானவர்கள்- வேதத்தையும்ஊழிகாலத்தையுமொத்த உண்மையினையுடையவர்கள் - உலகத்தில்வாழுமுயிர்களுக்குத் தாயர்களையொத்தவர்கள்—எ-று. (உ௨)

சிந்துமாநிலங்காக்குந்திறநெறிப்
புந்தியாற்கொருதாயம்புறந்தரா
வந்துசாலிக்களத்துவகுத்துள
வைந்துதாயத்துமைந்தறமாக்குவார்

(இ-ள்) சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தைக்காக்கும் நல்லநீதியை மறவாதவிவேகமுள்ள அரசனுக்கு ஆறிலொருகடமை கொடுத்துவிட்டுவந்து - நெற்களத்துவகுக்கப்பட்டிருக்கிற மற்றக்கடமை ஐந்தினுலும்ஐந்து அறமுஞ்செய்வார்கள்—எ-று.

அரசன் கடமையொன்று போக மிகுந்தஐந்துபங்குநெற்களைக்கொண்டு - பிதிரர் - தெய்வம் - விருந்து - சுற்றத்தாருக்குந்தமக்குமாகப்பகுத்துண்பவர்கள் - தென்புலத்தார்தெய்வம் விருந்

தொக்கறுனென்ருங் கைம்புலத்தா ரோம்பறலே - என்னுந்திருக்குறளானுமுணர்க. (ருக)

செறுப்பமென்றொருசிந்தைசெய்வாரையுங்
கறுப்பமென்னக்கனவிலுஞ்சிந்தியார்
மறுப்பயின்றுயிர்வைகலின்வைகலும்
வெறுப்பர்திங்களைவேறென்கொல்கூறுகேன்.

(இ-ள்.) தங்களைக்கொல்லுகிறோமென்றுஒருஎண்ணங்கொண்டிருப்பவர்களையும் - கோபிப்போமென்று கனவிலும்எண்ணுதவர்கள் களங்கத்தைப் பொருந்தியுயிருடன் வாழ்தலினால்சந்திரனை நாள்தோறும் வெறுப்பவர்கள் ஆதலால் அந்தநாட்டு மாந்தர்தன்மைக்கு வேறேயாதுசொல்வாம்—எ-று. (ருஉ)

காணிற்றுண்ணென்றெழுந்துகலந்தெதிர்
பேணிச்சென்றுபைந்தேனுகப்பேசிப்பின்
பாணிக்கேய்ந்தனவீந்துபழிச்சுமை
நாணித்தாழ்வர்நாட்டுறைமாந்தரே.

(இ-ள்.) இரவலர்கள்வரக்கண்டால் விரைவிலெழுந்தெதிர்சென்றுவிரும்பித்தேன்சிந்துவதுபோல உபசாரவார்த்தை சொல்லிப்பின்புதங்கள்கைக்குள்ளபொருளைக்கொடுத்துப் பழியாகியசுமைக்கு உள்ளத்தில்நாணித்தாழ்வார்கள் அந்தநாட்டு வாழுமாந்தர்கள்-எ-று.

சங்கணத்தரவன்சடைக்கானமும்
பொங்கரத்தவிழிபன்புயங்களுந்
தங்கணற்குலத்தாய்மனையாயுளா
ரொங்கிவர்க்கெதிரொன்பவிசைப்பதே.

(இ-ள்.) சர்ப்பமாகியகங்கணமணிந்திருக்கும்பரமசிவனதுசடைக்காடும்-விளங்குகின்றசெங்கணனென்னும்பெயருள்ளஒருசோழமகாராசனுடையபுயங்களும் தங்கள்நற்குலத்தாயாகியகங்காதேவியினிடமாகவும் - பூமிதேவியினிடமாகவும் உள்ள இத்தன்மைபொருந்திய இவர்களுக்கு ஒப்பு எவ்விடத்துண்டென்று சொல்லலாமென்றுபெரியோர்கள்சொல்வார்கள்—எ-று.

செங்கணனென்னும் - அரசனே - அறுபத்துமூன்றுநாயன்மார்களிலொருவராகிய கோச்செங்கட்சோழநாயனர். (ருங)

இத்திறத்தவர்யாருமிடந்தொறு
மொய்த்ததொண்டைநன்னாட்டிடைமுக்கணன்
மெய்த்தவர்க்குவெளிப்படுகின்றதோ
ருத்தமப்பதியுண்டதியம்புவாம்.

(இ-ள்.) இத்தன்மையையுடைய எல்லாரும்-தத்தம்பதிகள்தோறும்நெருங்கியிருக்கும் - நல்லதொண்டைநாட்டினிடத்தில்-திரிநேத்திரமுள்ளபரமசிவம் உண்மையானதவமுள்ளவர்களுக்குத் தரிசனங்கொடுக்கும் படியான உத்தமதலமொன்றுண்டு அதன்சிறப்பினை யினிச்சொல்லுகின்றோம்—எ-று. (கூரு)

நாட்டுப்படலமுற்றியது.

ஆகத்திருவிருத்தம்-ருகூ.

# நகரச்சருக்கம்.



வடகலையினெடுத்தகங்காசலபுரியைத்தென்னூலின்வகு
த்துத்தொல்லோ, ரிடனுடையகழுக்குன்றநகரமெனக்க
டையுகத்தினிசைப்பரிவ்வூர், கடவுளருமருந்தவருமால
யனிந்திரனாதிக்கணத்துளோருந். தடவிசும்பினுழிநின்
றுகாண்டொறும்பூமழைபொழிந்துதாழ்வதம்மா.

(இ-ள்.) சமஸ்கிருதபாஷையினாற்கூறியகங்காசலமென்னும்க்ஷேத்திரத்தைக்கலியுகத்தில்தமிழ்நூலால்முன்னோர்கள்வகுத்துத்திருக்கழுக்குன்றமென்னும்பெயர்கூறினர். இத்தன்மையுள்ள பதியானது தேவர்களுமுனிவர்களும் திருமால்பிரமதேவன் தேவேந்திரன்முதலானகூட்டத்தாரும்- பெரியஆகாயத்திலிருந்து தரிசிக்குந்தோறும் பூமாரிபொழிந்துப்பணியப்படுவது—எ-று. (க)

(வேறு)

தணிவலம்புரியன்னசாலயேற்கலந்
தணிநகர்வலம்புரிந்தருளுங்கங்கைபோற்
பணிபகந்தெரிதருங்கிடங்குபாங்கர்சூழ்
மணிமதிலுடுத்தனமறுகுங்கோடியே.

(இ-ள்) தணிவுள்ளவலம்புரிச்சங்குகளையும் அன்னப்பக்ஷிக்கூட்டங்களையுந்தன்னிடத்திற் பொருந்தி அழகியநகரத்தைவலஞ்செய்கின்றகங்கையைப்போல நாகலோகந்தெரியும்படியான ஆழமுள்ள அகழியானதுபக்கத்திற்சூழ்ந்த மணிகள்பதித்த மதில்களாற்சூழப்பட்டனவாகிய வீதிகளும் அனேகமாயிருக்கின்றன—எ-று, (உ)

பளிக்கினத்தினுமிந்துபரிதிக்காந்தத்துங்
குளிக்குநித்திலமுதன்மணிக்குழாத்தினு
மொளிக்கிருளிரிதருமொண்பொனீட்டினுந்
தெளிக்குநூல்விதிசெய்ததிருவிற்கோடிமே.

(இ-ள்) பளிங்குக்கற்கூட்டத்தினாலும், சந்திரகாந்தக்கற்களினாலும், சூரியகாந்தக்கற்களினாலும், சமுத்திரத்தில் மூழ்கியெடுக்கும்படியாகிய முத்துமுதலியரத்தினக் கூட்டத்தினாலும், தன்பிரகாசத்தினால் இருள் நீங்கச்செய்யும் பொன்கூட்டத்தினாலும்? தெளிவுள்ள சிற்பசாஸ்திரவிதிப்படி அமைத்திருக்கிற செல்வமுள்ளவீடுகள் அனந்தங்களாம்—எ-று. (௩)

வேதவெற்பென்பதுவெற்பனந்தமாய்த்
தீதறக்கொழுந்துவிட்டெழுந்துதேவரைப்
பாதகத்திடர்துடைக்கின்றபான்மையே
யாதலொத்தனகொடியாடுமாடமே.

(இ-ள்.) வேதகிரியென்று சொல்லப்படும் ஒருமலையானது அனந்த மலைகளாய்க்குற்றமறக்கொழுந்து விட்டெழுந்து தேவர்களுடையபாவமாகிய துன்பத்தைத்துடைத்து நீக்கிவிடுந்தன்மைபோல - மாடங்கள்மேல் பெரியகொடிகள் ஆடிக்கொண்டிருக்கும் —எ-று. (௪)

பத்திநீலத்தினும்பவளந்தன்னினு
மொத்துவேறிருதிறத்தொளிருமாடங்கண்
முத்தின்மாளிகைபொலிமூழ்கநீறுதோய்
சத்திடாகன்னெனத்தயங்குமெங்குமே.

(இ-ள்) வரிசைவரிசையாய் நீலரத்தினங்களினாலும் பவளங்களினாலும் - அமைக்கப்பட்டுவெவ்வேறு இரண்டுவகையாகப்பிரகா

சியாநின்ற வீடுகள் முத்துகள்பதித்தவீடுகளின் ஒளியில்மூழ்கிப் பார்வதியை இடப்பாகத்திலுடைய பரமசிவனைப்போல எங்கும் விளங்கிக்கொண்டிருக்கும்—எ-று. (௫)

ஒருபுறம் நீலரத்தினங்களினாலும் மற்றொருபுறம் பவளங்களினாலுஞ் செய்யப்பட்டுள்ள ஒவ்வொருவீட்டுகளின்மேல் வேறே ஒவ்வொருவீடுமுழுவதும் பதிக்கப்பட்டிருக்கிற முத்துகளின்பிரகாசம்பாய்வதினால் அர்த்தநாரீசுவரமூகூர்த்தம்போல் அந்தவீடுகள் முழுமையும் விளங்குகின்றன என்பதுதாற்பரியம்.

முழுநிலாப்பளிக்கறைமூன்றிலெங்கணுங்
கொழுவியமரகதக்குட்டிமத்துவாய்
விழுமியமாணிக்கத்தியன்றவேதிகை
தெழிகடலரியுரத்திருவைமானுமால்.

(இ-ள்) பூரணசந்திரஒளியுள்ள பளிக்கறை முன்றிலெங்கும் செழுமையுள்ளமரகதரத்தினக்கற்படுத்திருக்கிற இடங்களில் மேன்மைபொருந்தியமாணிக்கங்களினாற் செய்யப்பட்டுள்ளவேதிகைகள் அலைகளைவீசுகின்ற திருப்பாற்கடலிற்பள்ளிகொண்டிருக்கும்மகாவிஷ்ணுவினுடைய மார்பினிடத்தில் வீற்றிரா நின்றமகாலட்சுமியையொப்பாகும்-எ-று. (௬)

பளிக்கறைபாற்கடலாகவும்மரகதம்பதித்த இடம்திருமாலாகவும் அதினடுவிலிருக்கும் மாணிக்கவேதிகை மகாலட்சுமியாகவும் உருவகஞ்செய்திருக்கின்றமைகண்டுகொள்க

வெண்ணிறச்சுதைபொதிமேற்றளந்தொறும்
பண்ணிறப்பவளத்துப்பகுத்ததூவிகள்
கண்ணகன்விசும்பிடைகங்கைபூத்தெழு
மண்ணலங்கமலங்களனந்தமொத்தவே.

(இ-ள்) வெண்மைநிறமுள்ள சுண்ணாம்புதீற்றிய மேன்மாளிகைகளெங்கும் நல்லநிறமுள்ள பவளங்களினாலேசெய்து வைத்திருக்கிற கலசங்கள் இடமகன்ற ஆகாயத்தினிடத்திற் செல்லுங்கங்காநதியினிடத்திற்பூத்துவிளங்குகின்றபெருமைபொருந்தியஅனந்தஞ்செந்தாமரைமலர்கள்போலிருக்கின்றன—எ-று. (௭)

பேதையர்மரகதம்பிறங்கும்பாசறை
வீதமர்வண்டலின்வீழ்த்தநித்திலந்
தாதவிழ்பங்கயத்திலையிற்றங்கிய
வோதவெண்புனற்றுளியொளிர்வதொக்குமால்

(இ-ள்) சிறுபெண்கள் மரகதரத்தினத்தினாலமைந்திருக்கிற பசியநிறமுள்ளசிறுவீடுகளில் பொருந்தியவிளையாட்டில்விழுத்தியமுத்துக்கள் மகரந்தங்களோடு மலருகின்ற மலர்களையுடைய தாமரையிலையிற்பொருந்திய வெண்மைநிறமுள்ள அலைநீர்த்துளிபிரகாசிப்பதையொப்பாகும்—எ-று. (அ)

கூட்டுறும்பூவைகள்கூறுமாகமம்
வேட்டெகினமுமகிழ்தூங்கும்வேட்கையிற்
பேட்டொடுமுருகலைப்பிரிந்துபைங்கிளிப்
பாட்டொடுமுருகுபகபோதப்பந்தியே.

(இ-ள்.) கூண்டுகளிற்பொருந்திய நாகணவாய்ப்பக்ஷிகள் ஆகமவாக்கியங்களைச்சொல்லும் அந்தவாக்கியங்களை விருப்பமுடன் கேட்டு அன்னப்பட்சிகள் மகிழ்ச்சியையடையும் தங்கள்தங்கள் பெட்டைகளிடத்தில் விருப்பமுற்று மனமுருகிக்கொண்டிருப்பதைவிட்டுநீங்கிப் புறாக்கூட்டங்கள் பசியகிளிப்பிள்ளைகள்பண்ணுடன்பாடும்தேவாரமாகியபாடலைக்கேட்டு மனமுருகுவன—எ-று.

உருத்திரகோடியர்நந்தியும்பரோ
டருத்தியிற்பணிந்தமையறையுமாற்றினுங்
கிருத்திரன்றொழுவதேகிளிபல்காற்சொலுந்
தரித்தெழுமண்டசந்தாமுமென்பவே.

(இ-ள்) கோடிருத்திரர்களும் - நந்தீசுவரரும் - தேவர்களும் அன்புடன்வந்துபணிந்த சரிதத்தைச்சொல்லும் முறைமையைப் பார்க்கினும் கிருத்திரன்என்பவன் தொழுதசரிதத்தையே கிளிப்பிள்ளைகள் பலதரஞ்சொல்லும் - அதைக்கேட்டுக்கொண்டிருந்த பட்சிகள் அந்தசரித்திரங்களை மனதிலேதரித்துக்கொண்டு போமென்றுசொல்லுவார்கள் பெரியோர்கள்—எ-று. (ய)

மாளிகைமேற்கொடிமருங்குபோமுகி
லீளியமெய்புடைத்துகுத்தநித்திலந்
தோளிணைத்தொடியினார்தொகுதிபோதருந்
தாளிணைமெலிதரத்தகைதயும்வீதியே.

(இ-ள்) மாளிகைகளின்மேற் கட்டியிருக்கிற கொடிகளின்பக்கமாகச்செல்லுகின்ற மேகங்களின் பெரியஉடல் அக்கொடிகளால்அடிபட்டுச்சிந்திய முத்துக்கள் வளையல்களணிந்தகைகளையுடைய மாதர்கள்கூட்டஞ்செல்லுகின்ற வீதிகளில் அவர்கள்பாதங்கள்வருந்தும்படி நெருங்கியிருக்கும்—எ-று. (௰௧)

கொடியொடுதருவுமின்னொடுபொற்கொண்டலும்
பிடியொடுகளிறுமேபிணைத்தவாறென
வடியொடுபொருங்கணார்வதுவைப்பல்லியத்
திடியொடுந்திரிவராலெண்ணின்மாந்தரே.

(இ-ள்) காமவல்லியென்னுங்கொடிகளுடனே கற்பகவிருட்சங்களும் - மின்னலுடனே பொலிவுள்ளமேகங்களும் பெண்ணானைகளுடன் ஆணானைகளும்சேர்ந்துசெல்லும்முறைமைபோல மாம்பிஞ்சின் பிளப்பினையொத்த கண்களுள்ள தத்தம் மனைவியருடன் அனந்தம் ஆடவர்கள்பலவாத்திய கோஷங்களுடன் வீதிகளில் மணக்கோலமாகச்செல்வார்கள்—எ-று. (௰௨)

முழாவொலியாழொலிமுக்கணாயகன்
விழாவொலிமணத்தொலிவேள்வியாலையும்
வழாவொலிமறையொலிவானையுங்கடந்
தெழாவொலிகடல்கிளர்ந்தெனவொலிக்குமால்.

(இ-ள்) முழவின் ஓசையும் வீணைநாதமும் பரமசிவம்கோர்ச்சவங் கொண்டருளுதலால் உண்டாகும் வாத்தியங்களின் ஓசையும் கல்யாணவாத்தியங்களின் ஓசையும் யாகங்கள்செய்யுமிடமெங்கும் வழுவாத ஓசையும்வேதஓசையும்தெய்வலோகத்தையுங்கடந்தெழுந்து ஒலிக்காநின்ற கடல்மேலோங்கினதுபோல் ஒலிக்கும்—எ-று

மன்னுயிர்பவந்தொறும்வந்துவந்துபோம்
முன்னையவினையெனமூத்தமேயடைவாய்

மின்னியவுறுப்பெலாமடைந்துமீண்டெழுக்
கன்னியர் புடைப்பர்பொற்கந்துகங்களே.

(இ-ள்.) நிலைபெற்ற உயிர்கள் பிறவிதோறும் வந்து வந்துபோம் படியானபழவினைபோல முத்தங்களாலாகிய மேடைகளிடத்தில் விளங்குகின்ற உறுப்புகளையெல்லா மடைந்துமறுபடிமேலேயெழும்பும்படி மாதர்கள் பொற்பந்துகளை அடிப்பார்கள்—எ-று. மாதர்-வினை-பந்து-உயிர்-எனக்கொள்க. (௰௪)

வெண்மணிச்சந்திரகாந்தமேனிலைத்
தண்மணித்தூணிடைத்தொடுத்துத்தையலார்
வண்மணியூசலுமழவராயவ
ருண்மணியூசலுமுடன்கொண்டாடுவார்.

(இ-ள்,) வெண்மணியாகிய சந்திரகாந்தத்தினாற் செய்யப்பட்ட மேன்மாளிகையில் குளிர்ச்சிபொருந்திய முத்துக்களாலாகியஸ்தம்பங்களிடத்தில் தொடுத்திராநின்ற மணிஊசலையும் தத்தங்கணவர்களுடைய உள்ளமாகிய மணிஊசலையும் ஒருங்காகக்கொண்டு மாதர்கள் ஆடுவார்கள்—எ-று.

ஊசலினிடத்திலிருந்து ஆடினாலும் தத்தங்கணவர்களுள்ளத்தைவிட்டு நீங்காமலிருக்கின்றார்கள் என்பதுதோன்றஉண்மணி ஊசலும் உடன்கொண்டாடுவாரென்றுகூறினார். மழவராயவரென்பது இளமைப்பருவமுள்ளவர்களெனப்பொருள்படுமாறுணர்க. (௰௫)

வேறு.

அறங்களெண்ணான்குமோம்புமறப்பெருஞ்சாலையாலுந்
திறங்கிளர்வெறுக்கையாலுநிகழ்நூற்கழகத்தாலுந்
திறங்கெழுமிமயமென்னுஞ்சிலம்புஞ்செங்கமலப்போது
மறங்கடிகடவுள்வெண்டாமரையுமேயனகளெல்லாம்.

(இ-ள்.) முப்பத்திரண்டு தருமங்களையுஞ் செய்யும்படியாகியதருமசத்திரங்களினாலும் ஒளிவிளங்கும் பொன்னினாலும் - நடக்கின்ற சாஸ்திரபள்ளிக்கூடங்களினாலும்-நன்மைபொருந்திய இமயமென்னும்மலையும்-செந்தாமரைமலரும் பாபத்தைநீக்கிய தெய்வத்தன்மையுள்ளவெண்டாமரைமலரும் போன்றுள்ள அங்கிருக்கும்வீடுகளெல்லாம்—எ-று.

இமயமலையானது முப்பத்திரண்டுதருமமும்வளர்த்த பார்வதிதேவியார்வளர்ந்த இடமாதலால் இமயமலையென்றும் செந்தாமரைமலர் பொன்தருந்திருமகளுக்கிடமாதலால் செந்தாமரைமலரென்றும் வெண்தாமரைமலர் கல்வியைத்தரும்சரச்சுவதிக்கிடமாதலால்வெண்டாமரைமலரென்றுங் கூறினர். (௰௬)

முப்பழம்பொதிந்தவாவிமூவகைத்தலைத்தெண்ணீரைத்
தப்பறநறைகொண்டூட்டிச்சந்தனப்பந்தரீட்டி
வெப்பொழிதரப்பெய்வாரும்விருந்தயல்வைகத்தேவர்
துப்பதுங்காந்துண்ணுருமாயினர்தொலைவிலாரே.

(இ-ள்) முப்பழங்கள்நிறைந்துள்ள குளங்கள்முதலிய மூன்றுவகை இடத்திலுள்ளதெளிவானநீரைக்குற்றமறவாசனைசேர்த்துக்கலந்துசந்தனப்பந்தல்களமைத்துத் - தாகவெப்பம்நீங்கும்படிஉண்பவர்களுக்கு வார்ப்பவர்களும் விருந்தினர் அயலில்வந்திருக்கத்தாங்களுண்பதுதேவர்களுண்ணும் அமுதம்போல்வதேயானாலும் அவ்விருந்தினரைநீக்கி உண்ணாதவர்களுமானோர்கள் அந்நகரத்திலிருக்கும்அளவில்லாதமாந்தர்கள்—எ-று.

ஈண்டுக்கூறியமுப்பழமாவது கடுக்காய்ப்பழம் - நெல்லிப்பழம்-தான்றிப்பழம்-என்றுணர்க - இம்முப்பழத்துக்குத்திரிபலமென ஒருசங்கேதப்பேர் வழங்குமாறுமறிக-சூத்திரம்- திரிபலையாவது-கடு-நெல்லி-தான்றி-உண்பவர்களுடையசரீரசவுக்கியத்தின்பொருட்டு மேற்கூறிய முப்பழநீரைவார்ப்பதுமன்றி தேவர்அமுதத்துக்கொப்பாகிய பண்டங்களேயானாலும் விருந்தினருக்கு முன்னூட்டி மிகுதியைத்தாங்களுண்பார்களென்பதுதாத்பரியம்; (௰௭)

முப்பழமென்பதனை.

விலக்கில்சாலையாவர்க்கும்வெப்பின்முப்பழச்சுனைத்
தலைத்தணீரமலரணிந்துசந்தனஞ்செய்பந்தரும்

என்னுஞ் சிந்தாமணிச்செய்யுளில் வெப்பில்முப்பழச் சுனைத்தலைத்தணீர்என்பதற்குநோயறுத்தற்குக்கடு-நெல்லி-தான்றி-சூழவளர்ப்பார்கள் என்னும் நச்சினார்க்கினியாருரையானுமுணர்க,

மூவகையிடமாவன சுனை-குளம்-ஆறு;

எம்பிரான்றிருவுலாவின்றேற்றோடுவருமென்பாருஞ்
செம்பொனின்றேரென்பாருந்திவ்வியசாந்தஞ்சாத்தி
யும்பர்சூழ்ந்தெழுமென்பாருமொண்பளிதத்தூண்மாற்றி
வெம்பனிநீர்பெய்வாருமளப்பிலர்வீதியெல்லாம்.

(இ-ள்.) எம்முடைய கடவுளாகிய வேதகிரீசுரர்இன்றையதினம் ரிஷபவாகனோற்சவம் கொண்டருளுவரென்றுசொல்கின்றவர்களும் இத்தினம் செம்பொன்னாலாகியதிருத்தேருச்சவமென்று சொல்லுகின்றவர்களும்- திவ்வியமாகிய சாந்தஞ்சாத்திக்கொண்டுதேவர்கள் சூழ்ந்துவர இன்று உச்சவங்கொண்டருளுவ ரென்றுசொல்லுகின்றவர்களும்- ஒளியுள்ளபச்சைக்கர்ப்பூரத்தூளைமாற்றிவிருப்பந்தரும் படியானபனிநீரைத்தெளிக்கின்றவர்களுமாக அளவில்லாதவர்கள் வீதிகளெங்குமிருப்பார்கள்-எ-று (௩௮)

கைதிகழ்களிநல்யானைக்காருரியரன்போர்த்தென்னச்
செய்தியிற்பவளமாடந்தீவியதூமம்போர்ப்ப
வைதிகச்சைவவேதமாந்தர்கண்மகங்கள்யாவு
மெய்தியவிதியிற்செய்தாங்கெண்ணியமுடிப்பர்மன்னோ.

(இ-ள்.) துதிக்கையுடன் விளங்குகின்றகளிப்புள்ளநல்லயானையின்கரியதோலைப் பரமசிவன்போர்த்துக்கொண்டதுபோல் செய்யப்பட்டபவளங்களினாலாகியமாடங்களெங்கும் மதுரமுள்ளபுகைகள் மூடும்படி வைதிகச்சைவ நெறியுள்ள பிராமணர்கள் யாகங்களையெல்லாம் பொருந்திய விதிப்படிசெய்துதாங்களெண்ணியகாரியங்களை நிறைவேற்றிக்கொள்வார்கள்—எ-று. (௩௯)

ஆங்குளன்பதுஅசைநிலை.

வேதத்திற்பொருப்பையன்றாகமவேலைத்தொப்பார்
போதத்திற்பரிதிநேர்வார்புனிதத்திற்கங்கைபோல்வார்
சாதத்தினரனையொப்பார்தானத்தின்முகில்கடுப்பார்
நாதத்திற்கடந்தசைவக்குரவரந்நகரின்மிக்கோர்.

(இ-ள்.) வேதப்பயிற்சியினால் அர்த்தத்தலத்திலுள்ளகிரியையொப்பாவர்கள் - ஆகமப்பயிற்சியால்சமுத்திரத்தை யொப்பாவர்கள் ஞானத்தினாற் சூரியனை யொப்பாவர்கள் - பரிசுத்தத்தினாற்கங்

காநதியை யொப்பாவர்கள் - உண்மையினாற் பரமசிவனையொப்பா வர்கள் - தானங்கொடுப்பதினால் மேகத்தையொப்பாவர்கள் - அந் நகரிலிருக்குஞ்சான்றோர்களோவென்னில் நாதத்துவத்தையுங்க டந்தசைவாசாரியர்கள்—எ-று. ஆகமவேலைக்குத் தமக்குத்தாமே யொப்பாவர்களெனினு மமையும். (உல)

சரியைபாதியவந்நான்கிற்சாலோகமாதிநான்குங்
கருதியதிறனேயன்பர்க்கருளியகடைக்கணல்லோர்
திருவுருத்தேடிக்காணுச்செங்கண்மாலயனுந்தங்க
ளிருகையாய்த்தோன்றுந்தோற்றமிச்சிப்பவருச்சிப்பாரே.

(இ-ள்.) சரியைமுதலாகிய நான்கினாலும் சாலோகமுதலாகியநா ன்குபதவிகளையுங் கருதியதன்மைப்படி அன்பர்களுக் கருளிச்செ ய்த கிருபாநோக்கமுள்ள பெரியோர்கள் பரமசிவனுடைய திரு மேனியைத் தேடிக்காணாத மகாவிஷ்ணுவும் - பிரமதேவனும் தங் களிரண்டுகைகளுமாகப் பிறக்கத்தக்க பிறவியை யிச்சிக்கும்படி பரமசிவத்தை அருச்சிப்பார்கள்—எ-று.

பெரியோர்கள் அருச்சிப்பார்களெனக்கூட்டுக. பெரியோர்கள் தங்களிரண்டுகைகளுமாகப்பிரமவிஷ்ணுக்கள்பிறக்கவேண்டு மென் று இச்சிக்கும்படி அருச்சிப்பார்களென்பது தாற்பரியம்.
சரியையாதியென்பனவை - சரியை -கிரியை-யோகம்-ஞானம்-என்ப வைகளாம் - சாலோகமாதிநான்காவன - சாலோகம் -சாமீபம் - சா ரூபம் - சாயுச்சியம் - என்பவைகளாம்-சாலோகம்- சிவலோகத்தி லிருப்பது - சாமீபம் - பரமசிவத்தின்சமீபத்திலிருப்பது சாரூ பம் - பரமசிவம்போல் திருமேனிபெற்றிருப்பது - சாயுச்சியம் - பரமசிவத்திற்கலப்பது.
தன்னுலகுதன்னருகு தன்னுருவந்தன்னுள்ளே - என்பதினாலுமு ணர்க-இதுசிவானந்தமாலை. (உக)

அண்டர்கம்பெருமான்பாதத்தானேற்றுங்கரும்புந்தேனும்
விண்டமுக்கனியுநாளிகேரமும்விரையின்சாந்துங்
கொண்டினிதாடுந்தோறுமஞ்சனங்குதித்தசேறு
வண்டொலியறாதுமொய்க்குமாதவர்மடங்கண்மாதோ.

(இ-ள்.) தேவர்பெருமானாகிய வேதகிரீசுரருடைய திருவடிகளி னிடத்தில் - பஞ்சகௌவியமும் - கருப்பஞ்சாறும் - தேனும்-

கனிந்துவெடித்த முப்பழ இரசமும் - இளநீரும்- வாசனைத்திரவி யங்கலந்த சந்தனக்குழம்புமாகிய இவைகளால் இனிதாக அபிஷே கஞ்செய்புந்தோறும் - அந்தத்திருமஞ்சனக்குழம்பு சிந்தினஇட த்தில் ஓசைமாறாமல் வண்டுகள் மொய்த்துக்கொண்டிருக்கும்மா துவர்மடங்களில்—எ-று.

பஞ்சகௌவியமாவன - பால் - தயிர் - நெய்- சாணம்-கோ சலம் - என்பவை. பசுக்களினிடமாக உண்டாவதினால் ஆன்ஐந்தெ னக் கூறப்படுகின்றன. (உஉ)

இந்திரன்பதத்திற்கேனுமெண்கணானுலகிற்கேனுஞ்
சுந்தரப்புவியோரேழுந்தொழுதெழுமரசிற்கேனுஞ்
செந்திருக்கடைக்கணேனுஞ்செங்கையெட்காறுநீறு
தந்தருள்செய்யிற்போதுமெனத்தக்கோர்தவத்தின்மிக்கோர்

(இ-ள்.) தேவேந்திரனுடைய பதவிகிடைப்பதைப்பார்க்கிலும் பிரமதேவனுடைய பதவிகிடைப்பதைப்பார்க்கிலும் - அழகுள்ள ஏழுலகத்தாருந் தொழும்படியாகிய அரசாட்சிகிடைப்பதைப்பா ர்க்கிலும் - கிருபாநோக்கத்துடன் இவர்களுடைய கைகளால் எள்ளளவுவி பூதிகொடுத்தருளினால் இதுவேயாதுமான செல்வமென்று யாவ ரும் மதிக்கத்தக்கவர்கள் அங்கிருக்குந்தவத்தால் மேலானவர்கள் —எ-று. (உ௩)

கவளமால்கரித்தோல்போர்த்தோனனையவர்கடிகைஞேய
ந்திேத், துவளவான்பசியுற்றெய்தக்கன்றுகாண்சுரபிபோ
ன்று,பவளமா*தவ்விமீதிற்பரிதியின்மதிசேர்ந்தென்ன
த், தவளவோதனமிட்டிவார்கணிப்பிலசைவமின்னார்.

(இ-ள்) கவளங்கொள்ளும்படியான பெரியயானையின்தோலைப் போர்த்த பரமசிவனையொப்பாகிய சிவயோகிகள் பலிப்பாத்திர த்தைகையிலேந்திக்கொண்டு திருமேனிவாடும்படி மிகுந்தபசியடை ந்தவர்களாய்த் தங்களிடத்தில்வந்தால் பிரிந்தகன்றினைக்கண்டபசு வினையொத்து, பரிவுள்ளவர்களாய்ச் சூரியபிம்பத்தில் சந்திரன் பொருந்தியதுபோல் பவளத்தாலாகிய பெரியசட்டுவத்தினிடத்தில் வெண்மைநிறமுள்ள அன்னம்வைத்துக்கொண்டுவந்து இடுவார்கள் அ ளவில்லாதசைவமாதர்கள்—எ-று. (உ௪)

* தவ்வியென்பது-சட்டுவம்.

நறுநெய்பாற்றயிர்கருப்பஞ்சாறெனுநரலைப்பானம்
பெறுமுகில்வெள்ளிக்குன்றிற்பெய்தெனவயினிக்குப்பை
செறியவிட்டவையும்பெய்துசிவன்றிருத் தொண்டர்யார்க்கு
ம், நெறிவழாதமுதுசெய்வித்தறஞ்செய்வார்நியமமெல்லாம்

(இ-ள்) நல்லநெய்-பால்-தயிர்-கருப்பஞ்சாறு-என்னுஞ் சமுத்திரங்களில் பானஞ்செய்த மேகமானது வெள்ளிமலையினிடத்தில் அந்நெய்முதலானவைகளையும் பொழிவதுபோல மிகுந்தசாதம் பரிகலத்திற்பொருந்தும்படி படைத்துஅதன்மேல் நெய்முதலாகிய பொருள்களையும் படைத்துச் சிவனடியார்கள்யாவர்க்கும் முறைமைவழுவாமல் அமுதுசெய்வித்து வீடுகளெங்குந் தருமஞ் செய்வார்கள்-எ-று. (உ௫)

எய்த்தநீர்யாண்டையுள்ளீரெய்தப்பெற்றதெங்கண்
மெய்த்தவங்கிளையோடுய்ந்தோம்விழுமிதிந்நாளென்றேத்தி
க், கைத்தலந்தழீஇக்கொண்டேகிக்கருத்தறிந்தாரவார்த்தி
வைத்திருந்தகன்றால்மீட்சிவேட்குநர்மாக்களெல்லாம்

(இ-ள். சிவனடியார்களைக்கண்டவளவில்இளைத்திருக்கின்றநீங்கள் எவ்விடத்திலிருப்பவர்கள் நீங்கள்வரும்படிப்பெற்றதுஎங்களுண்மைத்தவமே-மேலும் எங்கள்சுற்றத்தாருடன்கடைத்தேறினோம் இத்தினம் சுதினம் என்றுதுதிசெய்து கைகளால்தழுவிக்கொண்டு மாளிகைக்குட்சென்று அவர்கள்கருத்தறிந்து உபசாரத்துடன் அமுதுண்ணும்படியுண்பித்துச்சிலநாள் தங்கள்மாளிகையில்வைத்துக்கொண்டிருந்து[illegible]செல்லுவார்களானால்மறுபடி அவர்கள்வருவதைவிரும்புவார்கள் அவ்விடத்திலிருக்கும்மாந்தர்களெல்லாரும்.எ.று

மதின்முதற்கோயிலீட்டவாரகளோரேழுமாட்ட
முஐம்பெருங்கடலோனாற்றுமுதல்வர்பூண்செயல்பொற்கு
ன்றும், புதியமுதருத்தவன்னைபுவனமுநினைந்தவ்வாறே
விதியுடன்முடிக்குஞ்சைவவிழுத்தவர்பலருண்டாங்கே

(இ-ள்) திருமதில்முதலாகிய ஆலயஞ்சமைப்பதற்குச்சத்தகுலபர்வதங்களையும்.திருமஞ்சனஞ்செய்யப்பட்டதாகிய எழுசமுத்திரங்களுக்குள் ஐந்துசமுத்திரங்களையும் திருவாபரணங்கள் தரிக்கப்பொன்மலையினையும் புதியதிருவமுது நிவேதிப்பதற்கு அன்னபுவனத்தை

யும்பாவகஞ்செய்து அவ்வாறேஆகமவிதியுடன்சிவபூசை நிறைவேற்றுகின்றமேன்மை பொருந்தியசைவமுனிவர்கள் அந்தக்ஷேத்திரத்திற் பலபேருண்டு—எ-று.

திருமஞ்சனத்துக்குரிய ஐந்துசமுத்திரமாவன-நெய்-பால்-தயிர்-கருப்பஞ்சாறு-தேன்-என்பவைகளாம். (உஎ)

படிதொழச்செல்லுஞ்செல்வம்பதுமைதாழில்லமீனக்
கொடியனும்வெள்குமக்கள்பகையெனக்கூசிநீக்கி
முடிவறுவாட்கைநச்சிமுக்கணன்றொண்டர்பாதப்
பொடியணிந்தலக்கண்டீர்ந்தபுனிதரம்மூதூரெல்லாம்

(இ-ள்) உலகத்தாரெல்லாந்தொழும்படி நடக்குஞ்செல்வமும் மகாலட்சுமியும் தாழ்ச்சியடையத்தக்க சவுந்தரியமுள்ள மனைவியும் மீனக்கொடியுள்ள மன்மதனும் வெட்கும்படியான அழகுள்ள புத்திரர்களும் பகையென்றுகருதி மனங்கூசி அவர்களையொழித்துவிட்டு முடிவில்லாதவாழ்வைவிரும்பிச் சிவனடியார்களுடைய பாததூளியை யணிந்து கொண்டு துன்பம்நீங்கிய புனிதர்களாம்பழமையாகிய அந்தக்ஷேத்திரத்தில்வாழ்கின்றவர்களெல்லாரும்—எ-று.

வளங்களித்தகைத்தாமிவ்வூர்மாதவர்சைவவேதர்
விளங்குமெங்கழுக்குன்றத்துவிழுக்கதையொழுக்கந்தோன்றக்
களங்கறக்கூறுகென்னத்தமியனேன்கருக்கடோறு
முளங்கவன்றுழலுமாறுமாறுமென்றுணக்கப்புக்கேன்.

(இ-ள்.) இப்படிக்கொத்தவளப்பத்தையுடைய இந்தக்ஷேத்திரத்தில் வாழுந்தவசிகளுஞ்சைவசமயத்துக்குரிய பிராமணர்களும்விளங்குகின்ற எங்கள்கழுக்குன்றினுடைய மேன்மைபொருந்தியசரித்திரத்தைச் சைவசமயாசாரமுறைமையுந் தெரியும்படிக்குற்றமறச்சொல்லென்றதனால் தமியனுகியநான்செனனங்கள்தோறும் மனங்கவன்றுஉழலுமுறைமைமாறுமென்று சொல்லத்தொடங்கினேன்—எ-று.

ஆகவிருத்தம் - அஉ.

நகரச்சருக்கம் - முற்றியது.





சிவமயம்.

# கயிலாயச்சருக்கம்.



நன்றிமாதவர்நைமிசாரணியத்திற்சூதன்
வென்றிமாமுகநோக்கிநீமுன்னரும்விதித்தா
யின்றுமின்னமுங்கழுக்குன்றிற்பெருமையையின்பந்
துன்றுமுன்சொல்லாற்கேட்பதெம்விருப்பெனச்சொன்னார்.

(இ-ள்.) நைமிசாரணியத்தில்தவஞ்செய்துகொண்டிருக்கும் நல்ல முனிவர்கள் ஐம்பொறியாகிய பகையையொடுக்கிவெற்றிபெற்ற சூதமகாரிஷியினுடையதிருமுகத்தைநோக்கி-சுவாமீ நீர்திருக்கழுக்குன்றமான்மியத்தை முன்னமெங்களுக்கு அருளிச்செய்தீர்இப்போதும்இன்னமும் அந்தமான்மியத்தைத்தேவர் திருவாக்கினும் கேட்க வேண்டுமென்பதே யெங்களுக்கு விருப்பமென்றுசொன்னார்கள் —எ-று. (க)

எனலும்வேதவெற்பிறைவனைத்தனதகத்தெண்ணிக்
கனலுங்கண்ணனைக்கடவுளைச்சரணெனக்கசிந்து
புனலுநாட்டங்கடாரநெடும்பொழுதயர்ந்துருகி
யனலும்வேள்விமாமுனிவீர்கேண்மினென்றறைந்தான்.

(இ-ள்.) நைமிசாரண்ணிய முனிவர்கள்இவ்வாறுசொன்னவளவில்சூதமுனிவரானவர் வேதகிரீசுவரனைத்தம் முடைய உள்ளத்தில்தியானித்துக் காமதகனஞ்செய்த பாலநேத்திரனே முதற்கடவுளே நீயேஅடியேங்களுக்குச்சரணெனத்துதிசெய்துமனங்கரைந்துகண்கள் ஆனந்தபாஷ்பம்பொழிய நெடும்பொழுது பரவசமடைந்துருகித் தீச்சுடர்விட்டெழும்படியான யாகங்கள்செய்யும் முனிவர்களே திருக்கழுக்குன்றமான்மியம் கேளுங்களென்று சொன்னார்—எ-று. (உ)

ஆழ்படக்கிடந்தகன்கடலினைத்தூலகினையுஞ்
சூழ்படக்கதிரிநின்றபேரண்டத்தின்சூழ

சூழ்படுத்தசெம்பொன்னையும்வெள்ளியதொளியாக்
கேழ்படுப்பதுவடபுலக்கயிலையங்கிரியே.

(இ-ள்.) ஆழம்படப்பொருந்திவிசாலமாகிய கடல்சூழ்ந்த உலகங்களை யெல்லாஞ்சூழும்படித்தழுவிநின்றபேரண்டத்தொகுதியில் முறைமையாகப் பொருந்திய பொன்னிறத்தையும்- வெள்ளியின் பிரகாசமாக நிறம்பொருந்தச்செய்வது- வடதிசையிலிருக்குங்கயிலையங்கிரியானது—எ-று.

செம்பொன்னென்பது- மாற்றுயர்ந்தபொன்னெனக்கொள்க-பைம்பொன் -என்பதும்அதுவே. (௫)

புனைந்ததம்மறுத்துறந்தமுதளப்பிலபொதிந்து
துனைந்ததண்கதிர்திசைதொறுந்திசைதொறுந்துளக்கி
நனந்தலைப்புவியகத்திருள்புறத்திருணீக்கி
யனந்தவெண்மதிகலந்துதித்தனையதவ்வசலம்.

(இ-ள்.) அநந்தஞ்சந்திரக்கூட்டமுண்டாயிருந்துபொருந்திய தம்முடையகளங்கம் நீங்கி அளவில்லாத அமுதம்நிறைந்துகற்றை கற்றையாய்க்குளிர்ச்சி பொருந்திய கிரணங்களைத்திக்குகள்தோறும்விட்டுப்பிரகாசித்துமத்தியலோகமாகிய இவ்வுலகத்திலிருப்பவர்களுடைய அகத்திருளாகிய அஞ்ஞானத்தையும்புறத்திருளாகியபூதஇருளையும்நீக்கிஒன்றாய்ச் சேர்ந்துதயமாகியதுபோ லிருக்கின்றது அந்தக்கயிலாயகிரியானது—எ-று. (௬)

தேவராயவரிமகரன்கடுப்பரத்தெய்வப்
பாவைமாரொலாம்பாமகட்பொருவுவர்படிவா
யாவராயினுநாரதர்க்கெதிருவரிறைஞ்சப்
பூவர்சோலையக்கயிலையிற்புகுந்தவப்பொழுதே.

(இ-ள்.) மலர்கள் நிறைந்தசோலைசூழ்ந்த அந்தக்கயிலையிற்பரமசிவனைப்பணிவதற்காகச்சென்றவப்போதே அதினுடையபிரகாசத்தினாலே தேவர்களானவர்கள் யாவரும்சந்திரனையொப்பார்கள்- அத்தேவர்மாதர்கள்யாவரும்சரஸ்வதியையொப்பார்கள்- இவ்வுலகத்திலிருப்பவர்களெவர்களேயாயினும்- நாரதமுனிவருக்கொப்பாவார்கள்—எ-று

நாரதமுனிவர்வெண்மைநிறமுள்ளவர்.

நீண்டவெள்ளிவெற்பொளிபடக்கடவுணேரிழையார்
பூண்டமாணிக்கப்பூணுநித்திலக்குலப்பூணுங்
காண்டகும்பலசுண்ணமுமங்கருப்பூரத்துகளா
மாண்டபன்னிறத்துகிலும்வெண்ணிறத்துகில்வனப்பாம்.

(இ-ள்.) உயர்வாகியவெள்ளிமலையென்னும் அந்தக்கயிலாயத்தின் பிரகாசம்படுமாகில் - தேவமாதர்களணிந்திருக்கும் - மாணிக்கரத்தினாபரணங்களும்,- தொகுதியானமுத்துகளாற்செய்யப்பட்ட ஆபரணங்கள்போலவெண்மை நிறமுள்ளவைகளாய்ப் பிரகாசிக்கும்- யாவரும்பார்க்கும்படியான தகுதியுள்ள பலநிறச்சுண்ணப் பொடிகளெல்லாம் - பச்சைக்கருப்பூரத்தூள்போலாகும்-மாட்சிமைபொருந்தியபலநிறவஸ்திரங்களும்வெண்மைநிறமுள்ள வஸ்திரங்களைப்போல்வெண்மைநிறமுள்ளவைகளாகும்—எ-று. (௬)

உரைசெயெல்லைமற்றளப்பிலாவுலப்பில்பேரண்டம்
விரசுதண்சுடர்படப்பொதிந்திட்டமேதகவா
லிரசிதக்கிரியிதுவென்றுமிவன்சிவனென்றும்
வரிசையிற்பிரிதில்லெனவயங்குகின்றதுவே.

(இ-ள்.) சொல்லுகின்றஎல்லை அளவில்லாமலும் அழிவில்லாமலுமிருக்கும் பெரிய அண்டங்கள்முழுவதுங் கலந்த குளிர்ச்சியுள்ள ஒளிபடும்படி நிறைத்திட்டமேன்மையால் வெள்ளிமலையிதுவென்றும் - அதில்வீற்றிருக்கும் பரமசிவமிதுவென்றும் - வரிசையில் பேதமில்லாததாய்ப்பிரகாசிக்கின்றது—எ-று.

கயிலைமுதல் பேரண்டம் வரையில் ஒரேசோதியாயிருப்பதினால் கயிலையென்றும் அண்டங்களென்றும் பிரித்துச்சொல்லக்கூடாமலிருக்கின்றதென்பது தாற்பரியம். (௭)

வெள்ளிக்குன்றொளிபொருளியசாரன்மெய்த்தவத்தோர்
தெள்ளிப்பல்பொழிற்பன்மலர்பறித்தலுஞ்சிதறுந்
துள்ளித்தேன்களிற்கருப்பினைநிலாநிலாதுளவன்
பள்ளிப்பாற்கடல்கருமணிகொழித்தெனப்படியும்.

(இ-ள்.) வெள்ளிமலையின் பிரகாசம் நிறைந்திருக்கிறசாரலில்- உண்மைத்தவமுள்ள முனிவர்கள் - இம்மலர்கள் அருச்சனைக்காகுமென்று தெரிந்துபலபொழிலில்பலமலர்கள் கொய்தவளவில் சிந்துகின்றதேன் துளிகளில் வண்டினங்கள் மூளகிடாலையணிந்தமகாவிஷ்ணு பள்ளிகொண்டிருக்கும்பாற்கடலானது நீலரத்தினங்களைக்கொழிப்பதுபோலப்படிந்திருக்கும்—எ-று.

வண்டினம்படியுமெனக்கூட்டுக - வெள்ளிமலை - பாற்கடல் வண்டினம் - நீலரத்தினம். (அ)

மாயனென்கின்றவான்முகட்டண்டமாப்புருடன்
பாயபாற்கடலடங்கலும்பாணியின்முகந்து
நாயகன்றனைக்கயிலையோடாட்டலும்நடந்து
போயபாலெனப்பாலருவித்திரள்புரளும்.

(இ-ள்.) விஷ்ணுவென்றுசொல்லப்படுகின்றசிறந்தமுகட்டினையுடையஅண்டமாகியமகாபுருஷனானவன் - பரந்தபாற்கடல்முழுவதையுந்தன்கையில்முகந்துகொண்டு பரமசிவத்துடன்கயிலைங்கிரியைத்திருமஞ்சனஞ் செய்தவளவில்-நாற்புறத்திலும்வழிந்தொழுகியபாலைப்போல்-அந்தக்கயிலையின்சாரலில்வெண்மைநிறமுள்ள அருவிகள் புரளும்—எ-று. (கூ)

அருவிதோறுமாலுலகத்தினலங்களுமயனுட்
டுருவின்மாலையுஞ்சுரபதத்தொலியலுமுலவாத்
திருவின்மேதக்கவளகையந்தெரியலுந்தினமு
மருவியாடுநர்கழிதரக்கழிதரவயங்கும்.

(இ-ள்.)விஷ்ணுவுலகத்துமாலைகளும்- பிரமலோகத்தினீண்டமாலைகளும் - தேவலோகத்துமாலைகளும்-கெடாதசெல்வத்தினால் மேன்மை பொருந்திய அளகாபுரியின் மாலைகளும் நாள்தோறும் விரும்பிஸ்நாநஞ் செய்கின்றவர்கள் தள்ளிவிடத்தள்ளிவிட ஒழியாமல் அந்தவெள்ளிமலையின் அருவியில் விளங்கிக் கொண்டிருக்கும்—எ-று.

மேற்கூறிய விஷ்ணுமுதலானவர்கள்சாத்தியமாலைகளுடன் அருவிகள்மாறுமல்வந்துகொண்டிருக்கு மென்பது தாற்பரியம். (ய)

தடமலர்ச்சுனைவயின்றொறும்வயின்றொறுந்ததும்பப்
படர்சிறைத்துறையன்னங்கள்பரந்திடைவிடாது
கடவுளைத்தவராட்டுநீர்வெள்ளியங்கடாரத்
திடநிறைத்தவைதுகின்மூசியதிறத்திலகும்.

(இ-ள்.) பெரியவையாகியமலர்களையுடைய சுனைகளிலிடந்தோறுமிடந்தோறும்- நீர்த்துறைகளில்வசிக்கும்படியாகியபரந்தசிறையினையுடைய அன்னங்கள் நீங்காமல் நிறைந்திருத்தல் பரமசிவத்தைமுனிவர்கள் இடைவிடாமல்திருமஞ்சனஞ்செய்யும்நீரைவெள்ளிக்கடாரங்களில் நிறைத்து அந்தக்கடாரங்களைவெள்ளைவஸ்திரத்தினால் மூடியதன்மையையொப்பாகும்—எ-று.

சுனை-வெள்ளிக்கடாரம் அச்சுனையிலிருக்கும்நீர்-திருமஞ்சனநீர்-அன்னங்கள் வெள்ளைவஸ்திரம் எனவுருத்தறைந்துகொள்க.(யக)

மழகளிற்றிளங்குழவிவாளரிப்பசுங்குருளைத்
தழைமயிற்குழாந்தறுகண்மாநாகங்கள்குழூஉ
முழுவையிற்கணமருணமுள்ளுறுத்துவபிறவுங்
குழுவுறச்செறிந்திடைவிடாதென்றுமக்குன்றம்.

(இ-ள்.) இளமைப்பருவமுள்ள யானைக்கன்றுகளும் - கொல்லுஞ் செய்கையுள்ள சிங்கங்களினிளங்குட்டிகளும் - ஒலிக்கும்மயிற்கூட்டமும்- கொடியபார்வையுள்ள நாகங்களும்- சூழ்ந்தபுலிக்கூட்டமும் - மான்கூட்டமும் - இவையுள்ளிட்ட ஒன்றுக்கொன்று விரோதமுள்ள செந்துகளும் அந்தவெள்ளிமலையி னிடத்தில்பகையின்றி யெப்போதும்நண்பற்றிருக்கும்—எ-று, (யஉ)

நாகம்பஞ்சரஞ்சந்தனங்குங்குமநறவங்
காகருண்டமுண்டகங்கன்னிகாரங்காகோளி
பூகஞ்சண்பகந்தெங்குமாப்பலவுபூங்கதலி
மாகம்நண்ணுறமருங்கெலாநெருங்குவபெருங்கா

(இ-ள்.) புன்னை - செருந்தி - சந்தனம் - குங்குமம் - நறவம்- அகில்-தாழை-கோங்கு-அசோகு - கமுகு-சண்பகம் - தெங்கு-மாபலா-வாழை- என்னுமிம்மரங்களெல்லாஞ்சோலைகளாய்ஆகாயத்தினிடத்திற்பொருந்தும்படி சாரலின் நெருங்கியிருக்கும்—எ-று!

நறவம் - என்பதுஒருமரம் - தேன்மரமென்றுஞ் சொல்லப்படும் - அகில்சாதாரக்கள்ளியின்வயிரமேயன்றிவிருக்ஷமாகஉண்டாவதுமொன்றுண்டு. (௰௩).

பொன்றழைப்பனநித்திலமுகைப்பனபுனைபூண்
சென்றழைப்பனபைந்துகிற்காய்ப்பனசெழும்பொற்
கொன்றைமத்தமுடியிலந்தவனாணையிற்குழீஇ
மன்றலிற்பலகோடிகற்பாடவிவயங்கும்.

(இ-ள்,) செழுமையாகிய பொற்கொன்றை மாலையும் - பொன்னூமத்தைமாலையும் அணிந்தபரமசிவனுடைய ஆக்கினையினால் அந்தக்கயிலாயகிரியில் பொன்தழை தழைப்பவைகளும் - முத்துகளேயரும்புகளாக அரும்புகின்றவைகளும்- அணியும் ஆபரணங்கள் பிரகாசத்தைச்செலுத்தியாவரையும் அழைப்பவைகளும்-பொன்வஸ்திரங்காய்ப்பவைகளுமாகவாசனையுடன் அநந்தங்கோடிகற்பகச்சோலைவிளங்கிக்கொண்டிருக்கும்---எ-று (௰௪)

கற்பகாடவியெனற்பாலதுகற்பாடவியென ஈறுதிரிந்துநின்றது

வெளியெலாம்பொதுளியபொதும்பனைத்தும்வீற்றிருந்து
கிளியும்பூவையும்வேதங்கள்யாவையுங்கிளத்தித்
தெளியுமாகமத்தஞ்செழுத்துண்மையுந்தெரிந்து
களிகொளாத்தவர்களிகொளப்பயில்வதக்கயிலை

(இ-ள்.) வெளியெங்கும் நெருங்கிய சோலைகளினிடத்தில் வாசமாயிருந்துகிளிகளும் நாகணவாய்ப்பக்ஷிகளும் நான்குவேதங்களையு மோதித்தெளிவுள்ள ஆகமத்திற்கூறும் பஞ்சாக்ஷரத்தினுண்மையினையுந்தெரிந்துகளிப்படையாதமுனிவர்களுங்களிப்படையும்படி அந்தக்கயிலையினிடத்திற்சஞ்சரிப்பன---எ-று.

முனிவர்கள் - விருப்பு வெறுப்பு நீங்கினவர்களாதலால் களிகொளாத்தவரென்றார். (௰௫)

சூழித்தந்திகள்பூண்பனவிவுளிதூல்லெவன
பாழிக்கோளரியீர்ப்பனபறவையோட்டுவன
ஆழிப்பூதங்களூர்வனவுருத்திரகணத்தோ
ராழித்தேர்களும்விமானமுந்துவன்றியவனந்தம்

(இ-ள்,) முகபடாம் அணிந்துள்ள ஆனைகள் பூட்டப்பட்டவைகளு
ம் குதிரைகளைச்செலுத்தப்பட்டவைகளும் - பலம்பொருந்திய சிங்
கங்களாலிழுக்கப்படுகின்றவைகளும் - பக்ஷிகளாலோட்டப்படுகி
ன்றவைகளுமாய்-ஊழிகாலத்திலுண்டான பூதங்கள் எதிர்கொண்டு செல்
லும்படியாகிய சக்கரத்தேர்களும் ருத்திரகூட்டங்களின் விமான
ங்களும் அநேகமாக நெருங்கியிருக்கும்—எ-று.

வட்டவடிவமாகச்செய்யப்பட்ட தேர்களுக்கு ஆழித்தேரெ
ன்றுபேர். (௰௬)

பவளமேனியர்மரகதவாகத்தர்பனிவெண்
டவளவாரத்தினுருவத்தர்தமனியநிறத்தர்
திவளுநீலத்தின்மெய்யராஞ்சிவகணந்திளைப்பத்
துவளும்பேரொளிபிணையம்பொளியெனத்தொலையா.

(இ-ள்) பவளநிறமான மேனியுள்ளவர்களும் மரகதநிறமானசரீ
ரமுள்ளவர்களும்- முத்துகள்போல் வெண்மைநிறமான சரீரமு
ள்ளவர்களும்-பொன்னிறமுள்ளவர்களும் விளங்குகின்ற நீலமணி
நிறமானசரீரமுள்ளவர்களுமாகிய சிவகணங்களிருப்பதினால் மேற்
கூறியமேனிகளில் நின்றும்வீசுகின்ற ஒளிகளெல்லாமொன்றுபட
க்கலந்து இன்ன வொளியென்று ஒவ்வொளியைநிதானித்துச் சொல்லு
ம்படியிரிந்துகாட்டாவாம்—எ-று. (௰௭)

பாசநான்கெனக்கிளக்குநர்பசுக்களைப்பலவாய்ப்
பேசலாற்றுநர்பதியதொன்றென்குநர்பெரிதுங்
காசின்மாதவர்குழீக்குழீபவரவர்கழற்றும்
பூசலார்ப்பலநில்லையக்கயிலையம்பொருப்பே.

(இ-ள்)பாசம்நான்குவகையென்றுசொல்லுகின்றவர்களும் ஆன்
மாக்களை அநேகமாகச்சொல்லுகின்றவர்களும்-சிவம்ஒன்றேயென்
று சொல்லுகின்றவர்களுமாய்க்குற்றமில்லாதமாதவர்கள் கூட்டங்கூ
ட்டமாகக்கூடியிருந்து அவரவர்கள்சொல்லுகின்றஓசையாகிய ஆர
வாரமே யல்லதுவேறோசை அந்தக்கயிலைமலையினிடத்திலில்லை—
எ-று. (௰௮)

பொன்னிற்பன்மணிக்கணங்களிற்குயின்றனபுயல்வாய்
மின்னிற்செல்வனமதிபமொத்திமைப்பனவெயிலோன்
றன்னிற்காய்வனமாடபந்தியுஞ்சதகோடி
முன்னிற்சாலையுமண்டபக்குழாங்களுமுழுதே

(இ-ள்) பொன்னினாலும் பலவகையான ரத்தினத்தொகுதிகளா லும் செய்யப்பட்டவைகளாய் மேகத்தினிடத்தில்விளங்கும் மின் னலைப்போல் பிரகாசிக்கின்றவைகளும் - சந்திரனையொத்துப்பிர காசிக்கின்றவைகளும்.சூரியனைப்போற் பிரகாசிக்கின்ற வைகளுமா கியமாடவரிசைகளும் அநந்தங்கோடிகளாம் இன்னமுங்கருதுமிட த்தில் இவ்வண்ணமான சாலைகளும் மண்டபக்கூட்டங்களும் அந்தக் கயிலாசகிரிமுழுவதும்விளங்கும்—எ-று.

பொன்னினும்மணிகளினும் குயின்றனவெனப் பொதுப்ப டக்கூறி மின்னல் சந்திரன் சூரியன் இவைகளைப்போல பிரகாசிக் குமென்று பகுத்தமையால் சிலமாடம் முத்துகளாலும்சிலமாடம் வயிரங்களினாலும்சிலமாடம்மாணிக்கங்களினாலும் செய்யப்பட்டிரு க்கின்றனவெனக்கண்டுகொள்க. (௰௬)

இனையதன்மையக்கயிலைவான்சிகரமென்பவற்றுட்
புனையுநாப்பணோர்குவட்டொருபொதியிலுண்டதன்கண்
வனையுஞ்சித்திரக்கற்பகமாணிக்கவிளக்கின்
வினையின்மண்டபமொன்றதுமேருவிற்பெரிதே.

(இ-ள்) இத்தன்மையினையுடைய அந்தக்கயிலாசகிரியின் பெரிய சிகரங்களென்றுசொல்லப்பட்டவைகளுக்குள் - மத்தியில்அலங்காரிக் கத்தக்கதாகியஒருசிகரமுண்டு அந்தச்சிகரத்தினிடத்தில்ஒரு அம்பல முண்டு அதனிடத்திற் சித்திரங்கள் தீட்டப்பட்டதாய்க் கற்பகமா ணிக்கத்தீபம்போற் கைத்தொழில் செய்தலில்லாத வொருமண்ட பமுண்டு அம்மண்டபம் மகாமேருவைப்பார்க்கிலும் பெரிதானது —எ-று.

கற்பகமாணிக்கமாவது கற்பகவிருக்ஷத்தந்தமாணிக்கம். பொ துவிலென்றுசொல்லத்தக்கது பொதியிலென்றிரிந்தது -பொது

இல்- என்பதற்குப் பொருள்- யாவருக்கும்பொதுவான இடமெனக் கொள்க. (உ௰)

தூயவெண்மதிக்கடவுண்மேற்சொரிகதிர்க்கடவுண்
மேபதன்மையிற்படுத்தவெண்பளிக்குவேதிகைவா
யாயிரப்பலயோசனையனைத்திருளகலச்
சேயபொற்சுடர்விடுத்தசிங்காதனத்திடையே.

(இ-ள்) பரிசுத்தமும் வெண்மைநிறமுமுள்ள சந்திரன்மேற்கிரணங்களைவீசுகின்ற சூரியனுனவன் பொருந்திய தன்மைபோலவெண்பளிங்கிறற் செய்யப்பட்டிருக்கிற வேதிகையினிடத்துப்பல்லாயிரயோசனைதூரம் இருளெல்லாம் நீங்கும்படி செம்பொற்சுடரை வீசுகின்ற ஒருசிங்காதனமுண்டு அதனிடத்தில்—எ-று. (உக)

துப்புமால்வரைக்குடுமியிற்சுரநதிபரந்தாங்
கொப்பிலாமதிக்குறைதவழ்ந்துறைந்தமையொப்ப
வப்பிலாயிரமுகக்கங்கையலைக்குலத்தோடும்
வெப்பில்வான்பிறைவார்சடைக்கிடைநின்றுவிளங்க.

(இ-ள்.) பெரியபவளமலையினுச்சியில்கெங்காநதிபரந்து அவ்விடத்தில்தனக்குவமையில்லாத இளந்திங்களுந்தவழ்ந்துகொண்டிருப்பதுபோல - அலைக்கூட்டத்துடன் நீருருவமான ஆயிரமுகக்கங்கையும் வெப்பமில்லாத சிறப்புள்ளபிறையும் நீண்டசடாமுடியிலிருந்துவிளங்கவும்—எ-று. (உஉ)

நுதற்கணீற்றிளநிலவெழமுகத்திருநோக்க
முதற்கணேரிருசுடர்விடச்சுடராமூதாரகம்
புதைப்பவாயிரவாய்விண்டுபுனிதனுணையினுற்
பதைக்குமாறஞ்சிப்பழம்படிகுழைகளாய்ப்படிய.

(இ-ள்.) பரமசிவத்தினுடைய நெற்றியினிடத்தணிந்திருக்கும்விபூதியின் இளநிலாபிரகாசிக்க உடனே அந்தப் பரமசிவத்தினுடைய திருமுகமண்டலத்து விளங்கிக்கொண்டிருக்குஞ் சூரியசந்திரர்களாகிய இரண்டுநேத்திரங்களும் அந்தவிபூதியின் பிரகாசம்விள

ங்குதற்குமுன்னாக இருவகைச்சுடரைவிடவே பழமையானநாகங்க ண்டு தன்னுயிரம்படங்களையும் விரித்துமறைத்து அந்தச்சுடர்க ள்வருந்துகின்ற முறைமையைக்கண்டஞ்சிப் பரமசிவத்தினுடைய ஆக்கினையினால் பழயபடிகாதணிகளாய்ப்பொருந்தவும்—எ-று.

பரமசிவத்தினுடைய திருச்செவிகளில் குழைகளாயிருக்கும் நாகங்கள் இருசுடரையும்மறைத்துச்சுவாமியினுடையஆக்கினைக்கு ப்பயந்து பழையபடி குழைகளாயிருக்கும் - என்பதுதாற்பரி யம். (உரு)

தோலுடைக்கண்டுபுலியெனத்துள்ளுமான்மழியு
மாலடுத்ததத்துவவனந்துமிக்குமாமழுவுஞ்
சாலமுத்தியின்வரதமுமபயமுந்தரித்த
நாலுகைத்தலநாககங்கணத்தொகைநகைப்ப.

(இ-ள்.) பரமசிவம் அணிந்திருக்கிறதோலாடையைக்கண்டு புலி யென்றுகருதிப்பயந்து துள்ளுகின்ற மான்கன்றும்- அடியார்களு டைய மயக்கத்தைப்பொருந்தியதத்துவமாகியகாட்டினைச்சேதிக்கு ம்படியாகிய பெரிய மழுப்படையும் மிகவும்முத்தியைத்தருகின்ற வரதமும் அபயமும் - தரித்துள்ளநாலு திருக்கரங்களிலும் சர்ப் பகங்கணத்தொகுதிவிளங்கவும்—எ-று.

ஒரு இடக்கரத்தில்மான் - ஒருவலக்கரத்தில் - மழு- மற்றொ ருவலக்கரம் - அபயம் - மற்றொரு இடக்கரம் வரதம். (உச)

வேதவுச்சியிற்பொலிந்தனம்விண்டுவிற்பெரிய
மேசமற்றனமென்றுதாட்சிலம்பெழுந்தியம்பச்
சீதளக்குளிரந்தியைப்பொதிநிலாச்சிறப்பென்
றோதவித்துருமத்திருமேனிநின்றொளிர.

(இ-ள்.)யாமவேதஉச்சியில்விளங்கிக்கொண்டிருக்கின்றனம்-ஆத லால்விஷ்ணுவைப்பார்க்கிலும்பெரியோம்- அன்றியுங்குற்றங்களை நீ ங்கியிருக்கின்றோமென்றுசொல்லுவதுபோல் திருவடிச்சிலம்புகள் எழுந்தொலிக்கவும்-மிகுந்தகுளிர்ச்சிபொருந்திய அந்திப்பொழு தில்தோன்றும் செக்கர்வானத்தை மூடிய நிலவின்சிறப்பென்று

சொல்லும்படிவிபூதியணிந்த பவளத்திருமேனி பிரகாசிக்கவும்—எ-று. (உரு)

கமையலாவிடைப்பட்டுடை * காஞ்சிவெங்கதிர்ப்பூண்
சிமையவார்முலைத்திலகவாண்முகச்செறியளகச்
சமயம்யாவையும்வளர்த்தறம்வளர்த்தபைந்தளிர்க்கை
யிமயமாமகளுமையகமகிழ்ந்தருகிருப்ப.

(இ-ள்.) பொறைதாங்குந்தன்மையினையுடையதல்லாத இடையினிடத்துப்பட்டுடையும்மேகலாபரணமும்வெய்யிலொளிவிடுகின்றரத்தினாபரணமணிந்து மலைக்குவடுபோன்றுகச்சணிந்த திருத்தனபாரமும் திலதப்பொட்டணிந்ததிருமுகமண்டலமும் நெருங்கிய அளகபாரமும் அறுசமயங்களையும் வளர்த்துமுப்பத்திரண்டு தருமங்களையும் விர்த்திசெய்த பசியதளிர்போன்ற திருக்கரங்களையுமுடைய பருவதராசபுத்திரியாகிய பார்வதிதேவியார் திருவுள்ளமகிழ்ந்துஇடப்பாகத்தில் வீற்றிருக்கவும்—எ-று. (உசு)

*காஞ்சியென்பது-எண்கோவைமணியாகியமேகலை

சித்தர்விஞ்சையர்கருடகாந்தருவரத்தேவர்
பத்தர்மாதவர்புரந்தரரேனையோர்பணிந்தாங்
கத்தசங்கரவரகரபோற்றியென்றவைக்க
ணுய்த்தபன்மலர்மாரிகண்மாரியோடொழுக்க.

(இ-ள்.) சித்தர்களும் - வித்தியாதரர்களும் - கருடர்களும் - கந்தருவர்களும் - அந்தத்தேவர்களும் - பத்தர்களும் - முனிவர்களும் - தேவேந்திரர்களும் - பிரமவிஷ்ணுக்களாகிய தொகுதிகளும்-ருத்திரர்களும்பணிந்து - அத்தபோற்றி - சங்கராபோற்றி - அரகராபோற்றி யென்றுதுதித்துச்சந்நிதானத்திற்பொழிகின்ற பல்வாகியபூமழையானது அவர்களுடையகண்ணீர்மழையோடு பெருகவும்—எ-று. (உஎ)

வாணிநாரதன்றும்புருமுதல்வரர்சித்தர்
பாணியாழ்வழிவழிந்ததேன்றிருச்செவிபருகச்
சேணின்மேநகையரம்பையர்திலோத்தமைமுதலாம்
பூணின்மாமுலையரமடைந்தையர்நடம்புரிய.

(இ-ள்.) சரஸ்வதி - தும்புருநாரதர்- முதலான சிரேஷ்டர்களு
டையகைவீணைகளின் வழியாகப்பெருகுகின்ற இசைத்தேனைத்திரு
ச்செவிகள்பருகவும் - சுவர்க்கத்திலிருக்கும் மேநகை - அரம்பை
யர் - திலோத்தமைமுதலாகிய ஆபரணமணிந்தபெரியகொங்கை
களுள்ள அரம்பாஸ்திரிகள் நடனஞ்செய்யவும்—எ-று.

திலோத்தமைமுதலாம் அரமடந்தயரென்றதனால்உருப்பசி
யுங்கூட்டியுரைத்துக்கொள்க - மேநகை- அரம்பை- திலோத்தமை
உருப்பசி-யென்னுமிந்த நான்குபிரிவில் ஒவ்வொருபிரிவுக்கும் அ
னந்தம் பேருண்டென்பதுதோன்ற அரம்பையரெனப்பலர்பா
லாற்கூறினார். (௨௮)

முழாவுந்தக்கையுமொந்தையும்படகமுமுருடு
மெழாலும்பாண்டிலுஞ்சங்கமும்வங்கியமியாவும்
விழாவுமன்றலுமனையவத்தாணிமீதியவர்
குழாமுங்கூட்டமுங்கடலுடைந்தனவெனக்குமுற.

(இ-ள்.) மத்தளம்-பம்பை-குடமுழா-தம்பட்டம்- முருடு-வீணை-
தாளம்-சங்கம்-வேய்ங்குழல் - என்னுமிவ்வாத்தியங்கள் - திருவிழா
வையும்திருமணக்கோலத்தையுமொத் தொலிக்கும்படியாகிய திரு
வோலக்கமண்டபத்தினிடத்தில் தோற்கருவியர்கூட்டமும் மற்றை
யவாச்சியக்காரர் கூட்டமுங்கடல் மடையுடைந்தனபோல் முழக்க
வும்—எ-று. (௨௯)

கடையிமைக்கமுந்திருமுடித்துளக்கமுங்கருத்து
மடையுமாற்றமுஞ்செயற்கையிவ்வகையினுமமைத்து
நடையகாரணகாரியநாதர்யாவருக்கு
முடையநாயகன்றானெனவிருந்தனனுடையான்.

(இ-ள்.) திருக்கடைக்கண்ணோக்கமும் - திருமுடியசைவும் - தி
ருவுள்ளமும் பொருந்துகின்ற திருவாக்குமாகியசெய்கையையிவ்வ
கையிலு மமைத்துஒழுக்கமுள்ளகாரணகாரியக்கர்த்தர்கள்யாவர்க்கு
முடையநாயகன்தானேபரமசிவம்வீற்றிருந்தது—எ-று.

௨௯—வது செய்யுள் சிங்காதனத்திடையெனநின்று அடுத்தசெ
ய்யுட்கள்-விளங்க-படிய- நகைப்ப- ஒளிர- அருகிருப்ப - ஒழுக்க

நடம்புரிய-குழூற-என -எச்சங்களாய்நின்று வீற்றிருந்தனனென்னும் வினைமுற்றைக்கொண்டு முடிந்தமையால் அச்செய்யுட்கள் குளகச்செய்யுட்களென்பர் இதனைக்குளகம் பலபாட்டொருவினை கொள்ளும் என்னுந் தண்டியலங்காரத்தினுமுணர்க.

சரஸ்வதி- தும்புருநாரதர்என்னுமிவர்கள்இசைக்குக்காரணர்களென்றும் மற்றையோர்காரியர்களென்று முணர்ந்துகொள்க- திருச் சந்நிதானத்தில்நாரதர்முதலானவர்கள்-ஏககாலத்தில் இசைவாசிக்கும்போது பரமசிவந்தனித்தனியே - திருநோக்கமுதலானவையருளிச்செய்யு முறைமையினால் யாவருக்கும் உடையநாயகன் தானெனவிருந்தனன்என்றார். (கூ௰)

கயிலாயச்சருக்கம்முற்றியது.

ஆ திருவிருத்தம்-௱௰உ.

## காருடச்சருக்கம்.

அறங்கிளாத்தியபிரானவையைக்கைதொழு
வுறங்குமக்கடல்விடுத்தூர்ந்தபுள்ளினு
மிறங்கியப்புள்ளினத்திறையைமாயவன்
புறங்கடைநீறியின்னவிரைந்துட்போயினன்.

(இ-ள்!) தருமநெறியை வேதாகமங்களால் உரைத்தருளிய பரமசிவம் திருவோலக்கங்கொண்டிருக்குஞ்சந்நிதானத்தைக்கைதொழும்படி-விஷ்ணுதான்பள்ளிகொண்டிருந்ததிருப்பாற்கடலைவிட்டு நீங்கிச்சென்றுதாமேறிக்கொண்டுவந்தகெருடனைவிட்டுக்கயிலாயச்சாரலிலிறங்கி மேலேபோய்ப் பக்ஷிகளுக்கரசாகிய அந்தக்கருடனைமுதற்கோபுரவாயலின்புறத்தில் நிறுத்திவிட்டு விரைவுடன் உள்ளே சென்றனர்—எ-று. (க)

தொழுதகையுச்சியன்றுதித்தநாவின
னழுதகண்ணீரினனவசயாக்கையுன்

விழுதொறுங்கதையெனவீழ்ந்துமெய்குழைந்
தெழுதொறுமரகரவெனுமோரார்ப்பினான்.

(இ-ள்)தொழுதகைகளை யுச்சியிலேயுடையவனும். தோத்திரஞ் செய்யும் நாவினையுடையவனும். ஆனந்தத்தினாலொழுகின்ற கண்ணீ ரையுடையவனும் பரவசமானசரீரத்தையுடையவனும். வீழ்ந்துப ணிபுந்தோறும் தண்டாயுதம்போல விழுந்து சரீரமானதுமெலிந் து எழுந்தோறும் அரகரவென்கிற ஓர்ஆரவாரத்தையுடையவனு மாய்—எ-று. (உ)

எத்தினனேத்தினிறைவயாவையும்
மூத்தலும்புரத்தலும்புரந்துபோக்கலும்
வாய்த்தநின்றிருவருள்வலிகொண்டன்றியே
நீத்தொழிலைமையோருஞ்செய்பகற்பாலமோ.

(இ-ள்) இவ்வாறு துதிசெய்துநின்று இறைவனேயெல்லாவுலகங் களையும் சிருட்டித்தலும்-ரக்ஷித்தலும்-அவ்வாறுரக்ஷித்துக்காலமுடி வில் சங்கரித்தலுமாகியமுத்தொழிலையும்பொருந்தியதேவரீருடை யதிருவருளின்வல்லபத்தினாலல்லதுநீவினையையுடையஎளியேங்கள் செய்யும்பகுதியையுடையோமோ—எ-று.

பிரமன்.- ருத்திரன் - என்பவர்களையுந்தன்னோடு சேர்த்துக் கூறினன். (௩)

என்றகமுருகியவிணர்த்துழாயனைக்
குன்றவில்லீரனுங்குழைந்தசிந்தையாற்
றன்றிருக்கடைக்கணாற்றழுவியாங்கவன்
வன்றொழிற்குறைநிறைவிநாவிவைகலும்.

(இ-ள்) இவ்வாறுசொல்லி மனமுருகிய கொத்தாகிய துளசிமா லையணிந்த விஷ்ணுவைநோக்கி மகமேருவாகிய வில்லையுடையப ரமசிவனும் அருள்கூர்ந்ததிருவுள்ளத்துடனே கிருபாநோக்கத்தி னால் அளவளாவி அந்தவிஷ்ணுவினுடைய ரக்ஷிக்குந்தொழிலின் குறைநிறைவைவினாவிக்கொண்டிருக்கவும்—எ-று. (௪)

மால்விடை நிற்கின்றவாயில்வாய்நின்ற
சால்புடைக்கலுழனும்விடையைத்தாழ்கலன்
மேலுடைத்தலைமையும்விறலுமேற்பவற்
போலுடைத்தாயினனகந்தைப்புந்தியே.

(இ-ள்.) பெரியவிடைத்தேவரிருக்கின்ற வாயிலினிடத்தில் நின்றமேன்மை பொருந்தியகருடனும் அந்தவிடைத்தேவரை வணங்காதவனாய் மேலாகவுடைய முதன்மைத்தன்மையும் வெற்றியுந்தங்களுக்குள் தாங்களே யேற்றுக்கொள்ளுகின்றவர்கள் போல் தன்புத்தியில் அகந்தைப்புத்தியை யுடையவனாயினான்—எ-று. (௬)

நின்றவக்கலுழனை நிமலன்வாகனன்
வென்றியினந்திதீவிழித்துநோக்கலுஞ்
சென்றிரந்துண்பவனூர்திநீவிழித்
தின்றெவன்செய்தியென்றிவன்சொற்றனனோ.

(இ-ள்.) இவ்வாறுநிற்கின்ற கருடனைப் பரமசிவனுடைய வாகனக் கடவுளாகிய வென்றியுள்ள நந்திதேவர்கண்களில் தீப்பொதியுண்டாகும்படிவிழித்து நோக்கினவளவில் அந்தக் கருடனுனவன் விடைத்தேவரைநோக்கி யெங்குஞ்சென்றிரந்துண்பவனுடையவாகனமாகிய நீகோபித்து என்னை யென்னசெய்குவையென்றுசொன்னான்—எ-று. (௭)

இவனமைத்தாழ்கிலனென்னும்புன்மையுங்
கவனவெங்கலுழன்மேற்கருதுகிற்றிலன்
றவநெறிநந்திக்குத்தகுதியொன்றிலான்
சிவனைநிந்தித்தநீச்செவியிற்புக்கதே.

(இ-ள்.) இவன் நம்மைவணங்கிலனென்னுங் குற்றத்தை வேகமாய்ச்செல்லுகின்ற கருடனிடத்தில் நினைக்கின்றிலர்- தகுதியென்பது சிறிதுமில்லாதவந்தக்கருடன் பரமசிவத்தை நிந்தித்தசொல்லாகியதீயானது தவநெறியுள்ள நந்திதேவருடைய திருச்செவிகளிற்சென்றது—எ-று. (௮)

செவிவழிச்சிவனிந்தையென்னுந்தீக்கொழுந்
தவிதராகதத்திழிந்தழன்றுமீதெழக்
குவிநுதற்கோடசைத்திமிலுங்கொட்புற
நவியெடுத்தானடுநாளொத்தானரோ.

(இ-ள்.) தம்முடையகாதுகளின்வழியாகச்சிவநிந்தையென்னுந் தீக்கொழுந்தானது அவியாமல் உள்ளத்திலிழிந்து கொதித்துமேலெழவே குவிந்தநெற்றிக்கொம்புகளையசைத்து முரிப்புதுடிக்கும்படி மானேந்தியபரமசிவம் சர்வசங்காரகாலத்தில் தோன்றுமூர்த்தத்தை யொத்தவரானார்—எ-று. (அ)

நவ்வியெனற்பாலது-நவியென இடைகுறைந்துநின்றது

அதிர்ந்தனபுவனங்களகிலகோடிகள்
பிதிர்ந்தனகதிர்களும்பின்னிட்டோடின
வெதிர்ந்தனவிருட்பிழம்பிறுதியின்றென
முதிர்ந்தனதிசைதொறுமூண்டதீக்களே.

(இ-ள்.) புவனங்களெல்லாம் அதிர்ந்தன - அண்டகோடிகளெல்லாம்வெடித்துத்துகளாயின - சந்திரசூரியர்களும்பின்னிட்டோடினார்கள் - எங்குமிருட்கூட்டஞ்சூழ்ந்தன - திக்குகளெங்குமூண்டதீக்கூட்டம்ஊழிக்காலமின்றேயென்னும்படி அதிகரித்தன—எ-று.

மயர்த்தறமறுகினர்முனிவர்வானவர்
வெயர்த்தனரென்னினிவிளையுங்கொல்லென
வயிர்த்தனருவணனையறுப்பனின்றென
வுயிர்ப்பெறிந்தனனெம்மையுடையநந்தியே.

(இ-ள்.) முனிவர்கள்தவநெறியைமயங்கிக்கலங்கினார்கள்- தேவர்களினியென்னவிளையுமோவென்று சந்தேகித்தவர்களாய் அச்சத்தினால்வெயர்த்தார்கள் -நம்மைஅடிமையாகவுடையநந்திதேவரானவர்இந்தக்கருடனைக்கொல்லுகிறேனென்றுசீறிநிசுவாசம்விட்டனர்-எ-று.

வீங்கியவுயிர்ப்பெனும்வெய்யகாற்றுட
னீங்கிறுமிபாசனெடிதுபோய்ப்படுகும்

வாங்கியவுயிர்ப்புடன்மறித்துநாசியி
னோங்கியபுழைப்புகுமுவணனென்பவே.

(இ-ள்.) இவ்வாறுண்டாகிய சுவாசமென்னும்வெவ்விதாணகாற்று டன் - கருடனானவனின்ற நிலையைவிட்டுநீங்கிநாறு யோசனை தூரம் சூழியில்உருண்டுபோவன் - மறுபடியுள்ளுக்குவாங்கியசுவாசத்துடன் நந்திதேவருடைய பெரியநாசியின் துவாரத்திற் புகுவனென்பார் சன்பெரியோர்கள்—எ-று. (௫௭)

முன்னருநிர்த்தையின்மூட்டுமூட்டலாற்
பின்னரும்போந்தொறும்பெயர்ந்துசேர்தொறு
மன்னதோர்நந்திதனழலைமூட்டிடு
மின்னவிர்விசனம்புள்வேந்தனாயினான்.

(இ-ள்) முன்னமும்கருடன் சிவநிர்த்தையினால் கோபாக்கினியை மூட்டிய மூட்டுமேயன்றிப் பின்பும்அவருடைய சுவாசத்திலகப் பட்டுக்கொண்டு நாறுயோசனை தூரப்போகுந்தோறும் மறுப டிவருந்தோறும் அந்தநந்திதேவருடையகோபாக்கினியை மூட்டுவ ன்இதனால்தக்கருடன் விளங்கும்வாள்போன்ற விசனமுடையனா யினன்—எ-று.

இவ்வாறுகருடன்-உருண்டும்-அகந்தைநீங்காமையால்நந்திதே வருடைய கோபாக்கினியை மூட்டினானெனக்கொள்க விசனமா னதுமனத்தைஅறுப்பதினால்நவிர்விசனமென்றார்-நவிர்-வாள்.(௫௮)

வாழியநந்திதனுயிர்ப்புமாருத
மூழிமாருதம்பட்டதுலகமுண்டதோ
ராழியனூர்தியுமதனிடைப்பட்ட
பூழியுஞ்சருகுமாய்ப்புன்மைப்பட்டதே.

(இ-ள்.)வாழ்வுள்ளநந்திதேவருடைய சுவாசமாகியகாற்றானதுஊ ழிக்காலத்துப் பிரசண்டமாருதத்தை யொத்தது-உலகமுண்டசக்கி ரபாணியனாகியவிஷ்ணுவினுடையவாகனமோவெனில்-அந்தப்பிரச ண்ட மாருதத்திலகப்பட்டுக் கொண்ட புழுதியும் சருகும் போலா யிப்புன்மையடைந்தது—எ-று. (௫௯)

மண்டலமனைத்துந்தன்வயிற்றுற்றனைமேற்
கொண்டவனித்தனைவருத்தங்கொண்டன
னண்டர்நாயகனிந்தையண்டர்க்காயினும்
விண்டதீங்குடைமையைவிளைத்தல்பொய்மையோ.

(இ-ள்.) இவ்வுலகத்தையெல்லாம் தன்வயிற்றுக்குள்வைத்திருக்கு ம்விஷ்ணுவைத்தன்மேல்தாங்குங்கருடனே யிவ்வளவு வருத்தங்கொ ள்ளுவனானால் சிவநிந்தையானது தேவர்களுக்கேயானாலும் சொல் லப்பட்டதீமையினையுண்டாக்குதல்பொய்யாகுமோ—எ-று. (௰௪)

நன்மையர்தீங்கரைநலிவர்நன்றிலா
வன்மையர்தீங்கிலாரையும்வருத்துவார்
தொன்மையினந்தியாற்றொலைக்கும்புட்பிரான்
பொன்மயச்சிறகின்கால்புவியலைத்ததே.

(இ-ள்) நன்மையினையுடையவர்கள்கொடியோர்களைவருத்துவார் கள் நற்குணமில்லாதவன்னெஞ்சர்யாதொருகுற்றமுஞ்செய்யாதவ ர்களையும் வருத்துவார்கள் அம்முறைமைபோல் பழைமையானநந் திதேவரால் வலிதொலைக்கப்பட்டகருடனுடைய பொன்மயமானசி றகின்காற்றானது இவ்வுலகத்தைவருத்திற்று—எ-று. (௰௫)

அயனுடையூர்தியாமன்னமாதிய
பயனுடையும்பரைப்பரிக்கும்புள்ளெலா
நயனுடைமுகமுகநோக்கிநாவெரீஇ
வியனுடையொன்றொடொன்றுடங்கிவேர்த்தவே.

(இ-ள்) பிரமதேவனுடையவாகனமாகிய அன்னப்பக்ஷிமுதலா கிய சுவர்க்கபதம்பெற்றிருக்கும் தேவர்களைத்தாங்கும் பக்ஷிகளெ ல்லாம் நன்மைபொருந்திய தங்கள்முகங்களையொன்றுக்கொன்று நோக்கிப்பேசப்பயந்து பெருமையுள்ள ஒன்றொடொன்றொடுங்கி வேர்த்தன—எ-று. (௰௬)

நூறியோசனையெல்லைநூக்கநூக்குண்டு
பாறலாற்சினக்கனல்படாமையுய்ந்தது
மாறுபோந்தணுகியவண்ணமேதின்று
லேறுகாய்தலுமரியிழுக்குறார்தியே.

(இ-ள்) கருடன்-நந்திதேவர்சுவாசம்நூறுயோசனைதூரந்தள்ளிக்கொண்டுபோகக்கருடன்உருண்டோடுதலால் அந்தநந்திதேவர்கோபாக்கினிதன்மேற்படாமல்பிழைத்தனன் அவ்வாறுகமறுபடிமீளுஞ் சுவாசத்துடன்வந்து நாசிக்குட்புகுந்தபடியே யிருந்தால் நந்திதேவரானவர்கோபஞ்செய்தவளவில் விஷ்ணுவானவர் தன்வாகனத்தை யிழந்திருப்பர்—எ-று. (௰௭)

வள்ளியநந்தியால்வயினதேயனு
மொள்ளியவமரர்முனுறுகணெய்தலாற்
றெள்ளியபொற்குன்றமனையசெந்நிறம்
வெள்ளிபங்குன்றெனவெளுப்பவெள்கினன்.

(இ-ள்) அடியார்க்கருள்கொடுக்கும் வள்ளற்றன்மையுடையவராகிய நந்திதேவரால் கருடனும் ஒளியுள்ளதேவர்களுக்குமுன் துன்பம்அடைந்ததனால் பிரகாசமுள்ள பொன்மலையொத்ததாகிய தன்னுடைய செம்மைநிறமானது வெள்ளிமலைபோல் வெளுக்கும்படி வெட்கமடைந்தான்—எ-று. (௰௮)

ஆன்விடுமுயிர்ப்பினோடங்குமிங்குமாய்
வான்விடுசிறையறமலைப்புண்டாற்றல
னான்விடுமினிக்கணத்தென்பதுட்கொளாக்
கான்விடுதுழாயனைக்கருதியோலிட்டான்.

(இ-ள்) நந்திதேவர்விடுகிறசுவாசத்துடன்கருடனானவன் அங்கும் இங்குமாய் ஆகாயத்திற்பறக்கத்தக்கதாகிய சிறையானதுஒடியும்படி அலைச்சல்பட்டுச்சகிக்காதவனாய் இனிக்ஷணப்பொழுதுக்குள் தனக்குத்தேகம்விட்டுப்போமென்பதை உட்கொண்டுவாசனைவீசுந்துளசிமாலைபணிந்த மகாவிஷ்ணுவைத் தியானித்துமுறையிட்டான்—எ-று. (௰௯)

வேறு.

மெய்யாவிதழ்கால்கைவிழித்துணையிற்
செய்யாதிருவின்திருநாயகமே
யுய்யாவெவ்வொலிக்குரல்கேட்டிலையோ
வையாவெனலக்கணறிந்திலையோ.

(இ-ள்.) உண்மையானவனே - அதரமும் இரண்டு திருவடிகளு
ம் இரண்டுதிருக்கரங்களும் இரண்டுதிருநேத்திரங்களுஞ் செம்
மைநிறமானவனே மகாலட்சுமியினுடையசிறப்புள்ளநாயகனே இ
றந்துபோகத்தக்கவனுய் முறையிடுகிற என்குரலோசை யுனக்குக்
கேட்கவில்லையோஇதுவுமன்றி ஐயனே யென்னுடையதுன்பத்தை
யறிந்திலையோ—எ-று. (உ௰)

நாவாலறியாமையினுனனியிக்
கோவாதைசெயக்குலையாவலைகோ
வாவாவுனடைக்கலமாலடியேன்
காவாய்புவிகாத்தகருங்கடலே.

(இ-ள்.) அறியாமையேதுவாக என்னுவினுல் இந்தநந்திமிகுந்த
கோபஞ்செய்யநிலைகுலைந்து அலைவேனே ஐய்யையோ அடியேன்
உன்னடைக்கலம் இவ்வுலகத்தைக்காக்குங் கருங்கடல் வண்ணனே
இப்போதுவந்து என்னைரக்ஷித்தருளுவாயாக—எ-று. (உக)

பெரியோய்முறையோபெருமான்முறையோ
வரியோமுறையோவரசேமுறையோ
விரியோடையின்முன்புவிளித்தமது
கரியோடுமொவாதுகழிந்தழிகோ.

(இ-ள்.)பெரியோனேமுறையோ- பெருமானேமுறையோ-ஓஅ
ரியேமுறையோ - இறைவனேமுறையோ- பரந்தவோடையிலிருந்து
கொண்டு முற்காலத்திற் கூவியமதயானைக்குமொவ்வாதவனுய்க்கழி
ந்துவருந்துவேனே—எ-று. (உஉ)

மழைசூழ்க்குன்றனையாய்வருவாயினியென்
றழைக்கின்றதோர்புட்குரலாங்கெழலு
முழைக்குன்றவிலான்முன்முகுந்தனறிந்
திழைக்கின்றவனச்சோடெழுந்துசொல்வான்.

(இ-ள்.)மேகங்களாற்சூழப்பட்ட நீலமலைபோன்றகடவுளே யி
ப்போது வந்தருளென்று முறையிடுகிறகருடனுடையகுரலோசை
யானது அங்குக்கேட்டவளவில் குகைகள்பொருந்திய மகமேரு
வாகிய வில்லையுடைய பரமசிவன் சந்நிதியிலிருந்த மகாவிஷ்ணு

வானவர் கருடனுடைய வருத்தத்தையறிந்து துணைசெய்கின்றவர் பயத்துடனெழுந்துசொல்லுகின்றார்—எ-று. (௨௩)

வெள்ளேறுவெகுண்டவெகுட்சியினென்
புள்ளேறுபுலம்புறுகின்றதெனுத்
தள்ளாதுவிடுந்தொழில்சங்கரனிற்
கொள்ளாவரிவந்திதுகூறினனால்.

(இ-ள்.) வெண்மைநிறமுள்ள நந்திதேவரானவர் கோபஞ்செய்த கோபத்தினால் பக்ஷிராசனாகியகருடன் துன்பப்படுகிறானென்று சொல்லித்தள்ளாமல் அந்தக்கருடனை விட்டுவிடும்படியானகட்டளையைப்பரமசிவனிடத்தில்பெற்றுக்கொண்டு மகாவிஷ்ணுவானவர்வந்து இந்தவார்த்தைசொல்லுகிறார்—எ-று. (௨௪)

வேறு.

நந்திநாயககேட்டிநவைதரும்
புந்தியாற்கலுழன்செய்தபுன்மையைச்
சிந்தியாதுவிடுதிசிவன்சொல்ல
வந்தியான்சொன்னவாறிந்தவாறென்றான்

(இ-ள்.) நந்திதேவரேகேட்பீராக - குற்றம்பொருந்தியதன்புத்தியால் கருடன்செய்தபிழையை மனதிலெண்ணாமல் விட்டுவிடுவீராக - இதுபரமசிவம்கட்டளையிட்டபடி நான்சொன்ன முறைமையிந்தமுறைமையென்றார்—எ-று. (௨௫)

தேவிக்கோர்பங்கினனைத்தெறுபுலி
* நீவித்தேவனையென்னெதிர்நிந்தித்த
பாவிக்கென்கொல்பரிதியிப்பாவியை
வீவித்தன்றிவிடேனெனுநந்தியே.

(இ-ள்.) பார்வதிதேவியாருக்கு இடப்பாகமருளிச்செய்தவரும் கொல்லும்புலித்தோலாடையணிந்த தேவருமாகிய பரமசிவத்தை யென்னெதிரில் நிந்தை கூறியவிந்தப்பாவிக்காகநீபரிந்துவந்தது என்னகாரணம் அந்தப்பாவியை யிறக்கும்படி செய்வித்தல்லது உயிருடன் விடேனென்று நந்திதேவர்சொல்லினர்—எ-று.

* நீவி-என்பது-ஆடை. (௨௬)

மீண்டுமாயன்கலுழனைவிட்டிலன்
* பாண்டில்வேந்தனெனப்பரனைத்தொழு
வாண்டநாயகனந்தியையாங்கழைத்
திண்டுநீபுள்ளிறையைவிடுகென்றான்

(இ-ள்.) நந்திதேவரிவ்வாறு சொல்லவே மகாவிஷ்ணுவானவர் அவ்விடம்விட்டுத்திரும்பிச்சென்றுபரமசிவத்தைப்பணிந்து நந்தி தேவர்கருடனை விட்டிலனென்று தொழுதுவிண்ணப்பஞ்செய்யப் பரமசிவம் அந்தநந்தியையழைப்பித்துஇப்போதுகருடனை விட்டு விடென்றுகட்டளையிட்டருளினார்—எ-று. (௨௭)

* பாண்டில்-எருது.

சிவந்தபார்வையும்வாயுஞ்செழும்புகை
நிவந்ததீச்சிந்தநிற்கின்றநந்தியுங்
கவந்தவேணியைக்கைதொழுதெம்பிரா
னுவந்துகேளொருறுதிசொல்வேனென்றான்.

(இ-ள்.) சிவந்தகண்களிலும் வாயினிடத்துஞ்செழுமையுள்ளபு கைபரந்த தீபோனதுசிந்தும்படிநிற்கின்றநந்திதேவரும்நீரணிந்தச டையுள்ளபரமசிவத்தினுடையதிருவடியைவணங்கியெம்பிரானே அ டியேன்சொல்லும்விண்ணப்பத்தைமகிழ்ச்சியுடன் கேட்டருளவே ண்டுமென்றுசொல்லுகின்றார்—எ-று. (௨௮)

முன்னைத்தேவர்முனிவர்முகுந்தனோ
டென்னைப்போர்செய்திடைதடுத்தார்பினும்
நின்னைச்சங்கரநிந்தித்தபாதகன்
றன்னைக்கொன்றலதொன்றுந்தரிக்கிலேன்.

(இ-ள்) முதன்மையாகிய தேவர்களுடனும் முனிவர்களுடனும் இந்தவிஷ்ணுவந்து என்னுடன்போர்செய்து இப்போதுதடுத்து ஆரவாரித்தாலும் சங்கரனே நின்னைநிந்தித்தஇந்தப்பாதகனைக்கொ ன்றல்லது சிறிதும்மனஞ்சகிக்கிலேனென்று விண்ணப்பஞ்செய் தார்—எ-று. (௨௯)

அறிவனென்கின்றநந்தியையையனுஞ்
செறுநெருப்பன்னசொல்லிற்சுட்டாரையும்

கொடுபொறுத்தல்குணமென்றுணர்கிலை
விடுகபுள்ளைவிடுகென்றருள்செய்தான்.

(இ-ள்) இந்தக்கருடனைக் கொல்லுகிறேனென்று சொன்னநந்திதேவரைப்பரமசிவம்நோக்கிச் சுடுகின்றநெருப்பையொத்த சொல்லினால் சுட்டவர்களையும் அங்கீகரித்துக்கொண்டு பொறுப்பதே நன்மையென்று அறிந்திலையோ இந்தமட்டில்கருடனை விட்டுவிடு விட்டுவிடுஎன்று கட்டளையிட்டருளினார்—எ-று. (௯௰)

வேறு

விடுத்தனன்பறவையின்வேந்தையுட்பய
மடுத்தனனந்தியுமமலனேவலைத்
தடுத்தவெவ்வியவினைதனக்கென்செய்துமென்
றெடுத்தவெற்றுயரொடுமிரங்கியெய்தினான்.

(இ-ள்.) பரமசிவன் இவ்வாறுகட்டளையிட்டருளினவுடன் நந்திதேவரானவர் அந்தக்கருடனைவிட்டுவிட்டுப்பயங்கொண்டவராய்ப்பரமசிவம் கட்டளையிட்டருளியதைமறுத்துரைத்தகொடியபாவத்துக்கு என்னசெய்வோமென்று மனதிலுண்டாகிய துயரத்துடனிரங்கிச் சென்றார்—எ-று. (௯௧)

கட்புலன்மூன்றுளான்கழறுமாணையுந்
திட்பமதுடனந்திதடுத்துத்தேம்பினு
னட்பறத்தெறுவதுநவையிற்சேர்ப்பது
முட்பெறுசினமெனவுரைத்தல்வேண்டுமோ.

(இ-ள்.) திரிநேத்திரங்களையுடைய பரமசிவன் கூறியகட்டளையினையும் நெஞ்சுறுதியுடனந்திதேவர்தடுத்துமனவாட்டமுற்றார்-ஆகலால். சிநேகமறக்கெடுப்பதும் குற்றத்திற்சேர்ப்பதும் - உள்ளத்திலுண்டாகிய கோபமேயென்று எடுத்துச்சொல்ல வேண்டுமோ—எ-று. சொல்லவேண்டுவதில்லையென்பது-குறிப்பு. (௯௨)

நடுங்கினனஞ்சினனந்திநெஞ்சக
மொடுங்கினன்வினைநினைத்துயிர்த்துவிம்மினன்
றடங்கமலப்பதந்தாழ்ந்துபோற்றுகை
தொடங்கினனருவியிற்சொரிகணீரினன்.

(இ-ள்.) இவ்வண்ணந்துயரங்கொண்ட நந்திதேவர்நடுங்கிப்பயந்து மனமொடுங்கிப்பாவஞ்சம்பவித்ததை நினைத்துப்பெருமூச்சுவிட்டு விம்மியிரண்டுகண்களிலும் அருவிபோல்நீர்பெருகும்படிநின்று பரமசிவத்தினுடைய தாமரைமலர்போன்ற பெரியதிருவடிகளைப் போற்றிசெய்யத்தொடங்கினார்—எ-று (௫௫)

ஆரணபேதமுமிருதியாயவுங்
காரணகாரியக்கருமகோடியும்
நாரணனான்முகனாதிநாதரும்
பூரணநீயலாதியனும்பொற்பதோ.

(இ-ள்.) வேதபேதங்களும் - ஸ்மிருதியானதுகளும் காரணகாரியங்களாகிய கர்மகோடிகளும் திருமால்பிரமன்முதலாகிய தேவர்களும் பூரணனே நீயல்லாமல் நிகழும் பொலிவையுடையதோ—எ-று. (௫௬)

அறைந்தனநான்மறையவற்றினுச்சியி
னுறைந்தனபேரண்டத்துட்புறம்பெலா
நிறைந்தனவைந்தொழினிகழத்தோன்றினை
மறைந்தனையையநின்மாயமார்சொல்வார்.

(இ-ள்.) இவ்வாறுசொல்லிய நந்திதேவர்பின்னுந் தோத்திரஞ்செய்கின்றார்- நான்குவேதங்களினுச்சியில்வீற்றிருக்கின்றனை-பெரிய அண்டங்களின்உள்ளும்புறம்புமாக நிறைந்திருக்கின்றனை பஞ்சகிருத்தியங்கள் நடப்பதற்குக் காரணமாக விளங்குகின்றனை யாவருக்குந் தோன்றாமல் மறைந்து யிருக்கின்றனை - ஐயனே-நின்மாயத்தையறிந்து எவர்கள்சொல்லத்தக்கவர்கள்—எ-று.

பஞ்சகிருத்தியங்களாவன - சிருஷ்டி - திதி-சங்காரம்-திரோபவம்-அனுக்கிரகம் - என்பனவைகளாம். (௫௭)

தோற்றமுநாசமுந்தொடங்கியாவையு
மாற்றுவைபல்லுயிர்க்காயுமாகுவை
போற்றுவையவரவர்புன்மைத்தன்மையை
மாற்றுவையெமக்கொருசெயற்கைமற்றுண்டோ.

(இ-ள்.) சிருஷ்டித்தலையுஞ்சங்கரித்தலையுந்தொடங்கிக்கிருத்தியங்களையெல்லாஞ்செய்குவை. உயிர்களுக்கெல்லாந்தாயுமாகுவை-அவ்வுயிர்களுக்குத்தோன்றாத்துணையாயிருந்து வினைக்கீடாகஊட்டியுறக்கியுபகரிப்பை அவரவர்களுடைய அஞ்ஞானத்தையும்அதனால்வரும்பாவத்தையும்மாற்றுவை (எங்களுக்கென்று) ஒருசுதந்தரமானசெய்கைவேறுண்டோ—எ-று. (ருசு)

ஆதலாநின்பணியறிவிலேன்மறுத்
தேதிலார்படும்பவமீண்டுபட்டனன்
கோதிலாயவ்வினையனைத்துங்கூட்டறப்
போதுமாறருள்கெனவிரந்துபோற்றினான்.

(இ-ள்.) ஆகையால் அறிவில்லாதநான் தேவரீருடையகட்டளையைமறுத்து அடியரல்லாதார்படுகின்றதுபோல்பாவத்துக்கிப்போதுட்பட்டேன் நிருமலனேயந்தப்பாவமெல்லாம்அடியேனொழிந்துபோம்படிகிருபைசெய்ய வேண்டுமென்றிரந்து நந்திதேவர்போற்றினர்—எ-று. (ருஎ)

காருடச்சருக்கமுற்றியது-ஆகதிருவிருத்தம்.ாசகூ.

---

# வேதகிரிச்சருக்கம்.

---

ஒருதனிமறுத்தவுறுபவங்
கருதியேங்குபுநந்திகலங்கலைப்
பெரிதுநம்பன்மகிழ்ந்துதன்பேரருட்
டிருவிழிக்கடைவைத்திவைசெப்பினான்.

(இ-ள்.) இவ்வாறுநந்திதேவர்தோத்திரஞ்செய்தவளவில்பரமசிவம்- அந்தநந்திதேவரானவர்ஒப்பற்றதம்முடையகட்டளையைமறுத்ததனால்நேரிட்ட பாலத்தைக்கருதியிரக்கங்கொண்டுமனங்கலங்குவதைநோக்கிமகிழ்ந்து அவரிடத்தில் பேரருட்கடைக்கணோக்கம்பிரசாதித்துஇவ்வார்த்தை யருளிச்செய்கின்றனர்—எ-று. (க)

தெய்வவான்பதமேற்செய்ததீவினைக்
குய்வதாக்கியொழுக்கத்தினுய்ப்பது
வையமேயெனுந்தன்மைமனங்கொளா
வையனேயினைநந்தியையாண்டரோ.

(இ-ள்.) சிறப்புள்ள தேவபதவிகளினிடத்தில்செய்தபாவங்களில் நின்றுய்யும்படிசெய்து நல்லொழுக்கத்திற்செலுத்தத்தக்கதுபூலோகமே யென்பதைக் கயிலாயபதி திருவுளத்தமைத்துநந்திதேவரை அவ்விடத்துக்கு ஏவினர்—எ-று. (உ)

எல்லைமேதினியென்றனைமாதவம்
வல்லையான்செய்ததன்பயன்வாய்ப்பது
தொல்லைபோனின்றுணையடிமீண்டுவந்
தொல்லைசேர்வதொருதலம்யாவதோ.

(இ-ள்.) பாவம் நீங்குவதற்கேதுவாகிய இடம் பூலோக மென்றருள்செய்தீர் - நான்தவஞ்செய்து அதனால்வரும்பயனை விரைவிலடைவதற்கும் துன்பம்நீங்கி மறுபடிமுன்போல் தேவரீருடையதிருவடிகளைச்சீக்கிரத்திலடைவதற்கும் ஏதுவாகியஒப்பற்றதலம் அந்தப்பூமியிலெதுவோ—எ-று. (ங)

நின்னடித்துணைநீங்கலுமாற்றல
னின்னகுற்றச்சுமைக்குமிசைகல
னன்னர்தானத்துநான்விரைந்தேவரம்
பின்னெனுதுபெறவருள்செய்கென்றான்.

(இ-ள்.) தேவரீருடைய திருவடிகளை விட்டுப்பிரியவும் ஆற்றுகின்றிலேன் - இப்போது சம்பவித்திருக்கிற பாவமாகிய சுமையைச்சுமக்கவும் இசைகிலேன் - ஆதலால் அந்தத்தலத்திந்நான்சென்று-

வஞ் செய்யும்போது காலந்தாமதப்படாமல் விரைவில்வரம்பெற்றுக்கொள்ளும்படி அருள்செய்யவேண்டுமென்று நந்திதேவரிரந்துவிண்ணப்பஞ்செய்தனர்—எ-று. (௪)

தன்னினையமூநந்திதளர்ச்சியுங்
கன்னிபாகனுணர்ந்துட்கருணையா
லின்னபாவமிவனெல்லைநீங்கலுக்
குன்னினுன்றனுருத்திரகோடியே

(இ-ள்) நந்திதேவர்தம்மிடத்தில் வைத்திருக்கிற அன்பினையும்அவர்கொண்டிருக்கிற தளர்ச்சியையும் பார்வதிபாகனாகியபரமசிவம் திருவுளத்திற்கொண்டு கிருபைகூர்ந்து இந்தப்பாவமிவரி னின்றும்நீங்குதற்குத்தாம்வீற்றிருந்தருளும் உருத்திரகோடியென்னுந்தலத்தைக்கருத்துட்கொண்டருளினர்—எ-று.

எக்காலத்து மூப்பென்பதின்றிக் கன்னித்தன்மையினையேயடைந்திருப்பதினால் பார்வதிதேவியாரைக்கன்னியென்றனர் "இங்கையற்கணனுலகமெண்ணிறந்தசராசரங்களீன்றுந்தாழாக்-கொங்கையற்கண்மலர்க்கூந்தற்குமரி„யென்பதனாலுமுணர்க - இது திருவிளையாடற்புராணம் - மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழினும் - குமரியின்னமுமெனச்சித்தர்பாடவுமென்றனர். (௫)

வேறு.

அருத்தியினந்திகேட்டியளப்பிலதானமேனுந்
திருத்திகழறுபத்தெட்டுண்டவற்றினிற்சிறந்ததானம்
வருத்தமதொழிக்கும்மேனுமவையுளும்வயங்குகின்ற
வுருத்திரகோடித்தானமென்பதொன்றுளதுகண்டாய்.

(இ-ள்.) நந்தியேவிருப்பத்துடன்கேள் - நாம்திருக்கோயில்கொண்டு வீற்றிருந்தன்பர்களுக்கு அருள்செய்கின்ற தலங்கள் அநந்தமாயிருக்கின்றன - அவ்வாறிருந்தாலும் அவைகளுக்குள் சிறப்புடன் விளங்குமேலானதலங்கள் அறுபத்தெட்டுண்டு அவைகளோ தம்மிடத்தில் வந்தவர்களுடைய வருத்தங்களையெல்லாமொழித்துவிடும் - அவைகளத்தன்மையுடையதுகளா யிருந்தாலும் அவைகளு

ருக்குள்ளும் மேலானதாய்விளங்குகின்றஉருத்திரகோடித்தலமெய்பதொன்றுண்டு—எ-று. (கூ)

தூவிபவிமயவெற்பின்றென்புலக்கங்கைத்தென்பாற்
ருவியவிருநூறுமத்தடங்கடற்குடபாலொன்று
மோவிலாக்குகநதிக்கேயுத்தரத்தரையாமென்ப
மேவியோசனையிவைக்குநடுவதுவிளங்குமன்றே.

(இ-ள்.) திவ்வியமாகிய இமயமலைக்குத் தென்புறத்திருக்குங் கங்காநதிக்குத்தென்றிசையில் - பரவிய இருநூறு யோசனையாம்- பெரியசமுத்திரத்துக்கு மேற்கில் ஒரு யோசனைதூரமாம் - நீங்குதலில்லாத கந்தநதிக்கு வடக்குஅரையோசனைதூரமாம்என்றுபெரியோர்கள்கூறுவர்கள்- இந்தநான்குயோசனையுள்ள எல்லைக்குள்விளங்குவது அந்தருத்திரகோடித்தலம்—எ-று. (எ)

ஒல்லையேகதியிற்சேர்க்குமுருத்திரகோடிவட்டத்
தெல்லையோசனையோரைந்தாமிதற்குநாற்றிசைதோறெல்லை
மல்லல்யோசனையொன்றோடுவருமிருகுரோசமென்ப
செல்லன்மாப்பிறவிநோய்க்குமருந்ததாய்த்திருந்துமன்றே.

(இ-ள்.) தன்னிடத்திலடைந்தவர்களை விரைவாகக் கதியிற்சேர்க்கத்தக்க உருத்திரகோடிவட்டத்து எல்லை - ஐந்துயோசனை தூரமாம் - இதற்கு நான்குதிசைதோறும் எல்லை வண்மையுள்ள ஒருயோசனையுடனிரண்டு குரோசமுமாமென்பர்கள் மேலோர்கள் அந்தருத்திரகோடியானது வருத்தமுள்ள பெரியபிறவிப்பிணிக்கு மருந்தாகிவிளங்கும்—எ-று.

நாட்டெல்லை ஐந்துயோசனையும்-நகரத்தெல்லை ஒருயோசனையுமிரண்டு குரோசமுமாகக்கொள்க - யோசனை - பத்தரைநாழிகைதூரம் - ஒருகுரோசம் - கூப்பிடுதூரம். (அ)

பாடியவாகமத்திற்பகர்ந்தகாமிகமாதிக்கு
ணீடியபேராகாயத்தத்துவநெறியேதோன்றுங்
கூடரும்பவித்திராட்டபுவனமாய்க்குறித்தவற்றி
னூடிதண்டாவதென்பவுருத்திரகோடித்தானம்.

(இ-ள்.) விதிவிலக்குகளைக் கற்பிக்கின்ற இருபத்தெட்டு ஆகமங்களாகச் சொல்லப்பட்ட காமிகமுதலாகிய ஆகமங்களில் வகுத்துக்கூறுகின்ற ஆகாயதத்துவ நெறியாகத்தோன்றிய சேர்தற்கரிய பவித்திராட்டபுவனமாய்க்குறித்தவைகளுக்குள் உருத்திரகோடித்தலம் இரண்டாவது பவித்திராட்டமென்பர்—எ-று. (௬)

ஓதுமத்தலத்திற்கோடியுருத்திரர்நமைப்பூசித்த
தாதலிற்புவியிற்பெற்றததற்குருத்திரகோடிப்பேர்
மேதகக்கருதினும்பேர்விளம்பினும்விளம்பலாற்றாப்
பாதகத்தொகுதியாவும்பருதிமுற்பனியாமன்றே.

(இ-ள்.) சொல்லுகின்ற அந்தத்தலத்திற் கோடிருத்திரர்கள் நம்மைப் பூசித்ததாகையினாலே அந்தத்தலம் ருத்திரகோடியென்னும் பெயரை யிவ்வுலகத்திற்பெற்றது - அந்தத்தலத்தை மேன்மைபெறத் தியானித்தாலும் அதன்பெயரை நாவினாலுச்சரித்தாலுஞ்சொல்லவொண்ணாத மகாபாதகக் கூட்டங்களெல்லாம் சூரியனுக்குமுன்பனி நீங்குவதுபோலநீங்கிவிடும்—எ-று. (௭)

காவினுட்கடவுட்காவெங்கதிரினுட்கதிரின்வெய்யோன்
கோவினுட்சுரர்கோ நன்னீர்க்குழுவினுட்கொழுநீர்க்கங்கை
பூவினுட்குவளைகுன்றிற்பொற்குன்றம்போலுமன்றே
தாவினுட்படாததானதுருத்திரகோடித்தானம்.

(இ-ள்.) சோலைகளுக்குள்கற்பகச் சோலையேசிறந்தது - முச்சுடருக்குள் சூரியனேசிறந்தது - பசுக்களுக்குள் காமதேனுவேசிறந்தது - நல்லதீர்த்தங்களாகிய நதிக்கூட்டங்களுக்குள் செழுமையுள்ள தீர்த்தத்தையுடைய கங்காநதியேசிறந்தது - மலர்களுக்குள் குவளைமலரேசிறந்தது - மலைகளுக்குள் பொன்மலையேசிறந்தது - அதுபோல மேற்கூறிய நன்மைகளையுடைய அறுபத்துநாலுதலங்களுக்குள்ருத்திரகோடியென்னுந்தலமேமேன்மையையுடையது- எ-று.

பணியினுட்சேடன்மாதர்பகுதியுட்பதுமைதேவ
ரணியினுட்டபியேம்யாகமனைத்தினுளயமாமேத
மணியினுட்சிறந்தசிந்தாமணியினைமானுமன்றே
குணியினுட்குறியாத்தானத்துருத்திரகோடித்தானம்.

(இ-ள்) சர்ப்பங்களுக்குள் ஆதிசேஷனும்- மாதர்கூட்டத்தில்மகாலட்சுமியும்-தேவர்வரிசையில்யாமும் - யாகம்எல்லாவற்றுள்ளும் அசுவமேதமும்-மணிகளுள்சிறந்தசிந்தாமணியும்போலாம்கணக்குக்குஎண்ணப்படாததலங்களில்உருத்திரகோடித்தலம்-எ-று.

உலகெலாமுய்யத்தக்கவுருத்திரகோடித்தானத்
தலகிலாச்சிறப்பைநந்திசிறிதுனக்கறைந்தேமிப்பா
லிலகுமத்தலத்துநாப்பணிருப்பதுபொருப்பதொன்று
விலகியெவ்வினையுந்தீர்க்குமதனதுவிளைவுகேண்மோ

(இ-ள்) நந்தியே உலகமெல்லாம் உய்யத்தக்கதானஉருத்திரகோடித்தானத்தின் அளவில்லாத சிறப்பினையுனக்குச்சிறிது கூறினேம் - இப்பால்விளங்குகின்ற அந்தத்தலத்தின் மத்தியில் ஒருமலையிருக்கின்றது - அது நீங்குதலில்லாத எவ்வினைகளையுந்தீர்ப்பது அதனுடையமேன்மையைக்கேள் —எ-று. (௰௩)

ஆதியேயெம்பிற்றோன்றியெமதுருவனைத்துந்தாமாய்ப்
பேதியாவனந்தபேதவேதங்கள்பேரன்போடு
மீதொருநாள்வந்தெம்மைவிழிமழைபொழிந்துவெள்ளிச்
சோதியங்குன்றத்தெய்தித்துதித்தடிதொழுதுயாதோ

(இ-ள்) பூர்வமேநம்மிடத்தில் தோன்றிஎம்முடைய உருவமெல்லாந்தாமாகி - பேதியாமல் அனந்த பேதங்களுள்ள வேதங்கள்மிகுந்தஅன்புடன் முன்னொருநாள் சோதியுள்ள வெள்ளிமலையில் வந்து சேர்ந்துகண்களில் ஆனந்தபாஷ்பம் பொழிந்து எம்மைத் தொழுது துதித்து—எ-று. (௰௪)

மூவகையாறுள்ளுமிருவகைமுயங்குமாயத்
தேவகையைந்துமெய்க்குமிருமையிற்பயனேபோற்றி
பூவகன்சமன்விற்காமன்புரஞ்சலந்தரன்போர்சாயச்
சேவகம்புரிந்தமுக்கட்சிங்கமேபோற்றிபோற்றி

(இ-ள்) மூன்றுவகையாகிய முப்பத்தாறுதத்துவங்களுக்குள் இருவகையாகப்பொருந்தியமாயையிலுண்டான ஐந்துங்கெடத்தக்கதானஇருமைப்பயனேபோற்றி - பிரமதேவன் -நமன்- மன்மதன்-

திரிபுரம் - சலந்தரன் என்னுமிவர்களுடைய போர்சாயும்படிவீ ரஞ்செலுத்திய திரிநேத்திரங்களுள்ள சிங்கமேபோற்றிபோற்றி— எ-று. (௧௫)

மண்புனல்கனல்கால்வானமதிகதிரியமானன்மற்
றெண்பகுதிகளாய்முற்றுமியற்றியசோதிபோற்றி
கண்பமிசமாதியாதிக்கருத்தினுட்காட்சிமாறாப்
பண்புடையவருட்கோயிற்பராபராபோற்றிபோற்றி.

(இ-ள்) பிருதிவி-அப்பு-தேயு-வாயு-ஆகாயம்- சந்திரன்-சூரியன் ஆன்மா என்னும் அஷ்டமூர்த்தமாய் உலகமுழுவதையும்படைத்த சோதியேபோற்றி - தியானிக்கப்படும் சமாதிமுதலான கருத்தினு ள்காட்சிமாறாத பண்பினையுடையவர்கள் மனக்கோயிலில்வீற்றிருக் கும்பராபரபோற்றிபோற்றி.—எ-று. (௧௬)

நீயலாத்தேவராலுநீத்துள்ளமுனிவராலு
மாயுவாற்சிறியராயவம்புயன்முதலோராலும்
பாயவெம்பரப்படங்காதவரவர்பரித்தலாற்றார்
நாயகபலரும்பேதித்திடவுடனடுங்காநின்றேம்.

(இ-ள்) தேவரீரையல்லாததேவர்களாலும்- துறந்திருக்குமுனிவ ர்களாலும்-ஆயுளாற்சிறியராகிய பிரமதேவன்முதலானவர்களாலும் விரிவாயிருக்கிற எங்கள்விரிவு அடங்காதுமேலும்அவர்கள்பரிக்கமா ட்டார்கள் - இறைவனேயெல்லாரும்பேதிப்பதால்நாங்கள்நடுங்குகி ன்றோம்—எ-று. (௧௭)

கதிரொளித்திருளின்வீழ்க்குங்காசினியெனநின்மாயத்
துதிதருமயக்கின்வீழ்ந்தவுலப்பிலாவண்டமெல்லா
முதிர்கலிப்பாவத்தாழிமூழ்கிநொந்திளைத்தேமிந்த
மதியவியுயிர்கண்மாட்டினிருத்தலைமனத்தினீத்தேம்

(இ-ள்)சூரியன்மறைந்து இருளில்வீழ்த்தப்படும் பூமியைப்போல் உன்மாயத்தினுலுண்டாகிய மயக்கத்தில்வீழ்ந்தன அழிவில்லாத அ ண்டங்களெல்லாம்- அதுபோலநாங்கள்மிகுந்தபாவமாகிய சமுத்திர த்தில்முழுகிநொந்துமெலிந்தோம்- ஆகலால்விவேகமிழந்த இவ்வுயி களிடத்திலிருக்குமெண்ணத்தை யெங்கள்மனதினின்றும் நீக்கிவி ட்டோம்—எ-று. (௧௮)

என்றுமப்பொருப்பாய்நின்றவெமையயனான்காச்செய்தான்
வன்றிறற்பரத்துவாசன்மாகாயத்திரியாச்செய்தா
னென்றோரைந்தெட்டெழுத்தாயொழிந்தமாதவருஞ்செய்தா
ரன்றுதொட்டவராற்கண்டித்தடியம்வெவ்வேறுபட்டேம்.

(இ-ள்) எந்நாளும் அம்மலையாய் நின்றவெங்களைப்பிரமதேவன் நான்கு பிரிவாகச்செய்தான் - மிகுந்தவல்லமையுள்ள பரத்துவாச முனிவர்பெருமைபொருந்திய காயத்திரியாகச்செய்தார் சிலமுனிவர்கள்ஓரெழுத்தாகவும் - சிலர் ஐந்தெழுத்தாகவும்-சிலர்- எட்டெழுத்தாகவுஞ்செய்தார்கள் - அந்நாள்முதல் அவர்களாற்கண்டிக்கப்பட்டு அடியேம் வெவ்வேறுபட்டோம்—எ-று. (௰௯)

தேவர்தாமுனிவர்தாமத்திரைகடலுலகத்தோர்தாம்
யாவர்தாமேனுமெம்மைமுற்றவுமிசைப்பாரற்றே
மோவிலாவங்கத்தோடுமொருப்படுமிருப்புங்காணே
மாவதுன்னருளால்வேண்டியவாப்பெரிதலைப்பவந்தேம்.

(இ-ள்) தேவர்களாகிலும் - முனிவர்களாகிலும் அலையுள்ளசமுத்திரஞ் சூழ்ந்த உலகத்திலுள்ளவர்களாகிலும் - எங்களை முழுவதும் ஓதுகின்றவர்களையற்றோம் - இதுவுமன்றி ஒழிவில்லாத ஆறங்கங்களோடும் ஒன்றுபட்டிருக்குந்தன்மையினையுங்காணோம் (ஆதலால்)சுவாமிகளாலாகவேண்டுவதென்றுண்டாகிய ஆசைமிகவும்அலைப்பதினால் திருவடியடைந்தோம்—எ-று. (உ0)

வேற்றிடம்பிரிதுண்டேனும் விமலநின்னருளிற்பெற்ற
பேற்றிடம்பொருவாதூழிப்பிரளயத்தினுமாளாத
ஆற்றமாய்ப்புவியினாங்களொருப்படவங்கத்தோடும்
நீற்றனேயுனதடிக்கீழ்நிலைபெறநிறுத்தல்வேண்டும்.

(இ-ள்) பிரிந்துவேறிடமுண்டாயிருந்தாலும் அவைகள் விமலமூர்த்தியே விபூதியணிந்திருக்குங்கடவுளே தேவரீருடைய அருளினாற் பெற்றபேறாகியவிடத்துக்கொப்பாகாதுகள்(ஆகையால்)ஊழிப்பிரளயகாலத்திலும் அழியாத உறுதியுள்ளதாய்ப் பூலோகத்திலிடத்தில் நாங்கள்ஆறங்கங்களுடனும் ஒன்றுபட்டுச் சுவாமியினுடையதிருவடியின்கீழ் நிலைபெற்றிருத்தல் வேண்டும்—எ-று. (உ௧)

என்றிரந்திறைஞ்சியன்போடிரங்கிநெக்குருகியெம்மு
னின்றவேதங்கடம்மைநிலைபெறநோக்கிநீவிர்
சென்றுமதங்கபேதமனைத்தொடுந்திரைசூழ்பாரிற்
குன்றெனநின்னுங்கள்கொழுந்திடையடைவோம்யாமும்

(இ-ள்) இப்படியாக அன்புடனே துதிசெய்து பணிந்திரங்கி-மனம் நெக்குவிட்டுருகி யெம்மெதிரில் நின்றவேதங்களை நிலைபெறநோக்கி நீங்கள் சமுத்திரஞ்சூழ்ந்த பூமியினிடத்தில் உங்கள் அங்கபேதங்களுடன்சென்று ஒருகிரிரூபமாய்நில்லுங்கள் அவ்வண்ணமிருந்தால் அங்கேயுங்கள்கொழுந்துபோல்நாம் அடைகின்றோம்.

ஆறங்கங்களாவன - மந்திரம் - வியாகரணம்-நிகண்டு-சந்தோபிசிதம் - சோதிடம்-நிருத்தம்-என்பவைகளாம். (உ௨)

அரியதோர்சிவலிங்கத்தின்வடிவதாயடைந்துநும்மாற்
புரியும்பூசனைகொண்டந்தப்பொருப்பகத்திருப்பேமென்றும்
பெரியநம்மாயைதன்னுணைத்தொழப்பெறுகார்க்கேனு
முரியநும்பொருட்டான்ஞானத்தொளியெனவெளியாயிற்பேம்

(இ-ள்.) அருமையாகிய சிவலிங்கமூர்த்தமாயடைந்து உங்களாற்செய்யப்படும் பூசனையையேற்றுக்கொண்டு அந்தமலையினிடத்திலெந்நாளும் வீற்றிருப்போம்-இதுவுமன்றி நம்முடைய மாயையினாலே நமைத்தொழப்பெறுதவர்களுக்கேயாயினும் உரிமையாகிய உங்கள்பொருட்டால் ஞானசுரூபமாக விளங்கிக்கொண்டிருப்போம்—எ-று. (உ௩)

நாமமுங்கட்குவேதகிரியெனஞாலத்தோங்கும்
யாமதின்மும்மைத்தொன்மைத்தருமமுமியற்றியல்லாக்
காமருஞ்சனங்களுக்குங்களங்கறுத்துறைதுங்கண்டீர்
போமறைக்கணங்காளென்னப்போய்ப்பொருப் பாயவன்றே

(இ-ள்.) உங்களுக்கு இந்தவுலகில் வேதகிரியெனப் பேரோங்கும்- நாம்அந்தக்கிரியினிடத்திற்பழமையாய்மூன்றுவகைப்பட்ட தருமங்களைச் செய்தவர்களல்லாத வாழ்க்கை விருப்பம் ஒன்றனையே

யுடைய சனங்களுக்கும்பாவங்களை நீக்கிக்கொண்டிருக்கிறோம்-வேத ங்களே- நீங்கள் போங்களென்று கட்டளையிடப்போய்க்கிரியாயிரு ந்தன—எ-று.

ஈண்டுதருமமூன்றென்றது - அறம் - பொருள் - இன்பம் என்பவை - காமம் - மருவும் - எனச்சொல்லத்தக்கது-விகாரவகை யால் - காமருஎனநின்றது-காமம்-ஆசை. (உசு)

இருக்குவேராகநாப்பணைசுர்வென்பதாகச்சாமந்
திருக்கிளரத்தமாகவதருவஞ்சிகரமாகத்
தரிக்குமவ்வேதமேனிச்சயிலத்திலிலங்குமங்க
வருக்கமுமனேகமுண்டுவகுத்ததுவிளம்பக்கேண்மோ.

(இ-ள்) இருக்குவேதம் - வேராகவும் - யசுர்வேதம் - மத்தியா கவும் - சாமவேதம் - அழகுவிளங்கும்முடியாகவும் - அதர்வண வேதம்-சிகரமாகவும்-தரிக்கும் வேதசுரூபமாகிய அந்தமலையினிட த்தில் விளங்குகின்ற அங்கவர்க்கங்கள் அனந்தமுண்டு அவைகளை வகுத்துச்சொல்லுகிறோம் - நந்தியேகேள்—எ-று. (உஎ)

வேறு.

சந்தமதிற்*றுவாய்க்கற்பமதன்முழையாய்த்
தாழ்வரைமீமாங்கிசமாய்த்தருக்கரூபநிடமாய்ச்
சிந்தருவிநிருத்தமாய்ச் சோதிடம்பன்மணியாய்த்
திசைநான்கிற்சாரலுமச்சிவாகமத்திற்செறிவா
யந்தமிலாவியாகரணஞ்சிலைக்குலமாய்ப்புராண
மனைத்துமகத்தந்திரமுமடவிகளாய்த்தீக்கை
பைந்தளிரிற்கொடிகளாய்த்தமையொருங்குநெருங்கிப்
பருப்பதமாய்வேதங்களிருப்பதந்தப்பதியே.

(இ-ள்) சந்தையென்பது அம்மலையில்தாதுவாயும் கற்பமென்ப து அதன்குகையாயும்-மீமாங்கிசையானது-அதின்தாழ்வரையாயும்உ பநிடதமென்பது-அதில்விருட்சங்களாயும்- நிருத்தமென்பது-சிந் துகின்றஅருவிகளாயும்-சோதிடமென்பது-அதிற்பலமணிகளாயும் சிவாகமங்களின்கூட்டம்-அதில்நாலுபுறத்திலுமுள்ள சாரல்களாயும்

முடிவில்லாதவியாகரணம்-கற்களாயும்- பதினெண்புராணங்களும் அகத்தந்திரங்களும்வனங்களாயும் தீக்ஷையென்பது - பசியதளிருள்ளகொடிகளாயுந் தங்களுடனொன்றுபட்டுச் சேர்ந்திருக்கும்படி அந்தக்ஷேத்திரத்தில் வேதங்கள்கிரிரூபமாயிருக்கும்—எ-று.

* தாது-என்பது-பொன்-வெள்ளி-இரும்பு-செம்பு-ஈயம் வெண்கலம்-தரா-என்னும்-ஏழுமாம்.

அப்பெரியவேதகிரிபிரளயத்துந்தளரா
ததனெல்லைகலிநலியாதருவினைவந்தடாது
தப்பரியதவந்தானந்தியானமுதற்பிறவுந்
தனித்தொன்றையிழைத்தார்க்குமனந்தமெனத்தழைக்கு
மெய்ப்பதமும்வரமும்பெற்றருச்சனையதியற்றி
வேதங்கள்விழிபனிப்பமெய்புளகமரும்பக்
கைப்பதுமமுகிழ்த்தெமதுகாற்பதுமத்திறைஞ்சிக்
கள்ளம்வல்லாய்கள்ளம்வல்லாயெனக்கசிந்தோலிடுமால்.

(இ-ள்) அந்தப்பெரியவேதகிரியானது பிரளயகாலத்திலுந் தளர்ச்சியடையாது-அதனுடையஎல்லையில் பாபம்வருத்தாது-நீங்குதற்கரியவினையும்வந்துசேராது தவறுதலில்லாததவம்-தானம்- தியானம் முதலானமற்றதுகளில்தனித்து ஒவ்வொன்றையந்தத்தலத்திற்செய்தவர்களுக்குப்பலன் அதிகமாகத்தழைக்கும்வேதங்கள்உண்மையான பதமும் வரமும்பெற்று அருச்சனைசெய்துகண்களில் ஆனந்தபாஷ்பம்பெருகவும் கைத்தாமரைமலர்களை அஞ்சலியாகக்குவித்துத் தொழுதுநம்முடைய திருவடித்தாமரைகளில் பணிந்துகள்ளத்தனத்தில்வல்லவனேகள்ளத்தனத்தில்வல்லவனே யெனக்கசிந்துமுறையிடும்—எ-று. (உஎ)

அனைத்துலகினனைத்துயிர்க்குமகம்புறமாய்நிறைந்து
மன்பிலர்க்குமறைந்துநிற்பேமவரறிவும்பறிப்பேம்
நினைத்துருகுமன்பினர்க்குநெடிதுவெளிப்படுவேம்
நிகழ்த்துமவரறிவின்மைநெறியினையும்பறிப்பேம்
வினைத்தொழிலிற்கள்வரெல்லாஞ்சிலர்க்கொளித்துச்சிலர்க்கு
வெளிநின்றும்வழிபறித்துவிரவுவராதலினற்
கனைத்தமறையறிந்தெம்மைக்கள்ளம்வல்லாயெனுமக்
காரணத்தாற்சான்றவர்க்குநமக்கும்மதுகருத்தே.

(இ-ள்) எல்லாவுலகத்திலும் எல்லாவுயிர்களிடத்தும். உள்ளும்பு
றம்புமாய் நிறைந்திருந்தும். அன்பில்லாதவர்களுக்கு மறைந்துநி
ற்பேம் அவர்களறிவையும்பறிப்போம் -நம்மைத்தியானித்துருகாநி
ன்ற அன்புள்ளவர்களுக்கு மிகவும் வெளிப்படுவோம்- சொல்லுகி
ன்ற அவர்களுடைய அஞ்ஞானமாகிய நெறியினையும்பறிப்போம்
பாவத்தொழிலினையுடைய கள்வர்களெல்லாரும் சிலருக்கொளித்து
ச் சிலருக்குத்தெரியநின்று வழிபறித்திருப்பார்க ளாகையினால்
கோஷிக்கும்வேதங்கள் நம்மையறிந்து கள்ளம்வல்லாயென்றுதுதி
செய்தகாரணத்தினாற்சான்றோர்களுக்கும்நமக்கும் அது கருத்தாம்.

அந்தமுதுவேதகிரியாம்படைத்ததனா
லயன்படைத்ததலமெவைக்குமதிதலமாய்ச்சிறக்குஞ்
சிந்தனையினினைத்தாலுந்திருப்பெயர்சொற்றாலுஞ்
சேய்மையின்கட்கிரிசிகரந்தெரிதரக்கண்டாலும்
பந்தமுடனறிந்தறியாதிழைத்தவினையனைத்தும்
பவனத்தினெதிர்குவித்தபசும்பூளைக்குவிப்பாய்
வெந்தழலிற்படுபஞ்சாய்விளக்கொளிமுன்னிருளாய்
விடுமதனிற்புகழ்புகழ்ந்துமுடிவதரிதென்றான்.

(இ-ள்) அந்தப்பழைமையாகிய வேதகிரியை யாம்படைத்த
காரணத்தினால். பிரமாவினாற்படைக்கப்பட்டதலங்களுக் கெல்லாம்
மேலானதலமாய்ச்சிறப்புற்றிருக்கும் அந்தத்தலத்தைமனதில்நினை
த்தாலும் அதனது திருநாமத்தை வாக்கினாற் சொன்னாலும்- அதி
தூரத்திலந்தக்கிரியின் சிகரம் தெரியக்கண்டுதரிசித்தாலும் - பந்
தமாகியபாசமும் -அறிந்துமறியாமலுஞ்செய்தபாவங்களெல்லாமு
ம் காற்றுக்கெதிரில்பூளைப்பூகுவியல்போலவும் தீயிற்பட்டபஞ்சை
ப்போலவும் விளக்கொளிமுன் இருள்போலவும் நீங்கிவிடும்- ஆதலா
ல் அதன்புகழைப்புகழ்ந்து சொல்லுதல் அரிதென்று நந்திதேவ
ருக்கருள் செய்தார்—எ-று. (உகூ)

வேதகிரிச்சருக்கம்-முற்றியது. ஆக திருவிருத்தம்.௱எஅ.





சிவமயம்.

# உருத்திரகோடிச்சருக்கம்.

ஈசன்மாற்றத்தைநந்தியினிதுகேட்
டாசிகூறியடிபணிந்தெம்பிரா
னேசைமல்குமுருத்திரகோடியர்
பூசைநின்னைப்புரிவொழுங்கேதென்றான்.

(இ-ள்) இவ்வாறுபரமசிவம் அருளிச்செய்த திருமொழிகளை நந்திதேவர் இனிதாகக்கேட்டுவாழ்த்துதல்கூறி சுவாமிகளுடைய திருவடிகளைப்பணிந்து எம்மிறைவனே - புகழ்நிறைந்தருத்திரகோடியர்கள் தேவரீரைப்பூசித்த முறைமையெவ்வாறு அதையருளிச்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார் — எ-று. (க)

நோன்றலைப்புவனங்கட்குநோய்பல
போன்றலைத்தவவுணரைப்போக்குவா
னூன்றுமொய்ம்பினுருத்திரகோடியர்
தோன்றநம்மிடந்தோற்றுவித்தேமரோ.

(இ-ள்) வன்மைபொருந்திய இடத்தையுடைய பலபுவனங்களுக்கும்பலநோயடுத்ததுபோலஉயிர்களைவருத்திய அவுணர்களையொழித்துவிடப்பொருந்திய பலத்துடன் ருத்திரகோடியர்கள் நம்முடையதிருமேனியில்நின்றுந்தோற்றும்படிதோற்றுவித்தோம்எ-று.

நொய்தினிற்பண்டுநூறுநூறாயிர
மெய்தரித்தவுருத்திரர்மெய்நிறங்
கைதிரட்புயஞ்செம்முகங்கண்முத
லெய்துமியாவையுமெம்மையொத்தெய்தினார்.

(இ-ள்) முற்காலத்தில் கோடித்தொகையுள்ளவர்களாய்த்தோன்றியருத்திரர்கள் - சரீரநிறம் - கைகள் - திரண்டபுசங்கள் - செவ்

விதானமுகம் - கண்கள்முதலாகப்பொருந்திய இவைகளெல்லா ம் - எம்மையொத்துவந்தார்கள்—எ-று. (௬)

நாகப்பூணினர்நான்குபுயத்தின
ராகத்தீயினராங்கத்துமாலையர்
மேகக்கந்தரர்வீழ்சடைக்கற்றையர்
போகச்சிந்தையரொண்புலித்தோலினர்.

(இ-ள்) அந்தருத்திரர்களின்னு மெத்தன்மையுள்ளவர்களென்று ல் நாகாபரணமணிந்தவர்கள்- நான்குபுயங்களுள்ளவர்கள்- தீபோ ன்ற மேனியுள்ளவர்கள் - எலும்புமாலையணிந்தவர்கள் . காளகண் டமுடையவர்கள்- தாழ்ந்தசடைக்கற்றையையுடையவர்கள்- போக சிந்தையுள்ளவர்கள்-ஒளியுள்ளபுலித்தோலாடையுடையவர்கள்- எ-று

கையின்முத்தலைச்சூலர்கணிச்சிய
செய்யும்வில்லரெறிசக்கரத்தவர்
பெய்யுங்கப்பணர்பிண்டிபாலத்தினர்
வெய்யகுந்தத்தர்நாந்தகவீச்சினர்:

(இ-ள்) கையில்முத்தலைச்சூலமுடையவர்கள் - மழுப்படையுள் ளவர்கள் - பாணம் எவும்படியான வில்லையுடையவர்கள் - எறிகி ன்றசக்கராயுத முள்ளவர்கள்-வீசுகின்றகப்பணமுள்ளவர்கள்- பிண் டிபாலமுள்ளவர்கள் - வெவ்விதானகைவேலையுடையவர்கள் - வா ள் வீசுகிறவர்கள்—எ-று. (௭)

மாருதத்தின்கதியர்மலையலைத்
திருங்கையரிடியுருமார்ப்பினர்
மேருநீட்சியர்வெவ்விடச்சேடனும்
பாரும்பேரப்பதங்கள்பெயர்த்துளார்.

(இ-ள்) வாயுதேவனையொத்தவேகமுள்ளவர்கள் - மலைகளையலை த்துப் பிளந்துவிடுங்கையர்கள்- இடிபோன்ற ஆரவாரத்தினர்-மே ருவையொத்த உயரமுள்ளவர்கள் - வெவ்வியவிடமுள்ள ஆதிசேஷ னும்பூமியும் பெயரும்படி அடியெடுத்து நடப்பவர்கள்—எ-று

அனையரெம்மையடிதொழநோக்கியா
முனைவரும்பர்கணத்தைமுனிந்தெழுந்
துனைதயித்தியர்வெள்ளந்தொலைத்துநீ
ரினையுமண்டங்கள்காமினெனச்சொன்னோம்:

(இ-ள்) அவர்கள்வந்து எம்முடைய திருவடிகளைவணங்க நாம் பார்த்து முனிவர்கூட்டத்தையுந் தேவர்கூட்டத்தையுங்கோபித்தெழுகின்றவேகமுள்ள அசுரர்கூட்டத்தையழித்து அவர்களால்வருந்துகின்ற அண்டங்களைக்காத்துக்கொண்டிருங்களென்று அவர்களுக்குக்கட்டளையிட்டோம்—எ-று.

காசிபரிஷிமனைவியர்பதின்மூவரில் திதியென்பவளுடைய புத்திரர்களாகையால் அசுரர்கள் தைத்தியர்களெனப்பேர் பெற்றனர்கள். (எ)

பாதலத்தின்பாப்பும்பொருப்புமிப்
பூதலத்தின்புறம்பும்புணரியு
மாதிரத்தகமுந்திதிமைந்தனாப்
பேதறத்தெறுவான்பெரிதேகினர்.

(இ-ள்) பாதாளத்தினிடத்தும் - மலைகளினிடத்தும் - சமுத்திரத்தினிடத்தும் - தீபாந்தரங்களினிடத்தும் - இவைகளுக்குப்புறம்பாகிய இடங்களிலுமிருக்கிற திதிபுத்திரர்களாகிய அசுரர்களைக் கொலைசெய்யச்சென்றார்கள்—எ-று. (அ)

நிலமுநீருநெருப்புமுல்லையுந்
தலமும்வானமுந்தங்குந்தருவனா
யலமரக்கொன்றறத்தையளித்தண்டம்
பலபுரந்தனர்பல்பெருங்கற்பமே.

(இ-ள்) பிருதிவி அண்டத்திலும் - அப்புஅண்டத்திலும்-தேயு அண்டத்திலும் - வாயு அண்டத்திலும் - வாசமாயிருக்கும் அசுரர்களையெல்லாஞ் சுழலும்படிக்கொன்று தருமத்தைரக்ஷித்துப் பலவாகிய அண்டங்களையும் - அநேகங்கற்பகோடிகாலம் - ரக்ஷித்தார்கள்—எ-று. (கூ)

ஆயிடைக்கடலாரமுதங்கடைந்
தேயவண்டர்க்கிடவெமதேவலான்
மாயனிந்திரனாதியர்மத்தமாய்ப்
பாயமந்தரம்பண்டெடுத்தனனோ.

(இ-ள்) அப்படியிருக்குங்காலத்தில் பாற்கடலைக்கடைந்து அதி லுண்டாகிய அரிய அமுதத்தைவிரும்பியதேவர்களுக்கிடும்பொருட் டு எம்முடைய கட்டளையினால் - இந்திரன் முதலானதேவர்களுட னேமாயவன்- சென்று கடல்கடைதற்கு மத்தாகப்பெரியமந்தரகிரி யை முற்காலத்திலெடுத்தான்—எ-று.

ஆரமுதமென்பதற்கும் - ஆருயிரென்பதற்கும்- அருமையா கிய அமுதம் - அருமையாகிய உயிர்-என உரையாசிரியர்கள்பொ ருள்வரைந்திருக்கின்றனர். (ம)

எடுத்தபாதலத்தின்வழியேயெழுந்
தடுத்ததானவராயுதபாணியும்
மடித்தவாயும்வதனமுநோக்கமு
முடித்தலங்களும்பற்பலமுற்றினர்.

(இ-ள்) இவ்வாறு மேருவை எடுத்தபாதலத்தின்வழியாக ஆயுத பாணியர்களும்- மடித்தவாயினையுடையவர்களும்- பலமுகங்களும் பலகண்களும் - பலமுடிகளுமுடையவர்களுமாய் அநேகம்அசுரர்க ளெழுந்தார்கள்—எ-று. (மக)

வேறு.

பற்பலசிரத்திரள்கரப்பணையணைப்பார்
வெற்பினொடுவெற்புடையமீமிசைபுடைப்பா
ரற்புதமுறப்பெரியவண்டநிரையெல்லாம்
புற்புதமுடைத்தெனவுடைத்தவைபொதுப்பார்.

(இ-ள்) பெருமரக்கிளைகளை யொத்தஒருகையில் அநந்தமாகிய தலைகளைச்சேர்த்துப்பிடிப்பார்கள் - இடிபட்டுடையும்படி மலைக ளுடன் மலைகளைமோதுவார்கள் - யாவரும்அதிசயிக்கும்படி அண் டகோடிகளையெல்லாம் நீர்க்குமிழியையுடைப்பதுபோலுடைத்து மேலும்அவைகளைத்துளைசெய்வார்கள்—எ-று. (மஉ)

கைக்கடகமத்திகிரிவெற்பதுகவிப்பார்
மெய்க்கடையுகத்தழல்விழிக்கடைவிளைப்பா
ரக்கடலொடிக்கடலுடைத்தலைகலப்பார்
மைக்கடன்மழைத்திரள்குழைத்தனவனப்பார்

(இ-ள்.) தங்கள்கைக்குக் கடகமாகச்சக்கிரவாளகிரியை யணிந்து கொள்வார்கள் - உண்மையான ஊழிமுடிவிலெழுகின்ற தீயைத்தங்கள் கடைக்கண்களாலுண்டாக்கிவிடுவார்கள் - அந்தக்கடலையும் இந்தக்கடலையும் உடைத்துவிட்டு இரண்டுமொன்றுபட் டலைகள்வீசிக்கொண்டிருக்கும்படிசெய்வார்கள் - கருங்கடலைக்கரியமேகங்களுடன் கலந்ததையொத்ததிறமுள்ளவர்கள்—எ-று. (௰௩)

கைக்கொடுபுடைத்தொரொழுகாசினிபிளப்பார்
திக்கிடைமதக்கரியெடுத்திதழ்செறிப்பா
ரொக்கமுகடெட்டியுடுவிற்குலமுதிர்ப்பார்
சக்கரமெனத்தவனனைத்தனிதிரிப்பார்.

(இ-ள்:) தங்கள்கையாலடித்து எழுலகங்களையும் பிளந்துவிடுவார்கள் - அஷ்டதிக்கிலுமிராநின்ற மதயானைகளை யெடுத்துத்தங்களுதடுகளிலிடுக்கிக்கொள்வார்கள் - அண்டமுகட்டையெட்டி நக்ஷத்திரக்கூட்டங்களையுதிர்ப்பார்கள் - சக்கரம்போலாகச்சூரியனைத் தனியே யெடுத்துச் சுழற்றுவார்கள்—எ-று. (௰௪)

தாழியபிலத்தரவுதாழ்வடமிணைப்பா
ரேழுயர்பொழிற்களையிணர்த்தொடைதொடுப்பா
ராழிகள்குடிக்கவொருகைக்கிடையடைப்பா
ரூழியினெருப்பையொருயிர்ப்பொடுமவிப்பார்.

(இ-ள்.) தாழ்ந்தபாதாளத்திலிருக்கும் பாம்புகளையெடுத்துத்தாழ்வடமாகஅணிந்து கொள்வார்கள்-உயர்ந்தஎழுபொழிலையும் கொத்துமாலைகளாகத் தரித்துக்கொள்வார்கள்-சமுத்திரங்களையெல்லாங் குடிக்க ஒருஉள்ளங்கையில் சேர்ப்பார்கள் - ஊழித்தீயையொருசுவாசத்தினால் அவித்துவிடுவார்கள்—எ-று. (௰௫)

எட்டிறைவர்திக்கிறைமையாவையுமொழிப்பார்
மட்டவிழ்மலர்க்கமலன்வானுலகலைப்பார்
கட்டரணழித்தரிபுரக்குடிகலைப்பார்
சிட்டர்தமகத்தொழிறவத்தொழில்சிதைப்பார்.

(இ-ள்.) அஷ்டதிக்குப்பாலர்களும்அவரவர்திக்கில் செலுத்தும் அரசாட்சியை மாற்றிவிடுவார்கள்-தேனுடன்மலிந்ததாமரைமலரிலிருக்கும் பிரமதேவனுடைய சத்தியலோகத்தை யலைத்துவிடுவார்கள் - கட்டுக்காவலையழித்து விஷ்ணுவினுலகத்தி லிருக்குங் குடிகளைக்கலைத்துவிடுவார்கள் - சிஷ்டர்களாகிய முனிவர்களுடைய யாகங்களையுந்தவங்களையும் அழிப்பார்கள் — எ-று. (௰௬)

இத்திறநெருக்கினரொருங்கவுணரெங்கு
மத்திறமறிந்தயனொடண்டர்முனிவோரு
மொத்தனர்நமைக்கயிலைபூடுதுதிபாடிக்
கைத்தலமுகிழ்த்துமுறையிட்டனர்களுழ்ந்தார்.

(இ-ள்.) இவ்வண்ணம் அந்த அவுணர்கள் எல்லாவுலகங்களிலும்நெருங்கினார்கள் - அதைப்பிரமதேவனும் தேவர்களும் முனிவர்களும் அறிந்துகயிலாயத்தில்வந்து நம்மைப்பணிந்து துதிசெய்துகைகளைக்குவித்துத்தொழுது முறையிட்டுத்துயரமடைந்தார்கள்-எ-று

தானவரெனுங்கடறழீயதுலகெங்கும்
வானகமும்வையகமுமற்றொரிடமற்றே
மூனமிலுனக்கலதெமக்கொழிவதன்றால்
ஞானமுதலேயபயமென்றிவைநவின்றார்

(இ-ள்) அசுரரென்கிறசமுத்திர முலகமெங்கும்வியாபித்திருக்கின்றது. வானுலகத்தையும்பூலோகத்தையும் மற்றுமுள்ளவிடங்களையுமிழந்தோம்-நித்தியராகிய தேவரீருக்கல்லது அந்தக்கூட்டப்ளங்களுக்கு ஒழிவதல்ல - ஞானமுதல்வனே அபயமபயமென்று முறையிட்டார்கள்—எ-று. (௰அ)

வேறு.

அற்றமாற்றியவண்டரைநோக்கிக்
கொற்றவுருத்திரகோடியர்தம்மை
யுற்றெழுதானவரைப்பொருதொல்லைச்
செற்றிடுமின்னெனவேவுதல்செய்தேம்.

(இ-ள்) தேவர்கள்தங்கள் துயரத்தைச்சொல்லி முறையிடுவதை நோக்கியெங்கும் வியாபித்திருக்கிறதானவர்களைப் போர்செய்துவிரைவாகவதைசெய்யுங்களென்று வெற்றிபொருந்தியஉருத்திரகோடியர்களையேவினேம்—எ-று. (௰௯)

அன்னவரெம்மையடிதொழுதைய
வின்னலிழைத்ததயித்தியரேனு
முன்னருந்தவமுற்றினரன்னோர்
மன்னுயிரைத்தெறல்வல்வினையன்றோ

(இ-ள்) அந்தஉருத்திரர்கள் நம்முடைய திருவடியைவணங்கிஅந்தத்தானவர்கள் உலகங்களுக்குத் துன்பஞ்செய்தவர்களே யானாலும் ஆதியிலருந்தவஞ்செய்தவர்களாதலா லவர்களுயிர்களைக்கொல்வதுபாவமல்லவோ—எ-று. (௨௰)

எவ்வுயிரேனுமிறத்தெறுவானை
வெவ்வினைசூழடிவிடுந்தவமிக்கோ
ரவ்வுயிரட்டவளப்பிலதீமைக்
குய்வினையாதெனவோதினர்மாதோ

(இ-ள்) எவ்வகைப்பட்ட உயிரைக்கொன்றாலும் அவர்களைப்பாபம்வந்துசூழும் (அவ்வாறிருக்க) தவமிருந்துள்ளவர்களைக்கொன்ற அளவில்லாதபாவத்துக்கு உய்யுஞ்செய்கையாதோஎன்றுவிண்ணப்பஞ்செய்தார்கள்—எ-று. (௨௧)

அந்தணர்தேவரருந்தவருக்காய்
வந்தனதீமைவராதொருவர்க்கு
முந்தமனப்பயமொன்றுளதேனும்
நந்தமருச்சனையானவைபோமால்.

(இ-ள்) பிராமணர்கள்-தேவர்கள்- முனிவர்கள் - என்னுமிவர்கள் பொருட்டு (உதவிசெய்வதினால்) வருகின்றனவாகியபாவங்கள் -ஒருவர்க்கும்வருவனவல்ல உங்கள்மனதில் பயமிருந்தாலும் நம்முடைய அருச்சனையாலப்பாவம்நீங்கும்—எ-று. (௨௨)

ஆதலினக்கொடியாரையறுக்கு
மேதமனைத்துமெரிக்கிடுபஞ்சாம்
பாதவருச்சனைநம்முழைபண்ண
வேதகிரிக்கண்டமின்னெனவிட்டேம்.

(இ-ள்) ஆதலாலந்தக் கொடியவர்களைக்கொல்லும் பாவங்களெல்லாம்தீயின்முன்னிட்டபஞ்சுபோலாம்நம்மிடத்தில்பாத பூசைசெய்யும்படிவேதகிரித்தலத்தில்அடையுங்களென் றனுப்பினேம்—எ-று

விட்டுழிநம்விடைகொண்டுவிருப்பின்
மட்டறமுன்னர்வணங்கியெழுந்தார்
ஒட்டலர்தம்மையுருத்திரகோடிச்
சிட்டர்நடந்தமர்செய்குநர்புக்கார்.

(இ-ள்) இவ்வாறுநாம் விடைகொடுத்தவளவில் சிஷ்டர்களாகிய உருத்திரகோடியர்கள் மிகுந்தவிருப்பத்துடன் பலமுறைபணிந்துசென்று அந்தத்தானவர்களுடன் போர்செய்யத் தொடங்கினார்கள்—எ-று. (௨௪)

கண்டனர்தானவர்கண்கள்சிவந்தா
ரண்டமெலாமதிரப்பெரிதார்த்தார்
மண்டுபிலப்பகுவாய்கண்மடித்தார்
விண்டடவும்புயமீருபுடைத்தார்.

(இ-ள்) அந்தத்தானவர்கள் உருத்திரகோடியரைக்கண்டு(கோபத்தினால்) கண்கள்சிவந்து அண்டங்களெல்லாம் அதிரும்படியிருதியாக ஆரவாரித்து ஆழ்ந்த பிலம்போன்ற வாயை மடித்துக்கொண்டு ஆகாயத்தைநெருங்காவிய தங்கள்புயங்களைத்தட்டினார்கள் -எ-று.

அங்கையொராயிரமாயிரம்வெற்பா
வெங்கையுருத்திரர்மீமிசைவிட்டார்
பொங்கர்மரங்கள்புலம்பவெடுத்தார்
மங்குலனைத்துமறைப்பவெறிந்தார்.

(இ-ள்) இவ்வண்ணம் ஆரவாரித்த அசுரர்கள் ஒருகைக்கு ஆயிரமாயிரமலைபாகவெடுத்து வெவ்விதானபடைவகுப்பினையுடைய உருத்திரர்கள்மேலெறிந்தார்கள் பெரும்பனைகளுள்ளவிருக்ஷங்களை ஓசைகொள்ளும்படியெடுத்து ஆகாயமுழுவதுமறையஎறிந்தார்கள்.

தாருமுகந்தனர்சிற்சிலர்சையம்
வேரொடெறிந்தனர்சிற்சிலர்வெவ்வே
லாரும்வழங்கினர்சிற்சிலரம்பின்
மாரிசொரிந்தனர்சிற்சிலர்வல்லோர்.

(இ-ள்) சிலஅசுரர்கள் தருக்களைப்பிடுங்கியெறிந்தார்கள் சிலர்மலைகளைவேருடன் பிடுங்கியெறிந்தார்கள் சிலபேரெல்லாரும் வேலாயுதப்ரயோகஞ்செய்தார்கள்சிலஅசுரர்கள்பாணவருஷிம்பொழிந்தார்கள்-எ-று

வெய்யவரின்னவிளைத்தமைகண்டார்
செய்யவுருத்திரர்புன்னகைசெய்தார்
கையமர்விற்படைகால்கள்வளைத்தா
ரய்யனடித்துணையெண்ணியடர்த்தார்.

(இ-ள்) அசுரர்களிவ்வாறுபோர்செய்ததை உருத்திரர்கள் கண்டு புன்னகைசெய்து தங்கள் கைகளிலிருக்கும் விற்களைவளைத்துப்பரமசிவனுடையதிருவடிகளைத்தியானித்துப்போர்செய்தார்கள்.எ.று

நாணெறியிற்றிசைநாலுமதிர்த்தார்
பாணவிதப்பெருமாரிபகுத்தார்
மாணலர்விட்டமரங்கிரியெல்லாஞ்
சேணுலகத்திடைநுண்பொடிசெய்தார்.

(இ-ள்) நாணெறிவதினால்திக்குகள்நான்கையும்அதிரட்பித்தார்கள் பாணவிதங்களாகிய பெருமழைபொழிந்து அவ்வசுரரெறிந்தமரங்களையும் மலைகளையும் அந்தரத்திலேதானே நுண்பொடியாகும்படி நொறுக்கிவிட்டார்கள்—எ-று. (௨௯)

விட்டனவிட்டனவெம்படையாவுந்
தொட்டனதொட்டனவாளிதுரப்ப
வட்டவெயிற்பனிபோன்மடிவித்தார்
பட்டனர்தானவரென்கைபடுத்தார்.

(இ-ள்) அசுரர்கள்விட்ட படைகளையெல்லாம் உருத்திரர்விடுக்கும்பாணங்களினால் வட்டமாகிய சூரியன்முன்பனிபோல மடிவித்து-அசுரர்களிறந்தார்களென்று சொல்லும்படிசெய்தார்கள். (கடு)

மீதுபடப்பட வெஞ்சரமாரி
தீதுபடப்பழிபட்டனர்தீயோர்
மோதுமுடற்குருதிக்கடன்முந்நீ
ரோதமடங்கத்துமொளித்துளதம்மா.

(இ-ள்) உருத்திரர்களைவும் பாணங்கள் தங்கள்மேல்வந்து வந்து படுதலால் - தீமைமிகுரும்படி பழிபட்டிறந்தார்கள் - அவ்வசுரருடலுதிரக்கடல்பெருகி மூன்றுவகைச்செய்கையினையுடையகடல்களையெல்லாமறைத்துத்தன்னிறமாக்கியது—எ-று.

கடலுக்கு மூன்றுவகைச்செய்கையாவது - ஆக்கல்-அளித்தல் - அழித்தல் - என்பனவாம்-இவ்வாறன்றி - ஆற்றுநீர் - வேற்றுநீர் - ஊற்றுநீர் - என்னுமிம்மூன்றுவகை நீரையுடையதாதலால் முந்நீரெனக்கூறுதலுமொன்று. (கசு)

பருந்துகொடித்திரள்பந்தரிடக்கீ
ழிருந்துபிணக்குவைமேடையிலேறி
யருந்திறிணத்தசைமங்கைகள்சோரி
பொருந்திவிளங்குவபூதபதாதி

(இ-ள்.) பருந்தாகிறதுங்காக்கைக்கூட்டமும் மேலேபந்தலிட்டதிருத்தபிணக்கூட்டமாகிய மேடைமேலேறியிருந்து - மாமிசங்களையருந்திக்கைகளிலுதிரத்தைப்பொருந்திப் பூதசேனைகள் விளங்குவன—எ-று. (கஎ)

பாடினகூளிகள்பாடுகளத்து
ளாடினபேய்களனந்தகவந்தம்

பீடினதானவர்வெள்ளமனைத்துஞ்
சூடினவாகையுருத்திரர்தோளே.

(இ-ள்.)கோட்டான்கள்பாடின- அவைபாடுங்காலத்தில்பேய்களுடன் அநந்தக்கவந்தங்களுமாடின - தானவர்கூட்டமெல்லாமிறந்தன- உருத்திரர்புசங்கள் வெற்றிமாலையணிந்தன—எ-று. (௩௩)

ஆர்த்தனவந்தரதுந்துபியைந்தும்
போர்த்தனபூமழைபூவுலகெல்லாம்
பார்த்தனவானவர்பார்வைகளிப்பாற்
சீர்த்தனநான்முகனாதியர்செல்வம்.

(இ-ள்.) தேவதுந்துமியென்னும் பஞ்சவாத்தியங்களும் அந்தரத்திலார்த்தன - பூலோகமெல்லாங்கற்பகப்பூமாரிநிறைந்தன-தேவர்களுடையகண்கள்களிப்புடன்பார்த்தனபிரமதேவன் முதலானவர்கள்செல்வங்கள் சிறப்படைந்தன—எ-று.

பஞ்சவாத்தியம் - தோற்கருவி - துளைக்கருவி - நரம்புக்கருவி - கஞ்சக்கருவி - மிடற்றுக்கருவியென்பனவாம். (௩௪)

வேறு.

அருந்தவத்தொகைமிகுத்தவராகியுமவுணர்
திருந்துமுக்கணன்கணங்களையலைத்தலிற்சிதைந்தார்
பொருந்துமச்சிவனடியவர்க்கல்லகணேபுரிந்து
வருந்துவித்தவர்கிளையொடுங்கெடுதன்மற்றரிதோ

(இ-ள்) அரிதானதவத்தொகுதியால்மிகுந்தவராயிருந்தும்அவ்வவுணர்பரமசிவனுடைய கணங்களையலைத்ததினாலப்போது சிதைந்தார்கள் -ஆதலால்நித்தியனாகியஅந்தப்பரமசிவனுடையஅடியவர்களுக்குத்துன்பஞ்செய்து வருத்தப்படுத்தினவர்கள் சுற்றத்துடன் அழிவது அருமையோ—எ-று. (௩௫)

அவனியாவையுமவுணரையுருத்திரர்பார்த்துச்
சிவனசேவடிசூடிவெல்நாகரதெழித்தார்
தவநடாத்திலருயிர்க்கொலைபொறுக்கலர்தரியார்
புவனமீதுவேதக்கிரிநோக்கினர்போனர்.

(இ-ள்.) உலகமெங்குமிருந்த அவுணர்களையெல்லாம் உருத்திரர்கள் கொன்று வென்று பரமசிவனுடைய திருவடிகளைச்சூடிக்கொண்டு அரகரவென்றுஆரவாரித்துத்துதித்துத்-தவஞ்செய்த அந்த அசுரர்களைக்கொன்றதோஷம் தாங்கமாட்டாமல் பூலோகத்திலிருக்கும் வேதகிரியை நோக்கிச்சென்றார்கள்—எ-று. (௫௬)

வாட்டமாம்பசிக்கன்றுதாய்மருங்குநாடுகைபோல்
வேட்டமாழையைவறியவர்விழைந்துபோந்தமைபோற்
கேட்டதோரடையாளத்தினான்மறைக்கிரியை
நாட்டமேபுரிந்துருத்திரகோடியர்நடந்தார்.

(இ-ள்.) வட்டமுள்ளதாகிப்பசியையுடைய கன்றானது தாய்ப்பசுவினிடத்திற்குறித்துச் செல்வதுபோலவும்-யாவரும் விரும்பத்தக்க பொன்னினை வறுமையாளர் விரும்பிச்சென்றதுபோலவும் தாங்கள் முன்கேட்ட அடையாளப்படி வேதகிரியை நாடிக்கொண்டுஉருத்திரகோடியர்நடந்தார்கள்—எ-று. (௫௭)

சென்றுதூரவேதக்கிரிச்சிகரிகண்டளவே
யொன்றும்வேறறியாதபரிந்துரோமங்கள்சிலிர்ப்ப
நன்றுதங்கணீர்நனைதருஞ்சேறுமெய்நனைப்பத்
துன்றுபாரிடைத்தண்டமொத்திறைஞ்சினர்துதித்தார்

(இ-ள்.) இவ்வாறுநடந்தஉருத்திரர்கள் வேதகிரியின் சிகரத்தைக்கண்டமாத்திரத்தில் . வேறொன்றுந்தெரியாமல் பரவசமாய் - ரோமங்கள்புளகமடையஆனந்தத்தினால் தங்கள்கண்களினின்று மிகுதியாகப்பெருகிய நீர்செய்தசேறுதங்கள்சரீரத்தைநனைக்கும்படிபொருந்திய பூமியினிடத்தில்தண்டம்போல்விழுந்துபணிந்து துதிசெய்தார்கள்—எ-று. (௫௮)

வேதவெற்பது சிவலிங்கவடிவுடன்விளங்கக்
காதன்மிக்கரகரவெனச்சேய்மையிற்கண்டா
ரேதெனச்சொல்வதெல்லையிலாவுயிர்க்கொலையிழைத்த
பாதகத்தனையிடையிடைப்படுசிறைதணந்தார்.

(இ-ள்.) வேதகிரியானது சிவலிங்கவடிவமாகத்தோன்றத் தூரத்திலவரும்போதேகண்டுமிகுந்த அன்புடன் அரகரவென்றுதுதித்தார்கள் - அவ்வண்ணந்துதித்தளவே - இதனை என்னென்றுசொல்வது அளவில்லாத உயிர்க்கொலைசெய்தபாதகத்தளையில் அகப்படும்படியான சிறையைக்காணாதவர்களானார்கள்—எ-று. (ருகூ)

அந்தநான்மறைப்பொருட்பருவியின்மணிக்கணமுஞ்
சந்தனடவிகாகதுண்டாடவித்தழைப்பு
மிந்துகாந்தவெண்பளிக்குவேதிகைநகையெறிப்பும்
புந்தியோடுகட்புலங்களுங்கவர்தரப்பொலியும்

(இ-ள்.) அந்தவேதகிரியின் அருவியில்வருகின்ற மணித்தொகுதிகளும் அம்மலையிலிருக்கும் சந்தனவிருக்ஷக்காடும் - அகில்விருக்ஷக்காட்டின் செழுமையும் - சந்திரகாந்தங்களும் - வெண்பளிங்குமாகியவேதிகைகளின் ஒளிவிளக்கமும் - பார்க்கின்றவர்களுடைய பார்வைகளையும் மனங்களையுங் கிரகித்துக்கொள்ளும்படி பிரகாசிக்கும்—எ-று. (சுல)

போதனைத்தினிற்போதுமென்சணிகளும்புனித
வேதவெற்பினெப்பொழுதினுங்காண்வரவிரவு
மாதவத்தவர்விஞ்சையர்வானவரியக்கர்
கீதசித்தர்கிம்புருடருந்துதிதரக்கிளரும்.

(இ-ள்.) பரிசுத்தமாகியவேதகிரியில்எக்காலமும்நல்லமலர்களும் மெத்தென்றபழவர்க்கங்களும் -காணும்படி பொருந்தியிருக்கும் முனிவர்கள் - வித்தியாதரர்கள் - தேவர்கள் - இயக்கர்கள்-கீதம்பாடுகின்ற சித்தர்கள்-கிம்புருடர்கள்- என்னுமிவர்களுந்துதிசெய்யும்படிவிளங்கும்—எ-று. (சுக)

வேதவோதையுமாகமத்தமலையும்விமலன்
பாதபூசனைமோசையும்பல்லியத்திசையு
மாதர்வீணையின்வகுளியுமகத்தொழின்முழக்கு
மோதவாரிதியொலியெனத்தனித்தனியொலிக்கும்.

(இ-ள்.) வேதகோஷமும் - ஆகமங்களின்சத்தமும் - பரமசிவனை ப்பூசிப்பவர்கள் துதிசெய்யுமோசையும் - பலவாத்தியங்களின் ஒலியும் - அழகுள்ளவீணைநாதமும் - வேள்விசெய்யுமிடத்துண்டாகும்ஓசையும் - அலையுள்ளகடலோசைபோலொலிக்கும்.—எ-று (சஉ)

நாடிநாடிநெஞ்சொருவருக்கொருவர்முன்னவையும்
வீடிவீடியங்கணுகுறுந்தொறும்விரைந்தனரா
யோடியோடியுட்பேரன்புமிடர்பிடித்துந்த
வாடியாடியித்தகையதோர்வேதவெற்படைந்தார்

(இ-ள்.)ஒருவர்மனதுக்கு முன்மற்றொருவர் மனம்நாடிக்கொண்டுசெல்லுந்தோறும் - பாவமுங்கொஞ்சங்கொஞ்சமாக நீங்கினவர்களாய் - உள்ளன்பு பிடரியைப்பிடித்துத்தள்ள ஆநந்தக்கூத்தாடினவண்ணமாகவே அம்மலையிற்சென்று சேர்ந்தார்கள்—எ-று.

ஆர்க்குமுந்துங்கொல்காட்சியென்றவரவர்பதறி
யேற்குமன்புடனொருவருக்கொருவர்முன்பேகப்
பார்க்குங்கண்ணெதிருருத்திரகோடியர்பலர்க்குங்
கூர்க்குநம்முருக்கோடிலிங்கத்துருக்கொண்டேம்.

(இ-ள்.) தரிசனம் யாருக்கு முன்னங்கிடைக்குமோ வென்று அவரவரும் பதறிப்பொருந்திய அன்புடன்ஒருவர்முன்னொருவர் செல்லுங்கையில்- பார்க்கா நின்ற உருத்திரகோடியர்கள் கண்ணுக்கெதிர்நுணித்தறியத்தக்க நம்முருவமும் கோடிலிங்கரூபமாகக் கொண்டிருந்தோம்—எ-று. (சச)

வருமுருத்திரகோடியர்தனித்தனிவணங்கத்
திருவுருக்களுங்கோடிநாங்கொண்டுழித்தெரிசித்
தொருபதிரட்டைந்தாயிரநூறுபசாரத்
திருபதத்தினுமருச்சனைசிற்சிலரிழைத்தார்

(இ-ள்.)வந்தருத்திரர்கள் கோடிபேரும் தனித்தனிவணங்க- நாமும் கோடிலிங்கரூபங்கொண்டபோது தரிசித்து சிலசிலர் கோடிஉபசாரத்துடன் நம்முடைய விரண்டுபாதங்களிலும்அருச்சனைசெய்தார்கள்—எ-று.

ஒருபது-இரட்டு ஐந்தாயிரம்-எனப்பதம்பிரிக்கஇரண்டு-என ற்பாலது ஈரட்டு என நீண்டும்-வலித்தும்-நின்றனமைகாண்க.

திருமஞ்சனதிரவியம் - திருப்பள்ளித்தாம முதலானவைகளுளீ - ஒவ்வொருபொருளை யொவ்வொருவர் விசேஷமாகக்கொண்டு ஆராதித்தலால்கோடியுபசாரமென்றுசொல்லப்பட்டது. (சரு)

செய்யவெண்வகைப்போதினாற்சிற்சிலர்புறத்து
மையவெண்வகைப்போதினாற்சிற்சிலரகத்து
மெய்பயப்பநின்றருச்சனைபுரிந்துவீழ்ந்திறைஞ்சிப்
பையப்பற்பலவலஞ்செய்துபன்முறைபணிந்தார்.

(இ-ள்.) செவ்விதான அஷ்டபுட்பங்களினால் சிற்சிலர்புறத்திலும் - அழகுபொருந்திய அஷ்டபுட்பங்களினால் சிற்சிலர் உள்ளிலுமாகஉண்மைபொருந்தநின்று அருச்சனைசெய்து வீழ்ந்துபணிந்து பலவாகப் பையப்பையப் பிரதக்ஷிணஞ்செய்து பலமுறைபணிந்தார்கள்—எ-று.

அகத்திலர்ச்சிக்கும் எட்டுவகைப்புட்பங்களாவன-கொலையின்மைப்புட்பம் - இந்திரியநிக்கிரகப்புட்பம் - சாந்திபுட்பம்- தயாபுட்பம் - ஞானபுட்பம் - தவப்புட்பம் - சத்தியபுட்பம் - பாவனாபுட்பம்- என்பவையாம்- புறத்திலர்ச்சிக்கும் எட்டுவகைப்புட்பங்களாவன-புன்னை- வெள்ளெருக்கு-சண்பகம்-நந்தியாவர்த்தம்-நீலோற்பலம்- பாதிரி-அலரி-செந்தாமரை-இவற்றின்புட்பங்களாம்-இவைமூன்றுகாலத்திலுக்குமாகும். (சசா)

ஈரைந்தென்னுமாதாரத்தினிதயமாக்கமலத்
தாரவெட்டிதழ்பொதியவிழ்த்தகவிளக்கொளியைச்
சாரநோக்குவார்பிரமரந்தரத்தோரைந்தெழுத்தாற்
சேருமோரெழுத்தொலியொடுமொளியொடுந்திளைப்பார்.

(இ-ள்.) பத்தென்று சொல்லப்படுகின்ற ஆதாரங்களி லொன்றாகிய இருதயதாமரையிற் பொருந்திய எட்டிதழ்களின் முறுக்குகளையவிழ்த்து உட்புறத்ததாகிய சோதியைத்தரிசிப்போர்கள் பிரமாந்தரத்தில் ஐந்தெழுத்துக்குள்சேரும் ஓரெழுத்தாகிய நாதத்துடனும் - விந்துவுடனும் பொருந்துவார்கள்—எ-று.

ஆதாரம் - பத்தாவன - மூலாதாரம் - சுவாதிஷ்டானம்- மணிபூரகம் - அநாகதம் - விசுத்தி - ஆக்கினை-சத்தி-வியாபினை - சமனை உன்மனையென்பவைகளாம். (சஎ)

உள்ளகம்புறநிறைந்தகற்போதமாமொளியைத்
தள்ளரும்பரபோதமாய்ப்பதைப்பறத்தரித்துக்
கொள்ளைநீர்முகில்கன்றவானெனக்கொடுமாய
வெள்ளநீத்தெழுஞ்சிவானந்தவெள்ளத்துள்வீழ்வார்

(இ-ள்.) அகத்திலும் புறத்திலுமாகநிறைந்தபிரம்மானந்த மாகிய - ஒளியைநீக்குதற்கரிய சிவானந்தமாய்ப்பதைப்பறத்தரித்துயிருந்த நீருண்டமேகம்நீங்கிய ஆகாயம்போன்ற கொடியமாயையாகிய வெள்ளத்தை நீக்கியெழுகின்றசிவாநந்த வெள்ளத்தில்சிலருத்திரர்கள்முழுகுவார்கள்—எ-று. (௪௮)

உட்கண்விழித்தோவியமெனத்தனித்துறைவா
ராடுகால்புகாத்தலத்திடுவிளக்கையொத்தசையார்
கேடுமாக்கமுமொன்றெனக்கெழுமியவுளத்தார்
வீடுபேறன்றிவேறுநச்சிலர்துதிவிரித்தார்

(இ-ள்.) உட்புறத்தில் நேத்திரங்களைவிழித்துக்கொண்டு சிலர்சித்திரம்போலத்தனித்து அசைவில்லாமலிருப்பார்கள்-சிலர் அசைகின்றகாற்றுச்செல்லாத விடத்திலிட்ட தீபத்தையொத்து அசையாமலிருப்பார்கள் - சிலர் கேடும்செல்வமும் ஒன்றென்றுபொருந்திய உள்ளத்தினராயிருப்பார்கள்-முத்திப்பேற்றினையல்லாமல் மற்றொன்றையும் விரும்பாதவர்களாய்ச்சிலர் துதிகள்விரித்தார்கள்-எ-று.

அண்டம்யாவையுமகண்டபூரணத்தொளியாய்ப்
பிண்டம்யாவையும்பெண்ணொடாணலியெனப்பெயர்ந்தாய்
மண்டலாதியிற்சராசரமனத்தடத்தலரும்
புண்டரீகத்துளிருந்திராதகன்றுளாய்போற்றி.

(இ-ள்) எல்லாஅண்டங்களிலும் அகண்டபூரணத்தொளியாயினை பிண்டங்களிலெல்லாம் ஆண்-பெண்-அலியெனப்பிரிந்தனை-பூமிமுதலானஉலகங்களிலிருக்கும் சராசரமாகிய உயிர்களுடைய மனத்தடாகத்தில்அலருகின்றதாமரைக்குளிருந்துமிராமலும் நீங்கியிருக்கின்றனைபோற்றிபோற்றி—எ-று. (௫௰)

வானுமாயிருநிலனுமாய்ப்பஃலுயிர்வருக்கந்
தானுமாயதற்கயலுமாய்த்தத்துவத்தகலா
வூனுமாயிவைக்கைவகைச்செயற்கையுமொழுக்குங்
கோனுமாய்நின்றகுணப்பெருங்குன்றமேபோற்றி

(இ-ள்) ஆகாயமுமாய் பெரியபூமியுமாய் பலவுயிர்வருக்கமுமாயதற்குப்புறம்புமாய் தத்துவங்களைவிட்டு நீங்காதவுடலுமாயிவைகளுக்குப்பொருந்திய ஐந்துவகைச்செய்கைகளையு மொழிக்காநின்ற இறைவனுமாகிநின்ற குணப்பெருங்குன்றமேபோற்றி—எ-று.

இற்றைநாண்முதலெற்றைநாள்வரையுமித்தலமும்
பெற்றநான்மறைப்பொருப்புமப்பொருப்புடைமகளு
முற்றநீர்த்தமுமுன்பெயர்தானுமெம்பெயரே
முற்றிவாழ்கெனவேட்டனர்வேட்டதேமுடித்தேம்.

(இ-ள்) இந்நாள்முதல்இனியெந்நாளளவும்இந்தஸ்தலமும் இதில் அடைந்தநான்குவேதங்களாகிய மலையும்-மலைமகளாகிய பார்வதிதேவியாரும் தேவரீருடைய திருநாமமும் எங்களுடைய பெயரையே பொருந்திவாழவேண்டுமென்றுவிரும்பினார்கள் அவர்கள்விரும்பிய வண்ணமே நிறைவேற்றினோம்.—எ-று. (௫௨)

அந்தநாண்முதலுருத்திரகோடிபேராக
நந்தமூர்க்குநங்கிரிக்குநம்பெண்ணினல்லாட்கு
முந்துதீர்த்தங்கட்குமற்றெமக்குமூவுலகும்
வந்துசாற்றுமாற்சாற்றினர்க்கில்லைவல்வினையே.

(இ-ள்) அந்தநாள்முதல்நம்முடையதலத்துக்குருத்திரகோடிதலமென்றும்-நம்முடையகிரிக்குருத்திரகோடிகிரியென்றும்நம்முடையபெண்ணினல்லாளாகிய பார்வதிதேவியாருக்குருத்திரகோடி ஈஸ்வரியென்றும் நம்முடையதீர்த்தங்கட்கு ருத்திரகோடிதீர்த்தமென்றும் நமக்குருத்திரகோடீசுவரரென்றும் லோகத்திலிருப்பவர்யாவர்களும் வந்துபேர்சொல்லுவார்கள் அவ்வாறுசொல்லித் துதிசெய்கின்றவர்களுக்குவல்வினைகளில்லையாகும்—எ-று. (௫௩)

அன்றுபின்னுமவ்வுருத்திரகோடியர்பெயராற்
சென்றபோகத்தும்ஞானத்துஞ்செயுமிருசெயற்கு
மொன்றுபோனமதருட்கணானோக்கிவாழொடுங்கத்
துன்றுபேரொளிபாபவர்தொழுந்திறமெழுந்தேம்.

(இ-ள்) அந்நாட்குப்பின்பும் அந்தருத்திரகோடியர்கள் பேரால் நிகழ்கின்றபோகத்திலும் ஞானத்திலுமாகச்செய்கின்ற விரண்டு செய்கைக்கும் ஒன்றுபோலவேநம்முடைய அருட்கண்ணால்நோக்கி அவர்கள் முத்தியிலொடுங்கும்படி அவர்கள்தொழுந்தன்மையாய்க்காட்சிகொடுத்திருந்தோம் -எ-று. (கச)

வரவுபோக்கறமனத்தொடுவாக்கறவளர்க்கும்
புரவுநீக்கறப்பொய்யுடன்மெய்யறப்பொய்யா
விரவுநன்பகலிரண்டறவெழுந்தபேரொளிக்குட்
பரவரும்பதத்தடைந்தனருருத்திரர்பலரும்.

(இ-ள்) பிறப்பு-இறப்புஎன்னுமிவ்விரண்டும்நீங்கவும்மனத்தொ வாக்குநீங்கவும்வளர்க்காநின்றதிதியும் சங்காரமும்நீங்கவும்பொய் மெய்யென்னுமிரண்டும் நீங்கவும் பொய்க்காதவிரவுபகலென்னு மிவ்விரண்டும் நீங்கவும் எழுந்த பேரொலிக்குள் பரவுதற்கரியபத வியில் அந்தருத்திரர்கள்பலரும் அடைந்தார்கள்—எ-று. (கரு)

ஆதலாற்கமலாலயத்தந்தியங்காப்பும்
கோதிலாமணிமன்றத்துயாமமுங்குடியாய்ப்
போதுமத்தனைபேபல்லாதில்லையெப்பொழுதும்
வேதவெற்பிடைமலைமடந்தையொடும்வீற்றிருப்பேம்

(இ-ள்) ஆகையினால்திருவாரூரில் அந்திக்காப்பாகியசாயரக்ஷயி லுங்குற்றமில்லாதசோதிமயமாகிய சிற்சபையில் அர்த்தசாமத்திலு ங்குடியாய்ச்செல்லுவோம் - அவ்வளவேயல்லாமல் எப்போதுங்கு டியாயிருப்பதில்லை இந்தவேதகிரியினிடத்தில் பார்வதிதேவியாரு டன் எப்போதுங்குடியாயிருப்போம்—எ-று (கசு)

காசியம்பலங்கமலைசோணசலங்காஞ்சி
மாசில்காளத்திமதுரையாதிப்பதியங்க

மோசைவார்கழற்கோடிருத்திரருவந்தியற்றும்
பூசைமாத்தலம்நமக்கென்றுமிதயபுண்டரிகம்

(இ-ள்) காசி-சிதம்பரம்-திருவாரூர்-திருவண்ணுமலை-காஞ்சி-குற்றமில்லாதகாளத்தி-மதுரை-என்னுமித்தலங்கள் முதலாகமற்றத்தலங்களெல்லாம் நமக்கு அங்கமாம்-ஒலியுள்ள நீண்டவீரகண்டையணிந்தகோடிருத்திரர்களும் பூசைசெய்த பெருமைபொருந்திய ருத்திரகோடிதலமானது நமக்குளற்றாளும்இருதயதாமரைமலராம்எ-று

அன்றுருத்திரகோடியாருச்சித்ததான
மென்றுசெப்பினுமெவ்விணக்கேனுமங்குறினும்
நின்றிறப்பினும்பிறப்பினுந்நினைப்பினுமொருநாட்
சென்றிருப்பினுஞ்சிவபுரத்தடைவதுதிண்ணம்

(இ-ள்) அந்நாள் ருத்திரகோடியர்கள் பூசித்ததானமென்றுவாக்கினுல் ஒருகாஞ்சொல்லுலும் எவ்விதப்பிணியைக் குறித்தாவது அங்கேவாசமாயிருந்தாலும் அல்லது அவ்விடத்திருந்து இறந்தாலும் அவ்விடத்திற்பிறந்தாலும் அந்தத்தலத்தினை மனதினுல்நினைந்தாலும் அவ்விடத்திற்சென்றிருந்தாலும் அவர்கள் சிவபுரத்திற்சேர்வதுநிச்சயம்—எ-று. (௫அ)

சேயதற்பரவுருத்திரகோடிமாச்சிகரந்
தூயரெத்தனைதூரத்திற்காண்கினுந்தொலையா
மாயவில்லறப்பயத்தினும்விடப்பட்டுமறுமைக்
காயசஞ்சிதச்சிறைபறச்சிவபதத்தடைவார்

(இ-ள்) செவ்வியதற்பரசொரூபமாகிய ருத்திரகோடிகிரியினுடையபெருமைபொருந்தியசிகரமானதுபரிசுத்தமுள்ளவர்கள் எவ்வளவுதூரத்தில் தரிசித்தாலும் தொலையாதமாயாசம்பந்தமாகிய இல்வாழ்க்கைப்பயத்தினின்றும் விடப்பட்டுமறுசென்மத்துக்காகிய சிறைபறும்படி சிவபதத்திற்சேருவார்கள்—எ-று. (௫கூ)

இன்னுமெத்தனைப்பேசத்தினிசைப்பினும்நந்தீ
யன்னருத்திரகோடியிற்புகழ்புகழ்ந்தடங்கா
தின்னுளத்துளதுளக்கறநீயுமாங்கெம்மை
முன்னிமெய்த்தவமருச்சனையியற்றெனமுடித்தான்.

(இ-ள்) இன்னமும் எவ்வளவுபேதத்தினாலும் அந்தத்தலத்தின் பெயரைச்சொன்னாலும் நந்தியே அத்தலமையுள்ள ருத்திரகோடியின்புகழ் ஒருவராலும் புகழ்ந்தடங்காது உன்மனதிலிருக்கிற நடுக்கமானது நீங்கும்படி நீயும் அவ்விடத்திற்சென்று எம்மைத் தியானித்து உண்மையானதவமும் அருச்சனையுஞ்செய்யென்று ருத்திரகோடிசரித்திரத்தைச்சொல்லிமுடித்தருளினர்—எ-று. (௬௰)

உருத்திரகோடிச்சருக்கம்-முற்றியது.

ஆக திருவிருத்தம் - ௨௯௮.

---

## நந்திதவச்சருக்கம்.

---

அடையாளத்தினுருத்திரகோடியினடைகென்று
வுடையான்முற்றுமுரைத்தருள்செய்யவுவந்தேத்திப்
படையார்சூலத்தானைவலங்கொடுபணிவோடும்
விடையாம்நந்தியுமத்தலம்நாடினன்விடைகொண்டான்.

(இ-ள்.) சொல்லியஅடையாளப்படிருத்திரகோடித்தலத்திற்செல்லக்கடவையென்று பரமசிவஞ் சொல்லவேண்டுவன வெல்லாஞ் சொல்லச் சந்தோஷித்துத் துதிசெய்து சூலப்படையேந்திய பரமசிவத்தைப் பிரதக்ஷிணமாகவந்து பணிந்து விடையாகியநந்திதேவர் அந்தருத்திரகோடித்தலத்துக்குச் செல்லவிடைபெற்றுக் கொண்டார்—எ-று. (௧)

சென்றானிமயச்சிகரிகடந்தான்றிகழ்கங்கைத்
துன்றாறாடிக்காசிவணங்கித்தொழுதப்பாற்
கன்றாமறியிற்கையர்திருக்கிரிகாளத்திக்
குன்றாதிப்பதிகோடிபணிந்துட்கொடுபோனான்.

(இ-ள்.) நந்திதேவர் கயிலாயத்தைவிட்டு நீங்கியிமயமலையைக் கடந்து கங்கையெனப்பெயர்பொருந்தியநதியில் ஸ்நானஞ்செய்து காசிவிசுவநாதனைப்பணிந்து - அப்பால் மான்கன்றினையேந்திய திருக்கரமுள்ள பரமசிவம் வீற்றிருக்குங் காளத்திமலைமுதலாகிய

அநந்தங்கோடி ஸ்தலங்களைப்பணிந்து தியானித்துக்கொண்டுசெ
ன்றார்—எ-று. (௨)

வம்பார்கொங்கைதவ்வியினங்கைமலர்க்கஞ்சத்
தம்பாவிகையெண்ணான்கறமுஞ்செயறச்சாலை
கம்பாநதியுங்கச்சியுமாவுங்கண்டேத்தி
நம்பாவுன்புகலென்றுபணிந்தந்நகர்விட்டான்.

(இ-ள்) கச்சணிந்தகொங்கையினையும் - சட்டுவமேந்தியதாமரை
மலர்போன்ற செங்கரத்தையுமுடையதருமச்செல்வியாகியபார்வதி
தேவியார்முப்பத்திரண்டுதருமமுஞ்செய்த அறச்சாலையாகியகாமக்
கோட்டமும் கம்பாநதியும் கச்சபாலயமும்ஏகாம்பரமும் கண்டுது
தித்துநம்பனேயுன்னடைக்கலமென்று பணிந்து அந்தப்பதியைநீங்
கினார்—எ-று. (௩)

விட்டகல்கின்றவழிக்கிடைவித்துருமச்சோதிக்
கட்டழகன்சுருதிக்கிரியின்றலைகண்ணுற்றா
னட்டவுறுப்புறமண்ணில்விழுந்தரகரவென்னாக்
கெட்டதுவல்வினையென்னுமுழக்கங்கிளர்வித்தான்.

(இ-ள்) அந்தத்திருப்பதியைவிட்டுச் செல்லுகின்றவிடத்தில்பவ
ள நிறமுள்ள கட்டழகனாகியபரமசிவம்வீற்றிருக்கும் வேதகிரியின்
சிகரத்தைத்தரிசித்து- எட்டுறுப்புகளும்பூமியில்பொருந்தும்படிப
ணிந்துஅரகரவென்றுதுதிசெய்துஅடியேன்பாவங்கள் நீங்கிவிட்ட
னவென்னுந்தொனியையெழுப்பினர்—எ-று.

எட்டுறுப்பென்பவை-சிரம் -௧-கைகள்-௨-முழங்கால்கள்-௨
மார்பு-௧-கன்னங்கள் ௨-என்னும் இவ்வெட்டுறுப்பும்பூமியிற்படி
யவணங்குவது அஷ்டாங்கநமஸ்காரம்- சிரமும் கைகளிரண்டும்மு
ழங்காலிரண்டும் படியப்பணிவது பஞ்சாங்கநமஸ்காரம். (௪)

கண்டான்கந்தநதித்துறையைத்துறைகண்டாடித்
தண்டாவன்பினடந்தடிதோறுந்தலைதாழ்வான்
விண்டான்கண்ணீர்புண்ணியவேதக்கிரிநண்ணிப்
பண்டான்சாமம்பாடினனாடிப்பல்காலும்.

(இ-ள்.) ஸ்கந்தநதியைக்கண்டு அந்தநதித்துறையில்ஸ்நானஞ்செய்து அவ்விடம்விட்டு நீங்காத அன்புடனடந்து ஒரு அடிபெயர்த்து வைக்குந்தோறுந்தலையால் வணங்கிக்கண்களிலானந்தபாஷ்பம் பெருகநடந்துவேதகிரியென்னும்புண்ணியக்ஷேத்திரத்தை யடைந்துசாமவேதகானம்பாடிப்பலமுறை ஆநந்தக்கூத்தாடினர்-எ-று.

இக்கிரிவேதத்திண்கிரியென்றுமெமையாளு
மக்கிரிவில்லான்மேனியிதென்றுமதற்கேறு
னெக்குருகிப்பலகால்வலமேகிநெடுஞ்சாரல்
புக்கருகேகுடதிக்கொரு * வாவிப்புனல்கண்டான்.

(இ-ள்) இந்தமலைஉறுதியுள்ளவேதமலையென்றும்-இதுநம்மையாளும்பரமசிவனது திருமேனியென்றும் உட்கொண்டுஅதிலேறுமல் அன்பினால்மனம்நெக்குவிட்டுருகிப்பலமுறைபிரதக்ஷிணஞ்செய்து சென்றுபெரிய சாரலினருகிற்போய் அதன்மேற்றிசையில் ஒருதீர்த்தமிருக்கக்கண்டார்—எ-று. * வாவி - தடாகம். (சு)

வேறு.

உருத்திரகோடியர்முதலியோகியர்
கருத்தெழுசிவானந்தக்கடலிற்பட்டதோர்
திருத்தகுமமுதமேதேங்கித்தீங்கெலா
மருத்தியினீக்கிநின்றனையதொன்றது.

(இ-ள்) உருத்திரகோடியர் முதலாகிய யோகியர்களுடையகருத்திலுண்டாகிய சிவானந்தக்கடலிற் பட்டதாகியும் ஒப்பற்றதாயுஞ் செல்வம் பொருந்தியஅமுதமே நிறைந்துவிருப்பத்துடன்பாவங்களையெல்லாம்நீக்கி நிற்பதுபோல்வது அந்தத்தீர்த்தம்—எ-று.(எ)

வேதமுமுருத்திரகோடிவீரரு
மாதவனயன்முதல்வானுளோர்களு
மாதியையருச்சித்ததிருத்தமக்கிரிச்
சோதிவெள்ளருவியோடிழிந்துதொக்கது.

(இ-ள்) நான்குவேதங்களும் - ருத்திரகோடி வீரர்களும்-பிர்ம விஷ்ணுக்கள் முதலாகிய தேவர்களும் பரமசிவத்தையருச்சித்துள்ள தீர்த்தமாம்-அது அந்தக்கிரியினது ஒளிபொருந்திய அருவியுடனிழிந்து சேர்ந்திருக்கின்றது—எ-று. (அ)

கண்ணுதல்வடிவிதுபுவியின்காப்பிதென்
றண்ணலங்கரமுகிழ்த்ததனைக்காண்டொறும்
விண்ணுளோரனைவருந்தவருமேற்பெய்த
வண்ணவான்கற்பகமலர்மணப்பது.

(இ-ள்) இந்தத்தீர்த்தம்பரமசிவனது சொரூபமாயிருப்பதென்றும் பூலோகத்துக்குக்காவலாயிருப்பதென்றுமெண்ணித் தேவர்களுமுனிவர்களும் - பெருமையுள்ள தங்கள் கைகளைக்குவித்துத்தரிசிக்குந்தோறும் அதனிற்சொரிந்த அழகுள்ளதேவ லோகக்கற்பகமலர்வாசனை மணந்துகொண்டிருப்பது—எ-று. (௯)

ஆடியவரம்பையராறவர்பன்னியர்
சூடியதருவனத்தொங்கலன்றியுஞ்
சேடுறுமணிக்கலன்பலவுஞ்சிந்தலா
லூடுறுஞ்சுடர்ப்படுமோதம்போல்வது.

(இ-ள்) ஸ்நாநஞ்செய்கின்றரம்பாஸ்திரிகளும்-ரிஷிபத்தினிமார்களும்-சூட்டிக்கொண்டிருந்தகற்பகமலர்மாலைகளுமன்றிப் பெருமை பொருந்தியாத்திரு பரணங்கள் பலவுஞ் சிந்தியிருப்பதால்சந்திர சூரியர்களுள்ளே பொருந்திய சமுத்திரம்போல்வது-எ-று.

நிரைகொடுபாசடைநெருங்கிப்போர்த்தலிற்
குரைகடல்விடமுண்டகுழகனேக்குற
விரகுடனுடியொன்றயன்விதித்ததின்
மரகதவுறையிட்டுவைத்தமாண்பது.

(இ-ள்) அந்தத்தடாகத்தி னீர்மேல்வரிசைவரிசையாகக்கொண்டு பசிய தாமரையிலைகள் நெருங்கிமறைத்திருப்பதினால் ஒலிக்காநின்ற கடல்விடமுண்ட பரமசிவன் பார்ப்பதற்குப் பிரமதேவன் உணர்ச்சியுடனொருகண்ணாடியுண்டாக்கி அதனைமரகதமணியால் உறையிட்டுவைத்தது போன்றமாட்சிமையையுடையது—எ-று.

தீர்த்தம்-கண்ணாடியாகவும்-பச்சிலைமரகதவுறையாகவுங்கொள்க.

ஏமவாய்ச்சிரல்கயலெறிந்துவீழ்தரத்
தேமலர்ச்சைவலம்பிரிந்துசேர்தொறுங்
காமமாயஞ்சிலர்கருத்தினீங்கிப்பின்
றூமறைக்குந்திறமுணர்த்துஞ்சால்பது.

(இ-ள்) பொன்னிறமுள்ள வாயினையுடைய சிச்சிலிக்குருவியான து - கயல்மீனையெறிந்து வீழ்வதினால் - வாசனைபொருந்தியமலர் களைக் கொடிப்பாசிகள் பிரிந்துமறுபடி சேருந்தோறும் காம மாயமானது சிலர்கருத்தினைவிட்டுநீங்கிப் பின்னுமறைக்காநிற் றன்மையையறிவிக்கும்மேன்மையினையுடையது—எ-று.

சிச்சிலிக்குருவிநீர்க்குள்பாயும்போது கொடிப்பாசிமலர்களை விட்டுப்பிரிந்து மறுபடியுமூடுகின்றதென்பதுகருத்து.

சிச்சிலிக்குருவியாவது - மீன்குத்திக்குருவி. (௰௨)

பளிக்குவார்குறடுடுத்தெறிக்கும்பானிறந்
தெளிக்குமாகங்கைபோய்த்திசையனைத்தினு
மொளிக்குமேலிணையெனவுலப்பிலாவணத்
தளிக்குமாறல்லதாறயலொவ்வாதது.

(இ-ள்) பளிங்கினாற்செய்யப்பட்ட திண்ணைகள்சூழ்ந்து ஒளிவீ சும்வெண்மைநிறமானதுதெளிவுள்ளபெருமைபொருந்திய கங்கை யானது சென்று திக்குகளெங்கும் விளங்கச்செய்யுமானால் அக்கங் கையொப்பாகுமென்று நிறத்தினால் எடுத்துக்காட்டத் தக்கதல்லது வேறொன்றையுமொவ்வாது—எ-று. உலப்புஇலா - முடிவில்லாத

கரைதொறுங்கரைதொறுங்கடவுளீட்டங்க
ணிரையுறச்சென்றுசென்றாடிநீங்கலும்
வரையுறழ்களிறன்னமூவணமானந்தேர்
புரையறுமடிச்சுவடனந்தம்போர்ப்பது.

(இ-ள்) நாற்புறத்துக்கரைதோறும் தேவகூட்டங்கள் வரிசைவரி சையாகச் சென்றுஸ்நானஞ்செய்துசெல்லுந்தோறும் அவர்களேறி வந்தவாகனங்களாகிய மலையையொத்தயானை அன்னம்- கருடன் - விமானம் - தேர்- என்னுமிவைகளின்குற்றம்நீங்கியடிச்சுவடுகள் அனந் தமாகப்பொருந்தியிருப்பன—எ-று. (௰௪)

தெரிதரக்கமலங்களனந்தஞ்சேர்தலிற்
புரிதரக்கிடந்தபூம்புனலைநேயமாய்ப்
பரிதரப்படிந்தவர்பவத்தின்பாயிரு
ளிரிதரச்சிவன்விளக்கிட்டநேரது.

(இ-ள்.) அநந்தமாகியசெந்தாமரைமலர்கள்தெரியும்படிபொருந்தியிருப்பதினால்விரும்பும்படியிருக்கும் அந்தத்தடாகத்துநீரினில் அன்புடன்ஸ்நாநஞ்செய்கின்றவர்களுடையபாவஇருளானதொழியும்படி பரமசிவம் விளக்கிட்டுவைத்ததைத்தொத்துள்ளது—எ-று.

மலர்களைத் தீபங்களாகக்கொள்க (௯௪)

நன்கணமாடிப்போநெறிநடப்பினுந்
தன்கணினுழிதருமனிலந்தாக்கினும்
வன்கணராய்ப்படிதரவாரதவர்
புன்கணும்வினைகளும்போக்கும்போக்கது.

(இ-ள்.) நல்லவர்கள்கூட்டம்ஸ்நாநஞ்செய்து செல்லுகின்ற மார்க்கத்தில்நடந்தாலும்- அந்தத்தீர்த்தத்திற்படிந்துலவும்காற்றானது மேற்பட்டாலும் - வன்கண்மைகொண்டுஸ்நாநஞ்செய்யவராதவர்களுடைய துன்பங்களையும் தீவினைகளையும் போக்கும் போக்கையுடையது—எ-று. (௯௫)

இறைவனும்வெற்புமாமிரண்டுகாட்சியுங்
குறைவறுசைவருட்கொண்டகோளென
மறைமயக்கிரியதுநிழலுமாக்கிரி
நிறைசிவலிங்கத்துநிழலுஞ்சேர்ந்தது.

(இ-ள்.) பரமசிவமும் மலையுமாகிய இரண்டுகாட்சியினையும்- குறைவில்லாதசைவர்களுட் கொண்டிருக்குந் தன்மைபோல - வேதசொரூபமாகிய மலையினிழலும் - பெருமைபொருந்திய அம்மலையில் வீற்றிருக்கும் சிவலிங்கப்பெருமானுடைய நிழலுஞ்சேர்ந்திருப்பது—எ-று.

மலையின்சாயலும் ஸ்தூலலிங்கமாகியஸ்தூபியின்சாயலும் அந்தத் தடாகத்தில் தோன்றுகின்ற தென்பது தாற்பரியம் இந்தத்தடாகம் ஆலயத்துக்குள்ளிருப்பது. (௯௬)

அன்னபூம்பொய்கைப்பயந்திப்பொய்கைதோய்ந்
தின்னதீம்புனலலொடுத்துநம்பிரான்

பொன்னடிப்பூசையைப்புரியில்யாவரு
மன்னுவர்சிவபதத்தெனவணங்கினன்.

(இ-ள்.) அத்தன்மையுள்ள தீர்த்தத்தின் அருகுசேர்ந்து இந்தத் தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து இப்புனலிலுள்ள மலரையெடுத்து நம்பெருமானுடைய பொலிவுள்ள திருவடிகளைப் பூசித்தால்யாவருஞ்சிவபதஞ்சேர்வார்களெனக்கருதி வணங்கினர்—எ-று. (௰அ)

வேறு.

விதிவிதிப்பனவுந்தன்னன்மேற்புரப்பனவும்விண்ணோர்
கதிநடப்பனவும்யோகர்கருமமுய்ப்பனவும்வெவ்வே
னுதிவலத்தரசர்நீதி நூலளிப்பனவும்யாவு
மதிமுடிப்பெருமான்பூசைப்பயனெனமனத்துட் கொண்டான்.

(இ-ள்) பிரமதேவன் சிருஷ்டிப்பதுகளும் அதற்குமேல் விஷ்ணு ரக்ஷிக்குந்தொழில்செய்வதுகளும்-இந்திரன்முதலியதேவர்கள்பதவிசெலுத்துவதுகளும் - யோகர்தங்கள்கருமத்தைநிறைவேற்றுவதுகளும்கூர்மையுள்ளவேலேந்திய அரசர்கள் நீதியைச்சாஸ்திரப்படி செலுத்துவதுகளுமாகிய இவையாவுஞ் சந்திரனையணிந்ததிருமுடியினையுடையபரமசிவன் பூசைப்பயனெனவுட்கொண்டார்—எ-று.

சிருஷ்டிமுதலியசெய்கை பலமுறைநடத்தலிற்பன்மையாகக் கூறினர். (௰௯)

வேட்கையைப்பெறுநர்வேண்டாமெய்த்தவம்புரிநர்ஞால
வாட்கையிற்புகுநர்நான்குபதத்தினும்வாணர்மாளா
நாட்கயமலரோன்போலநண்ணுநரெல்லாம்போர்த்த
பூட்கயத்தோலினானைப்பூசித்தாரெனவுஞ்சொன்னான்

(இ-ள்) இஷ்டகாமியத்தைப் பெறுகின்றவர்களும் காமியத்தை விரும்பாமல் தவஞ்செய்கின்றவர்களும் பூலோகவாழ்க்கையாகிய இல்லறத்திலிருப்பவர்களும் சாலோகமுதலான நான்குபதத்திலிருப்பவர்களும் பரந்தமான தடாகத்துத்தாமரைமலரில் வீற்றிருக்கும்இறவாதபிரமன்போல்நித்தியராயிருப்பவர்களும்-யானைத்தோற் போர்வையினையுடைய பரமசிவத்தைப் பூசித்தவர்களே யெனவும் சொன்னினர்—எ-று. (௨௰)

நீரரிதன்றுகாட்டுநிறத்தளிரரிதன்றெம்மான்
பேரரிதன்றுகைவாய்பிறவரிதன்றுபோரா
தோரிமைப்பருவத்தேனும்பூசித்துமுனைத்துமுய்யாப்
பூரியர்க்கிரங்குபூசைபுரிதலைத்தொடங்குமன்னே

(இ-ள்) தீர்த்தமரிதன்று நிறந்தோற்றுங்காட்டுத்தளிரரிதல்லநம்மி றைவனுடையதிருப்பெயரரிதன்று (பூசிப்பதற்குந் துதிப்பதற்கும்) கையும்வாயும் அரிதல்லவென்றுகருதிநீங்காமல் ஒரு நிமைப்பொழு தாவதுபூசித்தும் துதிசெய்தும் உய்யாத பூரியர்க்கும் இரங்கும்படி யாகிய பூசைசெய்தலைத்தொடங்கினர்—எ-று- (௨௧)

நீர்முதன்மும்மைத்தானநியமமைவகையிற்சுத்தி
சீர்முதற்றுவாரமாதிசண்டாந்தச்செயலிற்பூசை
பார்முதல்வானமீறுப்பாரந்தவைம்பூதாதிக்கு
மோர்முதல்வனைக்குன்றேறாதுழைநின்றுபுரிந்துதாழ்ந்தான்.

(இ-ள்) நீர்முதல்மூன்றுவகைகளாகியஸ்நாநநியதியும்- பஞ்சசுத்தியு ம் சிறப்புத்தங்கிய துவாரபூசை முதல் சண்டேசர்பூசையந்தமாக ச்செய்யும்பூசையும் பிரிதிவிமுதல்ஆகாசமீறுய்ப்பாரந்த பஞ்சபூ தமுதலானவைகளுக்கு மொருமுதலாகிய பரமசிவத்தை அம்மலையி லேறாமல் சாரலிலிருந்துகொண்டே முறைமையாகச்செய்து பணி ந்தார்—எ-று.

மூன்றுவகைஸ்நாநமாவது-தீர்த்தஸ்நாநம்-மந்திரஸ்நாநம்- விபூ திஸ்நாநம். என்பவை-பஞ்சசுத்தியாவது-ஸ்தானசுத்தி-ஆத்துமசுத்தி- திரவியசுத்தி-மந்திரசுத்தி-பிம்பசுத்தி-என்பவை- துவாரபூசை அந்த ராளதுவாரத்தில் செய்யவேண்டியது- விவரம் துவாரத்தின் மேல்நி லையில் தென்புறம்-விநாயகர்-வடபுறம்-சரஸ்வதி-மத்தியில்- திருமக ள்- தென்புறம்-அருகுகாலில்-நந்தி-கெங்கை-வடபுறம்-அருகுகாலி ல்-மாகாளர்-யமுனை-கீழ்வாயிலில்- அஸ்திராயதுவாரபாலர் - கெற்பகி ரகநிருதிதிசையில்-பிர்ம்மா- இந்தக்கிரமமாகப் பூசைசெய்துபின்பு- சிவலிங்க பூசைபராசத்திபூசைசெய்து அவ்விடத்தில்தானே யிஷ்ட தேவதைபூசையுஞ்செய்து - ஈசானதிக்கில் சண்டேசர்பூசைசெய்ய வேண்டும்-இவ்வாறுசெய்வது நிஷ்களபூசை - சூரியன்முதல் சண் டேசர்பூசையிறுதியாகச்செய்வது சகளபூசையாம். (௨௨)

திவியபுனலிற்போதிற்சிறப்புற்றபூசையாற்றிக்
காவியங்கண்டத்தானைக்கருத்துளும்புறத்துநோக்கி
வாவியஞ்சாரலைச்சூழ்ந்தரகரவழுத்திமெய்யு
மாவியுங்கம்பித்தம்மாவானந்தநடனஞ்செய்தான்.

(இ-ள்.) திவ்வியமாகியநீரினாலும்மலர்களினாலும்- சிறப்புப்பொருந்திய பூசைசெய்து- நீலோற்பல மலர்போன்றகாளகண்டமுடைய பரமசிவத்தை உள்ளத்துள்ளும் புறத்திலும் தெரிசித்துத்தடாகத்துடன் சாரலைவலம்வந்து அரகரவெனத் துதித்து உடலுமுயிருங் கம்பித்து ஆனந்தநடனஞ்செய்தார்—எ-று. (௨௫)

இருவழியடைத்துமூலத்தொருவழிதிறந்தாங்கெய்தும்
பருதியோர்கோடியொத்தசோதியும்பார்த்துநாத
மொருபதுங்கேட்டுமும்மைக்குணம்புலத்துடனடக்கிப்
புருவமேனாட்டமோட்டியானந்தப்புணரிபுக்கான்.

(இ-ள்.) இடைகலைபிங்கலை யென்னுமிரண்டு வழியினையுமாற்றி மூலமாகிய ஒருவழியைத்திறந்து அவ்விடத்திற் பொருந்திய கோடிசூரியர்களையொத்த சோதியினையுந்தரிசித்துந் தசவிதநாதமுஞ் சிரவணஞ்செய்தும் முக்குணங்களையும் ஐம்புலன்களையும் அடக்கிப்புருவத்தின்மேல்பார்வை செலுத்தியானந்த வெள்ளத்துளழுந்தினார்—எ-று.

முக்குணமாவது- சாத்துவித- ராசத - தாமதங்களாம்- ஐம்புலனாவது - சத்த - பரிச - ரூப- ரச- கந்தங்கள்- என்பவை. (௨௬)

இவ்வண்ணத்தோவியம்போற்றெய்வவாண்டிரண்டுமூன்று
மூய்வண்ணத்தவஞ்செய்காலைக்கயிலைமீதொருமுக்கண்ணான்
கைவண்ணக்குலிசத்தானைநோக்கிநங்கடவுண்மாதர்
மெய்வண்ணப்புணர்ப்பினந்திவிரதத்தையழித்தியென்றான்.

(இ-ள்.) இவ்வாறுசித்திரம்போலிருந்துதேவவருஷமாறளவுஉய்யுமாறுள்ள தவஞ்செய்யும்போதுகயிலாயகிரியில்வீற்றிருக்குந்திரிநேத்திரதாரியாகியபரமசிவம்- கையிலழகுள்ள வச்சிராயுதமேந்திய இந்திரனைநோக்கிஉன்னுலகத்தரம்பாஸ்திரிகளில்மெய்யான உபாயத்தினால்நந்தியினுடையதவத்தை அழித்துவிடென்று கட்டளையிட்டருளினார்எ-று (௨௭)

எம்பிரான்பணித்தவாணையிந்திரன்றலைக்கொண்டேகிச்
செம்பொன்னாட்டடைந்துதன்பொற்சுதருமைசிறப்பவேறி
நம்பனதருட்குமஞ்சுநந்தியாற்கலுழன்பட்ட
கம்பலைக்கனுங்குமேனுமரன்பணிகடத்தலாற்றான்

(இ-ள்.) நம்மிறைவன் கட்டளையிட்ட ஆக்கினையைத் தேவேந்திரன் தலைக்கொண்டுசென்று பொன்னுலகிற்சேர்ந்து சுதருமையென்னும் தன்மண்டபத்திற் சிறப்புடனேறியிருந்து பரமசிவத்தினுடைய ஆக்கினைக்கும்பயப்படுவன் - நந்திதேவரால் கருடன்பட்ட துன்பத்துக்கும்அஞ்சுவன் - இவ்விரண்டுவகைக்காக அஞ்சினாலும் பரமசிவத்தினுடைய கட்டளையைக்கடக்கமாட்டாதவனாய்—எ-று.()

விளிமினம்புரத்துமாதர்தமையெனவிளித்தகாலைத்
தளிமதுக்கூந்தற்றாழத்தாழ்குழைசுடரப்பார்வை
தெளிதவக்குறும்புமாய்ப்பத்திரண்முலைக்குலகந்தேம்ப
வொளிவளைக்கிளைத்தோண்மின்னவுருப்பசிவிருப்பிற்சென்றாள்.

(இ-ள்) நம்முலகத்துமாதர்களை யழையுங்களென்று தேவேந்திரன்கட்டளையிட ஏவலாளிகள்போயழைத்தவளவில் தேன்துளிக்குங் கூந்தல்தாழவும் தாழ்ந்திருக்குங்காதணிகள் விளங்கவும் கண்பார்வையானது தெளிந்ததவமாகியகுறும்புகளை மாய்க்கவும் திரட்சியாகியதனங்களைக்கண்டு உலகமயங்கவும் ஒளியுள்ளவளையலணிந்த மூங்கில்போன்ற தோள்கள் ஒளிரவும்-உருப்பசியானவள் விருப்பத்துடன்சென்றாள்—எ-று. (௨எ)

உம்பர்கொந்தளத்தினுத்திவலம்புரியுடனின்றார்ப்ப
விம்பச்செங்கனிவாயின்சொன்மிழற்றவெள்வளைவாய்விம்மச்
செம்பொற்பட்டிகையுமேங்க நடைக்கன்னந்தியங்கத்தன்கா
லம்பொற்கிண்கிணியரற்றவரம்பையென்பவளும்போந்தாள்.

(இ-ள்) தன்னளகபாரத்தில்செந்திருவுறப்புப்போலாகச்செய்யப்பட்டணிந்திருக்கும் தலைக்கோலமானதுவலம்புரியென்னும் தலைக்கோலத்துடன் பொருந்தியிருந்து தேவர்களை வசப்படுத்தவும்-

கோவைக்கனிபோன்ற வாயானது சொல்வசனிக்கவும் - வெள்வளை யொலிக்கவும் - செம்பொன்னாற்செய்யப்பட்ட அரைநாணொலிக்க வும் - நடையினைக்கண்டு அன்னமயங்கவும் - தன்காலிலணிந்திருக் குங்கிண்கிணியொலிக்கவும் அரம்பையென்பவளும் வந்தாள்-எ-று.

உத்திவலம்புரி - யென்பதனை திருமுருகாற்றுப் படையில் "தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்து" ஸ்ரீதேவி யெ ன்னுந் தலைக்கோலத்துடனே வலம்புரி வடிவாகச் செய்யப்பட்ட தலைக்கோலத்தையும் வைத்தற்கு உரிய இடத்திலே வைத்துமுணர்க

சுரிகுழலிருளைச்செய்யத்தூய்நகைநிலவுபூப்ப
வரிமுலைத்தலைக்கண்மாலைமாணிக்கம்வெயிலைக்கால
வரிதுவிண்ணுலகத்தென்னவல்லொடுபகலுங்காட்டி
விரிசிகைப்பசும்பொனல்குன்மேநகைவிரைந்துவந்தாள்.

(இ-ள்) சுழித்துமுடித்த அளகமானது இருளைச்செய்யவும் - பரிசுத்தம்பொருந்திய நகையானது நிலாக்கதிர்வீசவும் - வரிபொ ருந்திய தனத்தினிடத்தி லணிந்திருக்கும் மாணிக்கரத்தினமாலைகள் வெயிலொளிவீசவும் - தேவலோகத்திலரிதென்ன இருளுடன்பகலு ம் காட்டி விரிசிகையெல்கிற மேகலையணிந்த பொன்னிறமுள்ள அல்குலையுடைய மேனகைவிரைந்துவந்தாள்--எ-று.

விரிசிகையென்னும் மேகலை - முப்பத்திரண்டுமணிகோவை யுள்ளது

அண்டர்தங்கருத்துங்கண்ணுமன்னமும்பிடிக்குழாமுந்
தண்டளிரடிப்பின்செல்லத்தடங்கணெண்டிசையுங்கோலப்
பண்டயன்மருண்டமேனிக்குதியசும்பருதிதோற்ப
வொண்டொடித்தடக்கையாயத்தொடுதிலோத்தமையும்புக்காள்.

(இ-ள்) தேவர்களுடையபார்வையுங் கருத்தும் அன்னங்களும் பெண்யானைக்கூட்டமும் - குளிர்ச்சியுள்ளபாதத்தின்பின்தொடர்ந் துசெல்லவும் - பெரியகண்பார்வை அஷ்டதிக்குகளையும்வளைக்கவும் - முன்னம்பிரமதேவன் கண்டு மயங்கியமேனிக்கு உதிக்கா நின்றஇள

ந்சூரியன்தோற்கவும்ஒளிபொருந்திய வளையலணிந்தகைகளையுடை யதோழிமார்கூட்டத்துடன் திலோத்தமையும்வந்தாள்—எ-று.

பிரமன்மயங்கினதைக்குறித்துளமூதப்புகிற்பெருகும்-
பிடியெனப்பிணைமானென்னப்பேட்டிளங்கிள்ளையென்ன
நடிமயிற்குழாங்களென்ன நாகிளவன்னமென்னக்
கொடியெனக்கொண்மூமின்னுக்குலமென நான்குகோடி
வடிமலர்க்குழலார்தெய்வமடந்தையர்தொடர்ந்துபோனார்.

(இ-ள்.)உருப்பசி-அரம்பை- மேநகை-திலோத்தமை-என்னு மிந்தநால்வகை தேவமாதருடன்பெண்யானையென்னவும்பெண்மா னென்னவும்பெட்டைக்கிள்ளையென்னவும்- ஆடுகின்றமயிற்கூட்ட மென்னவும்-இளமைபொருந்திய அன்னமென்னவும்- பூங்கொடி யென்னவும்-மேகத்திலுண்டாகுமின்குலமென்னவும் - ஆய்ந்தம லர்மாலையணிந்தகுழலியர்களாகிய நான்குகோடிதேவமாதர்கள்தொ டர்ந்துபோனார்கள்.—எ-று. (௬௧)

இப்படிகுழீயதெய்வப்பேதையரிறைஞ்சநோக்கி
மைப்படிகளத்தனேவமறைமயக்கிரியின்சாரன்
மெய்ப்படிபுரிந்தநந்திமெய்நெறிசிதைப்பார்யாவர்
பொய்ப்படிமருங்கிலென்னப்புரந்தரன்விளைந்துசொற்றான்

(இ-ள்.) இவ்வாறுகூட்டமாகவந்த தேவமாதர்கள் வணங்கிநிற்கத் தேவேந்திரனவர்களை நோக்கிக்கருமை நிறம்பொருந்திய கண்ட த்திணையுடைய பரமசிவனது ஏவலால்வேதசொரூபமாகிய மலையி ன்சாரலில் நந்திதேவர்உண்மையாகச்செய்கின்றதவத்தையழிக்கத்த க்கவர்கள் உங்களில்யாவர்-பார்வைக்குத் தோன்றுமையால் பொய் யென்றுசொல்லும்படியாகிய இடையினையுடையமாதர்களே யென் று விளைந்துசொல்லினன்—எ-று. (௬௨)

திருவருட்குரியநந்திதிட்பமூநினைப்பர்சாபந்
தருமெனநினைப்பரன்றிச்சதமகன்பணிக்குமாற்று
ரொருவருக்கொருவர்தத்தமூகமூகநோக்கியுள்ளம்
வெருவரநின்றுரொன்றும்விளம்பிலர்கடவுண்மின்னார்

(இ-ள்)பரமசிவத்தின்திருவருளுக்குரியவராகிய நந்திதேவருடை யமனவுறுதியினையுந்நினைப்பார்கள் சாபந்தருவாரேயென்றுந்நினை ப்பார்கள்இதுவுமன்றித்தேவேந்திரன் ஏவலையுங்கடக்கமாட்டார்கள் ஒருவருக்கொருவர்தங்கள்தங்கள் முகங்களைப்பார்த்துக்கொண்டு இ வ்வாறுதேவமாதர்கள் பயத்தினால் ஒன்றுஞ்சொல்லாமலிருந்தார்கள்:

திறக்கிலாவாயினாருந்தெருமந்தவுளத்தினாரு
மிறக்கியமுகத்தினாருமெளியதன்றெனநின்றாரும்
பிறக்கிடவிடைகின்றாரும்பிடித்தபன்மலர்விட்டாரு
மறக்கதிமதித்துளாருமாயினாரமரர்மின்னார்.

(இ-ள்)வாயினைத்திறவாதவர்களும் மனமயக்கங்கொண்டவர்களு ம் முகமிறங்கினவர்களும் இதுஎளிதானதல்ல வென்பவர்களும் பின்னிடஇடைகின்றவர்களும் கையிற்பிடித்திருக்குமலர்நழுவவிடு த்துவிட்டவர்களும் தருமச்செய்கையுள்ள பரகதியை நினைத்துள்ள வர்களுமானார்கள் ரம்பாஸ்திரிகள்—எ-று.

அறக்கதியைமதித்தல் தவம்நற்கதியாதலால் விரோதஞ்செய் வதுதகுதியல்லவென்னுங்கருத்து. (௫௪)

கார்ப்புயலளகத்தெய்வக்கன்னியரிவ்வாறுன்னி
யார்ப்பறச்செறிந்துநின்றகுழாத்துள் விண்ணரசைநோக்கிப்
போர்ப்பெருவிடையாநந்திபுரிதவவிரதம்பானே
தீர்ப்பனின்னருளாலென்னத்திலோத்தமை தொழுதுசொன் [னாள்

(இ-ள்) கருமைநிறங்கொண்ட மேகம்போன்ற அளகபாரத்தை யுடைய தேவமாதர்களிவ்வாறு எண்ணங்கொண்டு சத்தமில்லாம ல் சூழ்ந்துநின்ற கூட்டத்துள் திலோத்தமையானவள் தேவேந்திர னைப்பார்த்துப்போர்செய்யும் பெருவிடையாகியநந்திதேவரானவ ர்செய்கின்ற தவவிரதத்தைத் தேவரீருடையகிருபையினாலேநான் தவிர்த்துவிடுகிறேனென்று வணங்கிச்சொன்னாள்—எ-று. (௫௫)

உளப்பிணிகிளவிகாயத்துறும்பிணிநன்மைதீமை
விளைப்பனவென்றும்வந்துவிளைவதுவிலங்காதென்று

மளப்பிலரிருந்தக்கண்ணுமவர்வினையவர்க்காமென்றும்
வளப்பெருந்திலோத்தமைக்குவருங்குறைகாட்டிற்றன்றே

(இ-ள்)மனவியாகுலத்தைவார்த்தைகள்விளைப்பனவென்றும்-சரீர த்தில்பொருந்தும்பிணிகளை அவரவர்கள்செய்யும்நன்மைதீமைகள் விளைப்பனவென்றும்-வந்துவிளையுங்காரியம்நீங்காதென்றும்- அள வில்லாதவர்களிருந்தாலும் அவரவர்கள்வினையவரவர்களுக்கே எப் போதும்நேரிடும்-ஆதலால்மிகுந்தவளப்பமுள்ள திலோத்தமைக்கு வருங்குறைகாட்டியது—எ-று. (௬௬)

ஊழ்வினைமனத்திற்றோன்றிநாப்புடைபெயர்ப்பவும்பர்
சூழ்வினையுடையான்முன்னர்திலோத்தமைதுணிந்துகூறி
வாள்வினைமுனைக்கண்மாதர்கணத்தொடுவணங்கிப்போனா
டாழ்வினைவருநாள்வந்தால்யாரதுதடுக்கற்பாலார்.

(இ-ள்) ஊழ்வினையானது மனத்திலுண்டாகி நாவையசைப்பித் தலால் தேவகூட்டத்தையுடைய தேவேந்திரன்முன் திலோத்தமை துணிந்துசொல்லி வாளாயுதத்தின்செய்கைபொருந்திய கூர்மையா னகண்களுள்ளதோழிமார்களுடன்வணங்கிச்சென்றாள்-கெடுதிவருங் காலம்நேரிட்டால் அதனைத்தடுக்கும்பகுதியுள்ளவர்கள்யார்—எ-று.

ஒருவருமில்லையென்பதுகருத்து.

வேறு

ஆறுநந்தியடுத்தவெல்லையிற்
போனாள்வேதகிரிப்புறம்புதன்
மானுேரொடுதானுமாயமாய்க்
கானுர்கோவடிவைக்கலந்தரோ.

(இ-ள்) வேதகிரிச்சாரலில் நீங்காமல் தவஞ்செய்துகொண்டிரு க்கிற நந்திதேவரிடத்தில் தன்தோழிகளுடனேபோய் அந்தக்கா ட்டில்வாசஞ்செய்யும்பசுவைப்போல்மாயமாய்ப்பசுரூபங்கொண்டு

கண்டாள்வேதகிரிக்கடத்தொரு
விண்டானேதொடுவெள்ளிவெற்பது

தண்டாமேதவநின்றதன்மையைக்
கொண்டாளேறுசிறந்தகோலமே.

(இ-ள்.) வேதகிரியைச்சூழ்ந்தகாட்டினிடத்தில் ஆகாயத்தைத்தொடும்படியாகியஒருவெள்ளிமலையானது நீங்காதுதவஞ் செய்யநின்றதன்மைபோல தவநிலைமைகொண்டு நந்திதேவரிருக்குஞ்சிறந்தகோலத்தைக்கண்டாள் — எ-று. (௩௯)

நச்சாநின்றணந்திமேனியைப்
பச்சால்வைகியபள்ளியான்மகன்
கைச்சாபஞ்சொரிவாளிகள்தொறு
நெய்ச்சார்தீயெனநெஞ்சுவெம்பினாள்.

(இ-ள்.) நந்திதேவர்திருமேனியைக்கண்ட திலோத்தமையானவள் மோகங்கொண்டு பசியஆலிலையிற்பள்ளிகொண்டிருக்கும்விஷ்ணுவின்மகனாகியமன்மதனுடையகையிலிருக்குங்கரும்புவில் சொரிகின்றமலர்ப்பாணஞ்சுடுந்தோறும் நெய்சொரிந்ததீயைப்போலமனம்வெம்பினாள் - எ-று. பச்சு-ஆல் எனப்பதம்பிரிக்க (௪௰)

மயிர்க்காறோறுமதன்சரத்தினால்
வெயிற்கால்வெண்ணெயின்மெய்குழைந்துளா
ளுயிர்க்கால்விட்டுழைகிட்டியொல்கினா
டயிர்க்கான்மத்திடலொத்ததன்மையாள்.

(இ-ள்.) மயிர்க்கால்கள்தோறும்மன்மதன்பாணம்படுவதினால்வெயிலிற்பட்டவெண்ணெயைப்போலமேனிகுழைந்தவளாய்ப் பெருமூச்சுவிட்டுக்கொண்டுமத்திட்டதயிர்த்தன்மையொத்தவளாய் அவருக்குச்சமீபித்தாள் — எ-று. (௪௧)

நாவான்மெய்முழுதொக்கநக்கியு
மோவாவன்பின்மருப்புரிஞ்சியுந்
தேவாநந்தியெனுஞ்செய்தனள்
கோவாமிந்நிலைகொண்டமாயமே.

(இ-ள்.) நாவினாலவருடைய திருமேனிமுழுவதும் நக்கியும் - நீங்காத அன்பினால்அவர்கொம்பினைத்தன்கொம்பினால்உராய்ந்தும்- இரண்டாவதுசம்புவாயிருப்பவர் நந்திதேவரென்கிறவெண்ணத்தைவிட்டொழித்துப்பசுவாகியமிழ்ந்தநிலைமைகொண்டமாயத்தினால்நிலோத்தமையிவ்வாறுசெய்தனள்—எ-று. (௬௨)

மோந்தான்மோந்துமுயங்கிமெய்யின்மெய்
சேர்ந்தாளெத்தனைசெய்யநந்தியு
மோர்ந்தானில்லையுளப்பராயணங்
காய்ந்தான்முட்கொடுகற்றளங்குமோ.

(இ-ள்.) இதுவுமன்றிமோந்தாள் மோந்து கிட்டி அவர்மெய்யுடன் தன்மெய்யினைச்சேர்த்தாள் - இவ்வாறிவள் எத்தனைவிதஞ் செய்யவும் நந்திதேவர் தம்முள்ளத்தியானத்தை விட்டிலர் - முள்ளால் குத்தினால்மலையசையுமோ—எ-று.

மாயப்பசுவின்மோகத்தினால் நந்திதேவருடைய சித்தஞ்சலனமானதில்லையென்பதுதாற்பரியம் (௬௩)

ஆமோதக்கணையானென்றெழுந்
தேமோகத்தொடமைந்தசிந்தையுங்
கோமோகத்தொழிலோகுலைப்பது
போமோதவ்விபோர்க்குவேழமேல்

(இ-ள்.) மிகுந்தவாசனையுள்ளமலர்க்கணையினையுடையமன்மதனென்றுண்டான தெய்வமோகத்துடன் பொருந்தியதியானத்தையும் பசுவின்மோகச்செய்கையோ குலைத்துவிடுவது - மானானது யானையின்மேல்போர்க்குச்செல்லுமோ—எ-று. (௬௪)

குன்றாவிற்நெறிகுன்றுவிப்பதிற்
சென்றாளின்றொருதேவமாதெனக்
கன்றாநந்தியுணர்ந்துகாய்கனல்
வென்றாலென்னவிழித்துநோக்கினான்.

(இ-ள்) குன்றாத இந்தநெறியைக்குன்றும்படிசெய்ய ஒருதேவமாது வந்தாளென்றுகோடங்கொள்ளுஞ் செய்கையில்லாதநந்திதே

வாறிந்து காய்கின்ற தீயானது வெல்ல எழுந்ததுபோல் விழித்து நோக்கினர்—எ-று. (சரு)

நீயாமென்னிலை நீத்தலைச்செய்வா
ளோயாவென்னெறியாமுலப்பது
தீயார்செய்கைசெயுந்திலோத்தமை
யேயாவுன்மதியென்மதித்ததே.

(இ-ள்) என்தவநிலையை நீங்கச்செய்கின்றவள் நீயாம்- சோர்வுபடாத என்தவநெறியாம் அழிவது - பாவிகள்செய்யுஞ் செய்கையைச்செய்கின்றதிலோத்தமையே- ஐயோவுன்மதியென்னமதித்தது

எய்வாராமதனரினித்தனி
னைவாராஞ்சிவனருநந்தியார்
செய்வார்செய்தவமேசிதைப்பவ
ருய்வாருஞ்சிலருண்டுகொல்லோ.

(இ-ள்) மன்மதனர் மலர்க்கணையேவுவாராம்-பரமசிவத்தினலாட்கொள்ளப்பட்ட நந்திதேவரினித்தனியே மெலிவாராம் - செய்வார் செய்கின்றதவத்தை யழிப்பவர்கள் கடைத்தேறுகின்றவர்களுஞ்சிலருண்டோ—எ-று. (சஎ)

மாயாதேனுவின்வண்ணமாயினை
யோயாதிவ்வடிவோடுகாடெலா
மேயாநிற்றியெனவிளம்பின
ளுயாநின்றவணெஞ்சமஞ்சினள்.

(இ-ள்) மாயப்பசுவடிவங்கொண்டனை - இனியிவ்வடிவத்துடனேபாமலிந்தக்காடெல்லாம் மேய்ந்துகொண்டிருக்கக் கடவையென்றுசாபங்கூறினர் அதையறிந்து-நந்திதேவர்தவத்தைபழிக்குமுபாயம்யோசித்திருந்ததிலோத்தமைமனமஞ்சினள்—எ-று. (சஅ)

இவ்வாறிவ்வடிவின்னதாய்விடி
னுய்வாறென்னெனவுன்னியுன்னிமுன்
மெய்வார்வேர்வோடிறைஞ்சிவெவ்விழி
பெய்வாரிப்பொழிவோடுயேசினள்.

(இ-ள்) இவ்வாறு இந்தவடிவமித்தன்மையதாயேயிருக்குமாகுல்-இனியுய்யுமுறைமையாதோவென்றுஎண்ணியெண்ணி (அச்சத்தினுல்) சரீரத்தி லுண்டாயொழுகாநின்றவேர்வையுடன் விழுந்துபணிந்துகண்கள் பொழிகின்ற நீருடன்சொல்லுகின்றுள்—எ-று. (௪௬)

யானேசெய்தில னீதுவிண்ணவர்
கோனேசெய்தியெனக்குயிற்றினன்
வானேம்வானவர்மன்னனேவலை
மானேமெங்ஙனமறுப்பதண்ணலே.

(இ-ள்) இந்தக்காரியம் நானேசெய்திலன்- தேவேந்திரன் நீபோய்ச்செய்யென ஏவினதாற்செய்தேன்- தேவலோகத்திலிருக்குந்தேவேந்திரனுடையஏவலைவானத்திலுள்ளமாதராகியயாம் எவ்வாறுமறுப்பதுசுவாமீ—எ-று. (௪௭)

ஆராருக்குமடித்திறஞ்செய்வார்
பேராரன்னவர்பேசுமேவலைத்
தேராநின்றடியன்செய்திமையை
யோராதையபொறுத்தியுய்யவே.

(இ-ள்)எவ்வெவர்கள்சொல்லும்அடிமைத்தொழில்செய்கின்றவர்கள்- அந்த எசமான்கள்சொல்லும்ஏவலைத்தடுக்கமாட்டார்கள்- அறியாமையினுல்அடியேன்செய்தகுற்றத்தைத்திருவுள்ளத்திற்கொள்ளாமல்ஐயனே நானுய்யும்படி பொறுத்தருளவேண்டும்—எ-று.(௪௮)

ஆதாரம்பிறிதற்றபேருட
னேதானுஞ்சினம்யாவருஞ்செயார்
நீதானின்றிடுசாபநீங்குகை
யோதாய்தண்ணளியோதவாரியே.

(இ-ள்) வேறொரு ஆதாரமுமில்லாதவர்கள்பேரில் எவர்களுங் கொஞ்சமுங்கோபஞ்செய்யார்கள் கருணைக்கடலே யிப்போது தேவர்கூறியசாபம்நீங்கும்வகையருளிச்செய்யவேண்டுமென்றனள்

நன்-குளிர்ச்சி-ஓதம்- அலை-வாரி-சமுத்திரம். (௪௯)

என்றுமுன்னமிறைஞ்சநந்தியு
மன்னாள்செய்குறையாறுசிந்தையான்
றன்னாலன்றிடுசாபமோவிடு
நன்னாளுன்னிநவிற்றினனரோ.

(இ-ள்) திலோத்தமையிவ்வாறுசொல்லி யெதிரில்வணங்க நந்தி தேவரானவர் அவள்செய்தகுற்றம்ஆறியமனமுள்ளவராய்த்தம்மால ப்போது கூறப்பட்டசாபம்நீங்கும் நல்லநாளை நினைத்துச்சொல் லுகின்றார்—எ-று. (௫௩)

வேறு.

மல்லைநகர்ச்சுரகுருவென்றொருமன்னன்
பரிதிதிருமரபில்வையத்
தெல்லையனைத்தையும்புரப்பான்கடையுகத்தின்
வேதகிரியெல்லைப்போந்து
வில்லையெடுத்தடவிவிலங்கடும்பகழி
படநினக்கும்வீயுங்காயந்
தொல்லையுருவருமிந்தக்கோவுருப்போம்
போவெனலுந்தொழுதுபோனாள்

(இ-ள்.) கலியுகத்தில் - மல்லையென்னும் நகரத்திலிருந்து- இவ் வுலகத்தையெல்லாங்காப்பவனாகிய தேவகுரு என்னும்சூரியகுலத்து அரசனானவன்வேதகிரியெல்லையில்வந்து வில்லையெடுத்துஇந்தக்கா ட்டிலிருக்கும் மிருகங்களையெல்லாங் கொல்லுகிறபாணம் உன்மே ற்படஉனக்குஞ்சரீரமிறந்துபோம்உடனேபழையவடிவம்வரும்இந் தப்பசுரூபமும்நீங்கிப்போம் நீபோவென்றுசொன்னவளவில்தொ ழுதுசென்றாள்—எ-று. (௫௪)

மல்லைநகரென்பது - மாவலிபுரமென - வழங்கப்படுகின்றது காரணமெழுதப்புகின் - பெருகுமென்பது பற்றிவிடப்பட்டது.

விடைகொடுத்தசாபத்தின்விடைபணிப்பத்
தலைசுமந்துவிடைகொண்டேகிப்
புடையடுத்தவனத்தழையுங்கொழும்புல்லு
மேய்ந்துசுனைப்புனலுமார்த்திக்

குடையுகத்தின்வரவுன்னியுன்னியினப்
பசுவினொடுங்கண்ணீரோடு
முடையவினைப்பயனிதெனத்திலோத்தமையாஞ்
சுரபிதிரிந்துழன்றதாங்கே.

(இ-ள்.) விடைத்தேவர்கொடுத்தசாபத்தின் விடுகையைக்கட்டளையிட அந்தக்கட்டளையைச்சிரசில்ஏற்றுக்கொண்டுஉத்தரவும்பெற்றுக்கொண்டுசென்று அருகிற்பொருந்திய காட்டுத்தழையுஞ் செழுமையுள்ளபுல்லுமேய்ந்து சுனைநீரும்உண்டு கலியுகம் எப்போது வருமோவென்றுஎண்ணியெண்ணி யந்தக்காட்டிலிருக்கும் பசுக்கூட்டத்துடன்சேர்ந்து இதுமுன்செய்வினைப்பயனென்று கண்ணீர் விட்டுத்திலோத்தமையாகிய பசுவானது அந்தக்காட்டிற்சுழன்றுதிரிந்துகொண்டிருந்தது—எ-று. (௫௪)

ஏவியவன்சிவனிரண்டாமேவலனும்
புரந்தரனீண்டிதற்குப்போந்தா
டூவியதோர்திலோத்தமையென்
றிருப்பவுமத்தேவுருக்கோவுருவாய்ப்போயு
மேவியதெள்ளமுதவுண்டி
திரணவுண்டியாயுமின்னல்விளைந்ததென்று
லோவியமெய்த்தவர்க்குறுகண்
ணுறுவித்தார்க்குறுங்குறைநாமுணாக்கலாமோ.

(இ-ள்.) முதலிலேயேவியதுபரமசிவம் - இரண்டாவதுஏவினவன்தேவேந்திரன் - இதற்குவந்தவள் மிகுந்தசவுந்தரியமுள்ளதிலோத்தமையாயிருக்கவும் அவளுடையதேவரூபமானது பசுஉருவாய்ப்போயும் அவள்முன்னுண்ணப்பொருந்திய அமுதஉணவுமாறிப் புல்லுணவாயுந்துன்பம்நேரிட்டதென்றால்பந்தங்களைநீங்கியதவமுள்ளமுனிவர்களுக்குத்தீமைசெய்கின்றவர்களுக்குநேரிடுங்குறையை நாம் சொல்லவேண்டுமோ—எ-று. (௫௬)

விளாந்தொருகான்விழித்தவிழி
மீண்டுமுகிழ்த்தானந்தவெள்ளத்தாழ்ந்து

வரைந்தவடிவெனத்துளங்கா
திருந்தநந்திதவத்தைமழுவலத்தனோர்ந்து
புரந்தரன்மாலயனமரர்முனிவர்சித்தர்
கின்னரர்கிம்புருடர்போற்றக்
கரந்தலையிற்குவிபூதக்கணமாடப்
பல்லியங்கள்கறங்கப்போந்தான்.

(இ-ள்.) யோகசிந்தைநீங்கி திறந்தகண்களை மறுபடியும்விரைவாக மூடிக்கொண்டு ஆனந்தவெள்ளத்தில் மூழ்கியெழுதியசித்திரரூபம்போல்அசையாமல்நிலையிலிருந்த நந்திதேவருடையதவத்தைப்பரமசிவம்திருவுள்ளத்திலுணர்ந்து-தேவேந்திரன்-விஷ்ணு-பிரமதேவன்-தேவர்கள் -முனிவர்கள் - சித்தர்கள் -கின்னரர்கள்- கிம்புருடர்களென்னுமிவர்கள்போற்றவும்- கைகளைத்தலையிற்குவித்துவைத்துக்கொண்டு பூதகணங்கள் கூத்தாடவும் பலவாத்தியங்கள்சத்திக்கவும் அவ்விடத்திலெழுந்தருளினார்—எ-று. (௩௭)

பிரித்தபிரிவாற்றாதவிடபநந்தி
நெடுங்காலம்பெரிதுநோற்று
வருத்தமுறப்பசிக்கிரங்கி
மாற்றுவான்றோற்றுகின்றவடிவமேபோ
லுருத்திரகோடியர்முதலோ
ரிடுமறுகும்பச்சிலையுமொலிக்குநீருந்
திருத்தலையிற்சுமந்திரவி
யாயிரமொத்தொளிவிளங்கச்சிவன்முன்னின்றான்.

(இ-ள்.) முன்னம்பரமசிவத்தினாற் பிரிக்கப்பட்ட பிரிவையாற்றாதபெரியநந்திதேவர் நெடுங்காலமிகுதியாகத்தவஞ்செய்துவருத்தமுற ஒருவன்பசிக்கிரங்கியதைமாற்றத்தோற்றுகின்றவடிவம்போல் உருத்திரகோடியர் முதலானவர்கள் அருச்சித்த அறுகும் பச்சிலையும் ஒலிக்காநின்ற கங்கைநீரும் திருமுடியிற்றாங்கிஆயிரஞ்சூரியரையொத்து ஒளிவிளங்கும்படி பரமசிவம்நந்திதேவருக்குமுன்னெழுந்தருளினார்—எ-று. (௩௮)

தேவர்கணத்துதிமுழக்கும்
  பல்லியத்தினிசையுநந்திசெவிபுட்போத
யாவருக்கும்பெருமான்வந்தெய்தினன்கொ
  லெனக்கண்விழித்தெய்தநோக்கி
யாவலெழப்பதைத்தெழுந்து
  சிவன்பார்க்குந்தொறுந்தூரத்தபர்ந்துவீழ்ந்து
தூவலங்கட்புனல்பெருக
  வரகரசங்கரவெனப்பார்துளங்கவார்த்தான்.

(இ-ள்.) தேவர்கூட்டத்துமுழக்கமும் - பலவாத்தியங்களினோசையும் நந்திதேவருடைய காதினிடத்திற்சென்றவளவில் யாவருக்கு மிறைவனாகிய பரமசிவமெழுந்தருளினாரோவென்று கண்களைவிழித்து நன்றாகநோக்கி ஆசையெழப்பதைத்தெழுந்து பரமசிவம்பார்த்தருளுந்தோறும் அயர்ந்து தூரத்தில்விழுந்துபணிந்து கண்களினின்றும் நீர்த்துளிகள்பெருக அரகரசங்கரவென்று பூமியதிரும்படியுரத்தசத்தமாகத்துதிசெய்தார் — எ-று.

(தூவல்-நீர்த்துளி) (௫௧)

அமைகிலனாய்மெய்குழைந்து
  குழைந்தாடிப்பாடிநெடிதவசங்கூர்ந்து
கமைசிறிதுமறக்கம்பித்
  தரனேசங்கரனேசெங்கணன்காணானே
யுமையொருபங்குடையானே
  வேதகிரிப்பெருமானேயொன்றுந்தேரா
வெளையுமொருதொண்டனெனக்
  கொண்டெளிதுவெளிநின்றாயெனாமுன்வீழ்ந்தான்.

(இ-ள்.) அவ்வாறுதுதிசெய்தும் அமையாதவராய்ச்சரீரங்குழைந்துகுழைந்து ஆடியும்பாடியும்பரவசமிகுந்து பொறுமையென்பதுசிறிதுமின்றிநடுக்கங்கொண்டு அரனேசங்கரனே-விஷ்ணுவினாலுங்காணப்படாதவனேபார்வதிதேவியாரை யொருபாகத்திலுடையவனேவேதகிரிப்பெருமானே - ஒன்றுந்தெரியாத வெளியேனையுமொருதொண்டனாகஆட்கொண்டு எளிதில்வெளியேநின்றாயேயென்றுதுதிசெய்து எதிரில்வீழ்ந்துபணிந்தார்—எ-று. (௫௨)

அரிதரிதுநீபுரிந்ததவம்வியந்தேம்
வேட்கையென்கொல்லறைதியென்னப்
பெரிதுநந்தியந்தணரைக்கோறல்கோத்
தெறுதன்முதற்பெரும்பாவங்கள்
கருதியவெத்தனைசெயினு
மீண்டவர்வந்தருச்சிக்கிற்கடவுளேநின்
றிருவடிவத்தடையவரந்தருகெனத்தந்
தருள்செய்தான்றேவர்தேவன்.

(இ-ள்) இவ்வாறுபணிந்த நந்தியைப்பரமசிவம்நோக்கி நீசெய்ததவம்மிகவும் அரியது அரியது-நாம்சந்தோஷித்தோம் உனக்குவேண்டியவரம்யாதோவென்று மிகுதியாகத்திருவாய்மலர்ந்தருளினவளவில்நந்திதேவரானவர் சுவாமியைநோக்கிப் பிராமணரைக்கொலைசெய்தல், கோஅத்திசெய்தல்முதலான பெரும்பாவங்கள் எண்ணியவெவ்வளவுசெய்தாலும்இந்தத்தலத்தில்அவர்கள்வந்து பூசிப்பார்களானால் அய்யனேநின்திருமேனியிற்சேரும்படிவரம் அருளிச்செய்யவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்யத்தேவதேவராகிய பரமசிவம் அவ்வண்ணமே அருளிச்செய்தனர்—எ-று. (௬௧)

இக்கிரியும்புரியுநந்திகிரிபுரியாய்
நீதினந்தோய்ந்தெழுந்ததீர்த்த
மிக்கநந்திதீர்த்தமுமாய்விளங்குகவென்
றருகழைத்துவிடைமீதேறிச்
சொக்கியெனுந்திருமலையாண்மடந்தையொடும்
புதல்வரொடுஞ்சுருதிக்குன்றிற்
புக்கனனக்கணந்தேவர்
பூமாரிதகைந்தூல்கம்புனைந்தமாதோ,

(இ-ள்) வேதகிரீசரிவ்வண்ணம் வரமருளிச்செய்ததுமன்றி நந்தியைநோக்கிநீதவஞ்செய்தஇக்கிரிநந்திகிரியென்றும்இப்புரிநந்திபுரியென்றும்நீதினந்தோறும் ஸ்நாநஞ்செய்த தீர்த்தம்நந்திதீர்த்தமென்றும்விளங்கக்கடவதென்று அருளிச்செய்து அருகிலழைத்துவிடைத்தேவர்மேல் ஆரோகணித்துக்கொண்டுதிருமலைச்சொக்கம்மை

புடனும்திருமைந்தர்களுடனும் வேதகிரியிலெழுந்தருளினர் அப்பொழுதுதேவர்கள்பொழிந்த பூமழையானது அப்புறம்போவதற்கின்றித்தடுக்கப்பட்டதாய்ப்பூமியையமறைத்தன—எ-று. (௬௨)

பின்னுமொருகாநந்திகோவுலகிற்
கோப்புணர்ச்சிபிரியான்வைக
மன்னுணர்ந்துமுனிந்துநீ
மாநிலத்திலேகெனவம்மறைக்குன்றேறி
நன்னெறிகளெனைப்பலவுஞ்சனகன்முதன்
மாதவரானவிலக்கேட்டுத்
தொன்னெறியினருச்சனையுந்தவமுமிழைத்
தரனுழைபோய்த்தொழுதுவாழ்ந்தான்.

(இ-ள்) அதன் பின்னொருகாலம் நந்திதேவர் கோவுலகிற்சென்று கோவின்புணர்ச்சியைப் பிரியாமலிருக்கப் பரமசிவம்திருவுளத்திலுணர்ந்து கோபஞ்செய்து நீபூலோகத்திற்செல்லக் கடவையென்று கட்டளையிட்டருளலும் அந்தவேதகிரியிற்சென்றுநன்னெறிகளாயுள்ளவைகள்யாவும்சனகமுனிவர்முதலான முனிவர்கள்சொல்லக்கேட்டுப் பழமையானமுறைமைப்படி பூசையுந்தவமுஞ்செய்துபரமசிவனிடத்திற்சென்று தொழுது வாழ்ந்திருந்தார்—எ-று

நந்திதவச்சருக்கமுற்றியது.

ஆ திருவிருத்தம்- ௬௱௧

---

## மாயீகச்சருக்கம்.

—o§*§o—

தாயீகைவளைத்துணையொத்ததுணைப்புயத்தான்
நீயீகடையிற்கணிரட்டைசிவத்தலொவ்வான்
மாயீகனெனப்பெயர்புக்கதோர்வாளரக்கன்
பேயீகள்பிணங்கதிணங்கள்பிணங்கவுண்டான்

(இ-ள்) பரிசுத்தமுள்ள இரண்டு பொன்மலைகளையொத்தவிரண்டுபுசங்களுள்ளவனும்கடையுகத்திலுண்டாகும் ஊழித்தீயும் தன்னி

ரண்டுகண்கள்சிவத்தலுக்கொவ்வாதவனுமாகியமாயீகனெனப்பொ ர்பொருந்தியஒருவலிய அரக்கன்பேய்களும்ஈகளுமொன்றுக்கொன் றுமாறுபடும்படி நிணங்களையும் பிணங்களையும் தின்பவன்—எ-று.

பலத்துக்காகப் பொன்மலையையவன் தோளுக்கொப்பாகச் சொல்லினர் - வாள் அரக்கன் - என்பதற்குக்கொலைசெய்யும்அரக்க னெனப்பொருள்கொள்க.

எவ்வண்ணமெடுப்பமெனத்தன்மனத்தெடுத்தா
னவ்வண்ணமெடுப்பனமாயமனைத்தும்வல்லான்
வெவ்வண்ணவனத்துவிலங்குடனேவிலங்காய்ப்
பொய்வண்ணமிழைத்தவைகோறல்புரிந்துதின்பான்

(இ-ள்) எவ்வாறு மாயாரூபமெடுக்கலாமென்று தன்மனதிலெ ண்ணுகிறானோ அவ்வண்ணமேயெடுக்கத்தக்கதுகளாகியமாயங்களி லெல்லாம்வல்லவன் கொடுமைத்தன்மையுள்ளதுகளாய்வனங்களி ற்சஞ்சரிக்கிறமிருகங்களுடன் தானுமொருமிருகமாய் மாயாரூபங் கொண்டு அம்மிருகங்களைக்கொன்றுதின்பவன்—எ-று. (உ)

கார்க்கண்டனுறைந்தமறைக்கிரிசூழ்கடத்து
மேற்கண்டணியாதொருநாள்விரிகேழல்கொல்லப்
போர்க்கண்டரிதானதோரேனவுருப்புணர்ந்தான்
மார்க்கண்டனிதைத்தனிகண்டுமனம்பதைத்தான்

(இ-ள்) காளகண்டமூர்த்தியாகிய பரமசிவம்வீற்றிருந்தருளும் வேதகிரியைச் சூழ்ந்தவனத்தில் ஒருநாளொருபெரியபன்றியைக்க ண்டு சமீபித்து அதனைக்கொல்லத்தானும் ஒருபன்றிரூபங்கொண் டான் - அதைமார்க்கண்டனென்னு முனிவர்தனியேகண்டு மனம்ப தைத்தார் — எ-று.

போர்க்கண்டரிதான என்பதனை - போர்க்கு அண்ட அரிதான எனப்பகம்பிரிக்க. (௩)

உணாசையலைத்தொருமாயவுருப்புணர்ந்தாய்
மேனாண்முடைக்குவெறுத்தும்வெறுத்தல்செய்யாய்
வானாசையறுத்தனையெனமதித்திரங்காய்
நீநாசமிலாநிரயத்துநெருப்புமுற்றாய்.

(இ-ள்.) மாமிசத்தைத்தின்னுமாசையால் அலைச்சலபட்டு இந் த மாயஉருவங்கொண்டனே - நாசிக்குஞ்சகிக்கக்கூடாதநாற்றத்தை க்குறித்து வெறுத்து விடாமலிருக்கின்றனே - சுவர்க்கபதஞ்சேரு ம்படியானவிருப்பத்தைமதித்து அணுவளவும்இரங்குகின்றிலேமே லும் நீநாசமில்லாத நரகத்தீயினுக்கும் அஞ்சுகின்றிலை-எ-று-(௪)

வஞ்சாவுயிர்பற்பலவென்றூன்வதைப்பவந்தாய்
வெஞ்சாதலுனக்குறினெஞ்சம்வெருக்கொளாதோ
வெஞ்சாவுயிர்யாவையுமெம்முயிரொக்குமென்றென்
றஞ்சாதவரஞ்சுவரந்தகனுக்குமம்மா.

(இ-ள்.) வஞ்சகனே-பலவுயிர்களைவதைக்கும்படியென்னெதிரி ல்வந்தனே - கொடுமையுள்ள இறத்தலுனக்கு வரும்போது மன ம் அஞ்சாதோ - குறைவுபடாதஉயிர்களை யெல்லாம் நம்முயிரை யொக்குமென்று அஞ்சாதவர்கள் நமனுக்குஅஞ்சுவார்கள்-எ-று.(௫)

காயத்தைமறைத்தனையெண்ணிலகாயமுண்பா
ஙீயத்தனிருப்பிவணென்பதுநெஞ்சமஞ்சாய்
மாயத்துடன்வந்ததோரிந்தவராகமேயாய்த்
தீயத்தமனைத்துமொறுங்குகைசெய்தியென்றான்.

(இ-ள்) அளவில்லாத உயிரைக்கொன்றுண்ணமாயத்தினு லுன்ச ரீரத்தைமறைத்தனை - இந்தத்தலம் வேதகிரீசருடைய தலமென்றும மனம்அஞ்சுகின்றிலை- இங்கேவந்த பன்றிபோலமாயத்தினால்நீயுமொ ரு பன்றியாய் இந்தக்கொடியவனமெங்கு மோடித்திரியும்படிசெ ய்தனை—எ-று.                                                            (௬)

வேறு.

காலனதாவிகாலக்கண்ணுதல்காலால்வென்ற
பாலனதுரையைக்கேளாமாயீகன்பயந்துதாழ்ந்து
மேலவகிழ்மையேன்செய்வினைக்குறைபொறுத்தியிந்தக்
கோலமெய்க்கோலமாறுங்காலமென்கூறுகென்றான்.

(இ-ள்) யமனுடைய உயிர்போகும்படிநெற்றிக்கண்ணினையுடை ய பரமசிவனது திருவடியால் வென்றபுத்திரராகிய மார்க்கண்டரு

டைய வார்த்தையைக்கேட்டு மாயீகனென்னும் ராக்ஷதன்பயந்து பணிந்து பெரியோரே - புலையனாகிய நான்செய்த குற்றத்தைப் பொறுத்து இந்தப்பன்றிவடிவக்கோலம்நீங்கும்படியானகாலம்யாதோ அதனையடியேனுக்குச்சொல்லுமையாவென்றான் — எ-று. (எ)

மல்லையம்பதிக்குவேந்தன்சுரகுருவனத்துளேகி
யெல்லையில்விலங்கைமாய்ப்பவெய்கணைநினக்குந்தாக்கிற்
றொல்லையிற்படிவமெய்துமிவ்வுருத்தொலையுமென்னக்
கொல்லெயிற்றேனமந்தக்குன்றுழைத்திரிந்ததன்றே.

(இ-ள்) அழகுள்ளமல்லையென்னும் நகரத்துக்கு அரசனாகியசுரகுருவென்பவன் - இந்தவனத்தில்வந்து அளவில்லாத மிருகங்களைக் கொல்லும்படியேவுகின்ற பாணமானது உன்மேலும்படுமானால், இந்தவுருவம் நீங்கிப்பழையவடிவம் வருமென்று சொல்ல-கொல்லத்தக்க பற்களையுடைய அந்தப்பன்றியானது வேதகிரியினிடத்திற் சஞ்சரித்துக்கொண்டிருந்தது — எ-று. (அ)

கோதில்வேதங்களோடுகோடிருத்திரர்கோனந்தி
நாதர்பூசனையிழைத்ததித்திறநந்தியாலுந்
தீதின்மார்க்கண்டனாலுந்திலோத்தமைமாயீகர்க்கு
மீதுபோந்தமையிவ்வாறென்றுரைத்தனன்விரித்துச்சூதன்

(இ-ள்) குற்றமில்லாத வேதங்களும் கோடிருத்திரர்களும் சுரகுருராசனும் நந்திதேவரும்வேதகிரீசருக்குப் பூசைசெய்ததன்மையிது-இதுவுமன்றிநந்திதேவரால்திலோத்தமைக்குச்சாபம்வந்தவாறும்- மார்க்கண்ட முனிவரால்மாயீகனுக்குமுன்சம்பவித்ததன்மையுமிவ்வாறென்று சூதமுனிவர்விவரித்துச்சொன்னார் — எ-று.

சொற்றனையுய்ந்தேமென்னச்சூதனைமுனிவர்நோக்கிப்
பிற்றையும்பூசித்தோரைப்பேசெனப்பேசவன்றான்
பொற்றையெம்பிரானைப்போற்றிப் புளகமோடரும்பக்கண்
நற்றமினுடலங்கம்பித்தவிழ்ந்தவிழ்ந்துலாப்பதானுன் [ணீ

(இ-ள்) நந்திதேவர் தவஞ்செய்த சரிதமுதலிய சரித மெல்லாஞ் சொன்னதைக்கேட்டுய்ந்தோமென்றுசூத முனிவரைநோக்கியின்னும் அங்குப்பூசித்தவர்களைச்சொல்லவேண்டுமென்று நைமிசாரணிய

முனிவர்கள் வினவ அந்தச்சூதமுனிவர் வேதகிரிக் கொழுந்தாயுள்ள
ம்பிறைவனைப்போற்றிசெய்துபுளகத்துடன் ஆனந்தபாஷ்பம்பெ
நகச்சோர்வில்லாத உடலுங்கம்பித்து மனங்குழைந்து குழைந்து
சொல்லத்தொடங்கினர்—என்று (௰)

மாயீகச்சருக்கமுற்றியது.

ஆகூ திருவிருத்தம்- ௱௭௰௬

# காமதேனுச்சருக்கம்.

அருவிவாய்கறங்கிபவம்பொன்மேருவிற்
பருதிசூழ்சாரலிற்பசுக்குழாத்தொடு
மருவிமேய்ந்துலாயதுவயிட்டமாதவன்
கருதியாங்களிப்பதுகாமதேனுவே.

(இ-ள்) வசிஷ்டமுனிவரால் ஆதரிக்கப்படுவதாகியகாமதேனுவான
து அருவிகள் புறத்திலொலிக்காநின்றதாயும் அழகிய பொன்மய
மானதாயும்சூரியன்வலமாகச்சூழத்தக்கதாயுமிராநின்ற மகமேருவி
ன்சாரலில் பசக்கூட்டத்துடன்பொருந்தி மேய்ந்துலாவிக்கொண்
டிருந்தது—எ-று (௧)

செம்பவளத்திருமேனிச்செவ்வியும்
விம்பநெற்றியிற்பொறிவெண்மைத்தோற்றமு
மம்பவளக்கிரிதானுமக்கிரி
யும்பரிற்பிறையுமொத்தொளிருமாண்பது.

(இ-ள்) அது செம்பவளம்போன்ற திருமேனியழகினாலும்கோ
வைப்பழம் போன்ற நெற்றியில் புள்ளியாகவிளங்குகின்ற வெண்
மை நிறத்தோற்றத்தினாலும் அழகியபவளமலையும் அதன்மேல்பிறை
மதியுமிருப்பதையொத்தொளிரும்பெருமையையுடையது—எ-று.

பொன்னவிர்மருப்பதுபுகரிலாவெள்ளி
மின்னவிர்குரத்ததுவீசுங்கூலமு
மன்னியமானமான்மயிரிற்றாயது
துன்னிகரிலாதொருதனைகயிற்சான்றது

(இ-ள்) பொன்மயமாய் விளங்குகின்ற கொம்புகளையுடையது- குற்றமில்லாத வெள்ளிபோல ஒளிவிளங்குகின்றகாற்குளம்புகளையு டையது - வீசுகின்றவாலும் - பொருந்திய கவரிமானினுடைய ம யிரைப்பார்க்கிலும் வெண்மை நிறமுள்ளதாயிருப்பது அன்றியும் தனக்குநிகரில்லாமல்ஒப்பற்றபெருமையிற்சிறந்தது — எ-று. (௫)

மணிநிரைக்கிண்கிணிமாலையார்த்தது
திணிகுடமுகந்தபாலாழித்தேக்கெனும்
பணிமுலைத்தலையதுபாலர்பாற்கொளுங்
குணியெனத்தகையதுகோதிலாதது.

(இ-ள்) மணிவரிசையினையுடைய கிண்கிணிமாலையணிந் திருப்ப து - திணிந்தகுடத்தில்முகந்த பாற்கடல் நிறைவென்கிற செய்கை யுள்ள முலைத்தலையுடையது - சிறியபாலர்களும்பால்கொள்ளத்தக்க குணமுள்ளதென்றுசொல்லத்தக்கதகைமைப்பாட்டினையுடையது- அன்றியும்குற்றமில்லாதது-எ-று,

ஒருகுடம் நிறையப்பாற்கடல்முழுவதையும் நிறைத்துவைத் ததுபோன்றசுரப்புமடியையுடையது - என்பதுகருத்து. (௬)

அனையவான்சுரபிநின்றணியவெல்லையின்
மனைவியார்தம்மொடும்வசுக்களெண்மரும்
கனைகுரற்றொறுவிடைவியப்பிற்கண்டன
ரினையதுவயிட்டனதெனவுமுன்னினார்.

(இ-ள்) அத்தன்மையுள்ளதெய்வலோகத்துக் காமதேனுவானது பொருந்தியிருக்கும் எல்லையில் - தத்தமனைவியர்களுடன் அஷ்ட வசுக்களும் சத்திக்குங்குரலையுடைய பசுக்கூட்டத்தில் வியப்புடன் கண்டு இதுவசிஷ்டமுனிவருடைய தெனவுங்கருதினார்கள் — எ-று

இன்னதேனுத்தனதெதிர்க்கணிற்கவு
மன்னமாதவர்செய்ததவத்தையார்செய்வார்
முன்னியவண்ணமேமுனிக்குநல்கிய
கன்னியாகன்வரக்கதியென்சொல்வதே.

(இ-ள்) இத்தன்மையுள்ள காமதேனுவானது தன்னெதிரில் நிற்க வும் - அந்தவசிஷ்டர் செய்ததவம்போலத்தவஞ்செய்யத்தக்கவர்க

ரியாவர்- கருதியபடிவசிஷ்ட முனிவருக்கு அருளிச்செய்தபார்வதி பாகனுடையவரத்தின் மேன்மையையென்னென்று சொல்வது.

மற்றொருபாற்கடல்வகுப்பவேண்டினுந்
தெற்றெனவியற்றுமித்தேனுவன்றியுங்
கற்றறிவயிட்டனுட்கருதுமாறெலா
நற்றவப்பயனென நல்குகின்றதே,

(இ-ள்) இந்தக்காமதேனுவானது - வேறேயொருபாற்கடலுண் டாக்க விரும்பினாலும்- உண்மையாகவே உண்டாக்கும் இதுவன்றி வேதசாஸ்திரங்களைக் கற்றறிந்தவசிஷ்டர் உள்ளத்தில் நினைத்தபடி யெல்லாம்நல்ல தவப்பயன் போலக்கொடுத்துக் கொண்டிருக்கின் றது-எ-று. (எ)

என்றுரைத்ததிசயித்தெண்வசுக்களு
நின்றுழியவர்க்கெதிர்நின்றகற்பக
மன்றலந்தேன்றுளிதுளிக்குமாநிழற்
சென்றதுபைப்பயத்தெய்வத்தேனுவே.

(இ-ள்) இவ்வாறுசொல்லிஅதிசயித்து அஷ்டவசுக்களும் நின்ற போது அவர்களுக்கெதிரில்நின்றகற்பகவிருக்ஷத்தின் வாசனைபொ ருந்தியதேன்துளிதுளிக்கும் பெரியநிழலில்காமதேனுவானதுபை யப்பையச்சென்றது—எ-று. (அ)

இந்நெறிச்சேறலும்வசுக்களெண்மரிற்
பின்னவன்பார்த்துடன்பெட்குமில்லவ
ளன்னநடைமாலினியென்னுநாமத்தா
டன்னுடைக்கொழுநனைநோக்கிச்சாற்றினள்

(இ-ள்)காமதேனுஇவ்விதமாகச்சென்றவளவில்அந்தவசுக்களிலெ ட்டாவது வசுவானவன் பார்த்தவுடன் அவன்விரும்புகின்றமனைவி யாகிய அன்ன நடையுடையமாலினி யென்னும் பெயருள்ளவள் தன்கணவனைநோக்கிச்சொல்லுகின்றாள்—எ-று.

பார்த்தவுடனெனற்பாலது விகாரவகையால்பார்த்துடனென நின் றது. (௯)

ஈண்டையிப்பசுக்கறந்தினிதுமாந்துகை
பூண்டதெம்மனமெனப்பூண்டகாமத்தீ
மூண்டெழக்கலங்கினன்முறைமைநோக்கிலன்
மாண்டவப்பசுமுலைவலிதிற்பற்றினன்.

(இ-ள்) இங்கிருக்குமிந்தப்பசுவின்பாலைக்கறந்து இன்பமுடனுண்ண எம்மனமிச்சித்ததென்று அவன்சொன்னவளவில் அவனிடத்திலே பொருந்திய காமாக்கினி மூண்டெழுவதால்மனங்கலங்கி முறைமையைநோக்காமற் பெருமைபொருந்திய அந்தக்காமதேனுவின் முலையை வலிவிற்பற்றினன்—எ-று. (௰)

நமைப்பிறர்பொருளெனச்சிறிதுநாடில
னமைப்பருந்தவமுனியருளும்பெற்றில
னெமைப்பணிந்திரந்திலனெவன்செய்தானிவன்
சமைப்பதன்றிதுவெனப்பசுத்தணந்ததே.

(இ-ள்) அவன்பற்றினவளவில் அந்தக்காமதேனுவானது அறிந்து இவன்நம்மைப் பிறர்பொருளென்றுசிறிதும்நாடிலன்-செய்தற்கரியதவமுள்ள வசிஷ்டமுனிவருடைய அருளும்பெற்றிலன் நம்மைவணங்கிஇரந்துகொள்ளவுமிலன் இவனென்னகாரியஞ்செய்தான் இதுசெய்யத்தக்கதல்லவென்றுகாமதேனுபோய்விட்டது-எ-று

குனிமுழந்தாண்மிசைக்கொள்கலங்கவிழ்த்
தினியதன்முலைகவர்ந்தீர்த்தகையொரீஇத்
தனிநடந்தனையவன்றன்னைத்தேனுவு
முனிவொடுநோக்குபுமொழிந்ததென்பவே

(இ-ள்)குனிந்த முழந்தாளினிடத்திற் பால்கறக்கவைத்த பாத்திரத்தைக்கவிழ்த்துவிட்டு இனியதன்முலையை பற்றிக்கொண்டு இழுத்த அவன்கையைவிட்டுநீங்கித் தனியேநடந்து காமதேனுவானது அவனைக்கோபத்துடன் பார்த்துச்சொல்லியதென்பர் அறிஞர்-று

நடுக்கெடுநீபுரிந்தவையைநீசெயத்
தடுக்கலர்நிற்றலாற்றன்னைமார்களு
மிடுக்கணல்குரவராய்க்காசினிமத்தி
னடுக்குழூஉம்பிணநுகர்ந்தடையினென்றதே

(இ-ள்) நடுவுநிலைமைபற்றநீயும் இந்தக்குற்றமானகாரியத்தைத் தீ செய்பதடுக்காமல் நின்ற உன் தமையன்மார்களும் நல்லபொருந்தியவறுமையுள்ளவர்களாய் காசிச்சுடலையிலடுக்கும் பிணத்தின் ஊனைப்புசித்துக்கொண்டிருங்களென்று சபித்தது—எ-று. (௰௧)

தேவனொன்பதுகெடத்தேசுகுன்றியா
மோவரும்பிணநுகர்ந்துயங்கத்தேனுவுஞ்
சாவமின்றறைந்ததுதமியமுன்செய்த
பாவமென்றெண்மரும்பருவந்தேங்கினர்.

(இ-ள்) தேவரொன்பதுகெடும்படிதேசுகுறைந்துநாய்நரியாகும் பிணத்தையுண்டுவருந்தத்தக்கதாகஇந்தக்காமதேனுவானது இவ்வாறு சாபங்கூறியதுஇதுநாமுன்செய்தபாவமென்று வசுக்களெண்மருந் துன்பங்கொண்டுஅழுதார்கள்—எ-று. (௰௨)

ஒருவனையொருவர்விட்டுரைநுஞ்சொல்லினர்
வெருவரும்நோக்கினர்வெயர்த்தமெய்யினர்
வருவினையிவையெனவாய்த்ததென்குநர்
பரிவையச்சினைவுநராகிமாழ்கினர்.

(இ-ள்) ஒருவனையொருவர்விட்டுஉரத்தசத்தமாகப்பேசுஞ்சொல்லுடையவர்களும் அச்சங்கொண்டபார்வையினரும்வெயர்வைகொண்டமெய்யினரும்இந்தத்துயர் நம்வினையாலேநேரிட்டதென்று சொல்லுகின்றவர்களும்பாலுண்ணவிரும்பினவளைக் கோபிக்கின்றவர்களுமாய்த்துயரப்பட்டார்கள்—எ-று. (௰௩)

ஒன்றுமற்றறிகிலாவொருவன்பெண்மையக்
கின்றெமைக்குடியொடுமிவண்கெடுத்தது
புன்றொழிலெங்களைப்பொறுத்தியன்னை நீ
யன்றெனயாமெனவேறுகாண்டியோ.

(இ-ள்) வேறொன்றுமறியாதஇந்தவொருவன்கொண்டபெண்மையக்குஇப்போது எங்களைக்குடியோடுங்கெடுத்தது எங்களுடையபுன்மைச்செய்கையை க்ஷமித்துஎங்களைரக்ஷிக்கவேண்டும்தாயேஉன்னன்றிவேறுயாங்கள்வேறுகவுங்கருதுகின்றோமோ—எ-று. (௰௪)

எனநெடிதிறைஞ்சினர்வசுக்களெண்மரு
மனநெகிழ்ந்திரங்குபுவயிட்டன்றேனுவு
டனையவர்தங்களையருட்கணோக்குறீஇ
வினைநெறிகேண்மினென்றியம்பன்மேயதே.

(இ-ள்) அஷ்டவசுக்களும்இவ்வாறு சொல்லித்தீர்க்கதெண்டன்செய்தார்கள் - அப்போது வசிஷ்டமுனிவருடைய காமதேனுவானது மனமிரங்கி அவர்களையருட்பார்வையாகநோக்கிப் பாவச்செய்கையின்னதின்னதென்றுசொல்லுகிறேன்கேளுங்களென்று சொல்லத்தொடங்கியது-எ-று. (௰௭)

குரவரைப்பிழைத்தவர்கொண்டநோன்பரைப்
பருவரச்செய்தவர்பழித்தல்சொற்றவ
ரிரவலர்க்கிதந்தவவிரங்குகிற்றிலாக்
கரவடத்தியற்கையர்கதியுங்காண்பரோ.

(இ-ள்) தாய்தந்தையர்முதலிய பெரியோர்களுக்குக்குற்றஞ்செய்தவர்களும் தவவிரதங்கொண்டிருப்பவர்கள் துன்பப்படும்படிசெய்கின்றவர்களும் - பழித்தல் சொன்னவர்களும்- இரவலருக்கு நன்மைகெடும்படி இரங்காத-கள்ளமான குணத்தையுடையவர்களுங் கதியையடைவார்களோ—எ-று. (௰௮)

மைந்தரிற்கற்புடைமனையைநீக்குநர்
பைந்தொடிமாதரிற்பதியைத்தப்புந
ரந்தணர்க்கீதுமென்றதுமறுத்தவர்
தந்தமர்க்குதவிலர்நலத்திற்சார்வரோ.

(இ-ள்) புத்திரர்களுடன்கற்புள்ளமனைவியை நீக்குகின்றவர்களும் பைம்பொன்னாற் செய்த வளையலணிந்தகையையுடையமனைவியைவிட்டுக்கணவனை நீக்குகின்றவர்களும்- பிராமணர்களுக்குக்கொடுக்கிறோமென்றுசொல்லிப்பின்பில்லையென்பவர்களும் தங்கள்சுற்றத்தாருக்கு உதவிசெய்யாதவர்களும்நன்னெறியிற்செல்வார்களோ

அன்னமுமியற்றியவறனும்விற்றவர்
கொன்னவின்மறையினூல்கூலிக்கிற்றவர்

முன்னகைசெய்துபின்பகைமொழிந்தவர்
சொன்னவைவழுக்குநர் துறக்கமாள்வரோ.

(இ-ள்) சாதத்தையும் தாங்கள் செய்ததருமங்களையும் விற்பவர்களும் - பெருமையுள்ளதாகச் சொல்லுகின்ற வேதங்களைக்கூலிக்கு விற்பவர்களும் - எதிரில்முகமலர்ச்சியுடன் நகைசெய்துபின்புவிரோதமானவார்த்தை சொன்னவர்களும் - வாக்கினாற்சொல்லியதைத்தவறினவர்களும் சுவர்க்கலோகம் ஆள்வார்களோ—எ-று. (உய)

இறைவனையடைச்சனாயிருந்துசெற்றவர்
கறவைகள்பருகுநீர்க்கயங்கடேர்த்தவர்
பொறைவனக்கிளிகளும்வளர்க்கும்பூவையுஞ்
சிறைபடுத்தவரொலாந்துயரிற்றீர்வரோ.

(இ-ள்) மந்திரியாயிருந்து தன்னரசனையேகொன்றவர்களும் பசுக்களுண்ணும்நீர்க்குளத்தைத்தூர்ப்பவர்களும் மலையுள்ளவனத்திற்சஞ்சரிக்குங்கிள்ளைகளையும் வளருகின்றநாகணவாய்ப் பக்ஷிகளையுங் கூட்டிலடைத்துவைப்பவர்களுமாகிய இவர்களெல்லாருந்துன்பம்விட்டுநீங்குவார்களோ—எ று. (உக)

பழுதில்செம்பொன்னுடன்பால்கரந்தவ
ரெழுதியபிறர்முறையெடுத்தொளித்தவ
ரழிதுயரொளியவர்க்காகவாக்குநர்
வழியொழுக்கிறந்தவர்மறலிக்குய்வரோ.

(இ-ள்) குற்றமில்லாத பொன்னினையும் பாலையுந்திருடியொளித்தவர்களும் எழுதியபிறர்புத்தகத்தை யெடுத்தொளித்தவர்களும் எளியவர்களுக்குக்கெடுதியான துயரத்தை யுண்டாக்கினவர்களும் வருணாச்சிரம ஒழுக்கத்தையிறந்தவர்களும் யமனுக்குத்தப்புவார்களோ—எ-று. (உஉ)

ஆதியில்வருணருமவர்தம்மாதரும்
பேதியுதிம்பமுமெனுதுபோக்கினர்
சாதியைவிழைந்திளந்தாழைப்பாலையைக்
காதியகருவியர்பவக்கடப்பரோ.

(இ-ள்) முதற்சாதியாகிய பிராமணர்களும் அவர்கள்மாதருமே அரசமரமும் வேப்பமரமுமெனக்கருதாமல் வெட்டிப்போடுகின்றவர்களும் கள்ளினைவிரும்பி இளந்தென்னம்பாளையை யறுக்குங்கருவியையுடையவர்களும் பிறவிநீங்குவார்களோ—எ-று. (உ௩)

தேனுவைமடிமூலையறுத்தகீங்கினர்
மானனையார்கருவழித்தவஞ்சக
ரூனுகர்வாழ்க்கையரொருவர்செய்நன்றி
யானதுமறந்தவரலக்கணுய்வரோ.

(இ-ள்) பசுவின்மடிமூலையை யறுத்தபாவிகளும் மான்பார்வையொத்தபார்வையுள்ள மாதர்கள்கருப்பத்தையழித்தபாவிகளும் மாமிசந்தின்னும் வாழ்க்கையினையுடையவர்களும் ஒருவர் தங்களுக்குச் செய்தநன்றியைமறந்தவர்களும் துன்பம்நீங்குவரோ—எ-று. (உ௪)

எட்டிரளுங்கருப்பினுமாட்டுநர்
தட்டறவுவாத்தொறுந்தயிர்மதிக்குநர்
நட்டவர்மனைவிகற்பழித்தநாணிலர்
சிட்டரைப்பழித்தவர்செல்லன்மாய்ப்பரோ.

(இ-ள்) எட்களைச்செக்கிலுங் கரும்புகளையாலையிலும் ஆட்டுகின்றவர்களும் தடையின்றி அமாவாசைதோறுந் தயிர்கடைந்தவர்களும் சிநேகருடைய மனைவியர் கற்பினையழித்த லச்சைகெட்டவர்களும் பெரியோர்களைப்பழித்தவர்களும் தங்களுக்குவருந் துன்பம் நீங்குவார்களோ—எ-று. (உ௫)

ஆவினம்வெரிநிறச்சுமையமைப்பவர்
மாவினம்புட்குலம்வதைப்பவோம்பினர்
நாவிகள்புரக்குநரினியநாய்க்கிடும்
பாவியர்நிரயமுநீந்தற்பாலரோ.

(இ-ள்) பசுக்கூட்டத்தின் முதுகொடிபத்தக்கதாகச்சுமை வைப்பவர்களும் மிருககூட்டத்தையும்பறவைக்கூட்டத்தையுங்கொல்லவிரும்பினவர்களும் புழுகுப்பூனையை வளர்ப்பவர்களும் நாய்களுக்

னியதுகளானபொருளைக்கொடுக்கும்பாவிகளும் நரகத்தையும்நீ க்கும்பகுதியரோ—எ-று. (உசு)

தேவருக்கெனவிரந்துண்ணுந்தீயவர்
யாவருக்கும்படுநிந்தையேற்றுநர்
காவெனப்பிறர்வைத்தநிதியங்கைக்கொளும்
பாவமுற்செய்தவப்பழியொழிப்பரோ.

(இ-ள்) தேவருக்கென்றுஇரந்து தாங்களுண்கின்ற பாவிகளும் எல்லாருக்கும்நிந்தையை யேற்றுகிறவர்களும் இதனைப்பாதுகாத் துவையென்றுபிறர்தங்களிடத்தில்வைத்தநிதியை அபகரித்துக்கொ ள்ளும்பாவமுதலாகச்செய்த அந்தப்பாவங்களையொழிப்பார்களோ

அன்னவர்நிற்பவுமமலனாலயந்
தன்னினெப்பொருள்களுந்தவத்தர்செல்வமுந்
துன்னெறிவிளைப்பதுபாவர்துய்ப்பினு
நன்னெறிகாண்பதெந்நாளுங்கண்டிலேன்

(இ-ள்) அவர்கள்நிற்கட்டும் பரமசிவனுடைய ஆலயத்திலுள்ள எவ்விதப்பொருளும் தபசிகளுடைய பொருள்களும் பாவச்செய் கையைவிளைக்கத்தக்கது - ஆதலால் அப்பொருள்களை எவர்கள் அபகரித்துக் கொண்டாலும் பாவத்தைக்காண்பதேயன்றிநன்னெ றியைக்காண்பதெந்நாளுங்கண்டிலேன்—எ-று. (உஅ)

ஆதலிற்றவமுனியகத்துத்தேனுவா
மேதகப்பிறர்பொருளாமென்மென்முலை
நோதகத்தொடவிவனோன்கைநீட்டிய
பாதகத்துமக்கிடர்படர்ந்துபுக்கதே.

(இ-ள்) ஆதலால் தவமுள்ளவசிஷ்டருடைய ஆச்சிரமத்துப்பசு வாகிய மேன்மைபொருந்தியபிறர்பொருளாமென்முலைநோம்படி யிவனுடைய பலம்பொருந்தியகையைநீட்டிய பாதகத்தினால் உங்க ளுக்குந்துன்பம்வந்துநேரிட்டது—எ-று. (உகூ)

பாந்தொருபிறர்பொருளுகரப்பற்றெழுந்
தரத்தையாயினலவளைப்பல்பக

பிரந்துணத்தருமலந்றங்களீண்டறக்
கரந்துணத்தகுவதோகட்வுணீதியே.

(இ-ள்) பிறர்பொருளையுண்ண மிகுந்தமனப்பற்றுண்டாய் அப்பொருள்கிடையாமையால்வருத்தமுள்ளவர்களானால். அந்தப்பொருளுக்குரியவர்களை அநேகநாளிரந்துகேட்டுவாங்கியுண்ணத்தகுமல்லது தருமநெறிகெடஅவர்களைவஞ்சித்துண்ணத்தக்கதோகடவுளாற்சொல்லப்பட்டவேதநீதியாவது—எ-று (ருல)

உண்மயக்கனைவர்க்குமும்மையுண்டதிந்
நிண்மயக்கொன்றுண்டுதெரியக்கேட்டிரான்
மண்மயக்கிரணியமயக்குநீங்கினும்
பெண்மயக்கரிததிற்பிழைத்துநீங்கலே.

(இ-ள்)மூன்றுவகையாகிய மனமயக்கமெல்லார்க்குமுண்டுஅம்மூன்றுதியானமயக்கமொன்றுண்டு அதுதெரியக்கேளுங்கள் மண்ணாசையென்னுமயக்கமும் பொன்னாசையென்னுமயக்கமும் நீங்கினாலும் பெண்ணாசையென்னு மயக்கத்தினின்று தப்பிநீங்குதல்அருமை—எ-று. (ருக)

பெண்பணிகடக்கிலனுமதுபின்னவன்
பண்பிலர்செய்தலேசெய்தபான்மையான்
மண்புகநுங்களைவைதிட்டேனிந்தத்
திண்பவநுகர்ந்தபினலதுதீருமோ.

(இ-ள்) தன்மனைவியின் ஏவலைக்கடந்திலனாய் உங்கள்பின்னவன் யோக்கிதாபக்ஷமில்லாதவர்கள்செய்யுஞ் செய்கையினையே செய்தபான்மையினால் நீங்கள்பூலோகத்திற்போம்படி சபித்தேன் இந்தத்திண்ணியபாவத்தைஅனுபவித்தபின்பு இந்தச்சாபந்தீருமல்லது அதற்குமுன்தீராது—எ-று. (ருஉ)

என்பதுகேட்டுநொந்தெண்வசுக்களுந்
துன்பமீதென்றறுங்கூறெனத்தொழ
வன்பினைநுகர்ந்துநாமுண்டுமாண்டதன்
பின்பொருநாரதன்பெரிதுஞ்செய்துமால்.

(இ-ள்) இவ்வாறுகாமதேனுசொல்லியதை அஷ்டவசுக்களுங்கேட்டுவருந்தித்தாயே யிந்தத்துன்பம் எப்போது நீங்குமென்றுதொழுதவளவில் (காமதேனுமனமிரங்கி) நீங்கள்வலியபிணத்தைப்புசித்து நூறுவருஷஞ்சென்றபின்பு ஒப்பற்றநாரதமுனிவர் அவ்விடத்துக்குவருவார்—எ-று. (௬௬)

நாரதன்மொழிவழியுமக்குநான்சொன்ன
பாரவெங்குறையறும்புகுமின்பார்க்கெனக்
காரணவல்வினைகடத்தலொல்லுமோ
வாரொருவர்க்குமென்றவருமேகினர்.

(இ-ள்) நான்உங்களுக்குச்சொல்லியபெரியசாபம் அந்தநாரதமுனிவர்சொல்வழியினால் நீங்கும் - ஆதலால் பூலோகத்துக்குப்போங்களென்றுகாமதேனுசொல்லக்கேட்டு அந்தவசுக்கள்- எவர்களுக்கேயாயினும்ஒருகாரணத்தால் வரும்வலியவினையைக் கடக்கக்கூடுமோவென்று (தங்களிற்சொல்லிகொண்டு) பூலோகத்திற்சென்றார்கள்.

அஷ்டவசுக்களின்பெயர் அனலன்-அனிலன் - ஆபச்சைசவன் சோமன்-தரன்- துருவன்-பிரத்திபூசன்-பிரபாசன்-என்பவைகளாம்

காமதேனுச்சருக்கமுற்றியது.

ஆக திருவிருத்தம்-௬௪௫.

---

## நாரதச்சருக்கம்.

---

எருபுவசுக்களுங்காசியிமத்து
மாகுவைதிணப்பிணநுகர்ந்தூவண்ணமு
மாகமுமொளியொளித்தாண்டுநூற்றையும்
வேகமோடொழித்தநுகடந்தவேலையே.

(இ-ள்) அஷ்டவசுக்களுங்காசிச் சுடலையிற்சென்று திணமுள்ள பெரியபிணக்குவையையுண்டு அழகும் சரீரத்தின்தேசசும்நீங்கிநூறுவருஷத்தையும்விரைவில்நீக்கி-அதுநீங்கினபோது—எ-று (௧)

அருந்தவநாரதனவிழுத்தேசனைப்
பெருந்தவக்காசியிற்பணிந்துபேர்தலு
மிருந்தனர்வசுக்களுந்தமதிடர்க்கொரு
மருந்தெனக்கண்டனர்வழிபட்டேத்தினர்.

(இ-ள்) அருமையானதவஞ்செய்த நாரதமுனிவர் பெருந்தவம் நிறைந்தகாசியிற்சென்று விசுவநாதரைப்பணிந்து செல்லுமளவில் அங்கிருந்த வசுக்கள் தங்களிடருக்கொரு மருந்துபோலாகக்கண்டு வந்தனைவழிபாடுசெய்து துதித்தார்கள்—எ-று (௨)

வேறு.

வசுக்கள்பின்னவன்செய்ததும்வயிட்டன்மாமனையிற்
பசுக்கனன்றதுஞ்சாபமுற்பகர்ந்ததுநோக்கி
யிசைக்குநாரதன்குண்டிகைப்புனன்முகந்திவர்மேல்
விசைக்கவீசலும்பண்டையின்மேனிபெற்றுய்ந்தார்.

(இ-ள்) அந்தவசுக்களில் எட்டாவது வசுவானவன்செய்த காரியத்தையும் - வசிஷ்டருடைய ஆச்சிரமத்திலிருக்குங் காமதேனு கோபங்கொண்டதையும் அதுமுன்னஞ்சாபங்கூறியதையும் அறிந்து சொல்லுகின்ற நாரதர் தம்முடைய கமண்டலத்திலிருக்குஞ் சலத்தையள்ளி யிவர்கள்மேல்விசைக்கும்படி வீசினவளவில்சாபம் நீங்கி முன்னிருந்த மேனிபெற்றுய்ந்தார்கள்—எ-று (௩)

பழமைத்தம்முருவெளிப்படுகளிப்பிலர்பல்கா
லழனைத்துயித்ததந்தீவினைக்ககமஞ்சியஞ்சி
யுழையிற்கைதொழும்வசுக்களைநாரதனுணர்ந்து
குழையச்சிந்தனைவருந்தன்மினெனத்தனிகூறும்.

(இ-ள்) பழமையாகியதங்களுருவம் வெளிப்படுதலாலுண்டாகத்தக்க சந்தோஷமில்லாமல்தாம்பினைங்களையுண்ட தங்கள்பாபத்தைக்குறித்துமனமஞ்சியஞ்சித் தம்மருகில்வந்துகைகுவித்துப் பலமுறைதொழுகின்றவசுக்களைநோக்கிமனமெலியத்தக்கதாக நீங்கள்வருந்தாதீர்களென்று நாரதமுனிவர்தனியாயிருந்துசொல்லுகிறார்எ-று

எடுத்தகாயத்தாலியாவர்க்குமின்பதுன்பங்கள்
விடுத்துநீங்குங்கொன்மண்ணுடன்விண்முதல்யாவு
நடித்தபாவையப்பாவைக்குநிருத்தனெம்பெருமான்
படுத்தியாட்டுறும்பாசமேயிருவினைப்பாசம்.

(இ-ள்) எவர்க்கேயாகிலும் எடுத்தசரீரத்தினால்வரும் இன்பது ன்பங்கள்விட்டுநீங்குமோ பூமியந்தரசுவர்க்கமாகிய இடங்களிலிரு க்குமுயிர்களெல்லாங்கூத்தாடும்பாவைகள் அந்தப்பாவைகளையாட் டுவிப்பதற்குநம்முடையகடவுளே கூத்தாட்டிஅவைகளைக்கட்டியா ட்டுகிறபாசமெதுவென்னில் நல்வினைதீவினையென்னும்பாசமாம்-

நல்வினையும்பிறவிக்கேதுவாதலா லிருவினைப் பாசமென்றார் இதனை அறம்பாவமென்னு மருங்கயிற்றாற்கட்டியென்னுந் திரு வாசகத்தாலுமுணர்க', (௫)

துன்பம்வேட்டலசூழ்வதுசூழுங்காலதுபோ
லின்பமென்பதுமுயன்றுழலாதுவந்தெய்து
முன்பராபரன்முடித்ததேமுடியுமென்றெண்ணி
யன்பராய்த்தொழமுபல்வதேமுயற்சியென்றறியார்.

(இ-ள்) துன்பமென்பது ஒருவர்விரும்பியன்றுவருவது அது வந்துசூழ்ந்தவிடத்து அதுபோல இன்பமென்பதும் ஒருவன்வி ரும்பிஅதற்கு வேண்டியமுயற்சிசெய்து வருந்தாமலேவந்துசே ரும் ஆதலால் ஆதியில் பரமசிவம்முடித்ததே முடியுமென்றுகரு தி அன்பாய்த்தொழும்படி முயற்சிசெய்வதே முயற்சியென்றறி யார்கள்—எ-று. (௬)

நனவுபோந்தொறுங்கனவுறுங்கனவுபோய்நடப்பின்
வினவின்மேதக்கநனவுறுமிரண்டன்றிவிளையா
வினையயாவர்க்குமின்பமுமின்பமாய்த்திறுங்கா
லனையதுன்பமுமேயெனமறைகிடந்தறையும்.

(இ-ள்) சாக்கிராவஸ்தை நீங்குந்தோறும் சொப்பனவஸ்தை பொருந்தும் இந்தச்சொப்பனவஸ்தை நீங்கிப்போனபின்யாதெனவிற்றுவினால் மேன்மைபொருந்தியசாக்கிராவஸ்தையைப்பொருந்தும்

இவ்விரண்டுமாறிமாறிவருவதன்றிவேறொன்றுவிளைவனவல்லயாவர்க்கும்இத்தன்மையுள்ளஇன்பம்வருவதும்அந்தஇன்பமாய்ந்தொழிந்துபோம்போது அத்தன்மையானதுன்பம் வருவதுமென்றுவேதமிருந்துமுறையிடுகின்றது—எ-று. (எ)

மல்லலாக்கமதாக்குழிமகிழ்வதுமகிழா
தல்லலாக்குழியழுவதுமறிபவர்க்கறிவோ
மெல்லவானகத்தேற்றினும்வெய்யதீநிரயச்
செல்லல்வீழ்க்கினுஞ்சிவமெனத்தெளிவதேதெளிவாம்

(இ-ள்) வளப்பம்பொருந்திய இன்பத்தை யுண்டாக்கும்போது மகிழ்ச்சியடைவதும் துன்பத்தையுண்டாக்கும்போது மகிழாமல் அழுவதும்அறியுமவர்களுக்கு அறிவாகுமோ-எளிதாகச்சுவர்க்கலோகத்திலேற்றினும்வெவ்விதான தீநரகத்துன்பத்தில் தள்ளினும் சிவன்செயலென்றுதெளிவதேதெளிவாம்—எ-று. (அ)

அஞ்சிநிற்பதாலழித்தழித்தியற்றுமோவமல
னெஞ்சுநொந்துநொந்தாண்மையையிழப்பதோநிலைமை
வஞ்சிபாகனையிம்மையிற்பூசிக்கின்மறுமைச்
சஞ்சிதாதிமூவினைகளுந்தழற்படுஞ்சருகாம்

(இ-ள்) துன்பத்துக்குப்பயந்துநின்றதினால்-முன்னியமித்ததை யழித்தழித்தாக்குமோபரமசிவம் மனம்வருந்திவருந்தி ஆண்மைத்தன்மையினையிழந்துவிடுவதோஉறுதிநிலைமை- ஆதலால்பார்வதிபாகனையிந்தப்பிறப்பிற்பூசித்தால்மறுபிறப்பில்சஞ்சிதமுதலானமூன்றுவினைகளுந்தீப்பட்டசருகுபோலாம்—எ-று. (௯)

சஞ்சிதமுதலியமூன்றாவது-சஞ்சிதம்-பிராரத்துவம்- ஆகாமியம் என்பவை. முன்ஜெனனத்தில்அநுபவித்து மிகுந்தவினைக்குவை.சஞ்சிதம் இந்தஜென்மத்தில் அதனை அநுபவிப்பது பிராரத்துவம்இதிலேறுகிறவினைகள் ஆகாமியம்.

ஆகையான்மறைக்கிரியென்பதனேகவானவர்க்குத்
தோகைபாகனாற்சொலப்பட்டதக்கிரிச்சூழ
லோகைகூரமார்க்கண்டனுமருந்தவத்துறைந்தான்
யோகைநீரவட்புரிமினென்றுடன்கொடுபோனான்

(இ-ள்) ஆகையினால் வேதகிரியென்பது அநேகந்தேவர்களுக்கும்பார்வதிதேவியாரையிடப்பாகத்திலுடைய பரமசிவனாலெடுத்துச்சொல்லப்பட்டது அந்தமலையின்சாரலில் மிகுந்தமகிழ்ச்சிகொண்ட மார்க்கண்டமுனிவரும் அருந்தவஞ் செய்துகொண்டிருக்கின்றனர் நீங்களும் அவ்விடத்தில் போதலைச்செய்யுங்களென்று தம்முடனழைத்துக்கொண்டுபோனார்—எ-று.

தோகையென்பது- மயில்போன்ற சாயலுள்ள பார்வதிதேவியாரெனப்பொருள்கூறிக்கொள்க. (௰)

தேயம்யாவையும்பாரதகண்டத்திற்பிற்செல்லப்
போயநாரதமுனியொடுவசுக்களாம்புனிதர்
மேயதண்டகநாட்டகம்புகுந்துவெண்டிரையிற்
காயமண்டியகுகநதித்துறையதுகண்டார்.

(இ-ள்) பாரதகண்டத்திலிருக்குந் தேயங்களெல்லாம் பின்படச்சென்று நாரதமுனிவருடன் வசுக்களாகிய புனிதர்கள்பொருந்திய தண்டக நாட்டினிற்சேர்ந்து வெண்மை நிறமுள்ள அலையினால் ஆகாயத்தையளாவும்படியான ஸ்கந்தநதித்துறையைக்கண்டார்கள்.

மகமேருவைச் சூழ்ந்தநவகண்டங்களில் இமயகிரிக்குத்தென்புறமுள்ளது பாரதகண்டம் - இதனைவிவரித்தெழுதினால் அதிகமாகுமாதலால் ஸ்காந்தம் அண்டகோசபடலத்திற்கண்டுகொள்க(௰௧)

வெள்வலம்புரிசலஞ்சலம்விளங்குநித்திலங்க
டெள்ளலங்கொளிப்பளிக்கினஞ்செய்யதாளெகின
முள்ளகம்புறம்பொதுளலுமுத்தரக்கங்கை
யள்ளலம்புனல்கிடப்பதையொத்ததப்புனலே.

(இ-ள்) வெண்மையாகியவலம்புரிச்சங்கங்களும்-சலஞ்சலமென்னுஞ் சங்கங்களும் - விளங்குகின்றமுத்துகளும் - தெளிவுள்ளதாய்ப்பரவுகின்ற ஒளியையுடையபளிங்குகளும்- செந்தாளுள்ள அன்னங்களும்-உள்ளிடத்திலும் புறத்திலுமாகநெருங்கியிருப்பதினால் அந்த நதிநீரானது அள்ளப்படுந்தன்மையும்அழகுமுள்ளஉத்தரகங்கைநீர் இருப்பதையொத்தது—எ-று.

சங்கமுதலியவைகளையுடைமையால்அந்தநதிகங்கையைப்போ லிருக்கின்றதென்பதுகருத்து - அள்ளலம் - என்பதிலிருக்கும்-அம் - சாரியையெனினுமமையும். (௰௨)

நீலமாமணிவிடுசுடர்க்கற்றையுநிவந்த
வேலவாறடிக்கொடுஞ்சிறைப்பந்தருமியங்கத்
தாலமேல்வினைப்பெருமகன்றருமகன்பயந்த
காலனுமொருகடவுடன்றங்கையைக்கடுக்கும்.

(இ-ள்) நீலரத்தினங்கள் விடுகின்ற சுடர்க்கற்றையும் பரந்ததாய்ப்பொருந்திய வண்டுகளின் வளைந்தசிறைப்பந்தரும் பிரகாசிப்பதினுலேபூமியினிடத்துநல்வினையென்னுந் தவத்தொழிலுள்ளகாசிபரிஷியானவர்பெற்ற புத்திரனாகிய சூரியன்பெற்றபுத்திரனாகிய எமதருமராசனென்பவனுடைய தங்கையாகியகாளிந்திநதியை யொப்பாகும்.எ-று.

நீலரத்தினங்களின் பிரகாசம் பாய்ந்தும் வண்டுகளின் சிறகுகள்பந்தலமைத்தது போலப்பொருந்தியும் அந்தநதி நீர்வெண்மைநிற மாறிக்கருமை நிறம்பொருந்தினமையால் காளிந்திநதியையொப்பாகுமென்றார். ஆறடியென்பது - வண்டு - அறுகால் அறுபதம் - என்றுவழங்குவதினாலுமுணர்க. (௰௩)

பதுமராகமும்படர்ந்தெழுபவளத்தின்சுடருங்
கதுவிவாய்தொறுநிழற்றலுங்கறங்குநீர்ப்படிந்தார்
முதிருந்தீவினைமுனைப்பகையினத்தொடுமுடித்த
வுதிரவாறெடுத்திந்தவாறொழுகுமாறொழுகும்.

(இ-ள்)பதுமராகமணியின் ஒளியும் பவளத்தின்பரந்தெழுகின்ற ஒளியும்பொருந்தியிடந்தோறும் பிரகாசிப்பதினுல் ஒலிக்கா நின்ற அந்நீரில் மூழ்கினவர்களுடையமிகுந்தபாவமாகிய பகையையினத்துடன்சேதித்தலாலுண்டாகும்உதிர ஆறு பெருகி இவ்வாறோடுமுறைமைபோலசெல்லுகின்றது—எ-று. (௰௪)

மாலயன்புரந்தரன்பதிமகளிரும்பிறருங்
காலமும்மையும்படிதொறுங்களாந்தகுங்குமத்தின்

கோலவண்டலால்வடகுலநாவலின்கொழுஞ்சாற்
றேலமண்டியவொழுக்கெனவொழுகுமந்நதியே.

(இ-ள்) விஷ்ணு பிரமன் தேவேந்திரன் என்னுமிவர்களுலகத்தி லிருக்கும்-மாதரும்மற்றத்தேவமாதர்களும்மூன்றுகாலமும்ஸ்நானஞ் செய்யுந்தோறும் அவர்கள்மேனியிலிருந்துகரைந்தகுங்குமத்தினழகி யவண்டலால் மகமேருவின்றென்புறத்திலிருக்கிற நாவல்மரத்துக் கனியின்செழுஞ்சாறாகியசாம்புநதநதியினுடைய ஓசைபொருந்தி யஒழுக்கம்போலச்செல்லும் அந்நதியானது—எ-று

அந்தநாவல் மரத்தின்சாறானது அளவிடப்படாத செம்பொ ன்மயமானதால் - குங்குமக்குழம்புபடிந்திருக்கும் - இந்தஸ்கந்தந திக்கொப்பாகக்கூறினர்.

கடிகமழுநாவலொன்றுதென்பானின்ற
காரணத்தாற்பாரதன்றன்கண்டமூற்று
மிடனுடையநாவலந்தீவெனப்பேர்பெற்ற
தித்தருவின்றீங்கனிநீராறாய்மேருத்
தடவரையைப்புடைசூழ்ந்துவடபாற்சென்று
சாம்புநதப்பேர்பெறுமச்சலிலந்துய்த்தார்
உடன்முழுதும்பொன்மயமாயயுதமேலு
மொருமூவாயிரமாண்டங்குறைவரன்றே.

(இதனைகாந்தம்-அண்டகோசப்படலத்திற்காண்க) (௬௫)

ஆழ்ந்தநூலறிசான்றவரகத்தனவெவையுஞ்
சூழ்ந்தமாக்களுக்கொளிப்பறத்தோற்றலைப்போலத்
தாழ்ந்துபாதலத்தளவியுந்தண்புனற்றெளிவு
வீழ்ந்தவாம்பொருள்யாவையுந்தெரிதரவிளக்கும்.

(இ-ள்) ஆழ்ந்தகருத்தினையுடைய சாஸ்திரங்களையுணர்ந்த சான் றோர்களுள்ளத்திலிருப்பவைகளெல்லாம் தங்களைச்சேர்ந்தமனிதர்க ளுக்குஒளிப்பில்லாமல் தெரிவிப்பதுபோல அந்தநதி ஆழ்ந்துபாதா ளத்தையளாவியிருப்பினும் தண்மைபொருந்திய அந்நீரினதுதெ

ளிவானது தன்னிடத்தில்விழுந்த பொருள்களையெல்லாம் தெரியும்படிதெரிவிக்கும்—எ-று. (௰௬)

ஊடிவிண்பறந்தோடியவோதிமப்பெடையை
நாடிமுண்டகக்காட்டகநடுநின்றவெகினம்
பாடிருந்தமாதவர்தவநோக்கியபழக்கா
லாடுமைங்கனலிடைத்தவந்தொடங்கியவனைய.

(இ-ள்) தன்னுடனூடிஆகாயத்திற்பறந்தோடியபெட்டையன்னத்தைத்தேடிக்காணுமல் செந்தாமரைமலர்க்காட்டினிடத்திலிருக்கும் ஆணன்னமானது பெருமைபொருந்திய முனிவர்கள் செய்யுந்தவத்தைநாள்தோறும்பார்த்தபழக்கத்தினுல் கொழுந்துவிட்டசைகின்ற பஞ்சாக்கினியின்மத்தியில் தவஞ்செய்யத் தொடங்கியிருப்பதையொத்தன-எ-று

தவஞ்செய்தால் பெட்டையன்னத்தைக் காணலாமென்னுங் கருத்து. (௰௭)

கரண்டங்கின்னரஞ்சிரற்குருகோதிமங்கம்புள்
குரண்டஞ்சாதகஞ்சகரிவண்டானங்கள்கோகம்
புரண்டசீகரத்தெறிதொறுந்துறைதொறும்புலம்பி
யிரண்டுபாடுநின்றெழுந்துவீழ்ந்திழுமெனவிரங்கும்.

(இ-ள்) நீர்க்காக்கை - கின்னரம் - சிச்சிலி - அன்னம்-நீர்க்கோழி - கொக்கு - வானம்பாடி - நாரை-பெருநாரை-சக்கரவாகம்.என்னும் இப்பக்ஷிகள் புரண்ட நீர்த்துளிகளுடன் அலைவீசுந்தோறும் நீர்த்துறைகளெங்கும் இரண்டு பக்கத்திலும் நின்றுமேலே பறந்தும் உடனேகீழேயிறங்கியும்ஒலித்துக்கொண்டிருக்கும்-எ-று

(இழுமென்பது-ஒலிக்குறி)

புத்தகிற்பசுஞ்சாந்தமுழுத்தமும்புடையே
மொய்த்தநந்திமாமலையெனும்புவிமகண்முலைக்குந்
தத்துவார்கடலாடைக்குமிடைப்படத்தயங்கு
முத்தீயமாமொலியலொத்தொலிக்குமவ்வொலியல்,

(இ-ள்) புதிய அகிலும் - பசியசந்தனமும் - முத்துகளும் சாரலில் நெருங்கியுள்ள நந்திமலையென்கிற பூமிதேவியினுடையதன

க்கும் அலைகள்தத்துகின்றதாய் நீண்டசமுத்திரமாகிய ஆடை
க்கும் மத்தியில் பொருந்தவிளங்குகின்ற உத்தரீயமென்னும் வஸ்
திரத்தை யொத்தொலிக்கும்—எ-று,

நந்திமலை-புவிமகள்கொங்கைபோலாக அதன்சாரலிலிருந்து
பெருகுகின்றஆறு உத்தரீயம்போலிருக்கின்றதென்பதுகருத்து,

பாதலத்தளவளவுந்தெரிந்தபாப்பரசுஞ்
சீதளத்திளம்பாசடைமிடைகின்றசெறிவு
மாதியுச்சியிற்கங்கையுங்கங்கைசூடரவு
மீதினிட்டகூவிளங்களுமெனத்தனிவிளங்கும்,

(இ-ள்) பாதாளவரைக்கும் பொருந்தியிருப்பதினால் தெரிகின்ற
பாம்புகளினரசாகிய ஆதிசேஷனும் - குளிர்ச்சியுள்ளதா யிளமை
பொருந்திய பச்சிலைநெருங்கிய நெருக்கமும் - பரமசிவனுடைய
திருமுடியில்நின்ற கங்கையும் அந்தக்கங்கைக்குள்சர்ப்பமும்- அ
ம்முடியில் தரித்தவில்வங்களும் போலத்தனித்தனிவிளங்கும்.எ-று

சார்தரும்பூழிலும்போதுமென்கனிகளுந்தலைக்கொண்
டேந்தியோடுகைநந்திவெற்பினைத்துமைநாகம்
போர்த்துவாழ்தரவிடந்தருங்கடலெனப்புரிந்து
காந்திவான்கையாற்கையுறைநீட்டலேகடுக்கும்,

(இ-ள்) சந்தனமரமும் - அகில்மரமும் - மலர்களும் - மெல்லி
யகனிகளும் - என்னுமிவைகளை யேந்திக்கொண்டு அந்தநதியோ
டுவது நந்திமலையினினமாகிய மைநாகமலையானது வந்துவாழும்ப
டி யிந்தக்கடலிடங்கொடுத்ததென் றுவிரும்பி ஒளியும்சிறப்புமுள்
ள அலையாகிய கையினால் கையுறைதருவதை யொக்கும்—எ-று.

சந்தனமுதலியபொருள்களை யேந்திக்கொண்டு அந்தநதியா
னது கடலினிடத்திற்செல்லுவது அதற்குக்கையுறைநீட்டுவதுபோ
லிருக்கின்றது - அவ்வாறுநீட்டுவதற்குக்காரணம்யாதோவென்னில்
இந்தக்கடல் மைநாகமலைக்கு இடங்கொடுத்த நன்றியைக்குறித்து

அதற்குக்கையுறைதரு வதுபோலாமென்க மைநாகங்கடலிலொளி த்ததற்குக்காரணம் யாதோவென்னில் இந்திரன் மலைகளின்சிறகுக ளையறுத்தபோது மைநாகம் அஞ்சிக்கடலிலொளித்தது-எ-று (௨௧)

தோற்றுவெற்பினுந்தனதிடைக்குசநதித்தோகை
யாற்றலெய்தினும்வருந்துமென்றணிதுசெய்தளப்பான்
பாற்றரும்பெரும்பளிக்குவெண்குலையவப்பரவை
போற்றுகின்றதோனீட்டலைப்பொருவுமப்புனலே.

(இ-ள்) அந்தஸ்கந்த நதியென்னும்பெண்ணானவள்பிறந்தமலையி னிடத்து அடைந்திருந்த பலத்தைப்பார்க்கிலும் இப்போதுதன்னி டத்துக்குவருங்களிப்பினால்மிகுந்தபலத்தையடைந்தாலும் வரும்வ ழி தூரமாயிருந்தால் வருந்துமென்றுகருதிச் சமீபத்தையுந்தூரத் தையுமளக்கவெண்மை நிறம்பொருந்திய பளிங்குபோன்றநீர்க்க சையையுடைய அந்தச்சமுத்திரமானதுதான்வைத்துக்கொண்டிருந் தஒருகோலைநீட்டுதலையொப்பாகும் அந்தநீர்செல்லுகின்றஒழுக்கம்.

இவ்வளங்கெழுங்கந்தமாநதியைக்கண்டேகி
மெய்வளங்கெழும்வேதவெற்புழைச்சென்றுவீணைத்
தெய்வநாரதன்மார்க்கண்டனிருக்கையைத்தெரிவித்
துய்வதாம்படிவசுக்களுக்கெனவுரைத்தான்.

(இ-ள்) இத்தன்மையுள்ள வளப்பம்பொருந்தியஸ்கந்தமாநதியை க்கண்டுசென்று மெய்யானவளப்பம்பொருந்திய வேதகிரியினிடத் திற்சேர்ந்து மகதியென்னும்வீணையையுடையதேவரிஷியாகிய நார தமுனிவர் மார்க்கண்டமுனிவர் ஆச்சிரமத்தைக்காட்டி நீங்கள் உய்யு ம்வகையிதுவென்றுவசுக்களுக்குச்சொன்னார்—எ-று (௨௩)

(மகதியாழ்-பத்தொன்பதுநரம்புள்ளது)

நாரதச்சருக்கம்.

முற்றியது

ஆ. திருவிருத்தம்-௩௬௪.

---

உ

சிவமயம்.

# இந்திரச்சருக்கம்.

இருந்தமார்க்கண்டன்றிருவுருக்காண்டலுமிருகை
திருந்தமேற்குவிசென்னியர்தெளிதராவுளத்தர்
பரிந்தமேனியரொண்மரும்பணிந்தெழப்பார்த்துப்
புரிந்தமாதவனவர்குறையறிந்திவைபுகன்றான்.

(இ-ள்) மார்க்கண்ட முனிவரைக்கண்டவளவில் வசுக்களெண்மரு
கைகளைச் செவ்வையாகச் சிரசின்மேல்குவித்துவைத்துக்கொண்டு
தொன்றுந்தோன்றாத உள்ளத்தர்களாயும் வருந்தியமேனியர்களா
பணிந்தெழ அவர்களைநோக்கிவிரும்பிய அம்முனிவர் அவர்கள்
குறையறிந்து இந்தவார்த்தைசொல்லுகின்றார் — எ-று. (௧)

ஆர்க்குவந்துறுதுறுகண்களரியயன்மகவான்
போர்க்கும்பாவத்தின்மதிக்குறைபிறந்தொருபுன்மை
கூர்க்குந்தன்மைசெய்தொளியறவாழ்வறக்குடிபோய்ச்
சேர்க்குந்தம்பதமீண்டுஞ்சென்றுண்டனர்திளைத்தார்.

(இ-ள்) துன்பங்கள் எவர்களுக்குந்தான்வந்துசம்பவியாது மகா
விஷ்ணு பிரமதேவன்-இந்திரன் என்னுமிம்மூவர்களும் நேரிட்ட
பாவத்தினால் புத்தியீனமுண்டாகி யிழிவானதன்மையைச் செய்து
மேனியொளி அழிபவும் வாழ்வுநீங்கவும் இருப்பிடமும்நீங்கி மறு
படிசீர்பொருந்திய தங்கள்பதியைச்சேர்ந்து ஆண்டுகொண்டிருந்
தார்கள் — எ-று. (௨)

என்னக்கேட்டவெண்மருமெம்மைப்போலவிந்திரன்மா
லன்னத்தூர்தியுமெத்திறங்குறைபட்டதடிகேள்
பின்னைப்பேதுற்றதெவ்வண்ணம்பெரும்பதந்திரும்பத்தான்
முன்னைப்போலடைந்தமையென்கொன் மொழிகெனமொழி

(இ-ள்) இவ்வாறு மார்க்கண்டமுனிவர்சொல்லக்கேட்ட அந்தவ
க்கவெட்டுப்பேரும் (அவரைநோக்கிச்சுவாமீ) எங்களைப்போல இ
திரனும் - மகாவிஷ்ணுவும் . பிரமதேவனும்-என்னகாரணத்தினு
பிழைபடைந்தார்கள். அந்தப்பிழையினுல் எவ்வண்ணம் - துன்பம
டைந்தார்கள்-அதன்பின்பு தங்கள்பெரியபதங்களைமுன்போற்பெ
ருந்தியதெவ்வாறு சொல்லுமென்னச் சொல்லுகின்றார்—எ-று(ரு

வேறு.

பொன்னகர்ப்புரந்தரன்புரந்துவைகும்வைகல்வா
யந்நகர்ப்புடைக்கிடந்தவாடுகங்கையின்கணே
மென்னகைப்பிழந்துவெம்முகக்கணீர்விழத்துடைத்
தின்னகத்தெறிந்தெறிந்தணங்கொருத்தியேங்கினாள்·

(இ-ள்) இந்திரனானவன் பொன்னுலகத்தையாண்டுகொண்டிரு
க்கும்நாளில் அந்தப்பொன்னகரினருகிருக்கும்கங்கைநதிக்கரையினிட
த்தில் ஒருதெய்வமாதானவள் மெத்தென்ற நகையிழந்து விரும்ப
த்தக்க முகத்தினிடத்தில் கண்கள்நீர்விழ அதைத்துடைத்து இனி
நகத்தினுல் எறிந்தெறிந் தேங்கினாள்—எ-று (ச

கங்கையிற்கரைக்கணெய்தியிந்திரன்கலுழ்ந்தமாதர்
மங்கையைக்கலங்கியிற்பதென்கொலென்னமங்கையு
மெங்கையிற்கொணர்ந்தபந்தையின்றோடவன்பறித்
தங்கையிற்சுமந்துவெள்ளியம்பொருப்பையண்மினான்.

(இ-ள்) அந்தச்சமையத்தி லிந்திரனந்த நதிக்கரையிற் சேர்ந்
அழுகின்ற அந்தமாதினைநோக்கிநீமனங்கலங்கியிருப்பதென்னவென
றுவினுவினபோதுஎன்கையிற்கொண்டுவந்தபந்திணையிப்போது
ருஆடவன் பறித்துத் தன்னுடைய அழகிய கையில் தாங்கிக்கொண்
டுவெள்ளிமலையிற்சேர்ந்தான்—எ-று. (௫

அன்னகர்துகம்பறித்தடாதசெய்தவாடவன்
பின்னர்புக்குநவிதரப்பெருந்துணைப்பெறுமையு
மன்னர்கேள்வியின்வடியுமலர்க்கணீரலக்கணோ
டின்னல்பட்டதந்திபொன்னுமெளிகள்பட்டதில்லையே.

(இ-ள்) அந்தப்பந்தினைப் பறித்துக்கொண்டு தக்ரதகாரியஞ்செய்தஆடவன்பின்சென்று அவனைவருத்தத்தக்கபெரிய துணையைப்பெறாமையினாலும் அரசர்கேள்வியின்மையினாலும் நீலோத்பலமலர்போன்ற கண்களில் நீர்பெருகும்படித் துன்பப்பட்டதேயல்லாமல்வேறொன்று மெளியேன்பட்டதில்லை—எ-று- (சு)

என்றுரைப்பவிந்திரனிதற்கிரங்குசிந்தையா
னன்றொருத்திபந்துகொண்டகன்றமைந்தனடியெடுத்
தொன்றுபட்டவாயிரக்கணோடுநாடியெய்தினான்
குன்றவிற்குனித்தவையன்வைகுகுன்றகத்தரோ

(இ-ள்) அந்தத்தேவமாது இவ்வாறுசொல்லஇந்திரன் அதற்கிரங்கு கின்றமன முள்ளவனாய் அப்போது அவள்பந்தினையபகரித்துக்கொண்டுபோன ஆடவனுடைய அடியைக்குறித்துக்கொண்டு ஒருமைப்பட்ட ஆயிரக்கண்பார்வையுடனும் நாடிச்சென்று மலைவில்வளைத்தபரமசிவன்வீற்றிருக்கும் கயிலையிற்சேர்ந்தான்—எ-று- (எ)

தேனிரங்குகஞ்சவாவியுஞ்சிறந்தபானலங்
கானமுங்கலந்தெனக்கலந்துகாளைகன்னியாய்த்
தானுமம்மையும்புராரிசூதமாடுதன்மைபோல்
வானமங்கைபந்துதங்கண்மாடிருப்பவாடினார்-

(இ-ள்) தேனென்னும்வண்டுகளிசைபாடிக்கொண்டிருக்கும்தாமரைத்தடாகமும்சிறப்புள்ள நீலோத்பலக்கானமும் சேர்ந்திருப்பது போல்பரமசிவம்ஒருகாளைபோலவும் பார்வதிதேவியார் ஒருகன்னிபோலவும் வடிவங்கொண்டு சூதாடுதல்போல அந்தத்தேவமாதின்பந்துதங்களிடத்திலிருக்கும்படி ஒருதிருவிளையாடல்செய்தருளினார்-

தேன் - வண்டு - சுரும்பு - மிஞிறு - எனவண்டுகளில் நான்குசாதி - அவற்றில் - தேன் - வண்டு - என்னுமிவ்விரண்டு சாதியும் நற்கந்தங்களில்மொய்க்கும் - சுரும்பு - மிஞிறு-இவ்விரண்டும் எவ்வகைப்பட்ட கந்தங்களினும்மொய்க்கும் - இதனைச்சீவகசிந்தாமணிகாந்தருவதத்தை யாரிலம்பகத்திற்காண்க. (அ)

வேடமாறுயட்டுறைந்தவிமலனென்றறிந்தில
னாடலானையூர்தியானுமந்தவெல்லவந்தரன்
பாடிருந்தபந்துகண்டுபந்தினைக்கவர்ந்ததென்
கோடுகள்வனொத்துளாய்கொடுத்திடென்றுரப்பினான்.

(இ-ள்) பரசிவம் மாறுவேஷங்கொண்டிருக்கின்றதென்றறியாமல் - வெற்றிபொருந்திய வெள்ளையானைவாகனமுள்ள இந்திரன் அங்கு வந்து பரமசிவத்தினிடத்திலிருந்த பந்தினைக்கண்டு அபகரித்துக்கொள்ளுகின்ற திருடனையொத்தவனே - இந்தப் பந்தினைத் தேவமாது கையிலிருந்து கிரகித்துக்கொண்டுவந்ததேனோகொடுத்துவிடென்று அதட்டிச்சொன்னான்—எ-று. (௬௦)

சொற்றசொற்செவிக்கொளாதுசூதில்வைத்தகாதல்போற்
கற்றையஞ்சடைப்பிரானிருப்பநின்றகாரியும்
பொற்றவச்சிரங்கையிற்புடைப்பனென்றெடுத்தலு
முற்றகத்தறிந்துவள்ளலோர்கடைக்கணோவினான்.

(இ-ள்.) இவ்வாறிந்திரன் சொன்னவார்த்தையைத்தம்முடையதிருச்செவியிலேற்றுக்கொள்ளாமல் சூதாட்டத்திலிச்சைவைத்திருப்பவர்போலக்கற்றையாயழகுள்ளசடாமகுடத்தையுடையபரமசிவமிருக்கவே - அங்கிருந்த இந்திரனானவன் அடிக்கிறேனென்று பொலிவினதாகிய வச்சிராயுதத்தைக்கையிலெடுத்தவளவில் - பரமசிவம் திருவுள்ளத்துணர்ந்து அவன்மேல்சிறிதுகண்பார்வைசெலுத்தினர்.

ஏவுமக்கடைக்கணோடுமிந்திரன்றுளங்கிலன்
றூவுவச்சிரத்தொடுந்தடங்கையும்பெயர்க்கில
னோவியத்தையொத்துநின்றுயங்கினனகந்தையாற்
சேவுயர்த்துளானைவெல்வர்தேவருக்குள்யாவரோ.

(இ-ள்.) அவ்வாறு செலுத்திய கடைக்கண்பார்வையினால்-இந்திரனானவன்- அசைவில்லாமல்வீசும்படியெடுத்தவச்சிராயுதத்துடன் பெரியகையினையும் மடக்கமாட்டாதவனாய்ச் சித்திரத்தை யொத்துநின்று வருந்தினன் - ரிஷபக்கொடியுயர்த்த பரமசிவனை அகந்தையினால்வெல்லுகின்றவர்கள் தேவருக்குள்யாவர்—எ-று. (௬௧)

தழைமுடிச்சடைப்பரன்சமைத்தரூதமைத்தபி
னுழையருக்குணின்றுளாளொருத்தியைப்புரந்தரன்
குழையறச்சராவினிற்பிணித்துவைத்திகொண்டுபோய்
மழைமலைக்குகைக்கணென்னமாதுவைத்தபோதினே.

(இ-ள்.) தழைவாகிய சடாமுடியையுடைய பரமசிவம் - முன் தொடங்கியசூதாடியானபின்-தோழிகளுக்குள் அங்குநின்றவளாகிய ஒருமாதினைநோக்கியிந்தவிந்திரனைக்கொண்டுபோய் மெலியும்படி விஷமுள்ள பாம்புகளாற் கட்டி மேகந்தவழுமிம்மலைக்குகையில் சிறைப்படுத்திவையென்று கட்டளையிட்டபடி அந்தமாது கட்டி வைத்தபோது—எ-று. (௰௨)

வேறு.

கருங்கடலைக்குறுமுனிவன்வாய்புதைத்தகதியேய்ப்ப [வு
நெருங்கடலிற்குலிசியும்போய்நெடுங்குகை யினிடைச்சாய்ந்
பெருங்கடைக்கணுயிரத்தும்பெருகருவித்திரள்பாய
மருங்கடையத்தனதுயிர்ப்பிற்காற்றெறியமறிவுற்றான்

(இ-ள்,) அகஸ்தியமுனிவர் தம்முடையவாயில்கருங்கடலைமறைத்தகதியையொப்பாக பொருந்தியவன்மை குன்றியவச்சிராயுதனுகிய இந்திரன்போயந்தநெடியகுகையில் சாய்ந்து பெரிய ஆயிரங்கண்களினிடத்தினின்றும் பெருகாநின்றநீரருவித்திரள்பாயவும்-மருங்கிலேசெல்லும்படி தன்பெருமூச்சாகியகாற்றுவீசவும்மனமடங்கிக்கிடந்தான்—எ-று. (௰௩)

அணிந்ததருவனச்சாந்துமளறுணங்கிக்கமர்பிளந்த
திணிந்ததிரள்புயத்தினிடுஞ்செழுமாலைத்தலைவாடத்
தணிந்தரனைவலம்புரியாத்தாட்கழலுங்கழன்றேகப்
பணிந்திறைஞ்சாமுடிப்பாவமுடித்துறவுபடப்பட்டான்.

(இ-ள்.) அணிந்திருக்கும் கற்பகத்தின்சந்தனக்குழம்புஉலர்ந்து நிலப்பிளப்புபோல் பிளவுபட்டிருக்கிற திரண்டபுயங்களிலேதரித்த செழுமையுள்ள மாலைத்தலைவாடவும் - தணிவுடன்பரமசிவனைப் பிரதக்ஷிணஞ் செய்யாதகாலிலணிந்தவீரகண்டைகழன்றுபோகவும்

அவனைவீழ்ந்துவணங்காத தலையின்பாவத்தினால் அந்தத்தலையினி ருந்தமகுடம் நீங்கிப்போகவும்துயரப்பட்டான்—எ-று. (௰௪)

இந்திரன்மார்பகந்தனக்குமிருகைக்கும்புயங்களுக்குங்
கந்தரமாமுறுப்பினிற்குங்கதிரொறிக்குமணிப்பூணு
மைந்தருவிற்பொலந்தாருமரம்பையர் கைத்துணைப்புணர்ப்
சந்திரவேணியன்பணித்ததடநாகத்தொடரானான். [புஞ்

(இ-ள்) தேவேந்திரனுடைய மார்பினிடத்துக்கும் - இரண்டுகை களுக்கும் - தோள்களுக்கும் - கழுத்தாகிய அவயவத்திற்கும் - ஒ ளிவீசும் ரத்தினாபரணங்களும் - பஞ்சதருவினுண்டான பொன்மா லைகளும் அரம்பையர்களுடைய கைகள்கட்டியணைத்தலும் சந்திர னையணிந்த சடைமுடியுள்ள பரமசிவன்கட்டளையிட்ட நாகங்களி ன்றொடர்ச்சியுடையவனாயினான்—எ-று. (௰௫)

என்னினைத்தேமெனநினைக்குமனத்தையெரியெழச்சீறு
முன்னியனைத்துலகினும்போயொருகணத்தினுடன்மீளும்
பொன்னகரென்பட்டதெனப்புலம்புமழும்பொன்னகரு
மன்னரில்லாதவுணர்கணத்துயங்குமென்றுமயங்குமால்.

(இ-ள்.) இவ்வாறுகட்டப்பட்ட இந்திரனானவன் நாம்என்னநினை த்தோமென எண்ணமிடுவன் - தன்மனத்தை மிகுந்தவுக்கிரத்து டன் கோபிப்பன் - கருதியெல்லாவுலகத்திலும்போய் ஒருகணப் பொழுதில் மீளும் படியாகிய பொன்னுலகம் என்னபாடு பட்ட தோ வெனப்புலம்பியழுவன் - அந்தநகரும் அரசில்லாமல் அவுண ர்களால் வருந்துமே யென்றும்-மயங்குவான்—எ-று (௰௬)

மெய்யானுமொழியானுமனத்தானும்வினையிழைப்பிற்
பொய்யாதனைவையவைக்கேயருந்துமெனும்புகல்பொய்யோ
செய்யானைவேதகிரிச்சிவனையெங்கள்பெருமானை
யெய்யாமைநினைத்தவினைக்கிதயந்தீச்சுடப்படுமால்.

(இ-ள்) காயத்தினாலும் வாக்கினாலும் மனதினாலும் தீவினையை ச்செய்தால் குற்றம்வருதல்பொய்யாது அக்குற்றங்களுக்குத்தக்க துன்பத்தை அனுபவிக்கவேண்டுமென்கிற வார்த்தைபொய்யோ-

செம்மைதிறமுள்ளவனை-வேதகிரிக்கடவுளை எங்கள்பெருமானை-அ
யாமல்ஆரோபோல் நினைத்தவினைக்குத் தன்னிதயமேதீப்போலச்
டப்படுவான்--எ-று (௰எ)

இவ்வழியிற்புரந்தரன்வீழ்ந்திரங்குதலுமிழந்திரங்கு
மெய்வழியிற்சுடர்மடந்தைவேறொருத்திகற்றுகத்தா
ளைவழியிற்சிறைப்பட்டநவையறியார்நாயகனை
யவ்வழியிற்றுறக்கத்தார்கண்டிலராயலமந்தார்,

(இ-ள்) இந்தவகையில் தேவேந்திரன்சிறையிலிருந்து இரங்கும்
போது தன்கையிலிருந்ததையிழந்து இரங்குகின்ற வேறொருதே
மாதின் பத்தின்மூகாந்தரத்தினால்வருந்து முறைமையாகச்சிறை
பட்டிருக்கும் தேவேந்திரனுடைய துயரத்தையறியாதவர்களாய்ச்
சுவர்க்கலோகத்திலுள்ளதேவர்கள் தங்கள்அரசனை யவ்விடத்திற்கா
ணாமல் மயங்கினார்கள்—எ-று. (௰அ)

கங்கைநதிக்கிடைகாணார்சுதருமையிற்கடைகாணார்
சங்கமலைத்தயிராணிதனதிருக்கைத்தலைகாணார்
கொங்கவிழ்பூங்கற்பகத்தேன்றுளித்தகொழுநிழற்காணார்
புங்கவர்தங்கொடிமாடந்தொறுங்காணார்புலம்புற்றார்,

(இ-ள்) கங்கைநதியினிடத்திலுங்காணார்கள் - சுதருமையென்
னுமண்டபத்துங்காணார்கள் - ரம்பாஸ்திரீகளின்கூட்டத்தைப்பிரித்
து அயிராணியிருக்குமிடத்திலுங்காணார்கள்-வாசனையுடன்மலரும்ம
லர்கள் தேன்துளிக்கும் செழுமையுள்ள கற்பகநிழலிலுங்காணார்
கள் - தேவர்கள்தங்களுடையகொடியாடு மாளிகையெங்குங்காணார்
கள்இவ்வாறுதேடியுங்காணாமையால்துயரமடைந்தார்கள்—எ-று.

வேதாவினுலகிடத்தோதிருக்கிழவன்வியன்புரத்தோ
பாதாளவரவரசன்பதியகத்தோமதியகமாஞ்
சீதாளமண்டலத்தோதிரிபரிதிபதத்தோமற்
றேதானதானத்தோவெனத்தேர்ந்துதேர்ந்திளைத்தார்,

(இ-ள்) பிரமதேவனுடையஉலகத்தினிடத்திலிருக்கிறானோ-இலக்
ஷுமிகணவனாகிய விஷ்ணுவினுடையபெரியஉலகத்திலிருக்கிறானோ

பாதாளத்திலிருக்கும் நாகராசனாகிய ஆதிசேஷனுலகத்தினிடத்தி
லிருக்கிறானோ - சந்திர னுலகமாகியகுளிர்ச்சிபொருந்திய மண்டல
த்திலிருக்கிறானோ - சூழ்ந்துவருகின்றசூரியமண்டலத்தி லிருக்கிறா
னோ- இதுவுமன்றி அன்னியமாகிய மற்றஎந்தவிடத்திலிருக்கிறானோ
வென்றுதேடித்தேடியிளைத்தார்கள் — எ-று, (௨௰)

(சீதளம்எனற்பாலது-சீதாளமெனநீண்டது·)

சுரகுருவேமுதற்சிறந்தசுரரெல்லாமனைத்துலகும்
பரவியுழன்றுழன்றேயுந்தெரிந்திலராய்ப்பருவந்தார்
கரகமலகபாலத்தானவையகத்தின்காறுமே
விரவியறிந்திலமென்றார்வெள்ளிமலைத்தலைசென்றார்,

(இ-ள்) இவ்வாறுசிறப்புள்ள பிரகஸ்பதிமுதலாகத் தேவர்களெ
ல்லாரும்எல்லாவுலகத்திலும் தேடிப்பார்த்துஉழன்றுழன்றும் - கா
ணாதவர்களாய்த்துன்பங்கொண்டவர்கள் - தாமரைமலர்போன்றதிரு
க்கரத்தில்கபாலமேந்திய பரமசிவம் வீற்றிருக்கும் சந்நிதானவரை
யில் சென்றுபார்த்திலோமேயென்று கயிலைமலையினிடத்திற்சென்
றார்கள்—எ-று· (௨௧)

எழுதந்தச்சுரகுருவுக்கெதிரோவெம்பெருமானைத்
தொழுதந்தக்கயிலையின்கட்சுருதியைநாரதன்பாடி
வழிதந்தவிருப்பினொடும்வருகின்றான்வாசவனைக்
கழிதந்தசிறைப்படுத்துமிடமிதெனக்காட்டினான்,

(இ-ள்) அந்தக்கயிலையில் வீற்றிருக்கும் நம்பெருமானைப்பணிந்
துவேதங்களால்துதித்துஅங்கிருந்து விருப்புடன்வருகின்ற நாரத
முனிவர் தேவேந்திரனைமிகுதியானசிறைப்படுத்தியஇடமிதுவென்
று சித்திரத்தில்எழுதத்தக்கஅழகுள்ளதேவகுருவுக்கெதிரில்காட்டி
னார்—எ-று, (௨௨)

அடுத்துடையநெறியனைத்துமொழுங்குபடுத்தவன்சாற்றி
விடுத்துடையபருவத்தேவிண்ணவரும்வெருவந்தா
ரொடுத்துடையமழுவானையென்னேயித்தனைநினைந்தான்
றெடுத்துடையசிறைவிடுநம்வினைவிடுமோதொடர்ந்தென்றார்

(இ-ள்) தேவேந்திரனைச்சிறையிலிடும்படி சம்பவித்தமுறைமை ...ளையெல்லாம் கிரமமாக அந்தநாரத முனிவர்சொல்லி யனுப்பி ...றபோது தேவர்களும் பயந்தவர்களாய் மழுப்படையை யேந்திய ...பரமசிவனை இந்திரன் யாதோவிப்படி நினைத்தான் - இப்போது ...படுத்திய சிறைவிட்டாலும் தொடர்ந்துள்ளதீவினை விடுமோ வெ...ன்றார்கள்—எ-று, (உ௩)

வேறு.

ஸீதகன்கேட்டுநெஞ்சம்பேதுறுவஞ்சியஞ்சி
நாதனைக்குறித்தேதேனுநவைசிறிதியற்றினோரும்
பாதகம்பயப்பத்தீவாய்நரகிடைப்படுதறிண்ண
மாதலிற்றுறக்கவேந்தன்வினைக்கென்கொல்செய்துமந்தோ.

(இ-ள்.) ஸீதகனென்றுமொருபெயருள்ள தேவகுருவானவர்நாரத...ர்சொல்லியதைக்கேட்டுமனத்துன்பங்கொண்டு -அஞ்சியஞ்சிப் ப...மசிவனைக்குறித்து எதாவதொருகுற்றங் கொஞ்சஞ்செய்தவர்களு...ம் பாதகம் நேரிடத்திபொருந்தியநரகத்தில்விழுதல் நிச்சயமானதா...பால் தேவேந்திரன்செய்ததீவினைக்குநாமென்னசெய்யலாம். (உ௪)

(அந்தோ - என்பது - இரக்கக்குறிப்புச்சொல்)

புண்ணியமூர்த்திமேனிப்பூசனைக்குரியதீம்பா
றண்ணியநறுநெய்டைந்தேன்கனிபனிச்சாந்துபூந்தார்
பண்ணியமணிப்பூண்செம்பட்டிவைமுதற்பலவுந்தம்மை
யெண்ணியவிருப்பஞ்செய்வாரிழிவரேழ்நரகுமன்றே.

(இ-ள்.) தருமசொரூபியாகிய பரமசிவனது திருமேனிப்பூசனை...க்குரியதான மதுரமுள்ளபால் - குளிர்ந்துவாசனையுள்ளநெய்-பசி...யதேன் - முப்பழம் - குளிர்ந்தசந்தனம்- திருப்பள்ளித்தாமம்- அ...பூபவர்க்கம் - மணிகளாலாகிய திருவாபரணம் - செம்பட்டுடை-இ...வைமுதலாக வெண்ணுகின்ற பலபொருளையும்அபகரிக்க விருப்பு...ல்றவர்கள்வழுநரகிலும் வீழ்வார்கள்—எ-று. (உ௫)

திருவுருத்தீண்டுந்தொல்லோர்சிவனையந்தாட்டவிர்ந்து
வருசுரபிக்குழாங்கண்மயர்வுறுதுறவின்மிக்கோ

வெரிபசியுழப்பக்கண்டுமியல்வதியாததீயோர்க்
கரிதனக்கரியான்கோயிலடைத்ததிங்கடையுமம்மா.

(இ-ள்.) பரமசிவனது திருமேனியைப்பரிசித்துப்பூசிக்கும்பழ
மையாகிய ஆதிசைவப்பிராமணர்களும் - பரமசிவத்துக்குப்பஞ்ச
கவ்வியம் அபிஷேகஞ்செய்யும்படி கொடுத்துவருகிறபசுக்கூட்ட
ங்களும்மயக்கம்நீங்கிய துறவினால்மிகுந்தவர்களும் - தீப்பசிகொண்
டிருப்பக்கண்டும் - தங்களுக்கியன்றபொருள் கொடாதகொடியோ
ர்களுக்கு விஷ்ணுவுக்கரிய பரமசிவனுடைய ஆலயத்தையடைத்த
லாலுண்டாகத்தக்க பாவம்நேரிடும்—எ-று. (உசு)

நந்தனவனத்துமாட்டுநறும்புனல்கவர்கயத்து
மந்தணர்தலத்துங்கோக்களணைத்தசாலையினகத்து
மெந்தையாகமநூல்வைக்குமிடத்துமாசுடைமைசெய்தாற்
செந்தழற்குன்றமன்னான்கோயில்வாய்ச்செய்ததீதாம்.

(இ-ள்) நந்தனவனத்திலும் நல்லநீரொடுக்கும் குளத்திலும் பிரா
மணர்கள்வாசஸ்தலத்தும்பசுக்களையடைத்து வைத்திருக்குந்தொ
ழுவத்திலும் நம்மையனருளிச்செய்த ஆகமங்கள்வைத்திருக்குமிட
த்தும் அசுசியானசெய்கைசெய்தால் அக்கினிமலையையொத்தபர
மசிவன் ஆலயத்தினிடத்திற்செய்தபாவமேயாகும்-எ-று. (உஎ)

ஐந்திறக்கருவிமாதராடலேபாடல்கோயின்
முந்துவசெயற்கைமாக்கண்முரிந்தசைகவரிக்கால்க
ளெந்தைதன்பொருட்டாய்நின்ற விடயங்களின்னும்யாவுந்
தந்தமங்கலத்துவேட்பார்தமக்குய்யுந்தகைமையுண்டோ

(இ-ள்) ஐந்துவகையான வாத்தியங்கள் தேவதாசிகளாடுதல்பாட
ல் சிவாலயத்தில் முதன்மையான தொழிலுள்ளமாக்கள்முரிந்தசை
கின்ற சாமரைகள்பரமசிவத்தின்பொருட்டிருக்கும்விஷயங்களாகிய
இவைகளும் மற்றுமுள்ளவைகளையும் தங்கள்வீட்டுச்சுபகாரியத்து
க்கு அழைப்பிக்கவிரும்புகின்றவர்கள் கடைத்தேறும் வகையுமுண்
டோ—எ-று. (உஅ)

பாய்துடைத்துடையான்கோயிற்பொருளவைகாக்கப்புக்காற்
சய்துடைக்கூலிக்கேற்பச்சிறிதுண்டுதிரிவதல்லாற்
பய்துடைக்கழற்கால்வேந்தர்பணியெனப்பெரிதுண்பானேற்
காய்துடைத்தவனைக்காலனரகுணக்கொடுக்குமன்றே.

(இ-ள்) அடியார்களுடைய அஞ்ஞானத்தைநீக்கியுள்ள பரமசிவ
தினது கோயிற்பொருளைக்காக்கும் சேவகத்தில்அமைந்திருந்தால்
ான்செய்துள்ள கூலிக்குத்தக்கதாகச் சிறிதுண்டுசெல்லவேண்டு
மயல்லாமல் வீரகண்டையணிந்த காலினையுடைய அரசனதுசே
கம் நாமிருப்பதென்று அதிகமாக உண்பானானால் அவனை நமன்வா
ால் அறுத்தும் தண்டத்தால்தலையைஉடைத்தும் நரகமுண்ணும்ப
கொடுப்பான்—எ-று. (௨௯)

தேனறுஞ்சடையான்மீதில்விளக்கிற்பெய்திலத்திநெய்யு
மானறுநெய்யும்வேட்டுக்கரந்தவரந்தநெய்போய்
மேனிறைகடாரத்தூடுகொதிதரவீழ்ந்துகூற்றால்
வானிறைகற்பங்கோடியுயிரொடுமடிவரன்றே.

(இ-ள்) தேன்பொருந்தியமலர் வாசனையையுடையசடாமகுடமு
ள்ளபரமசிவத்தின்திருமேனிமேலும் திருக்கோயில்விளக்கிலும்ப
தளண்ணெய்யினையும்பசுவினதுநல்ல நெய்யினையும்திருடினவர்க
் அந்தநெய்போய் யமலோகத்திற் கொதித்துக் கொண்டிருக்கிற
நெய்க்கொப்பறையில் வீழ்ந்துமிகுந்த தேவகற்பகோடிகாலம் ய
னுயிருடன்மடிவார்கள்—எ-று. (௩௰)

சிவனுக்குநிவேதஞ்செய்தசேடமச்சிவனைத்தீண்டு
மவனுக்குந்தவத்துளோர்க்குமாவுக்குமளித்தல்லாத
புவனிக்குண்மறைக்கதூயபுனலிடைப்படுக்கவன்றி
யெவனுக்குமருத்திவீழ்ப்பிநெமூமையும்விழுமங்கூர்வார்

(இ-ள்) பரமசிவனுக்குநிவேதனஞ்செய்த சேஷத்தை அந்தப்ப
ரமசிவத்தைப் பரிசித்துப்பூசிக்கும் ஆதிசைவப் பிராமணனுக்கும்.
தவசிகளாயிருப்பவர்களுக்கும். பசுக்களுக்குங்கொடுத்துமற்றவைக
ளை மண்ணுக்குள்மறைத்துவிடக்கடவர். அல்லதுநல்லநீரினிடத்தில்
விடுத்துவிடக்கடவர். இவ்வாறுசெய்யாமல் எவ்வகைப்பட்டவனுக்

கும் உண்ணக்கொடுத்துச் சிந்துகின்றவர்கள் எழுபிறப்பிலும் துன்பமடைவார்கள்—எ-று எழுபிறப்பாவன-தேவர்-மக்கள்-விலங்கு-புள்-ஊர்வன - நீர்வாழ்வன-தாவரம்-என்பவை (௬௧)

அண்டர்தம்பெருமான்கோயிலறுசுவைக்குலவையைநாடிக்
கண்டகணிரயத்தாசிகடாவுறக்கதறுநிற்பர்
கொண்டகைநமன்செக்கூர்ந்துகுழைதரக்குழைவர்கூசா
துண்டநாவயிரத்துண்டக்காகங்களுண்ணச்சோர்வார்.

(இ-ள்) தேவர்பெருமானாகிய பரமசிவன் வீற்றிருக்கும் ஆலயத்திலுள்ள அறுசுவைப்பண்டங்களைவிரும்பிப்பார்த்தகண்களில்இருப்பூசிகடாவும்படி நரகத்தில் கதறிக்கொண்டிருப்பார்கள் அப்பண்டங்களை யெடுத்தகைகளை நமன்செக்கிலிட்டூர்தலினால் அக்கைகள் குழைவதுடன் அவர்களுங்குழைவார்கள்-அப்பண்டங்களைக் கூசாமலுண்டநாவினை வயிரமாகிய மூக்குகளையுடைய காகங்கள்கொத்திக்கொத்தியுண்ணச்சோர்வார்கள்—எ-று. (௬௨)

பரம்பரன்றிலமுநெய்யும்பாலுநன்சுவையும்போல
நிரம்பியுட்புறம்புங்காத்துநிற்கின்றானெனவஞ்சாமே
வரும்பொருட்கூலிபெற்றும்வஞ்சித்தானற்றநோக்கிப்
பெரும்பணிமுயன்றுசெய்யார்ஞமலியாய்ப்பிறப்பர்மாதோ.

(இ-ள்) பரமசிவம் எள்ளும் அதற்குள்ளிருக்கும்நெய்யும் பாலும் அதிலிருக்குமதுரமும்போலஆன்மகோடிகளுக்குஉள்ளும் புறம்புமாகநிறைந்து காக்கின்றானென்றுகருதிஅஞ்சாமல் சிவாலயத்தில் செய்யும்பணியில் தகுதியாகவருகின்ற கூலிப்பொருள் பெற்றுக்கொள்வதுமன்றிச் சமயம்பார்த்துச்சிவசொத்துக்களைத்திருடுகின்றவர்களும்பெரிதாகியசிவபணியைச்சரீரம்வருந்திமுயன்று செய்யாதவர்களும்நாயாய்ப்பிறப்பார்கள்—எ-று.

சுவாமிபார்த்துக்கொண்டிருக்கிறாரோவென்பவர்கள்தெளியக்கூறியது சிவபணிமேலானபதவியைத்தருவதாதலின்பெரும்பணியென்னப்பட்டது. (௬௩)

ஈசனாலயத்திற்கொண்டவிரும்பொருட்கள்வன்பேசப்
பேசினார்கண்டார்கேட்டார்பெருந்துணையவர்க்குச்செய்தார்

வாசமேயொருநாட்டானார்வைகுமூர்வைகப்புக்கா
ராசினாராறுவருந்தீங்கறுவரோவறுங்காலத்தும்.

(இ-ள்) பரமசிவனுடைய ஆலயத்திலிருக்கும் பெரிதானபொ
ருளையபகரித்ததிருடன் பேசினால் அவனுடன்பேசினவர்களும் அ
வனைப்பார்த்தவர்களும் அவன்பெயரைக்கேட்பவர்களும்- அவனுக்
குப்பெரியதுணைசெய்தவர்களும் அவனுடன் ஒருநாட்டில்வாசஞ்
செய்தவர்களும்அவனிருக்குமூரில் தங்கும்படிசென்றவர்களும் இ
வ்வகைத்தீங்குள்ள இவர்களாறுவரும் (தங்களுக்குநேரிட்ட) பாவத்
தினின்றும் ஊழிக்காலத்திலாவது நீங்குவார்களோ நீங்கார்கள்-எ-று.

சிவனிடத்தொருதீதேனுஞ்செய்தவன்சிரத்தைக்கொய்து
புவனிவைத்திடுவர்தம்மாற்பொரவரிதென்னின்மன்ன
மவனிடைப்பொருள்கொடுத்துமறுத்தறுத்தெறிவரின்றேற்
றவநியமத்தாரந்தநாட்டினுந்தணப்பர்மாதோ.

(இ-ள்) பரமசிவத்தின் விஷயமாகக் குற்றமென்பதனைச்சிறிதள
வுசெய்தானேயாயினும் தவநியமத்தாராயிருப்பவர்கள் அவன்தலை
யையறுத்துப் பூமியில்வைத்திடக்கடவர்கள். தங்களாலவ்வாறு செ
ய்வதருமையாயிருந்தால். அங்குமன்னவனாயிருப்பவனிடத்தில்தங்க
ளுக்குள்ளபொருளையெல்லாங்கொடுத்தாவது அவன் (அவயவத்தை
வெவ்வேறாக) அறுத்தறுத்தெறியும்படி செய்யக்கடவர்கள். அவ்வாறு
செய்வதற்குமில்லாவிடின் அந்தநாட்டினைவிட்டுநீங்கிவிடக்கடவர்கள்

சிவாபராதஞ்செய்தவர்களைக்கண்டித்துமுத்தியடைந்தவர்கள்
எறிபத்தநாயனார்-கோட்புலிநாயனார்-சண்டேசநாயனார்-முதலினர்.

எனையதுசிவநூற்சொல்வதிறைவனைப்பிழைக்கும்பாவ
வினையதுநினைக்குந்தோறும்வெந்தமியேற்குநெஞ்சு
மனையதுவிளம்பநாவுமழற்படுமங்கமெங்குங்
கனைபுனன்மதியம்போலக்கம்பலைகலக்குமன்றே.

(இ-ள்) சைவாகமத்திற்சொல்லப்படுவதாய்- சிவனுக்குச்செய்யும்
பாவமெப்படிக்கொத்ததோ அந்தப்பாவத்தை-நினைக்குந்தோறும் த
மியேனுக்குமனம் வேகாநிற்கும் அதனைச்சொல்ல நாவெடுத்தாலது

வும் வேகாநிற்கும் (இதுவுமன்றி) சரீரமெல்லாம்வேகும் ஒலிக்கா நின்ற நீரினிடத்தில் தோன்றுகிற சந்திரபிம்பத்துக்கு நேரிடுகிறநடுக்கம்போல என்னுடலுக்கு நடுக்கம்நேரிடுகின்றது—எ-று- (௬௬)

முக்கணுற்காயிரங்கண்முதல்வனிக்கொடியபாவந்
தக்கதன்னளவேசூழச்சமைந்ததோவமைந்தபந்தாற்
புக்கதன்கிளையுளோர்க்கும்பொன்னகரத்துளோர்க்கு
மிக்கதோர்வினைவந்தின்றுவிளைதரவிளைத்ததேயாம்

(இ-ள்-) உண்டாக்கிய பந்தினால்பரமசிவனுக்குத் தேவேந்திரன் செய்த இந்தக்கொடியபாவமானது தகுதியுள்ள அவன்மட்டில் சூழும்படி அமைந்ததன்று - அவனைச்சேர்ந்தசுற்றத்தார்களுக்கும் பொன்னகரத்திலிருப்பவர்களுக்கும்-மிகுந்தபாவம்வினையும்படியின்று நேரிட்டது—எ-று. (௬௭)

எவ்வண்ணஞ்சிவனை நாணுதிறைஞ்சுதுமெவ்வாறெங்கோன்
வெவ்வண்ணச்சிறையை நீத்துவிடுதியென்றிரத்துமென்பான்
மைவ்வண்ணக்களத்திறுனென்றறிவின்றிமதித்ததீமைக்[டான்
குய்வ்வண்ணஞ்சிறிதுண்டாமென்றுறுதியுமுளத்திற் கொண்

(இ-ள்.) நாணமில்லாமல் எவ்வாறு சிவனை வணக்கஞ்செய்வோம் எங்களரசனுகிய தேவேந்திரனுடையசிறையை நீக்கியருளவேண்டுமென்று எவ்வாறு இரந்துகொள்வோமென்றெண்ணமிடுகின்றவன் (பந்தினைப்பறித்துக்கொண்டுசென்றவன்) காளகண்டமூர்த்தி யென்னும் அறிவின்றிவெளிதாக மதித்ததீங்குக்கு உய்யுந்தன்மை சிறிதுண்டாமென்கிற உறுதிப்பாடும் தன்னுள்ளத்திற் கொண்டு.

வேறு.

எய்தியகயிலைவெற்பெண்ணில்விண்ணவரொடு
முய்திறத்தெம்பிரானவைபகத்தெய்தியெனச்
செய்யகைத்தொழுகையுந்திருவடித்தாழ்கையும்
பெய்தகட்புனலுமாய்ப்பிரகத்கன்பேசினன்

(இ-ள்.) இவ்வண்ணம்எண்ணங்கொண்டபிரகஸ்பதிபகவான் அந்தக்கயிலையங்கிரியில் அளவில்லாத தேவர்களுடன் சென்று உய்யுந்தன்மைநாடி நம்மிறைவனுடைய சந்நிதானத்தில் விரைவாகச்சேர்ந்து குவிந்தகைதொழுவதும் - திருவடிகளை வணங்குவதும் கண்கள் ஆனந்தபாஷ்பம் பொழிவதுமாகத் துதி செய்கின்றார்.

உருவுநீயருவுநீயுளதுநீயலதுநீ
திருவுநீவறுமைநீசிறிதுநீபெரிதுநீ
யிருளுநீவெளியுநீயிகமுநீபரமுநீ
யருளுநீமறமுநீயளவிடற்கெளியையோ.

(இ-ள்.) உருவமும்நீயே - அருவமும்நீயே - உள்ளதும்நீயே - இல்லாததுவும்நீயே - செல்வமும்நீயே - வறுமையும்நீயே - சிறியதும்நீயே - பெரியதும்நீயே - இருளும்நீயே - வெளியும்நீயே - இகத்தின்பமும்நீயே- பரத்தின்பமும்நீயே அருளும்நீயே- கோபமும்நீயே -ஆதலால்நீஅளவிடப்படுதற்கு எளியையல்லை—எ-று. (௬௰)

வையநீவானநீவாயுநீதேயுநீ
வெய்யனீதட்பனீமேன்மைநீகீழ்மைநீ
பொய்யனீமெய்யனீபுறமுநீயகமுநீ
யையனீயன்னைநீயாருனைத்தேர்வரோ.

(இ-ள்.) பூமியும்நீ - ஆகாயமும்நீ - வாயுவும்நீ - தேயுவும்நீ வெம்மையும்நீ-தண்மையும்நீ-மேன்மையும்நீ-கீழ்மையும்நீ- பொய்யும்நீ-மெய்யும்நீ- புறமும்நீ- உள்ளும்நீ-தந்தையும்நீ-தாயும்நீ இவ்வாறிருக்கும்உன்னை அறிவாரெவர்—எ-று. (௬௧)

குறைகளைசெய்வதெங்குணமெனக்கண்டனம்
பொறைகளைசெய்வதுன்புகழெனக்கண்டன
மிறைவமற்றிவ்விரண்டேயலால்யாமெடுத்
துறைவதொன்றில்லையாலன்றுதொட்டின்றுமே.

(இ-ள்.) இறைவனே சிருஷ்டிமுதல் இதுவரையில் குறைகளைச் செய்வது எங்கள்குணமென அறிந்தோம் சாந்தகுணங்களைச்செய்வது உன்புகழெனவும்அறிந்தோம் -இவ்விருவகையினையன்றி நாங்களெடுத்துச்சொல்லத்தக்கது வேறில்லை—எ-று. (௬௨)

எண்ணிலாவடிவெடுத்தேயமாயத்திற
மண்ணனீசெய்யுமாறறிவனோவறிவிலான்
திண்ணியன்சதமகன்செய்ததோர்தீமையைப்
புண்ணியாதிருவுளத்தேபொறுத்தருள்செய்வாய்.

(இ-ள்) அளவில்லாத உருவமெடுத்துப் புகழிற்சிறந்தநீமாயைத் தன்மைசெய்யுமுறையினை அறிவில்லாதவனறிவனோ- வன்மையுள்ள இந்திரன்செய்த தீமையைபுண்ணிய மூர்த்தியே திருவுளத்துப்பொறுத்தருள் செய்யவேண்டும்—எ-று. (௪௩)

என்றவன்பரவலுக்கெளிதுபட்டெம்பிரான்
குன்றகஞ்சிறைவிடக்குலிசம்விட்டானையா
னன்றிடுஞ்சிறைவிடுத்தழைமினென்றுழையர்போய்ச்
சென்றுதன்முன்விடத்திருவிழிக்கடைசெய்தான்,

(இ-ள்.) இவ்வாறுபிரகஸ்பதி துதிசெய்ததற்கு நம்மிறைவர்திருவுளமிரங்கி மலைகள் சிறையறும்படி வச்சிராயுதமேவிய இந்திரனை நாம்அன்றுபடுத்தியசிறையைவிட்டுநீக்கி யழைத்துக்கொண்டுவாருங்களென்றேவப்பட்ட ஏவலாளர்போய்ச்சிறையை நீக்கித்தம்முடைய சந்நிதியில் விட்டவளவில் கிருபாநோக்கமளித்தருளினார்—எ-று

ஒளிறுசூலத்தினனுடையகட்கடைதரக்
களிறுசேரிந்திரன்கவிழ்முகத்தவிழ்சொலான்
வெளிறுபாய்மேனியான்வினைநினைத்தழுகணீர்ப்
பிளிறுபேரருவியைப்பெய்திறைஞ்சினனரோ.

(இ-ள்.) பிரகாசியாநின்ற சூலாயுதமேந்திய பரமசிவம் கடைக்கண்ணினால் நோக்கினவளவில் - ஐராவதமென்னும் யானையையுடைய இந்திரனானவன் கவிழ்ந்தமுகத்துடன் வாய்விட்டசொல்லுள்ளவனும் நிறமழிந்த மேனியுள்ளவனுமாய்த் தனக்கு நேரிட்டவினையைநினைத்து அழுங்கண்ணீராகிய அருவியைப் பொழிந்துகொண்டு வணங்கினான்—எ-று (௪௫)

முன்னிறைஞ்சினனெழுந்திலன்மொழிந்திலனவன்
றன்னகங்கருதலைச்சங்கரன்கருதிநீ
நன்னர்வேதப்பொருப்பிடைநமைப்பூசிமற்
றின்னல்போய்விடுமுனக்கெழுதியிப்பொழுதினே,

(இ-ள்.) பரமசிவத்தின்முன் இவ்வாறு பணிந்த இந்திரன் எழுந்திராதவனும்யாதொருவார்த்தையும்பேசாதவனுமாயிருக்கஅவனுள்ளத்திற்கருதியதைப்பரமசிவம் திருவுள்ளத்திலுணர்ந்துஇந்திரனே

நீவேதகிரியென்னும் க்ஷேத்திரத்தினிடத்திற் சென்றுநம்மை யாராதிப்பையானால் உனக்குத்துன்பம் போய்விடும் ஆதலாவிப்போதே போ—எ-று. (சசு)

எனவெழுந்தெனதுதீதிறைபொறுத்தானென
வினவுதன்பரிவினால்வேதவெற்பெய்துவான்
பனவரும்பகவரும்பணிகுரக்குருவொடுங்
கனவிசும்பிறைவனுந்தயிலைவிட்டேகினான்.

(இ.ள்) இவ்வாறுபரமசிவம் கட்டளையிட்டவுடன் பெரியபொன்னுலகத்துக்கிறைவனாகிய இந்திரனெழுந்துநம்முடையகுற்றத்தைப்பரமசிவம் பொறுத்தருளினாரெனவினாவியதன்பரிவுடன்வேதகிரியினிடத்திற்செல்லவேண்டிப்பிராமணர்களும் தேவர்களும் பணியும்படி பிரகஸ்பதியுடன் கயிலாயகிரியை விட்டுச்சென்றான்—எ-று.

கோடிருத்திரர்தொழுங்கோதில்வேதப்பொருப்
பூடுபுக்கெம்பிரானுபயபாதத்தினு
நாடருச்சனைபுரிந்தமரர்கோனவையெலாம்
வீடமற்றெய்தினான்விண்ணகத்தென்பவே.

(இ-ள்.) கோடிருத்திரர்கள் தொழுதுபூசித்த குற்றமில்லாதவேதகிரியினிடத்திற்சேர்ந்து நம்மிறைவனுடைய இரண்டுதிருவடிகளிலும் கருதுகின்ற பூசைசெய்து தேவேந்திரன் தன்னுடையகுற்றங்களெல்லாம் நீங்கப்பெற்றுச்சுவர்க்க லோகத்திற்சென்று சேர்ந்தானென்றுபெரியோர்கள்சொல்லுவர்கள்—எ-று. (சஅ)

அந்தவப்பொழுதுதொட்டைந்துயோசனைகளா
மிந்தவட்டந்தனக்கிந்திரப்புரமெனுஞ்
சுந்தரச்சிவனுழைத்துரிசிழைத்தோரிவண்
வந்தருச்சனைசெயக்குறையெலாமறையுமால்

(இ-ள்) அந்தஅக்கால்முதல் ஐந்துயோசனைகளாகிய இந்தவட்டம் இந்திரபுரமெனப்பெயர் சொல்லப்படும், சௌந்தரியமுள்ளபரமசிவனிடத்திற் குற்றஞ்செய்தவர்கள் இந்தத்தலத்தில்வந்து ஆராதனைசெய்தால் அவர்களுடையகுறைவெல்லாம்நீங்கிவிடும் எ-று,

என்றுமார்க்கண்டனங்கோதமற்றெண்மரு
மன்றுமீகோபதிதனக்கபரம்வந்தெவர்செய்தார்
கொன்றைவேணிக்கருச்சனையெனக்கோதிலான்
பின்றைமால்பெற்றபேறிதுவெனப்பேசினான்

(இ-ள்) இவ்வாறு அங்குமார்க்கண்டமுனிவர்சொல்ல அந்தஅஷ்டவசுக்களும் இவ்வண்ணந் தேவேந்திரன் பூசித்தபின்புகொன்றைமாலையணிந்த சடாமகுடமுள்ள பரமசிவனுக்குப் பூசைசெய்தவர்கள் யாவரென்றுவினவுதலும் பரிசுத்தமுள்ளவராகிய மார்க்கண்டமுனிவர்வசுக்களைநோக்கி இந்திரனுக்குப்பின்புதிருமால்பூசித்துப்பெற்றபேறிதுவென்றுசொல்லுகின்றார்—எ-று. (௩௰)

இந்திரச்சருக்கமுற்றியது.

ஆ திருவிருத்தம்—௪௧.

## நாராயணச்சருக்கம்.

செம்பதுமைதிச்சமகலாததிருமாயோ
னும்பரினுபேந்திரபதத்தினுறைகாலை
யம்பொனுலகத்தையவுணக்கணமலைப்ப
வெம்பெருமநின்சரணெனச்சுரரடைந்தார்

(இ-ள்.) இலக்குமியையெக்காலத்தும் பிரியாத திருமாலானவர் தேவருலகத்தில் உபேந்திரபதவியில் பொருந்தியிருக்கும்போது அழகுள்ள பொன்னுலகத்தை அசுரக்கூட்டம்வந்து வருத்தப்படுத்தினதால் அங்குள்ள தேவர்களெல்லாரும் அந்தஉபேந்திரனிடத்தில் எங்களிறைவனே புன்னடைக்கலமென்று அடைந்தார்கள்—எ-று.

பதுமமென்னுமொருபெயருள்ளசெந்தாமரைமலரில் வீற்றிருப்பதினால்இலக்குமிக்குச்செம்பதுமையெனப்பெயருண்டாயிற்று

அண்டரையொறுத்தவவுணக்கணமறப்பத்
தண்டுளபமாலிதனதாழிதனியேந்தி

யெண்டிசையுமெக்கிரியுமெக்கடலுமெங்கு
மண்டியவரைத்துருவி*வாளமர்விளைத்தான்

(இ-ள்.) தேவர்களைவருத்திய அசுரக்கூட்டத்தையறுக்கும்படிகுளிர்ச்சிபொருந்திய துளசிமாலையணிந்ததிருமாலாகிய உபேந்திரன் தன்சக்கராயுதத்தைத்தனியே யேந்திக்கொண்டு அஷ்டகுலபர்வதங்களிலும் அஷ்டதிக்குகளிலும் - எழுகடலினிடத்தும் - மற்றுமுள்ள எல்லாவிடங்களிலும் - சேர்ந்திருக்கும் அவ்வசுரரைத்தேடிக்கண்டுகொலைசெய்யும் போர்விளைத்தான் — எ-று.

*வாட்சண்டையெனினுமொருவாறமையும்.		(உ)

துருவியவர்போமடிதொடர்ந்துபடரப்போய்
வெருவியவரோடிவிரிகாடுபுகவீழ்வார்
பிருகுமுனிபன்னிசரணத்துணைபிடித்தா
ருருகியவடன்மனையொளித்தளியள்வைத்தாள்.

(இ-ள்.) அவர்கள்செல்லும் அடிச்சுவட்டைத்தேடித்தொடர்ந்து வருவதினால் அவர்கள்பயந்து ஓடிப்போய்ப் பரந்தகாட்டில்சேரவிரும்புகின்றவர்கள்-பிருகுமகாரிஷியின்பத்தினியி னிரண்டுபாதங்களையும் பற்றிக்கொள்ளக்கண்டு அவள்மனமிரங்கித் தயையுள்ளவளாய்த்தானிருக்கும் ஆச்சிரமத்திலொளித்துவைத்தாள் — எ-று. (௩)

ஆயிடையடைந்தபலதானவரையஞ்சா
தேயதனிருக்கையினிருத்தியொருதவ்வி
தூயகைபிடித்துமுனிபன்னிசுடராழி
மாயவன்வராதவழிவாயில்வழிநின்றாள்.

(இ-ள்.) அவ்விடத்திலடைக்கலமாகச்சேர்ந்தபலராகிய அசுரர்களைப்பொருந்திய தன்னிருப்பிடத்திலொளித்து வைத்து ஒருசட்டுவத்தைத்தனது பரிசுத்தமுள்ள கையிற்பிடித்துக்கொண்டு ஒளியுள்ள சக்கரமேந்திய திருமால்வராதவண்ணமாக வாயிலின்வழியில் அந்தப்பிருகுரிஷிபத்தினியானவள் அஞ்சாமல்நின்றாள் — எ-று.

செங்கைவலனேமியொடுசெங்கணெரிசிந்தப்
பங்கயவிதழ்க்கனிதுடித்துரைபதைப்ப

வெங்கவுணரெங்கவுணரிங்குளர்கொலென்றுக்
கொங்கவிழ்துழாயனவண்முன்குறுகிநின்றான்.

(இ-ள்.) வாசனைபார்த்த துளசிமாலையணிந்ததிருமாலானவர் தம்முடைய வலக்கையில் சக்கராயுதமேந்திக்கொண்டு செங்கண்களில் தீப்பொறிசிந்தவும் - தாமரையிதழ்போன்ற உதடுகள்துடிப்பவும் படபடத்த வார்த்தையுண்டாகவும் - அசுரர்களெங்கிருக்கின்றார்கள்-எங்கிருக்கிறார்களென்று தேடிக்கொண்டு இங்கிருக்கின்றார்களோவென்று அவளெதிரில்வந்துநின்றார்—எ-று. (௫)

காட்டுதிதயித்தியர்தமைக்கடிதினுங்கள்
வீட்டுழிகரந்தனர்விடுத்திவழியென்ன
வாட்டமொடுவந்துசரணென்றவரைமாயோய்
கேட்டினடைவிப்பதடைவோகெடினுமென்றாள்.

(இ-ள்.) அசுரர்களைவிரைவிற்காட்டுவாய் - உங்கள் ஆச்சிரமத்தில்ஒளித்துக்கொண்டிருக்கிறார்கள்- வழிவிடென்று சொல்ல - மகாவிஷ்ணுவே - நான்கெடுவதாகநேரினும் மனவாட்டமுடன் வந்து அடைக்கலமென்றவரைக் கெடுதியில் அடைவிப்பதுமுறைமையோவென்றாள் —எ-று. (௬)

வேதியரும்வானவரும்வேள்விமுதல்யாவு
மாதியறமுங்கெடவலைக்கும்வலியோனாக்
காதுவதுபுண்ணியமலாதவர்கரந்தா
ணீதுணைமைசெய்வதுகொனீதியெனநக்கான்.

(இ-ள்) பிராமணர்களும் தேவர்களும் ஆதியாகியதருமமும் யாகமுதலானமற்றயாவும்கெடும்படி வருத்துகின்றவலியவர்களைக்கொலைசெய்வது புண்ணியமல்லாமல் அவர்கள்வந்து ஒளித்துக்கொண்டால் நீதுணைசெய்வதோ நீதியென்றுநகைத்தார்—எ-று. (எ)

தானவர்தமைத்தெறவிடாய்நெறிகடுத்தாய்
ஞானமுனிபன்னியெனநாரணன்வெகுண்டான்
கானமுழுதுந்தகுவரோடுகனன்மூடப்
பானுவெயில்விட்டதிகிரிப்படையைவிட்டான்.

(இ-ள்) ஞானமுள்ளபிருகுமகாரிஷி பத்தினியே அசுரர்களைக் கொல்ல வழிவிடாமல்தடுத்தனே- யென்றுதிருமால்கோபித்து அந்த வனமுழுவதுந் தானவருடன் தீமூடும்படிசூரியபிரகாசம் வீசுகின்றசக்கரத்தைவிட்டார்—எ-று. (அ)

வேறு

விட்டகாலைவிரைந்திருங்கானமு
மொட்டலாரெனுந்தானவரொக்கலுஞ்
சிட்டன்மாமடப்பன்னியுந்தீப்படச்
சுட்டதாழிசுடுசினத்தாலரோ.

(இ-ள்) சக்கரத்தைவிட்டபோது பெரியகாடும். பகைவராகியஅசுரர் சுற்றமும்- சிஷ்டராகிய பிருகுமகாரிஷி பத்தினியும்- வேம்படி அந்தச்சக்கரமானதுகொடுமையான கோபத்தால்விரைவுடன்சுட்டது—எ-று. (கூ)

ஆறுபட்டசிரத்தவனம்பினுஞ்
மாறுபட்டபுரத்தவர்மாய்ந்தென
வீறுபட்டனர்தானவர்யாவரு
நீறுபட்டனணீண்முனிபன்னியே.

(இ-ள்) கங்காநதிபொருந்திய திருமுடியினையுடைய பரமசிவன் ஆதியில்பிரயோகஞ்செய்த பாணத்தினால்தேவர்களுக்குப்பகையாகிய முப்புரத்தவர்களிறந்ததுபோல அவ்வசுரர்கள்யாவரும்அழிவுபட்டார்கள் அவர்களுடன்பெரியதவமுள்ள ரிஷிபத்தினியுஞ்சாம்பலானாள்—எ-று (௰)

அந்தவேலைப்பிருகுவந்தன்மனை
சுந்தவார்குழற்பன்னியைக்கண்டில
னிந்தநீள்வனத்தோடெம்மனைவியும்
வெந்தவாறரிநேமிவிடுத்தென்பான்.

(இ-ள்) அந்தக்காலத்தில் பிருகுமகாரிஷிவந்துசேர்ந்து வாசனையுடனீண்டதாகிய அளகபாரத்தையுடைய தன்பத்தினியைக்காணமல் இந்தப்பெரியவனத்துடன் என்மனைவியும் வெந்தவாறு விஷ்ணுசக்கரம் விட்டதினாலல்லவோஎன்றறிந்துகொண்டு—எ-று. (௰க)

அன்பினுனெஞ்சயருமப்பன்னித
னென்புநோக்குமெரியவிழித்தெழூந்
தென்புலத்தவன்போற்செய்தசீற்றமுந்
தன்புலத்திலுமிக்குந்தணக்குமால்.

(இ-ள்) மனைவியினிடத்துவைத்திருந்த அன்பினால் மனம்வாடுவ ர் அந்தமனைவியின் எலும்பினைநோக்குவர் கோபத்தினால்யாவுமெ ரியும்படிநோக்கியெழுவர் தென்றிசையிலிருக்கும் யமனுக்குண் டாகுங்கோபம்போல அந்தரிஷிக்குண்டாகியகோபம் அவர்மனதில் அதிகரிக்குமேயாகிலும்உடனேதணியும்—எ-று. (௰௨)

பொன்னைநோக்கியகாதலிற்புங்கவன்
பின்னைநோக்கிலனன்றித்தன்பெண்கொலை
தன்னைநோக்கிலனன்றித்தவத்தனென்
றென்னைநோக்கிலனென்னைகொலென்னுமால்.

(இ-ள்) திருமகளைவிரும்பிய ஆசையினையுடையமாயவன்- பின் வருவதையெண்ணுகின்றிலன் - இதுவேயன்றித்தன்பெண்கொலை யையுங்கருதுகின்றிலன்- இதுவுமன்றி-தவமுள்ளவனென்று என்னை யுங்கருதுகின்றிலன்- இதுயாதோவென்றுசொல்வர்-எ-று. (௰௩)

வானும்வையமுங்காத்துவரம்பிலா
வூனுமாவியுமோம்பியமாயற்கு
மீனும்வேலும்வெருவருங்கண்ணியும்
யானுமோபிறவொன்றுளங்கன்றுமால்.

(இ-ள்) தேவலோகத்தையும் பூலோகத்தையுங்காத்து அளவில் லாத உடலையும் உயிரையுங்காக்காநின்ற மாயவனுக்குச் சேல்மீனு ம் வேலாயுதமும் அஞ்சத்தக்க கண்களுள்ள என்மனைவியும்யானு மோபிறவொன்றுமனம்வருந்துவர்—எ-று. (௰௪)

களவராயினுங்காதகராயினு
மளவிறீமையமைத்தவராயினு
முளமருண்டுசரணென்றொதுங்கினுந்
தளரவிட்டிடலோதவமென்னுமால்

(இ-ள்) திருடர்களானாலும் கொலையாளரானாலும் -அளவில்லா தபாதகங்கள் செய்தவர்களேயானாலும் மனமயங்கிச்சரணமென்ற டைந்தால்தளரும்படி அவர்களைவிட்டுவிடுவதோ தவமென்றுகூறு வர்—எ-று. (௰௫)

முடியின்மேற்சரண்கொண்டுமொய்த்தார்தமைக்
கொடியமேவலர்கோறலுக்கெய்தினால்
விடுவதோவறமன்றிவிடாரைச்சென்
றடுவதோவறமென்றெனறழுங்குமால்.

(இ-ள்) தங்கள்முடியின்மேல் ஒருவர்பாதத்தைச் சூட்டிக்கொ ண்டு அடைக்கலமாகவந்தடுத்தவர்களைக் கொடியர்களாகிய பகை வர்கள் கொல்லுவதற்குவந்தால் அவர்களைவிட்டுவிடுவதோ தருமம் இவ்வகையல்றிவிடாமற் காப்பவர்களைக்கொல்வதோ தருமமென்று சொல்லிவருந்துவர்—எ-று. (௰௬)

ஆண்டுநின்றவரியைப்பிருகுவு
நீண்டபார்வைநெருப்பெழநோக்குபு
காண்டகும்பெரியோய்புவிகாவனீ
பூண்டதென்னளவேபுகழாயிற்றால்.

(இ-ள்) பிருகுமகாரிஷியானவர் அங்கிருக்கும்விஷ்ணுவை நீண் டதானதன்கண்ணில் நெருப்புண்டாகப்பார்த்து காணத்தக்கபெரி யோனே நீயுலகுக்குக் காவற்றொழில்பூண்டிருப்பது என்னளவில் உனக்குப்புகழாயிற்று—எ-று. (௰எ)

வண்ணநேமிவலத்திலெடுத்தனை
கண்ணயாரையுங்காப்பதற்கல்லையோ
விண்ணினோர்கட்குநன்றும்விழுத்தவம்
பண்ணினோர்கட்குத்தீதும்படுத்தவோ.

(இ-ள்)விஷ்ணுவே அழகுள்ளசக்கரத்தைவலக்கரத்திலேந்தினையா வரையுங்காப்பதற்கல்லையோ-தேவர்களுக்குநன்மையும்- மேன்மை பொருந்திய தவமிகுதியாகச் செய்பவர்களுக்குத்தீமையுமுண்டா க்கவோ—எ-று (௰அ)

பாரிமாய்த்தெனப்படைதல்வினைத்தனை
யீரொத்தோற்றத்தினியொருதோற்றத்தி
னூருநீத்துணர்வற்றுயர்கான்புக்குத்
தாரநீத்தொருநீயுந்தவித்தியால்.

(இ-ள்) என்மனைவியைக்கொன்று எனக்குத் துன்பத்தையுண் டாக்கினை அதனால்உனக்குநேரிடும் பத்தவதாரங்களுக்குள் ஒருஅவ தாரத்தில் ஊரையும்விட்டு அறிவுமயங்கி உயர்ந்தவனத்திற்போய் மனைவியைப்பிரிந்து நீயுந்தவிக்கக்கடவை—எ-று (௰௯)

என்றிச்சாபம்பிருகுவிசைத்தலும்
வென்றிக்கேசவன்கேட்டுவெருவரா
நன்றித்தேவர்க்குநாஞ்செயுங்காணமக்
கொன்றிப்பாவம்வினைந்ததெம்மூழென்றான்.

(இ-ள்.) இவ்வாறிந்தச்சாபம் பிருகுசொன்னவளவில் வெற்றி யுள்ள திருமால் கேட்டுப்பயந்து தேவர்களுக்கு நாம்நன்மைசெ ய்யுமிடத்தில் நமக்குப்பொருந்திய இப்பாவம் நேரிட்டது - நம் முடைய ஊழென்றார்—எ-று. (௨௰)

என்றுசிந்தித்திரங்கியிருடியைப்
பொன்றுபன்னியிப்போதெழுவிப்பனீ
நன்றுளாயென்னவைபொறுப்பாயெனக்
கொன்றவாழிமுன்வைத்துக்கைகூப்பினான்.

(இ-ள்) இவ்வாறுசிந்தித்திரங்கிப் பிருகுமாகாரிஷியை நோக்கி இறந்துபோனஉம்முடைய பத்தினியையிப்போது எழுப்புகிறேன் நன்மையுள்ளமகாரிஷியே - என்குற்றத்தை நீர்பொறுத்தருளவே ண்டுமென்று அவர்பத்தினியைக்கொன்ற சக்கரத்தையெதிரில் வை த்துக்கைகுவித்துத்தொழுதார்—எ-று. (௨௧)

பாதவங்குட்டத்தாலரிபாதலத்
தோதவெண்சங்கைதோன்றவங்கூன்றினன்
ஓதமெம்புனலென்பிற்றெறித்தனன்
மாதவன்பல்லிவற்றெழுந்தாக்கினன்.

(இ-ள்) அலைவீசும் வெண்மைநிறமுள்ள கங்கையென்றபாதா
த்திலிருந்துதோன்றும்படிவிஷ்ணுவானவர் காற்பெருவிரலிலுஞ்
வ்விடத்திலூன்றினவளவிலுண்டாகியகுளிர்ச்சியுமேன்மையு முள்
அந்தநீரைரிஷிபத்தினியெனும்பின்மேல்தெளித்து அவளுயிர்பெ
றெழுந்திருக்கச்செய்தார்—எ-று. (உஉ)

கண்டுமாமுனியுள்ளங்களித்திவனைத்
தண்டம்யாவுமரவணைச்செல்வநீ
யுண்டுங்கான்றுமுழுதுமளந்துந்தோள்
கொண்டுங்காப்பையுன்மாயமென்கூறுகேன்.

(இ-ள்) தன்பத்தினிபிழைத்தெழுந்ததைப் பிருகுமகாரிஷிகண்
- உள்ளத்தில் களிப்படைந்து - சர்ப்பசயனமுள்ள மகாவிஷ்
ணுவே அண்டங்களையெல்லாம் நீஉண்டும் - உமிழ்ந்தும் உழுது
அளந்தும்புசத்திற்கொண்டுங்காத்தல்செய்வை - உன்மாயத்தை
யென்னென்றுசொல்வேன்—எ-று. (உக)

ஆக்கவேண்டினுமாக்குவையண்டங்கள்
போக்கவேண்டினும்போக்குவைபன்னியை
நீக்கவேட்டதுந்தேவர்நெறியறங்
காக்கவேட்டதென்றுன்செயல்காட்டுமால்.

(இ-ள்) அண்டங்களையாக்கவிரும்பினுமாக்குவை அழிக்கவேண்
டினும்அழித்துவிடுவை இப்போது - என்பத்தினியைச்சேதிக்க
விரும்பியதும்தேவர்களையுந்தர்மநெறியையுங்காக்க விரும்பியதெ
ன்றுன் செய்கைகாட்டுகின்றது—எ-று. (உச)

இற்றைநாளிவண்யானிடுஞ்சாபமு
மற்றைநாளிலமரர்க்குதவியா
யுற்றகானத்தொழிக்குமுன்றேவியைப்
பற்றலாரைப்படுத்தெய்திவாழ்தியே.

(இ-ள்) இந்தநாளிலிங்கு நானிட்டசாபமும்அந்தநாளில் தேவ
களுக்குதவியாய் நீசெல்லுங்கானகத்தி லுன்தேவியை நீக்கிவிடு
- பின்புபகைவராகிய அந்தஅரக்கர்களைக்கொன்று உன்தேவி
யைமீட்டுக்கொண்டுவந்துவாழக்கடவை—எ-று. (உடு)

நீறதாய்விழநீதவப்பன்னியைக்
கோறலாற்றியகோதறக்கொண்டலே
யாறுசூடியருச்சனைசெய்தலிற்
சேறிவேதகிரிக்கெனச்செப்பினன்.

(இ-ள்.) மேகவண்ணனே நீறாய்விழும்படி ரிஷிபத்தினியைக் கொல்லுதல்செய்தபாவம்ஒழியக்- கங்காநதியைத்தரித்த பரமசிவத்தை அருச்சனைசெய்யும் பொருட்டு வேதகிரிக்குப் போவென்று சொல்லினர் —எ-று. (உ௬)

வேறு.

இம்மாதவனம்மாதவனேவத்தொழுதெய்தி
மெய்ம்மாதொருபாகத்தனைவேதப்பெருவரைவாய்க்
கொய்ம்மாமலர்புனலாதியகொடுபூசனைநெடுநூற்
செம்மாநெறியெவையாமவைசெய்தான்வினையெய்தான்.

(இ-ள்) அந்தப்பிருகு மகாரிஷியிவ்வாறேவினதால் தீவினையை அடையாத அந்தமகாவிஷ்ணு அவரைத்தொழுது சென்றுபார்வதி தேவிபாலா யிடப்பாகத்திலுடையபரமசிவனைப்பெரியவேதகிரியி னிடத்தில்கொய்ததிருப்பள்ளித்தாமம் திருமஞ்சனமுதலானவற்றை க்கொண்டுவேதநெறிப்படி பூசனைசெய்யத்தக்க முறைமையெவை யோ அம்முறைமைவழுவாமல் செய்தார்-எ-று. (உ௭)

பின்னுந்தலைநாண்முப்புரமதனிற்பெருவீரர்
மன்னுஞ்சிவலிங்கத்தொடருச்சித்தலைவழுவப்
பன்னுஞ்சிலமாயஞ்செய்தபாவத்தலைகளையப்
பொன்னின்பதியிந்தப்பதியிசைபூசைபுரிந்தான்.

(இ-ள்) ரிஷிபத்தினியைக்கொன்ற பாவந்தீர இவ்வாறுபூசைசெ ய்து - பின்னும் ஆதிகாலத்தில் திரிபுரத்திலிருந்த அவுணர்கள்- அருச்சனைசெய்தல் சிவலிங்கத்துடன் வழுவும்படி சொல்லுகின்ற பலமாயஞ்செய்த பாவத்தினைநீக்கும்பொருட்டு அந்தத்திருமக ள்கணவன் இந்தப்பதியினிடத்தில் பூசைசெய்தான்——எ-று.

திரிபுரர்கள்சிவபூசைமுதலிய நற்காரியங்களில் வழுவாமல் இருந்தமையால்-அவர்களையாவரும்வெல்லக்கூடாமையா யிருந்த

லக்கண்டு மகாவிஷ்ணு அவர்களிடத்தில் பொய்த்தூற்போதனைசெய்து நற்செய்கைகளைக்கெடுத்தனர் (௨௮)

மாமானுயிர்கோடற்கொருமகவாய்வளர்நாளு
மாமானறுநெய்வெண்ணெய்கரந்துண்டமையகல
வீமாலயநடனத்தனையிவ்வேதகிரிக்கட்
பூமாலைபுனைந்தாயிரநாமங்கள்புகழ்ந்தான்.

(இ-ள்) மாமனாகிய கஞ்சனுடைய உயிரைவாங்குதற்கு ஒருகுழந்தையாய் வளர்ந்தநாளின் - மிகுந்த மணமுள்ள பசுவினெய் வெண்ணெய் - இவைகளைத்திருடியுண்டபாவமும் நீங்கும்படி சுடலையாகிய ஆலயத்தில் நடனஞ்செய்த பரமசிவத்தை யிந்தவேதகிரியினிடத்தில் பூமாலை யணிந்து பூசைசெய்து அவருடையஆயிரநாமங்களைச்சொல்லிப்புகழ்ந்தார்—எ-று.

ஈமம்-ஆலயம் - ஈமாலயமெனத்தீர்க்க சந்தியாயிற்று சுடலையாலயமென்றதனை “ கோயில்சுடுகாடுகொல்புலித்தோலல்லாடை ” யென்பதனானுமுணர்க. (௨௯)

என்னையேயொருதோணல்கினையிருநால்விழியுடையான்
றன்னையேயொருதோடந்தனைதந்தாய்வலியெந்தாய்
நின்னையேயொருகணமாயினுநினையேமுடிபுனையேம்
வினையேமிருவினையெங்ஙனம்வேறுவதுகூறாய்.

(இ-ள்) என்னையொருதோளில் அளித்தனை - எண்கண்களுள்ள பிரமனைமற்றொருதோளினிடமாகத்தந்தனை - இவ்வாறுதந்ததுமன்றிஎங்களுக்குக்காக்கவும்- ஆக்கவும்வல்லமையருளினை-எங்கள்தந்தையே இத்தன்மையுள்ள உன்னை யொருக்ஷணப்பொழுதாயினுந்தியானஞ்செய்யோம் - எங்கள்முடியிலுமுன்திருவடிகளைச் சூட்டிக்கொள்ளோம் - இவ்வண்ணம் பாவசம்பந்தமான எங்களிருவினை யெவ்வாறு ஒழிவது சொல்லுவாயாக—எ-று. (௩௰)

எவ்வாறுதவஞ்செய்தனனெளியேனுமுனக்கு
னவ்வாமத்திலிற்சேரவுபங்கப்பணிபுகவும்

வவ்வாவிழிகோடோடுரிவரதண்டிவைதரவும்
வெவ்வாளியெனப்போக்கவும்விடையாகவுமுடையாய்

(இ-ள்) என்னையாளுடையஇறையவனேஎளியேனுமுனக்கு- உன் இடப்பாகத்திற்சேரவும்-என்னெலும்புமாலையாகப் பொருந்தவும் எவர்களாலும்வவ்வப்படாதஎன்கண் - கொம்பு- ஓடு- தோல்- சிரோ ஷ்டமுள்ள தண்டம்-என்னுமிவைகளைக்கொடுக்கவும் - வெவ்வி தான அம்பாகஎன்னையேவவும்- ரிஷபவாகனமாகவும்- எவ்வாறுதவ ஞ்செய்தேனோ—எ-று.

திருமூர்த்திசொரூபத்திலிடப்பாகத்திற்சேர்ந்தது - சர்வசங் காரகாலத்தில் - எலும்புமாலையணிந்தது - மச்சாவதாரத்தில் கண் ணிணையும் - வராகஅவதாரத்தில் - கொம்பு - கூர்மாவதாரத்தில்- ஓடு நரசிங்காவதாரத்தில் - தோல் - திரிவிக்கிரமாவதாரத்தில் - நடுமுது கெலும்பாகியதண்டு திரிபுரசங்காரகாலத்தில்-பாணமும் -விடையு மாம் இவற்றின்விவரம்புராணங்களாலறிக -கண்ணைப்பறித்துத்திருவ டியிலருச்சனைசெய்ததனையெடுத்துக்கூறலாகாதோவெனின்கண்ணு டன் - கொம்பு-ஓடு - தோல்- தண்டு - சேர்த்துக்கூறினமையின் வராகத்தின்கண்ணெனக்கூறினம். (௯௧)

என்றேவினையொருவித்திருமாலும்பதமெய்தச்
சென்றேயரிதொழுதிப்புரிதிருநாரணபுரியா
மன்றேமுதலெனவாயுகமழியாமுனிமொழிய
நின்றேவசுவானோரயனெறியாதெனவறைவான்.

(இ-ள்) திருமாலானவர்இவ்வாறுதுதிசெய்துதமதுபதிக்குவிடை பெற்றுக்கொண்டுசென்றனர்.இவ்வண்ணம்மகாவிஷ்ணுவந்து பூசித் துத்தொழுதகாரணத்தால்இந்தக்ஷேத்திரம்-அன்றுமுதல்திருநாரண புரியெனப்பெயர்வழங்குகின்றதென்று - வாழ்நாளழியாத மார்க்க ண்டமுனிவர்சொல்லஅதைக்கேட்டு நின்றவசுதேவர்கள்பிரமதேவன் பூசித்தமுறைமையாதோவென்னச் சொல்லுகின்றார்—எ-று.(௯௨)

நாராயணச்சருக்கமுற்றியது.

ஆ திருவிருத்தம்.௪௫௰.

உ

சிவமயம்.

# சதுமுகச்சருக்கம்.

—*—

அண்டம்யாவுமுட்பொதிந்தகன்கடலிடைக்கிடந்த
புண்டரீகக்கட்புராதனன்பயந்தபுண்டரிக
னண்டவாதசாவித்திரிக்கன்பிலாதிகழ்ந்து
கொண்டபாரதிருவிழைலத்தலைவிடாதிருந்தான்.

(இ-ள்) அண்டங்களையெல்லாம் தன்வயிற்றுக்குள்வைத்துக்கொண்டு விசாலமாகியதிருப்பாற்கடலிற் பள்ளிகொண்டிருக்கும் தாமரைமலர்போன்றநேத்திரங்களுள்ள மகாவிஷ்ணுவினால்பெறப்பட்டபிர்மாவானவர்பெருமைநீங்காதசாவித்திரியினிடத்தில் அன்பில்லாமல் அவளைவிட்டுநீங்கிக்-குவிந்ததனங்களையுடையபாரதியென்னுமனைவியைப்பிரியாமலிருந்தார்—எ-று. (க)

தன்னைவிட்டகன்றமைசதுமாமுகன்றவள
மின்னைவிட்டகலாமைசாவித்திரிவெறுத்துத்
தென்னைவிட்டகலாமறையுபநிடத்திறத்தோ
டுன்னைவிட்டகன்றேகுகவென்றுரைத்தகன்றாள்.

(இ-ள்) பிரமதேவன் தன்னைவிட்டுநீங்கினமையாலும் வெண்மைநிறமுள்ள பாரதியென்பவளை விட்டுநீங்காமையினாலும் சாவித்திரியென்பவள்மனம்வெறுத்து சந்தையாகிய இசையைவிட்டுநீங்காதவேதங்கள்உபநிடத்தின்பகுப்புடன் உன்னைவிட்டு நீங்கக்கடவதென்று சாபமொழிகூறிப்போய்விட்டாள்—எ-று. (உ)

சாவமிங்கிறுபணித்தசாவித்திரிதணந்து
பாவமாசொழித்தெழுமெழுமுனிவர்பாற்குறுகி
யோவமீதெனத்தவம்புரிந்தசைவறவுறைந்தா
டூவமாசுண்டதெனவயன்மாசுறச்சிறுத்தான்.

(இ-ள்)இவ்வாறுசாபமிட்ட சாவித்திரியானவள் -பிரமதேவனைவிட்டுநீங்கிப்பாவமாகிய குற்றத்தினின்றும்நீங்கியிராநின்றசப்தரிஷிவர்களிடத்திற்சேர்ந்து- இதுஎழுதியசித்திரமென்றுசொல்லும்படி

அசைவற்றுத்தவஞ்செய்து கொண்டிருந்தாள் இவளிப்படியிருக்கப்-பிரமதேவன்- தீபமானது அழுக்குப்படிந்ததுபோல மேனியொளிமழுங்கிச்சிறுமையடைந்தான்—எ-று.

சப்தமுனிவர்-அத்திரி-ஆங்கீரசன்-கௌதமன்-சமதக்கினி-பரத்துவாசன்-வசிட்டன்-விசுவாமித்திரன்-என்பவர்கள். (ரு)

அன்னமூர்தியைச்சுருதியுமங்கமுமங்கத்
தென்னவாற்றலுந்தணத்தலுமெறிகடற்றுயின்றோன்
கன்னமாமலத்தெழுமதுகயிடவர்கலக்க
வுன்னலாத்துயருழந்தனனிழந்தனனுரமே.

(இ-ள்) பிரமதேவனை - நான்குவேதங்களும் - ஆறங்கங்களும்-அவ்வாறங்கங்களைப் பயின்றுள்ள எவ்வித வல்லபங்களும்நீங்கியிருக்கும்போது- அலைவீசுந்திருப்பாற்கடலில் அறிதுயிலமருந்திருமால்காதினிடத்துண்டானகுறுமலத்திலுற்பவித்த-மது- கயிடவன். என்னும்அரக்கர்களிருவரும்வந்துவருத்துதலினால் பிர்மாவானவர்மனதினாலும்நினைக்கக்கூடாததுயரங்கொண்டுபலமிழந்தார்—எ-று.

உன்னலாத்துயரென்றது -அதன்மிகுதியைக்காட்டுகின்றது. (சா)

ஊனறத்தெறுமதுகயிடவர்படைக்குடைந்து
பிரமனிக்குறையுறைந்துசாவித்திரிபிரிந்தாள்
வரவழைப்பவுஞ்சேய்மையண்மற்றொருதுணையும்
புரவுமற்றனமெங்ஙனம்யாம்புகும்புகலே.

(இ-ள்) பலமறவருத்துகின்றமதுகயிடவர் படைக்குத்தோற்று-பிரமதேவனிந்தக் குறைநேரிடும்படி சாபமொழிகூறி சாவித்திரிபிரிந்துவிட்டாள் அவளைவரவழைக்கலாமென்றாலோதூரத்திலிருக்கின்றாள்வேறொருதுணையும்- ஆதரவுமில்லாதிருக்கின்றனம் - இனிநாம்புகும் அடைக்கலம்யாது—எ-று. (௬)

பகைஞர்நட்பினர்நொதுமலரொன்னுமுப்பகுதி
வகைதெரிந்ததனடுநின்றுவாழ்தலேவாழ்தன்
முகைமுலைப்பலதாரத்தைநடத்துழிமுறைமைத்
தகைமைதப்பினர்கடப்பரோதீவினைத்தளையே.

(இ-ள்) பகைவர் - நண்பினர் - பகையுநண்புமல்லாத அயலவர் - என்கிறமூன்றுபிரிவாகிய வகையைத்தெரிந்து - அதனடு நிலைமையில்நின்றுவாழ்வதேவாழ்வு- அவ்வாறன்றித்தாமரையரும்பினையொத்ததனமுள்ளபலமனைவியரை நடத்துமிடத்தில் முறைமைத்தகைமையைத்தவறினவர்கள்பாவமாகியவிலங்கையொழிப்பரோ ஒழியார்கள்—எ-று.　　　　(சு)

ஒருவரைத்துறந்தொருவரைக்கலந்தகமுருகி
மருவுமக்கொடுங்காமத்தின்மதிமயக்குற்றேந்
திருவுமற்றனந்தேசொழிந்தனந்தெறும்பகைக்கும்
வெருவிவிட்டனமினிச்செயுஞ்செயலும்வேறிலையால்.

(இ-ள்) ஒருமனைவியைநீக்கியொருமனைவியைச்சேர்ந்து மனமுருகிச்சேர்கின்றகொடியதான அந்தக்காமத்தினுல் புத்திமயங்கினேம் - செல்வமும்அழிந்தோம் -மேனியிலுள்ளஒளியுமிழந்தோம் கொல்லுகின்றபகைக்கும் பயந்துவிட்டோம்- இனிச்செய்யுஞ்செய்கையும்வேறொன்றுமில்லை—எ-று.　　　　(எ)

போதுதோறும்யாமிருந்திருந்திரங்கியுட்புழுங்கி
யேதுபேசினுமாவதென்னெண்ணில்வானவர்க்கு
மாதியாநமதையனல்வையகமளந்த
சோதியாலன்றித்தொலைவதன்றிப்பெருந்துயரே.

(இ-ள்) காலந்தோறும் நாம் இரங்கிமனம்வெதும்பி இந்தவாறு நமக்குள் எவ்விதவார்த்தையைச் சொல்லிக்கொண்டாலும் ஆகின்றதென்ன நம்முடைய அத்தனுகிய பரமசிவனது திருவருளினுலிவ்வுலகத்தையளந்த மகாவிஷ்ணுவினுலல்லது இப்பெருந்துயர் தொலைவதல்ல—எ-று.　　　　(அ)

என்றுசென்றுபாற்கடலகத்திந்திரநீலக்
குன்றுகண்படுத்காலன்னகொண்டலைக்கண்டான்
வன்றுயிற்செயுமாயமாசத்தியைவழுத்தித்
தன்றிருக்கரங்கூப்பமுறற்போற்றனடமியாள்.

(இ-ள்.) இவ்வாறெண்ணித்திருப்பாற்கடலினிடத்திற் சென்று இந்திர நீலமலைபள்ளிகொண்டது போன்றிருக்கும் மகாவிஷ்ணு

யைக்கண்டு அவர் நித்திரை செய்வதற்கேதுவான மாயாசத்தியைத்துதி செய்து தன்கை குவித்துத்தொழ - அவள் தமியளா யவருக்கெதிரில்வந்தனள் — எ-று. (௯)

உறக்கமென்கின்றமாயமாசத்திவிட்டொருவத்
திறக்குங்கண்ணனுக்கண்ணனுங்கெழச்சிரந்தாழ்ந்து
மறைக்குநாயகன்மதுகைடவக்குலமலைக்குங்
கொலைக்கியானினியாற்றலன்சரணெனக்குழைந்தான்.

(இ-ள்) நித்திரையாகிய மாயாசத்தி நீங்கிவிட்டவளவில் - கண்களைத்திறந்து கண்ணனும் விஷ்ணுவெழுந்தவுடன் - வேதங்களுக்கு நாயகனாகிய பிரமன் - அவரைநோக்கி மதுகயிடவர்சேனைக்கூட்டம் போர்செய்யுங்கொலைத்தொழிலுக்குநானினிச்சகிக்கமாட்டேனென்றுவருந்தினன் — எ-று. (௰)

தாங்குமாறொருதுணையின்றிச்சதுர்முகன்றனிநின்
றேங்குமாறுகண்டெழுந்துகோதண்டங்கைவாங்கி
யாங்கையாயிரமாண்டுமூண்டரியமர்விளைத்தா
னோங்குவாளியின்மதுகயிடவர்மடிந்துலந்தார்.

(இ-ள்) ஆதரிக்கும்படி யாதொருதுணையுமில்லாமல் பிரமதேவன் தனியாக நின்றேங்குமுறைமையைக்கண்டுவிஷ்ணுவெழுந்துகோதண்டமென்னும் வில்லைக்கையிலெடுத்துக்கொண்டுஎதிர்ந்துஐயாயிரவருஷம்போர்செய்ய அவர்பாணத்தினால் அவ்விருவருமடிந்தார்கள்

உலந்ததானவர்வெள்ளமுமுதிரவெள்ளமுமுட்
கலந்ததாதைதன்கருணையின்வெள்ளமுங்கண்டான்
வலந்தற்சூழ்ந்தடித்தாமரைபன்முறைவணங்கி
யலர்ந்தவாரிசனெண்கணுற்புனல்வெள்ளமளித்தான்.

(இ-ள்) இறந்ததானவப்படைவெள்ளத்தையும் உதிரவெள்ளத்தையும் உள்ளத்திற் பொருந்தியதன்பிதாவின் கருணை வெள்ளத்தையுங்கண்டு வலமாகச்சூழ்ந்துவந்து அவருடைய திருவடித்தாமரைகளைப் பலதரம்வணங்கி மலர்ந்ததாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமாவானவர் தமதெட்டுக் கண்களிலும் நீர்பெருக நின்றார் — எ-று. (௰௨)

பிரிதராதசாவித்திரிநினைப்பிரிந்ததனாற்
றெரிதராதபேரவுணராலுளமயர்தினைத்தாய்
சுருதிபோய்த்துறந்தாற்றலுந்துறந்தனையந்தக்
குருதிவேற்கண்ணியாண்டையள்கூறெனக்கூறும்.

(இ-ள்) ஒருக்காலும் பிரியாதசாவித்திரியுன்னைப் பிரிந்தமையால்
தெளிவில்லாத பெரிய அவுணர்களால் மனத்துன்பம் பொருந்தினை
வேதத்தையொழிந்து படைப்புத்தொழில் செய்யும் ஆற்றலுமிழந்
தனை-பகைவருடலுதிரந்தோயும்படியானவேல்போன்றகண்ணுள்ள
அந்தச்சாவித்திரி யெங்கிருக்கின்றாள் சொல்லெனச்சொல்வர்-எ-று

யாதுகாரணம்வந்திடைதடுத்ததென்றறியேன்
மாதர்பானடுவின்மையைப்புரிந்தகமருண்டே
னாதல்பார்த்தசாவித்திரியடியனைக்கனன்று
வேதநீங்கெனநீங்கினடவத்துவீற்றிருந்தாள்.

(இ-ள்) என்னகாரணம்நேரிட்டுமத்தியில் தடுத்ததென்றறியேன்
னல்மனைவியரிடத்தில் பாரபக்ஷஞ்செய்துமனமயங்கியதைநோக்
யசாவித்திரி- அடியேனைகோபித்து வேதங்களும் நீங்கக்கடவன
வென்றுசபித்துவிட்டு நீங்கித்தவத்தில் வீற்றிருக்கின்றாள்---எ-று.

மைந்தராயவர்க்கஞ்ஞையால்வருங்குறையாவுந்
தந்தைதாயரைவிடுத்தயல்யாவரோதடுப்பா
ரந்தமாதுமீண்டெனக்கெய்தும்வகைதொகுத்தடைவே
யெந்தைகூறெனக்கரமுகிழ்த்தெண்கணனிருந்தான்.

(இ-ள்) புத்திரர்களாயிருப்பவர்களுக்கு அறிவில்லாமையால் வ
ருங்குற்றங்களையெல்லாம்- தாய்தந்தையரைவிட்டு வேறேயாவர்வந்து
டுப்பார்கள் - என் அய்யனே அந்தச்சாவித்திரியுமிப்போது எ
னிடத்தில்சேரும்படியெண்ணி முறைமையாகச்சொல்லவேண்டு
மென்றுபிரமாவானவர்கைகுவித்திருந்தார்---எ-று.		(௫௫)

வேறு.

சுருதியதுமொழிவன்முதுகமலமுனிதனிகொள்
சுருதிகிரியெனவுலகுதொழுவதொருகிரியா

லொருதலைவனமையடிமையுடையனதனிடையே
யிருதநயரொடுவிடையொடிறைவிதனொடுறைவான்.

(இ-ள்) விஷ்ணு அதையோசித்துச்சொல்லுகின்றார்- பிரமதேவ
னே நான்சொல்வதையுன்மனதில்மிகுந்தஞாபகமாகக்கொள்ளக்கட
வை அதுதானென்னவெனில் = உலகமெல்லாந்தொழுகின்றவேதகிரி
யென ஒருகிரியிருக்கின்றது- ஒப்பற்றதலைவனாய் நம்மையடிமையா
கவுடையபரமசிவன் அந்தக்கிரியினிடத்தில் இரண்டுபுத்திரர்களுட
னும்-விடைத்தேவருடனும் - பார்வதிதேவியாருடனுமெழுந்தருளி
யிருக்கின்றார்—எ-று. (௰௬)

வரதனதுதிரதமலமறைகரனுமறைவாய்
விரதநடுநிலைமையறம்விடுதல்கருதினைபோய்ப்
பரமனடிதொழுதுபலிபுரிதிபுரிபதமே
பிரமநினதிறைவிதருமறைபிரிவுதருமே.

(இ-ள்) பிரமதேவனே பரமசிவனுடையதிரோதமலமானது உன
க்கு மறைப்பினைக்கொடுத்தமையால்-வேதத்தில்சொல்லப்படும்-விர
தமும் -நடுநிலைமையும்தருமமும்விடுதலைக்கருதினை ஆகலால் நீவேத
கிரிக்குப்போய்ப் பரமசிவனுடைய திருவடியைத்தொழுது பூசை
செய்-அவ்வாறுசெய்து - உன்னுடையபதவியை விரும்பிக்கேள்-
உன்மனைவியைக் கொடுப்பார் உன்னைவிட்டுப்பிரிந்தவேதத்தையுங்
கொடுத்தருளுவர்—எ-று. (௰௭)

எழுதிவிரைதரவெனலுமிவனும்விடைகொடுபோய்த்
தொழுதுதுதியொடுமுதியசுருதிகிரிபுகுவா
னழுதுமொழிகுழறுமரகரவெனுமவ்வசல
முழுதும்வலமதுபுரியுமுடிகிநடமிடுமால்.

(இ-ள்) விரைவுடனெழுந்திருவென்று மகாவிஷ்ணு சொன்னவு
டன் - பிரமதேவனும் விடைபெற்றுக்கொண்டு போய்த்தொழுது
ந்துதித்தும் பழைமையான வேதகிரியிற்சேர்கின்றவன் - களிப்பி
னால்அழுதுமொழிகுழறுவன்- அரகரவென்பன்- அம்மலை முழுவது
ம்வலம்வருவன் - முடிகிநடமிடுவன்—எ-று. (௰௮)

நறுமலருமெறிபுனலுநனிகைகொடுபுனித
னுறுதிதருதிருவடியினுருகிவழிபடலும்
வறியமதிசிதையவயன்மனைவிபுகமறைநூல்
செறியவுபநிடதமொடுதெருளவருளினனால்.

(இ-ள்) நறியமலரும் அலைவீசும்நீரும் மிகுதியாகக்கையில்வைத்துக்கொண்டுமேன்மையுறுதியைத்தருவதான பரமசிவனுடைய திருவடியில் மனமுருகி ஆராதித்தவளவில் பிரமதேவனுடைய - வறுமைப்பட்ட புத்திசிதையவும்- மனைவிவரவும் வேதசாஸ்திரமும்நெறியதானஉபநிடதமுந்தெருளவுமருளினர்--எ-று.

" வறியமதிசிதைய ,, என்றது - நல்ல விவேகமுண்டாகவுமென்னுங்குறிப்பு. அதற்குமேல்பிரம்மா துதிசெய்கின்றனர். (யகு)

அறமுதலுமறைமுதலுமருண்முதலுமொருநீ
மறமுதலும்வினைமுதலுமனமுதலுமொருநீ
யுறவுபகைநொதுமலெனவுரைசெய்வதுமொருநீ
பிறவுமுனையலதுலகுபெறுவதிலைபெரியோய்.

(இ-ள்) தருமத்தின்முதலும் வேதத்தின்முதலும் - அருளின்முதலும் ஒருநீயே - பாவத்தின்முதலும் வினையின்முதலும்- மனத்தின்முதலும் ஒருநீயே- உறவு - பகை - அயல் - எனச்சொல்லப்படுவதும் ஒருநீயே - இவைகளுமன்றிப்பிறவும் - பெரியோனேயுன்னையன்றியுலகம் பெறுவதில்லை—எ-று. (உய)

அரிவடிவுமடியனுடைவடிவுமெனவமைவாய்
விரிகடலுமுலகுமிருள்வெளியுமெனவொளிர்வாய்
பெரியனலைசிறியனலைபிரிவுபுணர்வலையாற்
றெரிவதலவிறைவநினதருளினதுசெயலே.

(இ-ள்) மகாவிஷ்ணுவின்வடிவமும் அடியேனுடைய வடிவமுமாகப்பொருந்தியிருப்பை - பரந்தகடலும் உலகமும் இருளும் வெளியுமாகவிளங்குவை - பெரியனுமல்லை சிறியனுமல்லை- பிரிவுமல்லை - சேர்க்கையுமல்லை - இறையவனேயுன்னருளின்செய்கை தெரிவதல்ல—எ-று. (உக)

பரமசிவவெனவினிதுபரவிமனைவியொடும்
விரவியவனுலகணுகிவிடலுமதுமுதலாப்
பிரமனதொழுதபுரிபிரமபுரியெனுமா
லிரவுபகலினுகருதிலிடரையவரடையார்.

(இ-ள்) பரமசிவனேயென இனிதாகத்துதிசெய்து - தன்மனைவியுடன் பொருந்திச் சத்தியலோகத்திற் போய்ச்சேர்ந்தார் பிரமதேவனிவ்வாறு தொழுத காரணத்தினால்அந்தப்புரியானது அன்று முதல் பிரமபுரியென்று சொல்லப்படும் - இரவும்பகலுமிந்தப்புரியைத்தியானித்தால் அவர்கள் துன்பத்தையடையார்கள்—எ-று.

எனநமனைமுனியுமுனியிவையிவைகள்பகர
வினவிவசுமுதல்வரெமைவினையொடிடர்விடயா
மனகனடிவழிபடுமோரடைவுவிதியுடனீ
மனதுதெளிதரமொழிதிவரதவெனவறைவான்.

(இ-ள்) யமனைக்கோபித்த மார்க்கண்டமுனிவர் - இவ்வாறிந்தச்சரித்திரங்களைச்சொல்லக்கேட்டு வசுதேவர்கள் - எங்களையிருவினையுடன் துன்பமொழியத்தக்கதாக - நாங்கள்பரமசிவனுடைய திருவடியையாராதிக்கும் முறைமையும் எங்கள்மனந் தெளியும்படி விதியுடன்சொல்லவேண்டும் சிரேஷ்டராகிய முனிவரே யென்னச்சொல்லுகிறார்—எ-று. (உரு)

சதுமுகச்சருக்கம்-முற்றியது.

ஆ. திருவிருத்தம்-சஎரு.

## வசுதேவச்சருக்கம்.



நீறணிந்துமெய்க்கண்டிகைபுனைந்துதொன்னெறியின்
வீறிருஞ்சிவலிங்கபேதத்தையும்விளங்கி
யேறுயர்த்தவன்பூசைகாலத்தொடுமியற்றிற்
பேறடைந்துய்வரவற்றையாஞ்பேசுவல்கேண்மின்

(இ-ள்) விபூதியணிந்து சரீரத்தில்ருத்திராக்ஷவடம்பூண்டு பழமையான முறைமைப்படிமேன்மைபொருந்திய சிவலிங்கபேதத்தையுமறிந்

து-ரிஷபக்கொடியுடையபரமசிவத்தின்பூசையைக்காலங்களிற்செய்
தால்பேறடைந்து உய்வார்கள் அந்தமுறைமைகளைச் சொல்லுகிறே
ன்கேளுங்கள்—எ-று. (௪)

நெடிதுபோதுநான்மறைமலைக்கொழுந்தினைநினைந்து
கடிதுரோமங்கள்பொடித்தெழக்கண்ணினீர்கலுழ
முடியின்மேற்கரங்குவிதரமுக்கண்மாமணியே
யடிகளேயென்றென்றயர்ந்துளந்தெளிந்தினிதறைவான்.

(இ-ள்) மார்க்கண்டமகாரிஷியானவர்-நெடும்பொழுதுநான்குவே
த சொரூபமாகிய மலைக்கொழுந்தாயுள்ள வேதகிரீசனைத்தியானித்
து கடிதாகரோமங்கள் சிலிர்த்தெழவுங் கண்களில்நீர்பெருகவும்சி
ரசின்மேற்கைகள்குவியவும் - முக்கண்மாணிக்கமே- கடவுளேயெ
ன்றுதுதிசெய்து பரவசப்பட்டு உள்ளந்தெளிந்தினிதாகச்சொல்லு
கின்றார்—எ-று. (௫)

கற்பமென்றநுகற்பமென்றுபகற்பமென்றுஞ்
சிற்பரன்றிருநீறுமூன்றாகுமித்திறத்தின்
முற்பகர்ந்தவெண்பொடிகளுக்குரியவாய்மொழிந்த
நற்பசுக்கணம்வசுக்கணங்காள்சிலநவில்வாம்.

(இ-ள்) அஷ்டவசுக்களே கற்பமென்றும்- அநுகற்பமென்றும்-
உபகற்பமென்றும் - பரமசிவத்தின்திருநீறு மூன்றுவிதமாம் - இம்
மூன்றுவிதத்தில் முதலிற்சொல்லிய திருநீற்றுகளுக்கு உரியவைக
ளாய் மொழிந்தநல்ல பசுக்கூட்டத்தைச்சிலசொல்லுகிறோம்-எ-று

ஈன்றநாளணித்தாயகன்றீன்பெருக்கன்னி
யூன்றுநோய்ப்பசுவந்திமூப்பிறந்தகன்றுடைத்தா
யான்றவாற்செவிகொம்பறைமலந்துய்ப்பதாகா
சான்றநூற்சொன்னவொருபதுந்தீங்கெனத்தகைய.

(இ-ள்) கன்றினையீன்றநாள் சமீபமானபசு - கன்றீனுதகன்னிப்
பசு - நோய்பொருந்தியபசு - மலட்டுப்பசு- கிழப்பசு - கன்றிறந்
தகாய்ப்பசு - பலம்பொருந்தியவாலும் - காதும் - கொம்புகளும்-
அறுந்திருக்கும்பசு - மலந்தின்னும்பசு - இவைகளாகாவாம்-

மேன்மைபொருந்திய ஆகமத்திற்சொல்லப்பட்டிருக்கிறஇந்தப்பத்துவகைப்பசுக்களும் - குற்றமுள்ளனவென்று சொல்லத்தகுதி யினையுடையதுகளாம்.—எ-று. (௪)

செந்நிறத்தவும்வெண்ணிறத்தவுமுதற்சிறந்த
வெந்நிறத்தினுமழகினுங்குணத்தினுமினிதா
யன்னமெய்க்கொருமெலிவின்றியமைந்தபல்சுரபி
நன்னர்பங்குனிச்சாலித்தாண்மேய்ந்தவைநன்றும்.

(இ-ள்.) செம்மைநிறமுள்ளவைகளும் - வெண்மைநிறமுள்ளவைகளும் - ஆதியாகச்சிறந்த எந்தநிறத்திலானாலும் - அழகிலுங்குணத்திலுமினிதாய் அந்தவுடலுக்குபாதொரு மெலிவுமில்லாமல் அமைந்தபலபசுக்கள் நன்மையாகப்பங்குனிமாசம் சம்பாத்தாள் மேய்ந்தவைநன்றாம்—எ-று. (௫)

எட்டினன்மூவைந்தினேழிருதிதியினன்றிசைத்து
விட்டகோமயம்விழாதமுற்கமலமெல்விலையாற்
சிட்டர்சாதமந்திரத்தினேற்றதிற்செறியப்
பட்டமேல்வழும்பொழித்தொருபழுதறக்கொணர்வார்.

(இ-ள்) அஷ்டமிதிதியிலாவது - பூரணைத்திதியிலாவது - சதுர்த்தசித்திதியிலாவது மேற்சொல்லப்பட்டபசுக்களின்சாணத்தைப்பூமியில்விழாதமுன் மிருதுவானதாமரையிலையில் -சிஷ்டர்களாயிருக்கின்றவர்கள் - சத்தியோசாதமந்திரஞ்சொல்லி ஏற்றுக்கொண்டு அதன்மேலிருக்கும் வழும்பினையொழித்துவிட்டுப் பழுதென்பது சிறிதுமின்றிக்கொண்டுவந்து—எ-று. (௬)

பெய்துவாமத்திற்கவ்வியமகோரத்திற்பிசைந்து
கைதனற்கொடுபுருடத்தினுருட்டியக்கணமே
வெய்யவோமத்திற்பதடியோடமைத்ததுவிளைந்த
செய்யபாகங்கண்டெடுப்பரீசானமந்திரத்தால்.

(இ-ள்) அதில்வாமமந்திரஞ் சொல்லிப்பஞ்சகவ்வியம் வார்த்து அகோரமந்திரஞ் சொல்லிப்பிசைந்து தற்புருடமந்திரஞ்சொல்லிக்கையாலுருட்டி அப்பொழுதே வெய்யஓமத்தீயில் சம்பாநெற்

ந்தருடன்வைத்துவிளைந்தநல்லபாகங்கண்டு ஈசானமந்திரஞ்சொல்லியெடுப்பர்—எ-று.                    (எ)

புதியவாடையின்வடித்தொருபுதுக்கடத்தெடுத்து
விதிவழாதுவெண்ணீற்றின்காயத்திரிவிளம்பிக்
கதியிதென்றுபாரிடைவைத்துக்கடிமலர்சாத்தி
மதியமன்னவத்துகில்கொண்டுவாயினிற்பொதிவார்.

(இ-ள்) எடுத்தவிபூதியை கோடிவஸ்திரத்தில் வடிக்கட்டி ஒரு புதுப்பாண்டத்திலெடுத்து- விதிதவறாமல் விபூதிகாயத்திரி மந்திரஞ்சொல்லி - இதுவேகதியாவதென்றுபூமியில்வைத்து - வாசனையுள்ளமலர்சாத்தி - சந்திரனையொத்தவெள்ளை வஸ்திரங்கொண்டு அந்தக்குடத்தின்வாயைக்கட்டுவர்—எ-று.                    (அ)

நன்றெனக்கற்பமித்திறநவிற்றலுமிருப்ப
வன்றெடுத்தகோமயத்தையன்றுருட்டியன்றடினுஞ்
சென்றுணக்கிவேறடினுமத்திருப்பெயர்சிறக்கு
மின்றுமற்றநுகற்பமுங்கேட்டிராலிசைப்பேம்.

(இ-ள்) நன்றென்றுகற்பவிதி யிவ்வாறு சொல்லுதலுமிருக்க- (மேலும் அதற்கேயொருவகை) அன்றெடுத்த சாணத்தையன்றே புருட்டிஅன்றேயோமாக்கினியில் விளைவித்தாலும் எடுத்தசாணத்தைக்கொண்டுபோயுலர்த்தி வேறேவிளைவித்தாலும் அந்தத்திருப்பெயர்சிறக்கும் -இனி அநுகற்பமுஞ்சொல்லுகிறோம் கேளுங்கள்-

சித்திரைப்பெருந்திங்களிற்செறிவனத்தெய்திக்
கைத்தலத்திறனுணங்கியமயங்கவர்ந்தேகி
வைத்திடித்ததிற்கோசலம்வார்த்தெடுத்துருட்டி
மெய்த்தவத்தர்முன்மந்திரப்படியினைவிளைப்பார்.

(இ-ள்) சித்திரைமாசத்தில் - நெருங்கியவனத்திற்சென்று அங்கேயுலர்ந்திருக்கிற சாணத்தை யெடுத்துக்கொண்டுபோய் - அதை வைத்திடித்து அதில் கோசலம் வார்த்தெடுத்து- உருட்டி -உண்மைத்தவர்கள் முன்சொல்லியமந்திரப்படிவிளைப்பார்கள்-எ-று.                    (௯)

இன்னவாறநுகற்பமாமுபகற்பத்தியல்பு
வன்னிநீள்வனத்துறவியற்கையின்வந்தபொடியை
யன்னவானைந்தும்பெய்துமுன்மனுமொழிந்தழல்வாய்ச்
சொன்னநூற்படியுருட்டிவைத்தெடுப்பர்தூயோர்.

(இ-ள்) இந்தமுறைமை அநுகற்பமாம் - உபகற்பவிதியாவது பெரியவனத்தில் தீயானது இயற்கையாகப்பற்றிக் கொள்ளுதலினாலுண்டாகிய பொடியைப் பஞ்சகவ்வியம்பெய்து முன்மந்திரஞ்சொல்லி ஓமாக்கினியில் சொன்ன ஆகமவிதிப்படி யுருட்டிவைத்து எடுப்பர் - அந்தத்தூயவர்—எ-று. (௰௧)

நீலந்தீப்பிணிதூம்பிரமாயுகநீக்குங்
கோலமாஞ்சிவப்பிசையின்மைமீதநல்குரவா
மேலுமித்திறநிறம்படாதெடுத்திடுநீற்றிற்
சாலும்வெண்ணிறமெண்ணிலாப்புண்ணியந்தருமால்.

(இ-ள்) இவ்வண்ணம் விளைக்கும்விபூதி நீலநிறமாயிருக்குமானால் கொடியபிணியுண்டாம்- கருமைநிறமிகுந்தசெம்மைநிறமாயிருக்குமாகில்வாழ்நாளைப்போக்கும்- சிவப்புநிறமானால்புகழைநீக்கும் மஞ்சள்நிறமானால்வறுமையுண்டாகும்- பொருந்தியஇந்தநிறமுண்டாகாமலெடுத்திடும் விபூதியில்வெண்மைநிறமதிகமாயிருக்குமானால்அளவில்லாதபுண்ணியத்தைத்தரும்-எ-று. (௰௨)

ஆறிரட்டியங்குலத்தளவுபாத்திணகலங்
கூறுமெட்டளவாடையாற்கொழும்புலித்தோலான்
மாறுடைப்பிணையுரிவையால்வட்டம்வாயாக
நீறுடைப்பதோராலயமியற்றுவர்நெறியோர்.

(இ-ள்) பன்னிரண்டு அங்குலத்தளவு நீளத்துடன் எட்டங்குலவளவு அகலமுள்ளதாக வஸ்திரத்தினாலாவது கொழுமையுள்ளபுலித்தோலினாலாவது - அவ்விரண்டுக்கும்பதிலாகப்பெண்மான்தோலினாலாவது வாய்வட்டமாக நீறுவைக்கும்ஆலயமொன்று அமைப்பார் - நெறிபெரியோர்கள் —எ-று. (௰௩)

(ஈண்டு ஆலயமென்றது-விபூதிப்பை)

தரிப்பதற்குட்டழுத்திமையநாமிகைதம்மால்
விரிப்பனந்துட்டங்கநிட்டிகைவிடுத்தமூன்றினுமா
மருத்தியாலுச்சியாதியபதினொராங்கத்துந்
திருத்துநீறுவந்தணியர்மந்திரவிதித்திறமே.

(இ-ள்) விபூதிதரிப்பது - அங்குட்டம் - மத்திமை - அநாமிகை
என்னுமூன்று விரலாலுமாம் - சொல்லுமிடத்தில் அங்குட்டம்-க
னிட்டிகையென்னு மிவ்விரண்டு விரலையும் விட்டமற்றமூன்றுவிர
லாலும் அன்புடன் உச்சிமுதலானபதினொரு உறுப்பிலும் திருத்த
மாகிய விபூதியை மந்திரவிதித்தன்மையாக மகிழ்ந்துதரிப்பார்கள்

அங்குட்டம் - பெருவிரல் - மத்திமை - நடுவிரல் - அநாமி
கை - மோதிரவிரல் - கநிட்டிகை - சுண்டுவிரல் அங்குட்டம்-மத்
திமை- அநாமிகை-என்னுமூன்றுவிரலால் - தரிக்கும்வகையாவது
மத்திமை-அநாமிகையென்னுமிரண்டுவிரல்களால்- முன்னம்நெற்
றியில்தரித்துப்பின்பு அந்தவிரண்டிற்குநடுவெ அநாமிகை
யால் குறுக்காக இழுப்பது. (௰௪)

நெற்றிமார்பகம்புயத்திடுநெடுமைநீற்றளவை
யுற்றமூவிருவிரற்களான்மற்றவற்றொன்றும்
பொற்றகாதிற்குஞ்செவ்விக்குந்தொடுதலேபோதும்
பெற்றுய்வார்முத்திசூலம்போற்பெரிதணிந்தவரே.

(இ-ள்) நெற்றியிலும் மார்பிலும்-புயத்திலும்- விபூதிதரிக்கவே
ண்டிய நீட்சியினளவு ஆறங்குலப்பிரமாணமாம் - மற்றஉறுப்பில்
ஒரு அங்குலப்பிரமாணமாம்-காதுக்குஞ்சிரசுக்குந் தொடுதலேபோ
துமானது- சூலம்போல் பெரிதணிகின்றவர்முத்திபெற்றுய்வார்கள்

மாசும்வன்மையுநடுவிழுத்தலும்வளைந்திடலும்
பூசினொன்றொடொன்றறப்பிரிதலும்பொருந்தலுமாய்ப்
பேசுமூவிருதீக்குணம்பிறங்கநீறணிந்தா
லாசிலாதவரலக்கண்வந்துறுமென்றறைவார்.

(இ-ள்) அழுக்கும்-தளமும்-ஒருகீற்றின்நடுவில் கொஞ்சம்படாம
லிருத்தலும்- வளைவாயிடலும் - தரிக்குமிடத்தில் ஒன்றுக்கொன்று
மிகப்பிரிதலும்-ஒன்றோடொன்றுகலத்தலுமாகச்சொல்லுகின்றஇந்
த ஆறுகுற்றமும்விளங்கத் திருநீறணிந்தால்குற்றம்சம்பவிக்குமெ
ன்றுபெரியோர்கள் சொல்வார்கள் — எ-று. (௰௫)

சந்திமூன்றினுந்தீக்கையர்புனலொடுந்தரித்துப்
புந்தியான்மத்தியானமேற்புனல்விட்டும்புனைவார்
வந்தநீரொடும்பகன்முன்னைப்பின்னைநீர்மாற்றி
யந்தணாளர்க்குள்விரத்தருமாதருமணிவார்.

(இ-ள்) தீக்ஷைபெற்றவர்கள் மூன்றுகாலத்திலும் நீருடன்கலந்துதரித்துப் புந்தியால் மத்தியானத்துக்குமேல் நீரின்றியுந்தரிப்பார்கள் முன்பகலில் நீரோடும் பின்பகலில்நீரின்றியும் பிராமணர்களுக்குள். துறவிகளும்மாதர்களும் தரிப்பார்கள்—எ-று (௰௭)

மறைஞராதியமூவர்க்குஞ்சிவாலயமகத்து
மறையுஞ்சூத்திரர்க்கானதுமடைப்பள்ளியகத்துங்
குறையுமேனையர்க்கடவியிற்கொழுந்தழலிடத்து
நிறையவாக்கியநீறுரித்தாமெனநிகழ்த்தும்.

(இ-ள்) பிராமணர்முதலான மூன்றுவருணத்தாருக்கும் சிவாலயத்தின்யாகத்தீயில் விளைந்தநீறும் சொல்லுகின்ற சூத்திரர்களுக்கு மடைப்பள்ளியிலுண்டான நீறும்இந்தநால்குவருணத்தார்நீங்கலாகியமற்றை வருணத்தாருக்குக்காட்டுத்தீயிலுண்டான நீறும்உரியதாமென ஆகமத்திற்சொல்லும்—எ-று.

பிராமணர்-க்ஷத்திரியர்-வைசியர்-சூத்திரர்- என்னும்நான்குவருணத்தார்நீங்கலாகியமற்றை வருணத்தார் : அநுலோமர்-பிரதிலோமர்முதலினர். (௰௮)

அணிவரந்தணர்பாதாந்தமேயளவுமுத்தூள
மணிவர்காவலர்நாபிமேல்வணிகராவாரு
மணிவர்பட்டம்போன்மூவிரற்கொண்டெழுத்தாக
வணிவர்சூத்திரரெனச்சொல்வதாகமக்கடலே.

(இ-ள்) பிராமணர்கள்சிரசுமுதல் பாதமீறாக உத்தூளனமாக. அணிவார்கள் க்ஷத்திரியர்கள் நாபிக்குமேலணிவார்கள் வைசியர்கள் பட்டம்போல் அணிவார்கள் சூத்திரர்கள் மூன்றுவிரல்கொண்டு வரியாக அணிவார்கள் என்றுசொல்லுகின்றது ஆகமமாகியகடல்.

மந்திரந்தவந்தியானநூல்பூசனைவணக்க
மெந்தவாற்றினென்றேத்தினுநீறன்றியியற்று
மந்தணாளர்தமகங்களுக்கனைத்தும்வந்துறினு
முந்தைநூன்முறைத்தீயின்றிமுடியுமோமுடியா.

(இ-ள்) மந்திரம்-தவம்-தியானம்-சாஸ்திரம்-பூசனை-வந்தனைஎன்கின்ற எந்தமுறைமையினாலாவதுஒருமுறைமையினால் பரமசிவத்தைத்தியானஞ்செய்தாலும்விபூதியணியாமல்செய்யார்கள் - பிராமணர்களுடையயாகங்களுக்குஎல்லாப்பொருள்களும் வந்திருந்தாலும் பழமையானசாஸ்திரமுறைமைப்படி அக்கினியில்லாமல் யாகம்நிறைவேறுமோநிறைவேறா—எ-று.

அக்கினியின்றி யாகம்நடவாததுபோல விபூதியின்றிச்சிவார்ச்சனைநடவாது என்பதுகருத்து. (உ௰)

நீற்றின்றன்மையையறிந்துநீறணிந்திலார்நிகழ்த்து
மாற்றினீங்கியபதிதராய்விடுவரந்தணர்க்கு
மேற்றபூதியஇடாமுகமீமமம்முகத்தைத்
தோற்றநோக்கினூறஞ்செழுத்தோதுவர்தூயோர்.

(இ-ள்) விபூதியின்தன்மையையறிந்து அதனையணியாதவர்கள் சாஸ்திரங்களிற் சொல்லுகின்ற நன்மார்க்கத்தை நீங்கியபதிதர்களாய்விடுவார்கள்- பிராமணர்களுக்கும் தகுதியான திருநீறிடாதமுகம் சுடுகாடுபோலாம்- அந்தமுகத்தைத்தோற்றப்பார்த்தால்நல்லோர்கள் நூறுதரம்பஞ்சாக்ஷரஞ்செபிப்பார்கள்—எ-று. (உக)

விலையிற்கொண்டனவொருகையிற்கவர்ந்தனவேற்று
நிலையிற்கண்டனதீக்கையர்கொணர்ந்துநீட்டியன
தலையைக்கம்பித்துங்கவிழ்ந்துமங்காந்துந்தாணடந்து
மலைவிற்பண்பறுத்தணிந்தனநீறுதீங்களிக்கும்.

(இ-ள்) விலைக்குக்கொண்டவிபூதியும் - ஒருகையில்வாங்கினவிபூதியும்-வேற்றிடத்திற்கண்டவிபூதியும்-தீக்ஷைபெற்றவர்கள் கொண்டுவந்துநீட்டியவிபூதியும் - தலையசைத்தும் - கவிழ்ந்தும் - அண்ணாந்தும்-கால்நடந்தும் - இவ்வாறலைவினால் இயல்பின்றியணிந்தால்-குற்றத்தைத்தரும்—எ-று. (உஉ)

நீடுதென்புலத்தவர்க்கிடுவீதிடுமறையோ
னூடுதந்திடவிடுவரேலனந்தமாயோங்குங்
கோடியந்தணருண்பதோரிடத்தவன்கூடின்
மாடிருந்தவருண்டியுந்தீங்கெலாமாய்க்கும்.

(இ-ள்) நீடியபிதிர்தேவர்களுக்குச் சிராத்தமிடு கின்றவர்கள் விதிப்படிவிபூதிதரிக்கும்-பிராமணன் அப்போது கொடுக்கும்விபூதியைத்தரிப்பார்களாகில்- பலன் அதிகமாயோங்கும் -கோடிப்பிராமணர்கள் போசனஞ்செய்யுமிடத்தில் விபூதியணிந்திருக்கும் பிராமணன்போய்ச்சேர்ந்திருந்தால் -அருகிருந்தவர்க ளாகாரமுங்குற்றமெல்லாம்நீங்கும்—எ-று. (உரு)

ஈசன்முன்னுதூலியற்றியயாகத்தின்முன்னுந்
தேசிகன்திருமுன்னுநீறணிவதுதீதா
மாசிலாததோரணுத்துணைமண்ணிடைவீழ்க்கிற்
பேசலாநெடுங்கற்பங்கள்பெருநரகுழப்பார்.

(இ-ள்) பரமசிவத்தின்சந்நிதியிலும் வேதவிதிப்படி செய்யும் யாகத்தின்முன்னும் - ஆசாரியர்சந்நிதியிலும் - திருநீறணிவதாகு ற்றமாம் - குற்றமில்லாத ஓரணுவளவுவிபூதிபூமியில் சிந்தினாலும் அளவுசொல்லவொண்ணாத நெடுங்கற்பகாலம் நரகவேதனையனுபவிப்பார்கள்—எ-று. (உசு)

தீதுநீறெழத்தெறுகையானீறுமேற்சிறந்த
சோதியீதலாற்பசிதமுன்றொகுத்தவாழ்க்கையினாற்
பூதியும்புறங்காத்தலாற்காப்புபுன்மலமாங்
கோதுந்தீர்த்தலாலகோரமுமெனப்பட்டததுவே.

(இ-ள்) அந்தவிபூதிகுற்றமெல்லாம்நீறும்படி கெடுப்பதினால் நீறு - மேலான சோதியைத்தருவதால்பசிதம்- தொகுத்தவாழ்க்கையைத்தருவதினால்-பூதி- காப்பதினால்- காப்பு-புன்மலமாகியகுற்றத்தைதுந்தீர்ப்பதினால் -அகோரமென்றுஞ்சொல்லப்பட்டது—எ-று.

வேறு.

இவ்வகைமூவகைநீறுமிங்கிவை
வகைவகைவிதியினாலணியுங்காட்சியு

மெய்வகைப்புண்ணியவிளைவுஞ்சொற்றன
மூய்வகைக்கண்டிகையுரைத்துங்கேட்டிரால்.

(இ-ள்) இத்தன்மையானமூன்றுவகை விபூதியினையும் - அதனை முறைமையினால் விதிப்படிதரிக்கும் முறைமையினையும்- அதனாலுண்டாகும் புண்ணியவிளைவையுஞ்சொன்னோம்-இனிஉய்யும்படிஉருத்திராக்ஷம் அணியும் விதியுஞ்சொல்லுகிறோம்—எ-று. (௨௬)

திரிபுரத்தவுணராற்சிதைந்துசிந்திய
வரியயன்முதற்சுரரருந்தவஞ்செய
வரிசையின்வியந்துபோய்வருடமாயிர
மெரிசெயுங்கணச்சியானிலிநோக்கினான்.

(இ-ள்) திரிபுரத்திலிருந்த அவுணர்களால் வருந்தியோடினபிரமன்விஷ்ணு முதலானதேவர்கள் அரியதவஞ்செய்தலினால் - முறையாகவியப்புற்று - அங்குச்சென்றுஆயிரவருஷம்தீப்பொறிசிதறுமழுப்படையுள்ள பரமசிவமினிதாகநோக்கினர்—எ-று. (௨௭)

கண்ணிமையாதரன்பார்ப்பக்கண்ணினுந்
தண்ணியபுனற்றுளிதுளித்துத்தாழ்தலும்
புண்ணியக்கண்டிகைப்புனிதமாமர
நண்ணியங்கெழுந்ததுவிழுந்தஞாலமேல்.

(இ-ள்) பரமசிவந்திருகண்களையிமையாமல்நோக்கினதால்அந்தத்திருக்கண்ணினின்றும் குளிர்ச்சிபொருந்தியநீர்த்துளிசிந்தித்தாழ்ந்ததினால் - அந்தப்பூமியில்புண்ணிய சொரூபமானபரிசுத்தமுள்ளருத்திராக்ஷ மரம்முளைத்தெழுந்தது—எ-று. (௨அ)

அன்றுதொட்டுருத்திரவாக்கமென்னும்பே
ரொன்றுபட்டொருமுப்பதுடனெட்டாயது
நன்றியிற்பேதங்கணன்னிறங்களும்
வென்றியிற்செம்மைபொன்கருமைவெண்மையே.

(இ-ள்) அன்றுமுதல் ருத்திராக்ஷமென்னும்பெயர் ஒருமைப்பட்டுப் பேதங்கள்முப்பத்தெட்டாயது நல்லநிறங்களும்- வெற்றியுடன் - சிவப்பு - பொன் - கருமை -வெண்மையாம்—எ-று.

வெண்மைமற்றந்தணன்வேந்தனென்பது
முண்மையிற்செம்மையிவ்வோரிரண்டினும்
வண்மையிற்கலந்ததுவணிகன்சூத்திரன்
றிண்மையிற்கருமையாய்த்திகழ்ந்ததென்பவே.

(இ-ள்) வெண்மைநிறமுள்ளது பிராமணசாதி -சிவப்புநிறமுள்ளது-உண்மையானக்ஷத்திரியசாதி - இந்தஇரண்டிலுங் கலந்திருப்பது வைசியசாதி திண்மையுடன் கருமைநிறமுள்ளதாய் விளங்குவது சூத்திரசாதியென்று பெரியோர்கள்சொல்லுவார்கள் -எ-று.

ஒருமுகஞ்சிவன்வடிவுறையுநான்மறைப்
பெருமகளைத்தெறுங்குறைபெயர்க்குமா
விருமுகமிறைவனோடிறைவிகோலமா
மருவியகோக்கொலைபலவுமாய்க்குமே.

(இ-ள்) ஒருமுகமுள்ளதுசிவசொரூபம்-அதனையணிந்தால் பிராமணஸ்திரியைக்கொலைசெய்யும் பாதகத்தையொழிக்கும்- இரண்டுமுகமுள்ளது-சிவசத்திசொரூபமாம் -இதுபொருந்தியபலகோவத்திகளையொழித்திடும்—எ-று. (௲௧)

மும்முகங்கனலிபெண்கொலைமுருக்குநால்
வெம்முகமயனரகத்தின்மீட்கும்வே
றைம்முகங்காலருத்திரனடாதலுண்
பொய்முகமுரித்தலாப்புணர்ச்சிபோக்குமால்.

(இ-ள்) மூன்றுமுகமுள்ளது அக்கினிதேவன்சொரூபமாம்-அது ஸ்திரி அத்தியையொழிக்கும்- விரும்புகின்ற நான்குமுகமுள்ளது பிரமதேவசொரூபமாம்இதுநரகத்தினின்றுமீட்டுவிடும்-ஐந்துமுகமுள்ளது காலருத்திரசொரூபம் -இதுதகாதபுசிப்பும் பொய்முகமாயுரித்தல்லாத புணர்ச்சியினலுமுண்டாகுந்தோஷத்தைப்போக்கும்—எ-று (௲௨)

வினைதெறுமறுமுகம்வேலன்றோற்றமாம்
புனைவதுவலக்கையிற்புருணகத்திபோ

மனையதோரெழுமுகமனந்தன்மேகாக்கொலை
நினைவரும்போர்க்களமனைத்துநீக்குமால்.

(இ-ள்) ஆறுமுகமுள்ளது-சுப்பிரமணியக்கடவுள் சொரூபமாம் இதுவலக்கரத்தில்தரிக்கத்தக்கது -புருணஅத்தியையொழிக்கும்அத்தன்மையான ஏழுமுகமுள்ளது ஆதிசேஷசொரூபம்-இதுகோவத்தியும் நினைத்தற்கரியபோர்க்களக்கொலையெவைகளையும் போக்கும் புருணஅத்தியென்பது-கைம்பெண்ணவள்-சோரத்திலுற்பெற்றசிசுவைக்கொலைசெய்யும்பாவம்-என அறிக. (௫௩)

எண்முகங்கயமுகனிடைத்துலாமுத
லண்மியதானத்தும்பிறன்கையன்னத்து
முண்மகிழ்ந்தேற்றவர்க்குற்றபாதகம்
விண்மிசைவெயிற்படுபனியின்வீட்டுமால்.

(இ-ள்) எட்டுமுகமுள்ளது யானைமுகவிநாயகசொரூபம் -இது துலாபாரந்தூக்கியபொருள்தானமுதலாகிய தானம்வாங்குதலாலுண்டாகும்பாவத்தையும்-பிறன்கைச்சோறுண்பதினால்வரும்பாதகத்தையும்-உண்மகிழ்ந்திரப்பவர்களுக்குப்பொருந்தியபாதகத்தையும் விண்ணினிடத்தில் வருஞ்சூரியன் முன்பொருந்தியபனியைப்போலாகக்கெடுக்கும்—எ-று. (௫௪)

ஒன்பதுதிருமுகமுளைத்தகாரியா
மன்புடனிடக்கரத்தணிவதன்னது
வன்புடைத்தக்ககனுதிவாளரா
முன்புடைத்தழித்ததுமொழித்துமுத்தியாம்.

(இ-ள்) ஒன்பதுதிருமுகமுள்ளது சொல்லுகின்றவயிரவசொரூபம் அன்புடனிடக்காத்து அணியத்தக்கது இதுவலியுடையதக்ஷகன்முதலானசருப்பங்களைமுன்செனனத்திலடித்துக்கொன்றபாவத்தையும்நீக்கி முத்திதருவதாம்—எ-று. (௫௫)

(வாள்அரா-கொலைசெய்யும்பாம்பு)

ஒருபதுமுகம்புவியுண்டமாயவ
னிருபதோரேழுராசியுங்கோட்களும்

பெருமுதுபூதம்பேய்பிரமராக்கதன்
பொருபயமுதலியவனைத்தும்போக்குமால்.

(இ-ள்) பத்துமுகமுள்ளது உலகமுண்டதிருமால்சொரூபமாம் இது-இருபத்தேழுநக்ஷத்திரங்களும் - விளங்குகின்றநவக்கிரகங்களும் பழமையானபெரியபூதங்களும்-பசாசுகளும் - பிர்மராக்ஷதனுமாகிய இவைகளாலுண்டாகும் பயமுதலான எல்லாக்குற்றத்தையும்நீக்கும்-எ-று. (௰௬)

பதினொருமுகம்பதினோருருத்திரர்
விதிவழிபுரிபரிமேதமாயிர
மதிகோதானநூறாயிரங்களை
நிதியமோடளிப்பதுநிகர்க்குமென்பவே

(இ-ள்) பதினொருமுகமுள்ளது-ஏகாதசருத்திரசொருபம்-இது வேதவிதிப்படி செய்கின்ற ஆயிரம் அசுவமேதயாகபலனுக்கும் தானங்களுக்குள் சிறந்தநூறாயிரங் கோதானங்களை அவைகளுக்குத்தக்கதிரவியங்களுடன்கொடுக்குந் தானபலனுக்குமொப்பாகுமென்றுபெரியோர்சொல்வர்—எ-று. (௰௭)

பன்னிருமுகங்கதிர்பன்னிரண்டுமாந்
துன்னரும்புரவியச்சுரபிமேதமு
மின்னியதமனியமேருத்தானமு
மன்னியபெரும்பயன்வாய்க்குமென்பவே.

(இ-ள்) பன்னிரண்டுமுகமுள்ளது துவாதசாதித்தர்சொரூபமாம் இதனால் பொருந்துதற்கரிய அசுவமேதமும் - பசுமேதமும் விளங்குகின்ற பொன்மேருதானமும்செய்தலால் பொருந்தியபெரும்பயன்கிடைக்கும் என்றுநூலோர்கூறுவர்—எ-று. (௰௮)

முந்தையின்முகம்பதின்மூன்றுண்டேன்மதன்
இந்தையில்வேட்கையுமிரதச்செம்பொனு
நிந்தையிற்சயக்கருமளிக்குநீக்குமாற்
சிந்தைதாய்ந்தனைமாத்தசித்தியாகுமே.

(இ-ள்) பழமையாகிய பதின்மூன்றுமுகமிருக்குமாகில்; காமசிந்தையில்லாதமற்ற இஷ்டகாமியங்களையும்-ரசவாதப்பொன்னையும்பழியில்லாதவெற்றிகளையும் கொடுக்கும்-தாய்-தந்தை-சகோதரர்- இவர்களுக்குச்சதிசெய்தபாதகத்தைநீக்கும்—எ-று. (௩௯)

எழிருமுகஞ்சத்திசிவமிரண்டுமாஞ்
சூழ்தருமுனிவருஞ்சுரரும்யாவரும்
வாழியவெனத்தொழவசியநல்கிப்பி
ஞூழிபுமழிதராவுலகத்துய்க்குமால்.

(இ-ள்) பதினான்குமுகமுள்ளது - சிவஞ்சத்தியென்னு மிரண்டுசொருபமுமாம் - இதுசூழ்ந்தமுனிவர்களும் தேவர்களும் - மற்யாவரும்வாழக்கடவையென்று தொழும்படி வசியமென்பதனைக்கொடுத்துப்பின்பு ஊழிக்காலத்திலுமழியாத மோக்ஷலோகத்திற்சேர்க்கும்—எ-று. (௪0)

அப்பதினான்முகமரிதுகிட்டுமேற்
றப்பறவறிவுளார்தமதுகண்டத்து
வைப்பதுசிவஞ்சத்திமந்திராதிபு
மெய்ப்பதுபெரும்படைவிறலுமெய்துமால்.

(இ-ள்) அந்தப்பதினான்குமுகங்கிடைப்பது அரியது கிடைக்குமாகில் - குற்றமற்றஞானவான்கள் தங்கள்கண்டத்தில் தரிக்கத்தக்கது-சிவம்-சத்தி-மந்திரம். முதலானவைகளையொப்பானது பெருபடைவெற்றியுங்கிடைக்கும்—எ-று. (௪௧)

வைதிகவிதிமுறைவழாதவந்தணன்
செய்தொறுஞ்சந்திதோறணியிற்செய்பய
னெய்துவனனந்தமாய்த்தரிப்பதில்லையேற்
றைதல்பட்டவ்வகைப்பயனுமற்றிலான்.

(இ-ள்) வைதிகவிதி முறைமையில் வழுவாதபிராமணன் - அந்தவைதிகவிதியைச்செய்யுந்தோறும் - சந்தியாவந்தனஞ் செய்யுங்காலந்தோறும்ருத்திராக்ஷமணியைத்தரிப்பானாகில் வைதிகவிதிசெய்பயனை அநந்தமாக அடைவன் ருத்திராக்ஷந்தரிக்காமற்செய்வானாகில் துன்பப்பட்டுப் பயனும் அடையான்-எ-று. (௪௨)

குணுங்கருங்குணுங்கர்கன் னியர்தங்கூட்டரு
மணங்கமழ்மதுத்தசைமுதலுண்மாந்தரு
மிணங்கியகண்மணிதலைக்கொண்டேந்திநு
லணங்கியவினைதொலைத்தரனுமாவரால்.

(இ-ள்) தோற்கருவிசெய்யும்வருணத்தாரும் - அந்தவருணத்து
க்கன்னியரைப்புணர்பவர்களும் - மணநாறுமதுவுமாமிசமுமுண்
ணுகின்றமாந்தரும்-ருத்திராக்ஷத்தைத்தலையிலெடுத்துக்கொண்டுதாங்
குவார்களாகிலும் துன்பத்தைச்செய்கின்றவினையொழிந்துசிவசொ
ரூபமாவார்கள்—எ-று. (சங)

வேறு.

சிகையகத்தினொன்றுமுடிக்
கொருமுப்பத்தோராறுஞ்செழுங்கழுத்திற்
றகையதொருநாலெட்டுந்
திருமார்பத்தைம்பதுங்கைத்தலமீரெட்டும்
வகைமணிக்கட்டாறிரண்டுந்
தாழ்வடங்கணூற்றெட்டும்வகுத்துச்சாத்தி
நகைதருகண்டிகையோடும்
போமடிக்கோரயமேதநவிற்றலேயாம்.

(இ-ள்) குடுமியில்ஒன்றும்- சிரசுக்குமுப்பத்தாறும் - செழுமை
யுள்ளகண்டத்திற்குத்தகுதிபொருந்திய முப்பத்திரண்டும்- அழகு
ள்ளமார்பில் ஐம்பதும் - கையினிடத்தில் பதினாறும் கைமணிக்கட்
டுக்குப்பன்னிரண்டும், - தாழ்வடங்கள் நூற்றெட்டுமாக வகுத்துத்
தரித்தால் இவ்வாறுவிளங்குகின்ற கண்டிகையுடனடக்கும் ஓரடிக்
கொருஅசுவமேதயாகபலனுண்டாகும்—எ-று. (சச)

எவ்வாறுமுப்புரிநூ
லின்றிமையாமைவகுத்தியம்புந்தன்மை
யவ்வாறுகண்டிகையும்
புண்டரமூன்றிடுமந்தணாளர்க்கெல்லாந்
தவ்வாதுதரித்திலரே
லீரட்டுறென்புலத்தோர்தமக்குநல்கல்

கைவாரித்தருமீதலோதலருச்
சனைபிறவுங்கதிபெறாநூல்.

(இ-ள்) வைதிககருமஞ்செய்யும்பிராமணர்களுக்கு முப்புரிநூலி ன்றியமையாமை வகுத்துச்சொல்லுந்தன்மையெவ்வாறோ - அவ் வாறுருத்திராக்ஷமுந் திரிபுண்டரமாகவிபூதி அணிகின்றபிராம ணர்களுக் கெல்லாமாகும்-ஆதலாலதனை நீங்காமல் தரித்திலராகில் ஸ்நாநஞ்செய்தல் பிதிரர்களுக்குத் திலதருப்பணஞ்செய்தல் - கை யினால்வாரிக்கொடுத்தலாகியதானம்-வேதமுதலானவைகளையோதுத ல்-சிவார்ச்சனைசெய்தல்முதலானமற்றவைகளாலும்கதிகிடையாது.

செஞ்சிகையிற்கண்டிகையைத்தரிக்கிலதன்
பயன்கோடிதிகழப்பல்கா
லஞ்செவியிற்சாத்திலொருபதுகோடி
கந்தரத்தாயிரமாங்கோடி
தஞ்சமெனக்கைபுனையிலனந்தமாந்
தீவினையெத்தனைசெய்தோருந்
துஞ்சலுறுமிறுகாலத்தணிந்தவரோ
பிறப்பவரைத்தொடராதம்மா.

(இ-ள்) செவ்விதானகுடுமியில் ருத்திராக்ஷமணிந்தால்அதன்ப யன் கோடியாம்- விளங்கும்படிபலகாலம் - காதிலணிந்தால்ஒருப துகோடியாம் -கண்டத்திலணிந்தால்ஆயிரங்கோடியாம்- தஞ்சமாக க்கரத்திலணிந்தால்அனந்தங்கோடிபலனும்- எவ்வளவுபாவஞ்செய்த வர்களும் - இறந்துபோகுமுடிவுகாலத்தில் அணிவார்களானால் அவ ர்களைமறுபிறப்புத்தொடராது—எ-று.

௱அ௬-பக்கத்தில் சொல்லப்பட்டிருக்கிற புருணகத்திதோஷமாவ துகைம்பெண்ணேயன்றிச் சுமங்கலியேயாகிலும் அவள்வயிற்றுக் குள்ளிருக்குங்கருவைச்சேதித்தலால்வருந்தோஷமாம். (௪௬)

நோக்கினுமக்கண்டிகையின்பயனிலக்கந்
தொடக்கோடிநூல்வழாமே
மேக்குமிலேந்தவர்க்கோராயிரங்கோடி
செபத்தனந்தம்விளைக்கும்விண்ணோ

ரார்க்குமருச்சனைக்குரியசிவன்போல்வர்
பிறர்பகைமைக்கடங்கித்தாழார்
நாய்க்கொருபோதணிந்தாலுங்கதிகொடுக்கும்
நரர்க்கென்கொனவில்வதம்மா.

(இ-ள்) பார்த்தாலுமந்த ருத்திராக்ஷபலன் லக்ஷமாம்-பரிசித்தா ல்பயன்கோடியாம், சாஸ்திரவிதிதவறாமல் மேலேயணிந்தவர்களுக் கு ஆயிரங்கோடியாம்- செபஞ்செய்வதினால் அநந்தம்பலனைவிளை க்கும் - அணிகின்றவர்கள்தேவர்கள்யாவர்க்கும்-அருச்சனைக்குரியப ரமசிவனையொப்பாவர்கள்-பிறருடையபகைக்குஅடங்கித்தாழார்கள் நாய்க்குஒருபோது தரித்தாலும் அதற்குக்கதியைக்கொடுக்கும் ஆத லால்மானிடருக்குச்சொல்லவேண்டுவதேயில்லை—எ-று. (௬௭)

விதியினராய்த்தரியாதார்க்குறும்பயனித்
திறமென்னின்விதிவழாத
மதியினராய்க்கண்டிகையைத்தரித்தார்க்கு
வரும்பேற்றைமதிக்கற்பாற்றோ
முதியசெபவடங்களை நூற்றெட்டென்று
மதிற்பாதிமொழிந்ததென்று
மதிகுணத்தாரதிற்பாதியளவென்றுஞ்
சொல்வர்கதிக்களவுசொல்லார்.

(இ-ள்) விதிப்படிதரியாத பேருக்கேவரும்பயனிப்படிக்கொத்த தென்றால் - விதிதவறாதஞானமுள்ளவர்களாய்- ருத்திராக்ஷம் அணி ந்தவர்க்கு வரும்பலனை அளவிட்டுச்சொல்லுதல் கூடுமோ - ப ழமையான செபவடங்களை நூற்றெட்டுமணியுள்ளதென்றும் -அதி ற்பாதியாகச் சொல்லியதென்றும்மேலானகுணமுள்ளவர்கள் அதி லும்பாதியென்றும் சொல்வார்கள் அதைக்கொண்டுசெபித்தலினால் வரும்பலனுக்கு அளவுசொல்லார்கள்—எ-று. (௬௮)

அன்றியுமுத்திப்பொருட்டிற்கையைந்து
சோபனத்துக்கவைமூவொன்பான்
றன்றியநீதிக்குமுப்ப
தாமபிசாரங்களுக்குத்தொழிற்கைம்மூன்று

வென்றிபுரிகண்மணியின்வடந்தொடுப்பின்
மேற்குமேற்கீழ்க்குக்கிழா
யொன்றுபடுத்திடைமுடிந்துமேருவைமேற்
படத்தொடுப்பருணர்வின்மிக்கோர்.

(இ-ள்) இவ்வாறுமன்றிமுத்தியின் பொருட்டுச்செபஞ்செய்ய வேண்டுவது - இருபத்தைந்துமணி-சுபகாரியங்களுக்கு அம்மணிக ளிருபத்தேழு-பொருந்தியநீதிக்குமுப்பதாம் - கருதுகின்றஅபிசா ரத்தொழிற்கு-பதினைந்தாம்- வெற்றியைத்தருகிறருத்திராக்ஷத்தைத் தொடுக்குமிடத்தில்மேலுக்குமேலும் - கீழுக்குக்கீழுமாகஒன்றுபடு த்து - இடைஇடையில்முடிந்துமெருமணியை மேலேதொடுப்பார் கள்- உணர்ச்சியில்மிகுந்தவர்கள்---எ-று.

அபிசாரம்என்பதுமாரணத்தைக்குறித்தது. (௪௯)

மேருவினையிலக்கியாதுடல்வெறுத்தான்
மேல்போக்குமிகவும்போகஞ்
சாருமவன்கீழ்போக்குமனுமிகையே
மத்திமைதற்சனியங்குட்டஞ்
சேருமிவைவடநடத்திற்பிணியறலுந்
தனம்புகலுந்தெவ்வர்மாய்ப்பு
மாருமடையாதமுத்தியடைதலும்வந்
தடையுமென்பரறிவின்மிக்கோர்

(இ-ள்) மெருமணியை இலக்கமிடாமல் - இவ்வுடலைவெறுத்தசந் நியாசியானவன் - ருத்திராக்ஷத்தைமேலாகத்தள்ளுவன் - மிகவுங் காமியத்தைச்சார்ந்தவன் - கீழாகத்தள்ளுவன் - அநாமிகை - மத்தி மை - தற்சனி - அங்குட்டம் - எனச்சேரும் இவ்விரல்களாற் செப வடத்தைநடத்தினால் - வியாதியறுதலும் - திரவியஞ்சேருதலும் ப கைவனாநீக்குதலும் - யாவரும்அடையாத முத்தியைப்பொருந்து தலுமாகியபலன்வந்தடையுமென்பர் அறிவாற்பெரியர்-எ-று.

வியாதியறுதல்-முதலியநான்குபயனை-அநாமிகைமுதலியநான்கு விரலுக்குந்தனித்தனியேயமைத்துக்கொள்க. (௫0)

மனையிடத்தொன்றுனிாக்குத்தொழுவினொரு
பதுதீயின்மருங்குநூறு

புனைமதில்சூழாலயத்துளாயிரங்காட்
டிடையிலக்கம்பொருப்பிற்கோடி
யெனையுடையான்றிருமுன்னரளப்பரிது
கண்மணித்தாரொடுத்தெஞ்ஞான்றுந்
தனையறிந்தோரஞ்செழுத்தாதியமொழியு
மொழிபயக்குந்தகைமைத்தம்மா.

(இ-ள்) வீட்டினிடத்திலிருந்து செபஞ்செய்தாலொருபங்குபசு
வினஞ்சேருந்தொழுவத்திலிருந்து செபித்தால்பத்துப்பங்கு- பஞ்
சாக்கினிமத்தியிலிருந்துசெபித்தால் நூறுபங்கு அலங்கரித்தமதில்
சூழ்ந்த ஆலயத்துள் ஆயிரம் - காட்டினிடத்தில் லக்ஷம்- மலையினி
டத்தில் கோடி - என்னையாளாகவுடைய பரமசிவனது சந்நிதியில்
அளப்பரிதாம்- ருத்திராக்ஷமாலைதாக்கி எந்நாளும்தன்னையறிந்தோ
ர் - பஞ்சாக்ஷரமுதலானவைகளையுச்சரிக்கிறமொழிகள் பயன்படு
ந்தகைமையதாம்—எ-று.

பஞ்சாக்கினியாவது நான்குதிசையிலும்நான்குஓமகுண்டம்வள
ர்த்துச்சூரியனுச்சியிலிருக்கமத்தியிலிருந்துசெயஞ்செய்வது(௫௧)

இறைகொடுமந்திரித்தலெட்டுப்புத்திரசி
தத்தொருபதிலங்குஞ்சங்கி
னிறையுமொருநூறுசெழும்படிகத்தோ
ராயிரநித்திலத்திலக்க
மறைமணியிற்கோடிபொன்னிற்பதின்கோடி
குசைமுடிப்பாயிரத்திற்கோடி
பிறையணிவான்கண்மணியிற்பயனனந்த
மெனும்வேதபேதமெல்லாம்.

(இ-ள்)(யாதொன்றுமின்றிச்செபித்தலாலுண்டாகும்பலனொன்று
க்கு)விரலிறையைக்கொண்டுமந்திரித்தலெட்டுப்பங்கு- ஊதுகட்டி
வெள்ளிமணியால் செபித்தால்பத்துப்பங்கு-விளங்குஞ்சங்குமணியி
ல்நிறைந்தநூறுபங்குசெழுமையுள்ளபடிகத்திலாயிரம்பங்கு-முத்தி
ல்-லக்ஷம்பங்கு-சொல்லுகின்றதாமரைமணியில்கோடிபங்கு-பொன்
மணியில்பத்துக்கோடிபங்கு - தருப்பைமுடியில் - ஆயிரங்கோடி

பங்கு - பிறையணிந்தபரமசிவனது கண்மணியாகிய ருத்திராக்ஷத்தில்பயன் அநந்தமென்று வேதபேதங்கள்சொல்லும்—எ-று.
மந்திரித்தவென்பதனை ஆங்காங்குமுறைாத்துக்கொள்க. (௹௨)

முழுதுமிருசெவியிடைக்கண்மணிவிடா
தணுகிலவன்மூவேழ்சுற்ற
மழிதுயர நிரயத்துங்கரையேறு
மலினத்துமகன்றுபோங்காக்
கழுதையொன்றுசுமந்திறந்ததுசுமந்த
கண்டிகையின்முகத்துக்கோரோர்
பழுதில்கற்பங்கயிலையிற்போயுருத்திரபல்
கணஞ்சூழப்பயின்றதன்றே.

(இ-ள்)காலமுழுவதுமிரண்டுகாதிணிடத்திலும்உருத்திராக்ஷமணிவிடாது பொருந்துமாகில்-அவனுடைய மூவேழ்இருபத்தொரு சுற்றமும்-அழிகின்றதுயரமுள்ளநரகத்தில்நின்றுங் கரையேறும் - அன்றியும் ஆணவமலத்தினின்றுமுத்தியிற்சேரும்-கருமைநிறமுள்ள ஒருகழுதையானது ருத்திராக்ஷமணியைச்சுமந்திறந்து - அதுசுமந்தருத்திராக்ஷமுகங்களில்ஒவ்வொருமுகத்துக்குப்பழுதில்லாதஒவ்வொருகற்பமாகக்கயிலையில்பலருத்திரகணஞ்சூழப் பொருந்தியிருந்தது.

வேறு.

வெண்ணிறப்பொடியுமண்ணல்கண்டிகையும்
விடாதணிந்தனைவருமிறைஞ்சுங்
கண்ணுதல்படிவத்திலிங்கமும்பூசைக்
கதிகளும்வசுக்களேகேண்மின்
மண்ணெடுசுடுமண்மணல்சிலையுலக
மணிசுயம்பிரதமேயாத்த
மெண்ணருந்தீத்தம்பளிங்கொடுகாந்த
மெனப்பன்னிருருவினுமிலிங்கம்.

(இ-ள்•)வெண்மைநிறமுள்ளதிருநீறும்-சிவருத்திராக்ஷமும்இடைவிடாமலணிந்து - யாவரும்பணிகின்றநெற்றிக்கண்ணுள்ளசிவசொருபமானசிவலிங்கமும்பூசைசெய்வதையும்- அதனால்வருகிறகதிகளையும் - வசுக்களேகேளுங்கள்- பசுமண்- சுடுமண்-மணல்- சிலை-லோ

கம்-ரத்தினம்-சுயம்பு-ரசம்- பவளமணிகள்- எண்ணுதற்கரியதீபம்
புளிங்கு- காந்தம்என்னுமிப்பன்னிரண்டுருவினாலும்இலிங்கமாகும்

கங்கைகாளிந்திசாரதைபாதிக்
கலுழியின்வானவர்முனிவர்
செங்கையாலருச்சித்திட்டனவனந்தந்
தேவமாருடமெனப்படுமாற்
றுங்கவாளவுணர்கணத்தொருவாணன்
றொழுதகுவாணலிங்கமதா
மங்கநூல்விதியோடெவரருச்சித்தா
ரவர்சின்னமவற்றின்மீதமரும்.

(இ-ள்)கங்கை-காளிந்தி-சரஸ்வதிமுதலாகியநதியினிடத்திற்தேவர்களும்-முனிவர்களும்-தங்கள்தங்கள் செம்மைநிறமுள்ள கைகளால் அருச்சனைசெய்தவைகளாகிய சிவலிங்கங்கள்அநந்தமாம்(அவை) தேவலிங்கம்-ஆருஷலிங்கம் - என்றுசொல்லப்படும்- பலம்பொருந்தியவாட்படையுடைய அசுரகுலத்திலொருவனாகிய வாணாசுரனென்பவனால் பூசித்துத்தொழப்பட்டது வாணலிங்கமெனப் பெயர்பெறும் - அங்கத்துடன்கூடிய வேதாகமசாஸ்திரவிதிப்படி அருச்சித்தவர்களெவர்களோ அவர்களுடைய அடையாளம்-அவ்விலிங்கங்கள்மேல்பொருந்தியிருக்கும் —எ-று- (ருஞ)

மும்முறைநிறுத்தொவ்வாதமைவாண
மெனப்புவிமொழிதரும்வெண்மை
செம்மையேபொன்மைகருமையிவ்வண்ணந்
திகழ்ந்தநால்வருணத்தார்க்குரிய
விம்முறைஇடையாதிருக்குமேற்கருமை
யாவர்க்குமுரியவென்றியம்பு
நம்மையாளுடையான்வாணலிங்கத்தெஞ்
ஞான்றும்விட்டகன்றுவேறுறையான்.

(இ-ள்) மூன்றுதரம்நிறுத்து ஒருதரம்போலவே நிறைசரிப்படாமலிருப்பது - வாணலிங்கமென்று உலகத்திற்சொல்லப்படும் வெள்

ளே - சிவப்பு -பொன்னிறம்-கறுப்பு- இந்தநிறத்துடன் விளங்குகி ன்றவை முறையாகப்பிராமணர் முதலானநான்கு வருணத்தார்க்கு முரியவைகளாம்- இந்தமுறைமைப்படி கிடையாதிருக்குமாகுல்க ருமைநிறமுள்ளது நால்வருணத்தாருக்கும் -உரியவென்றுசொல்ல ப்படும் - நம்மையாளாகவுடைய பரமசிவன் அந்தவாணலிங்கத்தை விட்டு வேறிடத்தில் வீற்றிரார்—எ-று. (௬௯)

எட்டுடனாறுநான்கெனுங்கோண
மிசைத்தமுன்மூவர்க்குமுரிய
வட்டமாம்பீடஞ்சூத்திரற்குரிய
வகுத்தவிந்நான்குநால்வருக்குங்
கிட்டரிதெனுங்கால்வட்டமாமெவர்க்குங்
கிளர்ச்சியங்குலங்களீராறு
தொட்டோரங்குலமீறுகமும்மூன்றுஞ்
சூத்திராதிநால்வருக்கும்

(இ-ள்)எட்டு-ஆறு-நான்கு-என்றுசொல்லப்படுகிறகோணமுள்ள பீடங்கள் - முன்சொல்லியபிராமணர்முதலான மூன்றுவருணத்தா ர்க்கும் தனித்தனிஉரியவைகளாம் . வட்டமாகியபீடங்கள் சூத்திரர்க ளுக்குஉரியவைகளாம் - வகுக்கப்பட்ட இந்தநான்கும்- நான்குவரு ணத்தாருக்குங்கிடைப்பதரிதாகுங்காலத்தில் வட்டமாயிருக்கும்பீட ம் யாவர்க்கும் உரியதாகும் - விளக்கமுள்ள அந்தப்பீடங்கள் பன் னிரண்டங்குலப்பிரமாணமுதல்ஒருஅங்குலவளவுஇறுதியாகச்சூத்தி ரர்முதலிய நான்குவருணத்தார்க்கு மும்மூன்று சிவலிங்கமாகும்.

பூசனைமுன்னர்ப்புரிந்ததுவிடுத்துப்
புறத்திலொன்றமைகெனக்கொண்டா
லாசெனப்பகருமலதுவெட்டன்றெ
லாதிலிங்கத்துடன்மூன்று
தேசுறப்புரிகபுரிபவர்க்கெல்லாஞ்
சிறப்புடைத்தொன்றுமூன்றைந்தாம்
பேசியவிரண்டுநான்கருச்சிக்கிற்
பெரும்பிணிதணிதராதுழப்பார்.

(இ-ள்) முன்பூசனைசெய்துகொண்டிருப்பதைவிட்டுப்புறத்தில் வேறொன்றினை அழகாயிருக்கின்றதென்று பூசைக்குவைத்துக்கொள்ளுதல் - பழுதென்றுசொல்வார்கள் - அல்லது பூசனைசெய்வது வெட்டல்லாதலிங்கமாயிருக்குமானால் முன்பூசனைசெய்யுமிலிங்கத்துடன்மூன்றுலிங்கம் தேசுபொருந்தச்செய்யக்கடவர்கள் - பூசைசெய்கின்றவர்களுக்கெல்லாம் - ஒருலிங்கம்-மூன்றுலிங்கம்- ஐந்துலிங்கம்-சிறப்புடையதாம்- சொல்லுகின்ற இரண்டுலிங்கம்- நான்குலிங்கம்- அருச்சித்தால்பெரும்பிணிதணியாமலனுபவிப்பார்கள் எ-று.

இரதமாலிங்கமேனையவிலிங்கமீரைந்துகோடியோடொக்குஞ்
சரதமேபுத்திமுத்தியும்வழங்குந்தாழ்ந்துபூசித்தநீர்மாந்தி
லரணமாருயிர்க்காமனையதுபழித்தாலருநரகனைத்தையுமுழக்கு
மரணமாம்பொழுதுவிழுங்குமேற் பாவவகைதொலைத்தரனுடன்
வைக்கும்.

(இ-ள்) ரசலிங்கமொன்று மற்றையபத்துக்கோடிலிங்கங்களுக்கொப்பாகும்-அது உண்மையாகவேஞானத்தையு மோக்ஷத்தையுங்கொடுக்கும் பணிந்துதிருமஞ்சனஞ்செய்த நீரை உள்ளுக்குக்கொண்டால்அரியஉயிர்களுக்குக்காவலாகும்- அந்தநீரைப்பழித்தால் மீளுதற்கரிய நரகங்களையெல்லாம் அனுபவிப்பர்- மரணமாகுங்காலத்தில் அந்நீருண்ணப்பட்டால் பாவவகைகளைத்தொலைத்துப் பரமசிவத்துடன் வீற்றிருக்கச்செய்யும்—எ-று. (௩௧)

வாணலிங்கத்திற்சராசரத்துடைய
வடிவுசேய்மனைவியையமாய்க்குங்
கோணினில்விழக்குமூச்சியிற்குழிந்தாற்
கொல்லுங்கீற்றுதல்வெட்டுவிக்குங்
காணருங்காகக்கால்கழுத்தறுக்குங்
களங்கமேகயப்பிணிவிந்துப்
பேணியநட்புக்கெடுமிகச்சிறிதும்
பெரிதுமாகாதெனப்பேசும்

(இ-ள்) வாணலிங்கத்தில் சராசரத்திருக்கும்வடிவுள்ளது - புத்திரனையும்மனையாளையும் மாய்க்கும்- கோணியிருக்குமானால்மனைவி

யயிழப்பார்-உச்சியில்குழிந்திருந்தால்- கொல்விக்கும்-கீற்றுயிரு
பதுவெட்டுவிக்கும் - காணுதற்கரியகாகத்தின் கால்போலிருக்கு
ாறல் - கழுத்தையறுப்பிக்கும் - களங்கமிருக்குமாயின் க்ஷயரோ
மூண்டாகும் - விற்துப்போல்சுழியிருக்குமாகில் விரும்பியநட்
க்கேடுண்டாம்- இவையேயன்றிமிகச்சிறிதும் பெரிதுமாகாதென்
வேதங்கள்சொல்லும்—எ-று. (கூ௰)

இத்திறத்தரியவிலிங்கத்துமன்றி
 யெளிதுபூசனைக்குமுச்சுடருஞ்
சித்தமுஞ்சிரமுமுறையும்வாலுகமுஞ்
 செழுமண்ணுமாவும்வெண்ணீறும்
வித்தகக்குடமுங்கொன்றையுங்குசையும்
 வில்வமும்பாலும்வேதிகையும்
பித்திகையெழுத்துந்திலங்களும்புனலும்
 பிறங்குகோமயமுமாப்பேசும்.

(இ-ள்)இத்தன்மையினையுடைய அரிதானவாணலிங்கபூசைசெய்வ
துமன்றி-எளிதாயிருப்பது-முச்சுடரும்-சித்தமும்சிரமும்உறையும்,
வெண்மணலும் - செழுமையானகளிமண்ணும் - அரிசிமாவும்-வெ
ண்மையானவிபூதியும்-நல்லகும்பமும்- கொன்றைமலரும் - தருப்
பையும் - வில்வமும்- பாலும்- வேதிகையும்-சுவரிலெழுதியசித்திர
மும்- எள்ளுகளும்-நீரும்-விளங்குகின்றகோமயமுமென்னுமிவைக
ளைச்சிவலிங்கமாகப்பாவித்துப்பூசைசெய்யலாமென்றுஆகமஞ்சொ
ல்லுகின்றது—எ-று. (கூக)

வேறு.

யாமந்தோறுமெண்போதுமுப்போதிருபோதும்
 வாமமாமொருபோதினுமருச்சனைவகுப்பார்
 தோமில்பூசையிற்சுத்தமேநன்றுசுத்தத்திற்
 சேமமாமுதுபத்தியேநன்றெனுஞ்சிவநூல்.

(இ-ள்)சாமந்தோறுமாகியஎட்டுக்காலமும்-மூக்காலமும்-இருபோ
தும் - அழகுள்ளஒருகாலத்திலும்-அருச்சனைசெய்கின்ற -குற்றமில்
லாதபூசையில் பரிசுத்தமேநன்று - பரிசுத்தத்திலும் சேமமாகியமி
குந்தபத்தியேநன்றென்று ஆகமஞ்சொல்லுகின்றது—எ-று.(கூஉ)

யாதுகற்பினுமெச்சிறப்பெய்தினுமிதழ்ப்பூ
மாதுபுல்லினும்வையகம்வானகம்பெறினு
நாதன்பூசனைநவிற்றலார்நன்னெறிக்கிறைவ
ராதல்வான்பனிபெயக்கயநிரம்புமாறடுக்கும்.

(இ-ள்) எந்தநூல்களைக்கற்றுணர்ந்தாலும் - எவ்விதச்சிறப்புகளைப்பொருந்தியிருந்தாலும் - ஆயிரமிதழுள்ள செந்தாமரைமலரில்வீற்றிருக்கும் திருமகள் வாசமாயிருந்தாலும் - பூலோகத்தையுந்தேவலோகத்தையும்பெற்றிருந்தாலும்சிவபூசைசெய்யாதார்-நன்மார்க்கத்துக்கு இறைவராகுதல் - ஆகாயத்திலின்றும் பொழிகின்றபனியினால்குளம்நிறைவதையொப்பாகும்—எ-று.

பனியினால்குளம் நிறையாததன்மைபோல- சிவபூசைபத்தியுடன்செய்யாதபேர்-நன்மார்க்கத்தையடையார்களென்பது கருத்து

கருதிநாதனைப்பூசியான்கடுநரகுழப்பா
னரிதினீங்கினுமறம்படாக்குறும்புநாட்டடைந்து
பெரிதுபேய்கழுகோரிநாய்காகமாய்ப்பிறந்து
திரிதராநிற்குமவன்படுமலக்கணூர்தெரிப்பார்.

(இ-ள்.) இதுவேபயனென்றுகருதிப்பரமசிவத்தைப் பூசியாதவன் - கொடியநரகவேதனையை யனுபவிப்பன் - நரகத்தையரிதாகநீங்கினாலும் - தருமமுண்டாகாத குறும்புநாட்டில் சேர்ந்துபெரிதும் - பேய் - கழுகு - கிழநரி - நாய் - காக்கையாகப்பிறந்துதிரிந்துகொண்டிருப்பன் - அவன்படுந்துன்பத்தைச் சொல்லத்தக்கவர்கள்யார்—எ-று; (காச)

பூசியானுண்ணுமூண்டியும்புழுப்பிணமலமா
மூசிவாள்விழுந்தெரிவிழுந்திறப்பினுமுய்யு
மாசிலாக்குலனென்கினுமவனையார்தொடினும்
பேசிநோக்கினுங்கருதினும்பெரிதுபாதகமே.

(இ-ள்.) சிவபூசைசெய்யாதவனுண்ணும்ஆகாரமும்- புழு-பிணம்- மலம் - என்பவைகளாம் - இருப்பூசியும் வாளும் எரியும் விழுந்திறந்தாலும் - உய்யும்படியான குற்றமில்லாத குலத்தினனாயிருந்தாலும் - அவனை எவர்கள்தொட்டாலும் அவனுடன்பேசி அவனைப்பார்த்தாலுந்நினைத்தாலும் பாதகம்பெரிதாம்-எ-று. (கரு)

இலிங்கமீதொருகைப்புனலொருமலரீந்தாற்
கலந்துகோதமைகயைகங்கையாதிநீர்க்கரையிற்
றலங்கள்காசியேமுதலியகோடியிற்றவஞ்செய்
பலங்களெத்துணைத்தாயினுமிதற்கிணையவா.

(இ-ள்.) சிவலிங்கப்பெருமான்மேல் - ஒருகைப்புனலும் - ஒருமலருமிட்டுப்பூசித்தால் - நீர்கலந்துவருகின்ற கோதாவிரி - கயை - கங்கை - முதலானதீர்த்தக்கரையில் - காசிமுதலான அநந்தங்கோடித்தலங்களில்தவஞ்செய்பலன்கள் எவ்வளவானாலும் இதற்கொப்பானபயனைத்தராவாம்—எ-று. (கூகூ)

பூசையாங்கொருநாட்செயிற்புரவிமாமேத
மாசைநீங்கியசாந்திரோன்பளப்பிலமானு
மீசனாணையின்முன்கணநாதனாயிருந்து
மாசிலாதுபின்றிருவடிக்கமலமுமளிக்கும்.

(இ-ள்.) அந்தத்திருக்கழுக்குன்றத்தலத்தில்ஒருநாள்சிவபூசைசெய்தாலும்அளவில்லாத அசுவமேதயாகபலனையும்குற்றம் நீங்கியசாந்திராயணவிரதபலன்களையும்ஒப்பாகும் - பரமசிவம் கட்டளையினால் முதலில்கணநாதனாயிருக்கும்படிசெய்துகுற்றமில்லாமல்பின்புதிருவடித்தாமரையினையும் அருள்செய்யும்—எ-று. (கூஎ)

சுந்தரங்குலங்கல்விமூதறிவு தூய்வாய்மை
தந்திரம்பிறவொருபகற்பூசையிற்சாரு
மிந்திரன்பதம்வையகத்தரசிவையாவும்
வந்திரந்தவர்க்கிவன்கடைநோக்கினால்வாய்க்கும்.

(இ-ள்) சௌந்தரியம் - நற்குலம் - கல்வி - பேரறிவு - பரிசுத்தமானவாக்கு - மற்றுமுள்ளதந்திரங்களும் - அந்தத்தலத்திலொருநாள்செய்யுஞ்சிவபூசையினாற்சாரும் தேவேந்திரன்பதவியும்இவ்வுலகத்தரசுமாகிய இவையெல்லாம் வந்திரந்தவர்க்கு இவன்கடைக்கண்பார்வையினாலிடைக்கும்—எ-று. (கூஅ)

புத்திமுத்தியுள்வேட்டவையெய்துவர்பூசை
மெய்த்தவத்தொருபகற்செய்வோரென்பதுவியப்போ

வொத்துமாலயன்புரந்தரனும்பர்தேவியரோ
டெத்திறத்திறுற்றம்பதந்தாங்கள்பெற்றிருந்தார்.

(இ-ள்) சிவபூசையை மெய்த்தவத்துடனொருநா ளிங்குச்செய்கி ன்றவர்கள்-புத்திமுத்தி முதலியனவாகத் தங்களுள்ளத்தில் விரு ம்பினபேறுகளை யடைவார்களென்பது ஒருவியப்போ மனமொ ருமித்து-திருமால்-பிரமதேவன்-இந்திரன்-தேவர்கள் சிவபூசையினு ல்பெற்றுக்கொண்டார்களேயன்றி-மற்றஎவ்வகையினுல் தங்கள்மனை வியருடன்தங்கள்பதம்தாங்கள்பெற்றிருந்தார்கள். (௬௯)

வட்டமாய்நடம்புரிசிவன்பூசைமற்றெவர்க்கு
மட்டமாசித்தியனைத்தையும்பணிப்பதற்புதமோ
விட்டிலாதவிண்ணிறைவர்நாலெழுவர்தங்காலங்
கட்டுமேவணியான்வடிவடைந்தடைவர்பின்கதியே.

(இ-ள்) வட்டமாகநடனஞ்செய்தருளும் சிவன்பூசைமற்ற எல்லா ருக்கும்- அட்டமாசித்திகளையெல்லாங் கொடுப்பதொருவியப்போ சுருக்குதலில்லாத செல்வமுள்ள இருபத்தெட்டுத்தேவேந்திர பட்ட க்காலமளவுங்கட்டுஞ் சடாமகுடமுள்ள சிவசொரூபமடைந்துபின் புமோக்ஷமடைவார்கள் —எ-று. (௭௰)

மடிமையால்விளையாடலான்மனமொருப்படாத
கொடுமையாற்கண்டுபாவிக்குந்தன்மையாற்குயிற்று
நெடியபூசையிற்றவங்கல்விநிலத்தரசெய்து
மடியராய்ப்பணிந்தருச்சிக்கின்முத்திமற்றரிதோ.

(இ-ள்) சோம்பலாலும் -விளையாட்டினாலும். மனமொருவழிப்ப டாத கொடுமையாலும் ஒருவர்செய்யும் பூசையைக்கண்டுசெய்யுந் தன்மையாலும் - செய்கின்றநெடியபூசையினுல்-தவம்-கல்வி புவி யரசு-என்னுமிவைபொருந்தும் - தொண்டர்களாய்ப்பணிந்து அரு ச்சித்தாலவர்களுக்கு முத்திகிடைப்பதரிதோ—எ-று. (௭௧)

துறவியாயினுமருச்சனைத்தொழும்பினர்க்கொவ்வான்
மறவனாயினுமறவனாய்மன்னுயிர்க்கிரங்கும்
கறவையான்கொலைநாய்க்கருத்திடுங்கடும்பாவம்
பிறவும்பேரொளிவிளக்கெதிரிருளெனப்பிரியும்.

(இ-ள்) துறவியேயானாலும் சிவார்ச்சனைசெய்யும் அடியார்களுக்கொவ்வான் - பாவகாரியாயிருந்தாலும்சிவார்ச்சனையினால் மகாதீதபசியாய் நிலைபெற்றஉயிர்களுக்கிரங்குந்தன்மையுடையனாவன்-கோக்கொலை-நாய்க்குஇரையிடுகின்றகொடியபாவம் - இதுவுமன்றிமற்றப்பாவங்களும்- பெருஞ்சோதிவிளக்குமுன் இருளேட்போல்நீங்கும்.

ஒருபதோடொருமூன்றதாந்திதியுறப்படுநாட்
பருதிவீழுமுன்பின்னிருபங்குமோர்யாம
மிருதிநூல்பிரதோடமென்றிசைக்குமவ்வேலைச்
சுருதிநாதனைத்தொழுதெழப்பழுதெலாந்தொலையும்.

(இ-ள்)பதின்மூன்றாந்திதியாகியதிரயோதசித்திதிவருநாளில்சூரியன் மேற்கடலில்விழுமுன்னும் விழுந்த பின்னுமான இரண்டுபங்காகிய ஒருசாமப்பொழுது பிரதோஷகாலமென்று ஸ்மிருதிசாஸ்திரத்தால் சொல்லப்படும் அந்தக்காலத்தில் வேதகிரிநாதனைப்பணிந்தெழுந்தால் பாவமெல்லாம்நீங்கும்—எ-று. (எ௩)

ஆடல்பாடலுக்கவாவினன்குறுகினுமச்சந்
தோடலாற்றினும்பொழிமழைக்கொதுங்கினுமுய்யுந்
தேடருஞ்சிவன்றிருவுருக்காண்கினுந்தொழினும்
வீடரும்பெருவினைபிரதோடத்தில்வீடும்.

(இ-ள்) பிரதோஷகாலம் சிவாலயத்தில் நிகழும் ஆடலுக்காவது பாடலுக்காவது விரும்பிஅவனையடைந்தாலும் அச்சத்தினால்அங்கிருந்திராப்பொழுதை நீக்கினாலும். பொழிகின்றமழைக்கு ஒதுங்கினாலும் உய்வார்கள்·தேடுதற்கரியசிவலிங்கப்பெருமானைத் தரிசித்தாலுந்தொழுதாலும் நீங்குதற்கரியவினைநீங்கும்—எ-று. (எ௪)

வேறு.

தூயவிடைசண்டன்விடைசோமசூத்
திரம்விடையைத்தொழுதுபின்னுஞ்
சேயசண்டனடியணிந்துதிரும்பவுமச்
சோமசூத்திரம்போய்மீண்டு
மேயசண்டனுடன்விடையைவணங்கிநெருவலமாயிவ்விதியாற்செய்க

வாயபிரதோடத்தினடிக்கொரய
மேதம்வினையனைத்தும்போமால்.

(இ-ள்) பரிசுத்தமுள்ள விடைத்தேவரைமுன் தரிசித்து அங்கிருந்து இடமாகச்சென்று சண்டேசநாயனாரைத்தரிசித்து- மறுபடிவந்து விடைத்தேவரைத்தரிசித்து அங்கிருந்து வலமாகச்சென்று சோமசூத்திரத்தைத்தரிசித்துச் சென்றவழியே திரும்பிவந்துவிடைத்தேவரைத்தரிசித்து அங்கிருந்து இடமாகவேசென்றுசண்டேசநாயனாரைத்தரிசித்து - மறுபடியங்கிருந்து திரும்பிவந்து விடைத்தேவரைப்பணியாமல் வலமாகச் சோமசூத்திரத்தருகு சென்று அங்கிருந்து திரும்பிவந்து சண்டேசநாயனாரைத்தரிசித்துமறுபடி திரும்பிவந்து விடைத்தேவரைத்தரிசித்தால் இது ஒருபிரதக்ஷிணமாம்- இந்தவிதிப்படி பிரதோஷகாலத்தில் மூன்றுக்குக்குறையாமல் பிரதக்ஷிணஞ் செய்யக்கடவர்கள்- இவ்வாறுபிரதோஷகாலத்தில் பிரதக்ஷிணஞ்செய்தால் ஒவ்வொரு அடிக்கு ஒவ்வொரு அசுவமேதயாகபலனும்- இதனால்பாவங்களெல்லாம் நீங்கும்—எ-று.

பிரதோஷமென்பதற் தப்பதப்பொருள்- இராப்பொழுதுபிரவேசிக்குங்காலமென்பதாம் - இதற்குரசனிமுகமென்றும்இராத்திரியின்முன்னென்றும்பெயர். (எ௫)

நலம்புரியுஞ்சோமசூத்திரத்தோறும்
விதியுமன்றிநாட்கடோறும்
வலம்புரிதலிடம்புரிதலுடம்புருளல்
வணங்கிச்சூழ்வருதலென்னும்
பலம்புரியுமிவற்றூடுங்கடந்தேகி
லொன்றொன்றுப்பயக்குமஞ்சிப்
புலம்புரிவோர்கடவாமைமுப்பதினு
யிரம்பயனிற்பொருந்துமன்றே.

(இ-ள்) நன்மையைச்செய்கின்ற சோமசூத்திர பிரதக்ஷிணத்துக்குச்சொல்லியவிதியுமன்றி தினந்தோறும்பலனையடையவலமாகப்பிரதக்ஷிணஞ்செய்தல்- அல்லது இடமாகப்பிரதக்ஷிணஞ்செய்குதல்-அங்கப்பிரதக்ஷிணஞ்செய்தல்- பணிந்துபணிந்துபிரதக்ஷிணஞ்செய்த

லி-என்கிறஇவைகளுக்குள்ளும்- சிறிதுவிட்டுப்பிரதக்ஷிணஞ்செய்தா ல்-ஒன்றுக்கொன்றாகவே பலன்சித்திக்கும்- கல்வியுணர்ச்சியுள்ளவர் கள்- அச்சங்கொண்டு கிரமத்தைக்கடவாமல்பிரதக்ஷிணஞ்செய்தால் ஒன்றுக்குமுப்பதினாயிரம் பயனிற்பொருந்தும்—எ-று. (எசா)

இத்தகையவலம்புரிந்துபிரதோடத்
தாலயம்புக்கிறைஞ்சிப்பூசை
முத்தகைபகண்ணுடையார்க்காகமநூன்
மறையறைந்தமுறையிற்செய்தால்
மெய்த்தவர்வேதியர்சுதர்பெண்கோக்கொலையாதிய
பலவும்விலங்குநெஞ்சின்
வைத்தகவலையுங்கடனுநல்குரவுந்
துடைத்துமுத்திவழங்குமன்றே.

(இ-ள்) இத்தன்மையுள்ளவையாகிய பிரதக்ஷிணங்கள்செய்துபிர தோஷகாலத்தில் ஆலயத்துக்குள்சென்றுபணிந்து- பெருமைபொ ருந்திய திரிநேத்திரங்களுள்ளபரமசிவனுக்கு வேதாகமங்களிற்சொ ல்லியமுறைப்படி பூசைசெய்தால்உண்மையாகிய முனிவர்கள்-பிரா மணர்கள்- சிசு- பெண்-பசு-என்னுமிவர்களைக்கொல்லுகிற கொலை முதலானபாதகங்களெல்லாம் - நீங்கும் - மனதிற்பொருந்தியகவலை யும்-கடனும்- வறுமையும்-நீக்கிமோக்ஷத்தைத்தந்தருளும்—எ-று.

சோமசூரியாக்கினியென்னு முச்சுடருக்கும்ஒளியுண்டாவதற் குக்காரணமாயிருப்பது பரமசிவத்தினுடைய திரிநேத்திரங்களெ ன்பதுவிளங்க- முத்தகையகண்ணனை விசேடித்துக்கூறினர்-பரம சிவத்தின் திரிநேத்திரங்கள் - சோமசூரியாக்கினிகளுக்குக்காரணமெ ன்பது - பார்வதிதேவியார் - ஆதியிலொருகாலம் - சுவாமியினு டைய கண்களைமூடினபோது - இந்தச்சோமசூரியாக்கினிகளிருந் தும் உலகமெல்லாமிருண்டுவிட்டதென்பதினாலுமுணர்க. (எஎ)

தண்புனல்பத்தாவின்பாலொருநூறு
தயிர்க்கோராயிரநெய்யாட்டில்
வண்பதினாயிரங்கருப்பஞ்சாறுநூ
றாயிரம்பின்வடித்தசெந்தேன்

பன்பதினாற்பத்திலக்கந்தெங்கிளநீர்
கோடிபசுஞ்சந்தச்சேற்றுக்
கெண்பகரிலனந்தமாமவர்செய்குறை
யைப்பொறுக்குமெமதுபெம்மான்.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய நீரினால் அபிஷேகஞ்செய்தால் வருகின்ற பலன் பத்துக்கு-பசுவின்பாலுக்கு ஒருநூறுதயிருக்கு ஆயிரம் நெய்க்குப்பதினாயிரம் - கரும்பிரசத்துக்குலக்ஷம் - வடித்தசெந்தேனுக்கு நாற்பதுலக்ஷம் - தெங்கிளநீர்க்குக்கோடி - பசுமையுள்ளசந்தனக்குழம்புக்கு அளவுசொல்லில் அநந்தமாம்-அவர்கள்செய்தகுற்றங்களை எம்முடையகடவுள்பொறுத்தருள்வர்—எ-று

ஆட்டில் - என்னுஞ்சொல்லினை - புனல்முதலாகிய திருமஞ்சனதிரவியங்களுக்கெல்லாம் அமைத்துக்கொள்க. (எஅ)

எண்ணெயுமானறுநெயுங்கொண்டமரபக்கத்
தட்டமியினிறைவக்காட்டிற்
பண்ணரியகோதானங்கோடிமறை
யவர்க்கீந்தபயனேடொக்கு
மண்ணலுக்காட்டெட்டமியிலமன்றுருக்கு
நெய்யிரண்டுமாட்டப்பெற்றாற்
கண்ணுதலோனுலகத்திற்சிவகணத்திற்
சதகோடிகாலஞ்சேர்வார்.

(இ-ள்.) எண்ணெய்யும் மணமுள்ள பசுவினெய்யும் அமரபக்ஷத்தஷ்டமித்திதியில் - பரமசிவத்துக்கு அபிஷேகஞ்செய்தால் செய்தற்கரியகோடிகோதானம் - வேதமுணர்ந்த பிராமணர்களுக்குக்கொடுத்தபலனுக்குஒப்பாகும்-இதுவுமன்றி- அப்போதுஆட்டியஎண்ணெய்யும்புத்துருக்குநெய்யுமாகிய இவ்விரண்டும்திருமஞ்சனஞ்செய்யப்பெற்றால் பரமசிவனுடைய உலகத்தில் சிவகணங்களுடன் நூறுகோடிகற்பகாலம்சேர்ந்திருப்பார்கள் — எ-று. (எகூ)

* பின்பு அங்கிருந்தபடியேமோக்ஷம்
அடைவார்களென்பது குறிப்பு.

கட்டிரவிதனைபரவம்பகுவாயிற்
புகவிழுங்குங்காலந்தோறும்
விட்டொளிரவிருமருப்புங்குரமும்பொன்
பொதிந்துபட்டான்மேனிபோர்த்து
மட்டகலுமனந்தகோதானமளிக்
கும்பயனுமழுவலானை
யட்டமியிற்சுரபியின்பாலாட்டுதலுக்
கொவ்வாதென்றறையும்வேதம்.

(இ-ள்) அமைக்கப்பட்டிருக்கும் சூரியனை - கோளாகியபாம்பா னது - பகுந்தவாயில் புகும்படிவிழுங்குங்காலமாகிய கிரகணபுண் ணிய காலந்தோறும் - இரண்டுகொம்புக்கும்- நான்குகுளம்புக்கும் பிரகாசிக்கும்படிதங்கத்தகடுபதித்து - பட்டினால்மேனியைப்போ ர்த்து - மட்டில்லாத அநந்தங்கோதானங் கொடுக்கும்பயனும்-பர மசிவத்தை அஷ்டமிதிதியில் பசுவின்பால் திருமஞ்சனஞ்செய்வி த்தலுக்கு ஒவ்வாதென்று வேதங்கூறுகின்றது—எ-று. (அய)

வேறு.

எண்பெருந்திதிக்கிறைவனைத்தேனிறைத்தாட்டில்
விண்பணிந்தெழத்தழலுடைக்கடவுளாய்விளங்குந்
தண்புனற்கரிவருணனாந்தவளநீற்றினர்க்கு
வண்பனித்திங்களாமெனவறையுநான்மறையே.

(இ-ள்) அஷ்டமிதிதியில் தேனிறைத்துப் பரமசிவத்துக்குத்திரு மஞ்சனஞ்செய்வித்தால் தேவர்களெல்லாரும்தொழும்படிஅக்கினி தேவனாய்விளங்குவர்கள்- குளிர்ச்சியுள்ள நீர்த்திருமஞ்சனஞ்செய் தால் வருணதேவனாவார்கள் - தவளநிறமுள்ளவிபூதித் திருமஞ்சன ஞ்செய்வித்தவர்கள் - வளப்பமுங்குளிர்ச்சியுமுள்ள சந்திரனாவார் களென்று நான்குவேதங்களுஞ் சொல்லுகின்றன—எ-று. (அக)

அவாத்தேதிரண்டாந்திதிதிங்களோடடுத்தா
லிவரட்பால்கொளைர்ந்தாட்டினுமெட்டெனுந்திதியிற்

கவரப்பானுநாளெய்துமேற்கமழிளநீரைத்
துவரச்சோதிமீதாட்டினுமுத்தராய்த்தொகுவார்.

(இ-ள்) அபரபக்ஷத்தில் சதுர்த்தசிதிதியானது சோமவாரத்துடன்பொருந்தினால் அன்புமேலிடப்பசுவின்பால் கொண்டுவந்து திருமஞ்சனஞ்செய்வித்தாலும் அஷ்டமிதிதியுடன் ஆதித்தவாரம் பொருந்துமாகில் - கமழுகின்றஇளநீரை மிகுதியாகப் பரமசிவத்தின் திருமேனிமேல் அபிஷேகஞ்செய்வித்தாலும் முத்தராய்ச் சேர்வார்கள்—எ-று. (அஉ)

அருக்கர்நாளந்தவேழிரண்டாந்திதியடுத்தா
லுருக்குநெய்யெண்ணெய்தேன்கரும்பாட்டவுடலொழிக்கும்
பெருக்குந்தேண்மதிமுந்துமேகாதசிப்பிறப்பிற்
றருக்குநெய்யிறைக்காட்டவாந்தமரொடுங்கதியே!

(இ-ள்) சூரியதேவர்கள் நாளாகிய ஆதித்தவாரத்தில் அந்தச்சதுர்த்தசிதிதிபொருந்தினால் - புத்துருக்குநெய்யும் - எண்ணெய்யும் தேனும் -கரும்புரசமும்-அபிஷேகஞ்செய்வித்தால்-உடலெடுக்கும் பிறவியைநீக்கும் - முந்தியஏகாதசிகலந்தகார்த்திகை மாதப்பிறப்பில்-நல்லபசுவினெய்யைப்பரமசிவத்துக்கு அபிஷேகஞ்செய்வித்தால் சுற்றத்தாருடன்சேரும்படிமோக்ஷமுண்டாகும்—எ-று.(அங)

மாதஞ்சித்திரைமுதன்மதிக்கொவ்வொன்றுமழுவோன்
மீதுமென்மருச்சந்தமுப்பழங்கள்பால்விசயந்
திதிலப்பமேயயினிவெண்பளிதநெய்செழுந்தேன்
கோதில்கம்பளந்தயிரிவைசாத்துவர்குணத்தோர்

(இ-ள்-) சித்திரைமாதமுதல்வருமாதங்கள்தோறும் - ஒவ்வொன்றாகமென்மைத்தன்மையுள்ள மருக்கொழுந்து - சந்தனம்-முப்பழம்-திரட்டுப்பால்-சருக்கரை - குற்றமில்லாதஅபூபவர்க்கம் - அன்னம் - வெண்பளிதம்-பசுவினெய்-செழுந்தேன் - குற்றமில்லாத வெண்கம்பளம் - தயிர்-என்னுமிந்தத்திரவியங்களை நல்லோர்கள் பரமசிவத்தின் திருமேனியில் சாத்துவார்கள்—எ-று.

முப்பழங்களாவன - வாழைப்பழம்-பலாப்பழம் - மாம்பழ ம்-என்பவைகளாம் - அபூபவர்க்கமாவன-வடை -அதிரசம்- சுகியன் முதலானபலகாரவகை- வெண்பளிதம்-பச்சைக்கருப்பூரம் -வெண் கம்பளம்-நெய்யில்தோய்த்துச்சாத்தப்படுகிறது. (அச)

வெள்ளெருக்குடன் * கரவிரம்வில்வமாமத்தம்
வள்ளிதழ்த்தும்பைதருப்பைபேயவன்னிநாயுருவி
கொள்ளுமெட்டினுமொன்றுக்கொன்றாயிரங்குணமுற்
றள்ளுமித்தனைப்போதையுமொருநெய்தல்சாத்தின்.

(இ-ள்.) வெள்ளெருக்கம்பூ-அலரிப்பூ - வில்வம்- பொன்மத்தம் ஒளிபொருந்தியஇதழுள்ளதும்பை - தருப்பை - வன்னி- நாயுருவி பொருந்திய இந்தஎட்டுக்குள் ஒன்றுக்கொன்றாயிரங்குணமாம் ஒரு நெய்தற்பூச்சாத்தினால் இவ்வளவுமலரையும்தள்ளிவிடும்—எ-று.

கரியநெய்தற்போதாயிரந்தொடுத்தொருகண்ணி
யரியநாயகர்க்கணியினுமணிவித்துத்தொழினும்
விரியுமெப்பிறப்பெடுத்தலவயவைக்குளெவ்வினையு
மிரியுமுத்தியுமெய்துவர்சரதமற்றிதுவே.

(இ-ள்) ஆயிரங்கருநெய்தல்மலர் ஒருமாலையாகத்தொடுத்துப் பரமசிவத்துக்குச்சாத்தினாலும்- அருச்சகரைக்கொண்டுசாத்துவி த்துத்தொழுதாலும் - பரவுகின்ற எப்பிறப்பெடுத்தாலும் அந்தப் பிறப்புகளுக்குள் எவ்வகைப்பாவங்களும்நீங்கும் - மோக்ஷத்தையு மடைவார்கள்-இதுசத்தியம்—எ-று. (அசு)

யாதுமீசனுக்கிடுமலராயினுமிழிந்த
போதுவீழ்ந்ததுமயிர்செறிந்ததுவண்டுபொருப்பூத்
தாதுநாறிடாததுவிரியாததுசைவத்
தோதுதூய்மையில்லாததென்றெறுமுமொழிப்பார்.

(இ-ள்) எல்லாம்பரமசிவத்துக்குச் சாத்துமலர்களேயாலும்- இழிவானமலர் - பூமியில்விழுந்தமலர் - மயிர்பொருந்தியமலர் வண்டுகுடைந்தமலர் - மகரந்தமில்லாதமலர் - மலராதமலர் - சை வாகமத்திற்சொல்லுந் தூய்மையில்லாதமலர்- எங்கிறஎழுவிதமல ரையும் நீக்கிவிடுவார்கள்—எ-று. (அஎ)

* கரவீரம்-எனற்பாலது-கரவிரமெனக்குறுகிநின்றது.

எயும்பன்மலரின்மையேவிலையுடன்பசுங்கா
யாயுந்தண்பயில்பத்திர நன்றிராவகத்திற்
றூயமத்தமுமேழிரண்டாந்திதிசூட்ட
நாயகர்க்குநாயருவியும்பன்னமுநலனே.

(இ-ள்) பொருந்தியபலமலரில்லாவிட்டால் அவைகளின் இலையு டன்பசியகாயும்- ஆய்கின்றகுளிர்ச்சிபொருந்தியபத்திரமும்நன்று இராத்திரியில் பரிசுத்தமான ஊமத்தையின்பத்திரமும் - சதுர்த்த சிதிதியில் - பரமசிவத்துக்குச் சூட்டுதற்குநாயுருவியின்அழகுள்ள பத்திரமும்நல்லதாம்—எ-று. (அ௮)

நெய்பளாயசீதாருவினிறைநறைத்தூப
மையன்முன்னொருமதியிடிற்சிவபதத்தடையும்
பெய்யுமெண்ணெயின்விளக்கிடிற்கயிலைபோய்ப்பெறுமாற்
செய்யநெய்விளக்கிடற்பெறும்பேற்றையார்தெரிப்பார்.

(இ-ள்)நெய்கலந்தஸ்ரீசந்தனக்கட்டை நிறைந்ததூபத்தைப்பரம சிவத்தின்முன் ஒருமாதமிட்டால் சிவபதத்தில் பொருந்துவர்கள் பெய்கின்ற எண்ணெயினல் சிவசந்நிதியில் திருவிளக்கிட்டால் கயிலாயத்திற்போய்ச் சாலோகபதம்பெறுவார்கள் - செவ்விதான பசுநெய்த்தீபமிட்டால் பெறுகின்ற பேற்றினையிவ்வளவென்றுயா வர்தெரிப்பவர்கள்—எ-று ஸ்ரீசந்தனமென்பது-செஞ்சந்தனம்.

அவியுந்தீபத்தையறிதாக்கருப்பையொன்றணுகிக்
குவியுநூற்றிரியசைத்தலுங்கொழுந்துவிட்டழலப்
புவியுந்தானவத்தோற்றமும்பொன்முடித்திருவுஞ்
சவியும்வாய்த்தலாலறிந்திடிற்பெறுவதார்கணிப்பார்.

(இ-ள்) அவிகின்றதீபத்தை உணர்ச்சியில்லாதஒருகாலெலியான து-அங்குச்சென்று - குவியும்நூல்திரியை அசைத்தவளவில்-அந்த த்திருவிளக்குகொழுந்துவிட்டுப் பிரகாசித்ததினல்அந்த எலிக்குத் தானவப்பிறப்பும்ராச்சியமும் - பொன்முடிசூடிய செல்வமும்- அழகும்பொருந்தியது -பலனறிந்துதிருவிளக்கிட்டால் - பெறும் பலனையாவர்குறைத்துச் சொல்கின்றவர்கள் — எ-று.

(இவனேமாவலிச்சக்கிரவர்த்தி) (௯௰)

கோவின்வாலகைகாலையக்கோதறுநெய்யின்
மேவுதாமனைநூனந்தாலவெண்பஞ்சோடிழைதா
னுவலோடுதோய்த்திடுவிளக்கொளிருமேலனந்தம்
பாவபேதமுந்தீர்க்குமேன்முத்தியும்பயக்கும்.

(இ-ள்) பசுவின்வாலகையும் பொழுதளவாவது - அந்தப்பசுவின்மணமுள்ளநெய்யில் - பொருந்தியதாமனாநூலாவது - வெள்ளபஞ்சுடன் அந்தநூலாவது - தோய்த்து - அன்புடனிடுகின்றதிருவிளக்குப்பிரகாசிக்குமானால் அநந்தபாவபேதங்களையுந்தீர்க்கும்- பின்புமோக்ஷமுமுண்டாகும்—எ-று. (௯௧)

என்றுமார்க்கண்டனிசைத்தலும்வசுக்கள்கேட்டிறைஞ்சிச்
சென்றுநீற்றையுஞ்செய்யகண்மணியையுஞ்சாத்தி
வென்றுதீவினைபூசனைபுரிந்துவிண்ணடைந்தா
ரன்றுநாமமும்வசுபுரமானதப்புரமே.

(இ-ள்.) இவ்வாறுமார்க்கண்டமுனிவர்சொன்னவளவில் - அஷ்டவசுக்களுங்கேட்டு அவரைப்பணிந்துசென்று திருநீற்றையுஞ்செவ்விதானருத்திராக்ஷங்களையுமணிந்துகொண்டுவேதகிரீசனைப்பூசைசெய்து தீவினையைவென்று அவர்கள்பதவியிற் போய்ச்சேர்ந்தார்கள் - அந்தக்ஷேத்திரம்அன்றுமுதல்வசுபுரமெனப்பெயர்பெற்றது-

இனையதன்மைநாலிருவசுக்களுந்தொழுதிறைஞ்சி
வினைதணந்தமையென்றருதனைவிழுத்தவத்தோ
ரனையதன்பினரியாவர்பூசித்தனரடைவே
முனைவகூறெனக்கூறினன்சூதமாமுனிவன்.

(இ-ள்) இத்தன்மையுள்ள அஷ்டவசுக்களும் வேதகிரீசனைத்தொழுதுபணிந்துசாபம் நீங்கிமுறைமையென்று சொல்லியசூதமுனிவனை-மேன்மைபொருந்தியநைமிசமுனிவர்கள் அதன்பின்புயாவர்பூசித்தார்கள். அதனையுமுறையாக முனிவரேசொல்லுமென்னக் கூறுகின்றனர்—எ-று. (௯௨)

வசுதேவச்சருக்கம்
முற்றியது.
ஆ திருவிருத்தம்-௩௱௬௰.





சிவமயம்.

# இனாகரச்சருக்கம்.

எந்நாளுமினைவகளெலவையுஞ்செய்தன்மை
யான்வல்லன்வல்லனென்ன
முன்னாளருக்கரமையாதுதம்மின்
முரணிக்கனன்றுதணியா
ரந்நான்முகத்தனவைபுக்கிறைஞ்சி
யவனோடுரைத்துமெனவத்
தொன்றுடைந்துலகமேலோன்முனின்று
தொழுதிந்தவாறுமொழிய.

(இ-ள்) எந்தநாளிலும் வினைகளையெல்லாஞ்செய்யுந்தன்மையில் யான்வல்லவன் யான்வல்லவனென்று முன்னாளில் ஆதித்தர்பன்னிருவரும் ஒருவருக்கொருவர் மனம்அமையாமல் தமக்குள்மாறுபட்டுக் கோபங்கொண்டு தணியாமல் பிரமதேவனுடைய சபையில் சென்றுபணிந்து அவருடன் சொல்லிக்கொள்வோமென்று பழமையாகிய அந்தச்சத்தியலோகத்திற்போய் பிரமதேவன்முன்னின்றுதொழுது இந்தமுறைமையைச் சொல்ல—எ-று (க)

என்னிற்றருங்கொலெவர்பால்வருங்கொ
லினிவானியங்குநெறியென்
றுன்னிப்பிணங்கியொழியாதிரந்த
வொளியோசைவேதனுரையா
தன்னிற்றியானமதன்மீறுகண்டு
சடையோனையெம்மையுடையாய்
மின்னிற்பொலிந்தபகலோர்தம்மாறு
விடுமாறுகூறுகெனலும்.

(இ-ள்) இனி ஆகாயத்தில் சஞ்சரிக்குமுறைமை யென்னிடத்தில் தருமோ - எவர்களுடையபக்கில்வருமோ-என்றுகருதி யொருவருக்

கொருவர்பிணங்கி இடைவிடாதிரந்த சூரியர்கள்முறையைப் பிர மதேவனுணர்ந்து தனக்குள்தியானத்தின லவர்கள்தன்மையறிந்து சடாமகுடமுள்ள பரமசிவத்தைநோக்கி எம்மையாளுடையகர்த்த னே ஒளியினால்விளங்குகின்ற சூரியர்களுடையமாறுபாடுநீங்கும் படி அருளிச்செய்யவேண்டுமெனலும்--எ-று. (உ)

ஆராயும்வேதனிதயத்தெழுந்தவமலன்பணித்தபணியைச்
சோராதுணர்ந்துதலையிற்சுமந்துதுனிமாறுமாறவினிநீ
ரீராறிங்கடொறுமொவ்வொருத்தரெனநாளியற்றுநெடிதென்
றோராறிரண்டுபகலோரையேவவவர்வந்துதித்தபொழுதே.

(இ-ள்) இவ்வாறு தியானஞ்செய்த பிரமதேவனுடைய உள்ளத் தில்தோன்றிய பரமசிவங்கட்டளையிட்டருளிய ஏவலை சோர்வடை யாமலுணர்ந்து சிரசின்மேலேற்றுக்கொண்டு சூரியர்களைநோக்கிப்பிண ங்குகின்ற உங்கள்பகைநீங்கும்படி யினிநீங்கள் பன்னிரண்டுமாதந் தோறும்-மாதத்துக்கொருவராகத் தினஞ்செய்யுங்களென்று அந்த ப்பன்னிரண்டு சூரியர்களையுமேவ அந்தமுறைமைப்படி அவர்கள் வந்துஉதயமானபொழுது —எ-று. (௩)

சந்தேகமந்தருணவெற்பெழுந்துதணவாதுபூசலணவு
மந்தேகருவயவாளரக்கர்வலியாலுடைந்துமெலியா
வந்தோருங்கரயனுடனீளவடைதந்திவற்றைமொழியப்
பைந்தேனொழுக்குமலரோனுஞானவிழியிற்றெரிந்துபகர்வான்.

(இ-ள்) சந்தனமரங்கள் கமழ்கின்ற கிழக்குமலையில் உதயமாகி ஒழியாமல் போர்செய்தலைப்பொருந்திய மந்தேகனென்னும் அரக் கன்முதலாகிய வெற்றிபொருந்திய அரக்கர்களுடையவலியாற்றோ ற்றுமெலிந்து அழகுள்ளதேரினையுடைய அந்தப்பன்னிரண்டுசூரிய களும்மறுபடிவந்து பிரமதேவனுடனிந்தச் சங்கதிகளைச்சொல்ல பசியதேனைப்பெருக்காநின்ற தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரம தேவனும் - ஞானதிருஷ்டியினால்அறிந்துசொல்லுகின்றார் - எ-று.

வேறு.

நீருதனாட்படைகளாலிவிர்பன்னிருவரும்
பொருதலைத்துந்திறம்பிறர்தாப்புக்லுமோ

கருதுமற்றெம்மனோர்கடிதரக்கூடுமோ
சுருதிவெற்பென்பதோர்சோதிவெற்புண்டரோ.

(இ-ள்) நீங்கள்பன்னிரண்டுபேரும் - அந்தராக்ஷதர்களை ஆயுதங்களால்பொருது அலையச்செய்யுந்தன்மை உங்களுக்குவேறொருவர் கொடுக்கப்பொருந்துமோ -கருதுகின்ற எம்போல் வார்களாலும் கடியக்கூடுமோ-ஆதலால் வேதகிரியென்று சோதியுள்ள ஒருமலையிருக்கின்றது—எ-று (௫)

அன்னவெற்பின்சிரத்தையனெம்மன்னையோ
டின்னலைச்சினவுவானினிதிருந்தருள்செய்வான்
பொன்னடித்தாமரைப்பூசையைச்செய்துபி
னன்னர்மெய்த்தவமுமிந்நாள்செயப்போதிரால்.

(இ-ள்) அந்தமலையினுச்சியில் எங்கள் ஐயனாகிய பரமசிவம் எங்கள் தாயாகியபார்வதியாருடன் அன்பர்களுடைய துன்பத்தை முனிந்தொழிக்க இனிதாக வீற்றிருந்தருளுகின்றார்- அவருடைய பொலிவுள்ள திருவடித்தாமரையில் பூசைசெய்துபின்பு நன்மையுடன்தவஞ்செய்ய இன்றே செல்லுங்கள்—எ-று. (௬)

சேயகாயத்திரித்தெய்வமந்திரமெமக்
காயமேமனுணாத்தடிமைமற்றெமையுளான்
போயநீருந்தவம்புரியின்வந்தும்மையம்
மாயமேவலர்பொராவரமளித்தருள்செய்வான்.

(இ-ள்) வேதகிரீசுவரர்செவ்விதான தெய்வத்தன்மையுள்ளகாயத்திரிமந்திரம்-உச்சரிக்கும்படி முன்னாளிலெங்களுக்கருள்செய்துஎங்களையடிமையாகவுடையவர் அங்குச்சென்று நீங்களுந்தவஞ்செய்தால் உங்களுக்குத்தரிசனங் கட்டளையிட்டருளிமாயையுள்ளபகைவர்களாகிய அந்தஅரக்கர்கள் போர்செய்யாதவண்ணம் வரமளித்துக்கிருபைசெய்வார்—எ.று. (௭)

எவ்வகைப்பகைஞருக்கேனுநீரிடைதரா
மெய்வகைச்சோதியும்பெறுவிராலிரகிறு

லவ்வகைக்கிரியிடத்தடையினென்றுதபர்க்
குய்வகைக்குஸாசெய்தானுலகெலாமருள்செய்தான்.

(இ-ள்) எத்தன்மையுள்ள பகைவர்களுக்கேயானுலும் நீங்களிடை
யாத உண்மைவகையானசோதியும்பெறுவீர்கள் ஆதலால்உணர்ச்சியு
டன் அத்தன்மையுள்ளகிரியினிடத்தில்போய்ச்சேருங்களென்று உய்யு
ம்வண்ணம்சூரியர்களுக்குச்சொன்னூர்உலகத்தையெல்லாம்படைத்த
பிரமதேவர்-எ-று. (அ)

விடைதரக்கொண்டுபின்வெங்கதிர்ச்செல்வர்போய்
நடைவழிப்பொழிகணீர்நனைதரத்தொழுதெழாச்
சடைமுடிப்புங்கவன்றங்குவேதப்பொருப்
பிடையருச்சனைசெய்தாரிருதிறப்பொழுதுமே.

(இ-ள்) இவ்வாறுவிடைதரப் பெற்றுக்கொண்டு அந்தப்பன்னிர
ண்டு சூரியர்களும்நடக்கும் வழிபொழியுங்கண்ணீரினுல்நனையும் ப
டிபோய்த்தொழுதெழுந்து சடைமுடியுள்ள கடவுளாகியபரமசிவ
ம் வீற்றிருந்தருளும் வேதகிரியினிடத்திலிரண்டுகாலமும் பூசை
செய்தார்கள்—எ-று. (கூ)

புண்ணியன்பதவருச்சனைதவம்புரிதலுங்
கண்ணியஞ்சடையொடுங்கையின்மான்மழுவோடும்
பெண்ணினல்லாளொடும்பெருவிடைப்பரியொடு
மண்ணலுங்கோடிசூரியரையொத்தண்மினுர்.

(இ-ள்) பரமசிவனுடைய திருவடியருச்சனையுந்தவமும் - புரிந்
தவளவில்கொன்றைமாலையணிந்த சடைமுடியுடனும் - திருக்காங்க
ளில்மான்மழுவோடும்- பெண்ணினல்லாளென்னும்பார்வதிதேவியா
ருடனும் பெரியரிஷபவாகனத்துடனும் - பரமசிவங்கோடிசூரியர்
களையொத்து அவர்களுக்கெதிரில் எழுந்தருளினுர்—எ-று. (ய)

தாங்குஞ்செய்கையால்பரியென்னுஞ்சொல்லீண்டுவாகனமெனக்
கூறப்பட்டது "ஆடும்பரிவேலணிசேவலனெ,,என்பதனுலுமுணர்க

வேறு.

பன்னிருவெய்யவருமான்றிருவருவத்
தொளிவெள்ளப்பரவைமூழ்கி

மன்னுபெரும்பாற்கடலிற்கவிழ்ந்ததொரு
குடப்பாலின்மறைந்துதாழ்ந்தா
ரின்னுயிருக்குயிராயெண்ணிறந்தவண்டத்
தப்பாலாயிப்பாலாய்மற்
றுன்னுமவர்க்குன்னரிதாயெமக்கெளிதாய்
நின்றுயென்றுவப்பின்மிக்கார்.

(இ-ள்) பன்னிரண்டுசூரியர்களும்-பரமசிவனுடைய திருமேனி யின் சோதிவெள்ளச்சமூத்திரத்தில் முழுகிநிலையாகியபெரியபாற் கடலில் கவிழ்ந்த ஒருகுடப்பால் போலத்தங்கள்சோதிமறைந்துப ணிந்து-நின்று உயிர்களுக்குயிராயும் அளவிறந்த அண்டங்களு க்கு அப்புறமாயும் அவைகளுக்கிப்புறமாயும் - நினைப்பவர்களுக்கு நினைப்பரிதாயும்எங்களுக்கெளிதாயும்நின்றபரமசிவமேயென்று து திசெய்துமிகுந்தமகிழ்ச்சியடைந்தார்கள்—எ-று. (௫க)

அன்னவருக்கணாநோக்கியருச்சனையு
நற்தவமுமருத்திகூர்ந்தே
மென்னவரநீர்வேட்பதெனக்கூற
வவர்யாங்களியங்காவண்ணம்
புன்னெறியைச்செயுமரக்கர்வலிதடுக்கும்
வலியெமக்குப்புரிதியென்னத்
துன்னெறியர்தவப்பெருமைதிருவுளத்திற்
கருதியொன்றுசொல்லும்பெம்மான்.

(இ-ள்.) அந்தச்சூரியர்களைப்பரமசிவம் நோக்கி - உங்கள்பூசை யும் தவமுங்கண்டு - விருப்பமடைந்தோம் - நீங்கள்விரும்பியவர ம் என்னவென்று திருவாய்மலர்ந்தருள அவர்கள்சுவாமீ நாங்கள் சஞ் சரிக்காதவண்ணம் புன்மைத்தொழில் செய்யும் அரக்கருடையவ லியைத்தடுக்கத்தக்க வலியெங்களுக்கு அருளவேண்டுமென்று வி ண்ணப்பஞ் செய்யப்பொருந்திய நெறியையுடைய அந்தச்சூரியர் கள்செய்ததவப்பெருமையைத்திருவுள்ளத்திற் கருதியொன்றருளிச் செய்கின்றார்—எ-று. (௫உ)

அரிதவரையெவரேனும்பொருதழிப்ப
ததனாலவ்வரக்கர்தம்மைச்

சுருதிகிரியகத்துமக்காய்வெளிநின்று
　　வில்வாங்கித்துரப்பம்யாமே
பொருகணமுந்தணவாதுநமைவிடுத்து
　　வேதங்களோதும்வேதக்
கிரிதனக்குநமக்குமுருப்பிறிதில்லை
　　யுறுதியொன்றுகேண்மின்மன்னோ.

(இ-ள்) எவர்களேயானாலும் அவர்களுடன்போர் செய்தழி ப்பதருமை - ஆதலால் உங்கள்பொருட்டு இந்தவேதகிரியில் வெளி நின்றுநாமே வில்வளைத்து அவர்களைத்துரத்து விடுகிறோம் - ஒரு க்ஷணப்பொழுதும் நம்மைவிட்டு நீங்காமல் வேதங்களோதிக் கொ ண்டிராநின்ற இந்த வேதகிரிக்கும் நமக்கும் திருமேனிவேறில்லை- உங்களுக்கொருஉறுதிசொல்லுகிறோம்கேளுங்கள் —எ-று. (௰௩)

இவ்வண்ணம்வேதகிரியுடனமையு
　　முமதுளத்திநிருத்திக்கொண்மி
ன்வ்வண்ணநோக்குதலுமரக்கருறுங்
　　களைப்பொருகைக்கஞ்சாநிற்ப
ருய்வ்வண்ணநமதுபொருட்டறுதொழிலோர்
　　முப்பொழுதுமுமக்கென்றீந்த
கைவ்வண்ணவருக்கியமேநிருதர்செரு
　　வலிகடக்கக்கடவதம்மா.

(இ-ள்) இவ்வாறு வேதகிரியுடனம்மை உங்களுள்ளத்தி லிருத்தி க்கொள்ளுங்கள் அந்தமுறைமையை அந்தஅரக்கர்கள் கண்டவளவில் உங்களுடன் போர்செய்வதற்கு அஞ்சுவார்கள்உய்யும்படி உங்கள் பொருட்டுப் பிராமணர்கள் திரிசந்திகாலங்களிலும் இதுசூரியர்க ளுக்குக்காக்கக் கடவதென்றுகொடுக்கும்வண்ணமுள்ள வையருக்கி யமேஅவ்வரக்கர்களுடையபோர்வலியைக்கடந்துவிடுவதாக—எ-று

பிராமணர் அறுதொழிலாவன-வேதமோதுதல் - ஓதுவித்தல் யாகஞ்செய்தல்-யாகஞ்செய்வித்தல் -தானங்கொடுத்தல்-தாங்களேற் றுக்கொள்ளுதலென்பனவாம். (௰௪)

மறையவர்காயத்திரியினுக்கித்தவர்கா
　　யத்திரியாமனுவுக்கென்று

மிறையவர்நீராதலின்மற்றிருபிறப்போர்
 நுமதுமைந்தரென்னத்தக்கோர்
குறையடையிற்றந்தையரானந்தனர்காத்
 தளிப்பரெனக்கூறுமாற்றான்
முறையினவர்விடுக்குமருக்கியநுமது
 பகையனைத்துமுடிப்பதாமால்.

(இ-ள்) பிராமணர்கள் காயத்திரியிலுதித்தவர்கள் அந்தக்காயத்திரியாகிய மந்திரத்துக்கு எந்நாளும் இறையவர்கள் நீங்களாதலினால்பிராமணர்கள் உங்கள்புத்திரர்களென்றுசொல்லத்தக்கவர்கள் ஆதலால்தந்தையருக்கொருகுறைநேரிட்டால்புத்திரர்கள்காத்தளிப்பரென்று வேதங்கள்சொல்லுமுறைமையினால்முறைமையாக அவர்கள்விடுக்காநின்ற அருக்கியமானது உங்கள் பகைகளையெல்லாமுடிப்பதாம்—எ-று.

பிராமணகுலத்திற்பிறந்தாலும் உபநயனம் ஆகிறவரையில் சூத்திரனென்றும் உபநயனமானபின்பு பிராமணத்துவ முண்டாவதென்றும் சொல்லப்படுகின்றமையால் இருபிறப்போரெனக் கூறப்பட்டது. (௰௫)

நீருமகத்துணையரெனநெடிதுவிளங்
 கக்கடவீர்நிருதரோடு
போருமலக்கணுங்கடந்துபொருப்புதயம்
 புகத்தகுவீர்புனிதத்தாய்க்குங்
கூருமொருமாற்றவடன்புதல்வரைவென்
 றெழுவீர்நுங்குமாராயோ
ராருமணங்கருதியவைதருவீர்மற்
 றொருகுறைக்குமஞ்சன்மின்னீர்

(இ-ள்)நீங்களும்யாகத்துணைவரென்றுமிகவும் விளங்கக்கடவீர்கள் அரக்கர்கள் பொருதுகின்றபோரும் துன்பமுங்கடந்து கிழக்குத் திசைமலையில் உதயமாகக்கடவீர்கள் உங்களுடைய பரிசுத்தமுள்ள தாய்க்கும் பகைமிகுந்த மாற்றவளுடையபுத்திராகிய அரக்கரை வென்றுஉதயமாவீர்கள்உங்கள்புத்திராகிய பிராமணர்களியாவரும்

மனதிற்கருதியவரங்களைத் தந்தளிக்கக்கடவீர்கள். நீங்கள் மற்றயா தொருகுறைக்கும் அஞ்சவேண்டுவதில்லை—எ-று-

அதிதியென்பவளுடையபுத்திரர்களாதலால்சூரியர்களுக்கு ஆதித்தரெனப்பெயர்- அவளுக்கு - மாற்றவள்திதியென்பவள்-அவள் புத்திரராதலினால் அரக்கர்களுக்குத் தைத்திரியரெனப்பெயர் இவ் விருவரும் காசியரிஷிமனைவியர் பதின்மூவருக்குள்பட்டவர்கள் அந்தப்பதின்மூன்றுபேரும் தக்கனுடையபெண்கள் தேவர்களுக் கும் அதிதியென்பவளேதாய் (யசு)

உதயமுதன்முப்பொழுதும்வேதமனு
மொழிந்துவழாதுரியரெல்லா
மிதயநெகிழ்ந்தான்மாவைவலம்புரிந்து
தொழக்கடவரிவைசெய்யாரேற்
புதையிரவிகாதகர்தாமெனப்படுவர்
செய்வாரேற்புரப்போராவர்
தனதயுமிறுதவறுகிலார்க்கெதுதரினு
மதுபயனிற்சாருமன்றே.

(இ-ள்) உங்கள்புத்திரர்களாகிய பிராமணர்களெல்லாரும் உதய காலமுதல் மூன்றுகாலங்களிலும் வழுவாமல்வேதமந்திரங்கள்சொ ல்லிமனமுருகி ஆன்மாவைப்பிரதக்ஷிணஞ் செய்துபணியக்கடவர்க ள் - இவைசெய்யார்களானால்மறைகின்றசூரியகாதர்களென்று சொ ல்லப்படுவார்கள்- செய்வார்களாகில் சூரியரக்ஷகரெனப் படுவார்கள் பொருந்திய இம்முறைமைதவறுதவர்களுக்குயாது கொடுத்தாலும் அதுபயன்படும்—எ-று.

ஆன்மாவைவலஞ்செய்வது எவ்வாறென்னில் நின்றநிலையில் உடல் சுழல்வது- உடலைவலம்புரிக என்பதனுனுமுணர்க. (யஎ)

இத்தகைய * அந்தணராலுலகுய்யு
முமதுபொருட்டெமதுதொண்டர்
மெய்த்தவருந்தமியேமுமுப்பொழுது
மருக்கியமிவ்விதியிற்செய்வேம்

வைத்தவிதனாற்பிறிதுகுறையிலரா
யிருள்கடிந்துவாழ்மினென்று
வத்தனெமையாளுமலையாளுடையான்
சிவலிங்கத்தடைந்தானன்றே.

(இ-ள்) இத்தன்மையினையுடைய பிராமணர்களால் உலகமானது உய்யும் - உங்கள்பொருட்டு நம்முடைய அடியர்களாகிய உண்மைத் தவர்களும் தனியாகிய நாமும்மூன்றுகாலங்களிலும் அருக்கியமிந் தவிதிப்படிசெய்வோம் - பொருந்திய இதனால்நீங்கள் வேறொரு குறையுமில்லாதவர்களாயிருளை நீக்கிவாழுங்களென்று பரமசிவன் எம்மையாளுடையளாகியபார்வதிதேவியாருடன்சிவலிங்கத்திலெழு ந்தருளினர்—எ-று.

* அந்தணர்என்பதற்குப்பொருள்-அழகியதட்பமுடையவர் களென்பதாம், (௰௮)

வைகருத்தன்விவச்சுவான்மார்த்தாண்டன்
பார்க்கரன்மற்றிரவியென்பா
னெய்துலகப்பிரகாசன்சாக்கியே
சுவிக்கிரமனெழுமாதித்தன்
செய்யதொருசூரனஞ்சுமாலிதிவா
கரனெனும்பேர்சிறந்தீராறு
வெய்யவர்சித்திரைமாதிமதிதொறுமொவ்
வொருத்தராய்விசும்பிற்செல்வார்.

(இ-ள்) வைகருத்தன் - விவச்சுவான்- மார்த்தாண்டன் - பார்க்க ரன்- இரவியென்பவன் - பொருந்தியலோகபிரகாசன்சாக்கி சுவி க்கிரமன்- எழுகின்றஆதித்தன் - செவ்விதான ஒப்பற்றசூரன்- அ ஞ்சுமாலி திவாகரன்- என்னும்பேர்சிறந்து பன்னிரண்டு சூரியர்க ளும்- சித்திரைமாதமுதல் மாதந்தோறும் ஒவ்வொருவராய் ஆகா யத்திற்சஞ்சரிப்பார்கள்—எ-று. (௰௯)

அரனருளிச்செய்தவண்ணமுதயகிரி
யடைந்தருக்கரவனிகாத்தார்
பரனமருமிப்புரியுமக்கால
முதற்பரிதிபுரியதாகு
மிரவிகள்வந்தருச்சித்ததிதுவென்னக்
கேட்டுருகியிருடியீட்டம்
விரவியதன்பின்பூசித்தவரெவர்நீ
விளம்புகெனவிளம்புஞ்சூதன்.

(இ-ள்) பரமசிவம் அருளிச்செய்தவண்ணம் சூரியர்கள் உதயகிரியிற் சேர்ந்துஉலகத்தைக் காத்தார்கள் பரமசிவம் வீற்றிருந்தருளும் வேதகிரியென்னும் க்ஷேத்திரமும் அந்தக்காலமுதல் பரிதிபுரியென்பதாம் - சூரியர்கள் வந்தருச்சித்த திவ்வாறுமென்றுசொல்லக்கேட்டு மனமுருகிநைமிசாரணிய முனிவர்கள் சூதமுனிவரை நோக்கிச் சூரியர்கள் பூசித்தபின்புஅங்குவந்துபூசித்தவர்கள்யார்நீர் சொல்லவேண்டுமென்ன அம்முனிவர்சொல்லுகின்றார்—எ-று.

தினகரச்சருக்கமுற்றியது.

ஆ௨ திருவிருத்தம் - ௫அ௩.



௯

# முனிகணச்சருக்கம்.



முண்டகனும்புரந்தரனுமுகுந்தனுமற்றிமையோருங்
கண்டறிதற்கரிதாயகால்சிவந்தகாலரகப்
புண்டரிகப்புரத்தினடுப்பொற்பொதுவினடம்புரியு
மண்டர்குலத்தரசனைத்தாழ்ந்தரவரசனுரைசெய்தான்.

(இ-ள்.) பிரமதேவனும் - தேவேந்திரனும் - மகாவிஷ்ணுவும் - தேவர்களும் - கண்டறிதற்கரிய திருவடிகள் சிவந்ததிருவடிகளாகும்படி புண்டரீகபுரத்தினடுவாகிய பொற்பொதுவில் ஆனந்தநிர்த்தனஞ்செய்யும்தேவர்தேவனாகிய பரமசிவத்தைப் பணிந்து ஆதிசேஷன்சொல்லுகின்றான்—எ-று. (க)

நின்திருவாய்மலர்ந்தளித்தபாணினியநெறிகேட்பத்
துன்றுமருந்தவர்பலருந்தொக்கனரான்முக்கண்ணாய்
மன்றினடந்தொழத்தமியன்பதஞ்சலியாம்வடிவெடுக்கு
மன்றுவிரித்துரைசெய்கென்றவர்க்கென்பதறிவித்தான்.

(இ-ள்) தேவரீருடைய திருவாய்மலர்ந்தருளிச்செய்த பாணினியமென்னும் வியாகரண முறையைக்கேட்க-நிலையாகியபலமுனிவர்களுஞ் சேர்ந்திருக்கின்றனர் - முக்கணனே - சிற்சபையில் ஆனந்தநடனந்தொழ எளியேன் பதஞ்சலியாம் வடிவெடுக்குநாளில் அந்தமுனிவர்களுக்கு விரிவாகச்சொல்லவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்தான்—எ-று. (உ)

திருமலனுமுடிதுளக்கநெடும்பகற்போய்ப்பதஞ்சலியா
மொருவடிவமெடுத்ததன்பின்பாணினியத்தொழுங்கெல்லா
மருமுனிவர்தமக்கோதியோதிநாவயர்ந்தயர்ந்துந்
திருமறையிற்றெளிந்தோருமிதன்முறையிற்றெளிவற்றார்.

(இ-ள்) பரமசிவம் யாதொன்றுஞ்சொல்லாமல் திருமுடியையசைக்க (அதுவேயுத்தரவானதாயெண்ணிக்கொண்டு) நெடுநாள்சென்று பதஞ்சலியாம் ஒருவடிவமெடுத்த பின்பு பாணினியத்தின் ஒழுங்கையெல்லாம் அரியமுனிவர்களுக்குச் சொல்லிச்சொல்லிநாத்தளர்ந்தும் சிறந்தவேதங்களில் தெளிவுள்ளவர்களும் இந்தவியாகரணமுறையில்தெளிவற்றார்கள்—எ-று. (ஙு)

முனிகணத்தர்வேட்டமைக்குமுடிப்பதென்கொலெனப்புகலா
தினிதுரைப்பனெனத்தன்னைமதித்துரைத்தவிழுக்கத்தாற்
புனிதனருட்பயவாதுபதஞ்சலிபோநித்தலுமே
தனிதனிமெய்த்தவரெவருமலமயக்கந்தலைப்பெய்தார்.

(இ-ள்) முனிகணத்தவர்கள்விரும்பினமைக்குயான்யாதுமுடிப்ப தென்று சொல்லாமல் - இனிதாகச்சொல்வனென்றுதன்னைமதித்துச்சொல்லியகுற்றத்தால் பாமசிவனுடைய திருவருள்சித்தியாமல்ப தஞ்சலிபோதித்தவளவில்தனித்தனி அம்முனிவர்கள்யாவரும் மன மயக்கங்கொண்டார்கள்—எ-று. (௪)

பாணினியந்தெளிதராப்பரிசறிந்துதிருமுனிவர்
பேணியருந்தவநெடுநாட்பெருந்தில்லைவனத்திழைப்ப
வேணிமவுலியுந்தோன்றிவேதமங்கமாகமத்தோ
டாணிபெறப்பிறங்குகிரியாய்நின்றதொன்றுளதால்.

(இ-ள்) பாணினியமென்னும் வியாகரணம்தெளியாத தன்மையைத் தங்களுள்ளத்தில்முனிவர்களுணர்ந்து விரும்பி அரியதவம் நெடுநாள்பெரியதில்லைவனத்திற்செய்யச்சடாமகுடமுள்ள பரமசிவம் அவர்களுக்கெதிரில்தோன்றி- வேதங்களானவை-அங்கங்கள்-ஆகமங்கள்-என்னும்இவைகளுடன்உறுதிபெறவிளங்குகின்றமலைவடிவாய்நிற்பதொன்றிருக்கின்றது—எ-று. (௫)

அகரமுடனுகரமுமாமாதிவிந்துநாதத்திற்
புகரகலக்கலந்துநிற்கும்புனிதவேதச்சிகரம்
பகரியபிரணவத்தின்படிவமுமாம்துநமது
நிகரியவடிவாகுமாங்கடைமினீரொன்றான்.

(இ-ள்) அகரமுடன்உகரமுமாகிய பரவிந்துநாதத்தில் குற்றம் நீங்கக்கலந்திருக்கும்பரிசுத்தமுள்ளவேதகிரிச்சிகரமானது சொல்லுதற்கரியபிரணவத்தின் சொரூபமுமாகும்- அதுஒப்புசொல்லுதற்கரிய நம்முடையசொரூபமாம் - நீங்கள் அவ்விடத்திற் செல்லுங்களென்றருளிச்செய்தார்—எ-று. (௬)

என்பதுகேட்டிருடியருமெழுகடற்பேருவகையரா
யன்பர்தமக்கெளியபிரானருள்சுமந்துபணிந்தேத்தித்
தென்புலியூர்த்தலைகடந்துதிருத்தொண்டைநாடடைந்து
புன்பிறவிபறுப்பதொருவேதகிரிப்புடைகண்டார்.

(இ-ள்) இவ்வாறுபரமசிவம் திருவாய்மலர்ந்தருளியதைக்கேட்டு - அந்த இருடிகள் எழுகடல்போன்ற பெரியசந்தோஷமுள்ளவர்களாய் - அன்பர்களுக்கெளியராகிய பரமசிவத்தின் திருவருளைப்பெற்றுக்கொண்டுபணிந்து துதித்துத்தென்புலியூராகிய சிதம்பரத்தின் எல்லையைக்கடந்து சிறப்புள்ள தொண்டைநாட்டிலடைந்து-இழிபிறப்பை அறுப்பதாகிய ஒப்பற்றவேதகிரியையவ்விடத்திற்கண்டார்கள்—எ-று. (எ)

வேறு.

வாவிதொறுஞ்செம்புண்டரிகமறிகண்டதிரும்புண்டரிகந்
தூவிமயினின்றாடகங்கள்சொரியுங்கணிப்போதாடகங்க
ளாவிதருநன்குறவாசநறும்பூஞ்சாரற்குறவாச
மேவிநெருங்குங்கடவேழம்வெருவுமரியாற்கடவேழம்.

(இ-ள்) தடாகங்கள்தோறும் செந்தாமரைகளிருக்கும்- மானைக்கண்டுபுலிகளாரவாரிக்கும்- தோகையிணையுடைய மயில்கள் நின்றாடுகின்றஇடங்களில் மலராகியபொன்னை வேங்கைமரங்கள் சொரியும்-கஸ்தூரியானது நன்மைபொருந்த வாசனையைத்தரும்- நறியமலருள்ள மலைச்சாரலில்குறவர்வாசஞ்செய்வார்கள் - காட்டிலுள்ளமூங்கில்கள்பொருந்தி நெருங்கியிருக்கும் - மதச்சுவடுள்ள யானைகள் சிங்கத்தினால்பயப்படும்—எ-று. (அ)

எங்குங்கிரியின்பாட்டுழையேயெயிற்றியவர்தம்பாட்டுழையே
தங்குந்தவஞ்செய்கந்தரமேதவழுங்குவட்டிற்கந்தரமே
பொங்குங்குழுமிக்கோளரியேபொதுளுமலர்த்தேன்கோளரியே
யொங்குஞ்சுனையிற்குவலயமேயுவப்போடிறைஞ்சுங்குவலயமே.

(இ-ள்) மலையின்பக்கமெங்கும்மான்களும்- குறத்தியர்பாடுகின்ற பாடலினிசையுமாயிருக்கும்- தங்குகின்ற முனிவர்தவஞ்செய்யும் இடமாகக்குகைகளெங்குமிருக்கும் - மலைச்சிகரத்தில்மேகங்கள்தவழும்- சிங்கங்கள்கூட்டமாய்க்கூடிப்பொங்கும் - தேன்பொருந்திய மலர்களில் தேனைக்கொள்ளும்வண்டுகளிருக்கும் - ஓங்கியசுனைகளில் குவளைமலர்களிருக்கும் - அக்கிரியைச்சந்தோஷித்துடன்உலகத்தார் வணங்குவார்கள்—எ-று.

ஓங்கும் - என்பது- விகாரவகையால் ஒங்குமெனக்குறுகிநின் றது-கொளரியெனற்பாலது-கோளரியெனநீண்டது.' (கூ)

சேருமலையின்மிசைக்குறிஞ்சிஇசைநான்கதிருமிசைக்குறிஞ்சி
சோருநிதம்பத்தசோகமணந்தொலையாதெவர்க்குமசோகமணம்
வாரியெனுஞ்சிறாரரவமணிகால்வனசிறாரரவம்
வேரியகிலின்காப்படரும்விளைசெந்திணையிற்காப்படரும்.

(இ-ள்) அம்மலையின் மேல்குறிஞ்சி மரங்கள்சேர்ந்திருக்கும்- நான்குதிக்குகளிலும் குறிஞ்சியென்னும் பண்ணிசை சென்றொலிக்கும் - மலைப்பக்கத்தில் அசோகமரத்தின் மணமுள்ளமலர்கள்விழுந்திருக்கும் - எவர்களுக்கும் சோகமில்லாத கல்யாணம் ஒழியாமல் நடந்துகொண்டிருக்கும் - அந்தக்குறிஞ்சிநிலத்திலிருக்கும் சிற்றூர்களிலுண்டாகும் ஓசை சமுத்திரவோசை யென்றுசொல்லப்படும் சீறுகின்றதா யூர்கின்றசர்ப்பங்கள் மாணிக்கங்களைக்கக்குவன-வாசனைபொருந்திய அகில்மரச்சோலைபடர்ந்திருக்கும்- விளைகின்றசெந்திணைப்புனங்களில் காவல்மாறுமலிருக்கும்—எ-று. (ய)

விரியும்வரைத்தந்தாவளமேமிகுநித்திலத்தந்தாவளமே
புரியுமருவிச்சிகரமேபுரளுமருவிச்சிகரமே
திரியுமொழியாமற்கடமேசெறிகாவணத்துமற்கடமே
சொரியுமலையக்காவலரோசூழ்வார்மலையக்காவலரே.

(இ-ள்) மலையில்யானைகள் அதிகமாயிருக்கும் - மருதநிலத்தூர்களில்கரும்பீன்றமுத்துகள்மிகுந்திருக்கும் - இலக்குமியானவள் விரும்பி நன்மையைச்செய்வாள் - திவலைகளையுடைய அருவிகள் புரளும் - யானைக்கூட்டங்கள் ஒழியாமல்சஞ்சரிக்கும் - நெருங்கியசோலைஎங்கும் குரங்குகளேசஞ்சரிக்கும் - மலையிலிருக்கும் அந்தச்சோலைகள்மலர்களைச்சொரியும் - குறிஞ்சிநிலத்தரசர்கள் போர்செய்யச்சூழ்வார்கள்—எ-று. (யக)

தயங்கும்வயிரத்தாரங்கடழைக்கும்வயிரத்தாரங்க
ளியங்குமருப்புக்கோலங்களெழுமாமருப்புக்கோலங்கண்
முயங்குமகவிக்கேகயங்கண்முத்திதருமங்கேகயங்கள்
வயங்குமலையத்தொண்டகங்கள்வாளுடையலைத்தொண்டகங்கள்

(இ-ள்) வயிரமணியாலாகிய பதக்கங்கள்பிரகாசிக்கும் - வயிரம் பொருந்திய சந்தனமரந்தழைத்திருக்கும் - கொம்பினையுடைய பன்றிகள்சஞ்சரிக்கும் - அரும்புகளின் அழகுகள்சோலையிலுண் டாயிருக்கும்- மயில்கள்கூத்தாடிக்கொண்டு பொருந்தியிருக்கும்- அங்கிராநின்ற தீர்த்தங்கள் மோக்ஷந்தரும் - மலையினிடத்தில் அந் தக்குறிஞ்சி நிலத்துக்குரிய பறைகள் ஒலித்துக்கொண்டிருக்கும்- தொண்டரிருக்கு மடங்களில் தேவர்களும் விரும்பும்படியான அன்னமிருக்கும்—எ-று. (௰உ)

இருக்குங்குவைபொற்கிராவணமேயெழுங்கார்பசியங்கிராவணமே,தருக்கும்பிணைகளிடைக்கலையேசந்தக்கழைகளிடைக்கலையே, விரிக்கும்பயிராவணக்கிளையேவிளைக்கும்பயிராவணக்கிளையே;பரிக்குமரவக்கானகமேபணியாமரவக்கானகமே.

(இ-ள்) பொன்கல்கள் அங்குக்குப்பல்குப்பலாயிருக்கும்- அவ்விடத்தில்யாவர்க்கும் - பசியிராதவண்ணம் - நீருண்டகரியமேகமானது மழைபொழியும்படி ஆகாயத்திலெழும் - பெண்மான்களும் ஆண்மான்களும் - அவ்விடத்தில் களிப்புற்றிருக்கும் - அங்குவளர்ந்திருக்கும்அழகுள்ளமூங்கில்களினிடத்தில்மூசுவென்னும் ஆண்குரங்குகளிருக்கும் - வனத்திலிருக்குங்கிள்ளைகள் குரலோசையைவிரிக்கும்- அங்குவிளைக்கும் பயிர் மலைநெல்லின்கூட்டமே-குங்குமமரங்களை அம்மலைதாங்கிக்கொண்டிருக்கும்- பணியென்னும் பாம்புகளின்வாசனை அம்மலையிடமெங்குமிருக்கும்—எ-று, (௰௩)

(பாம்பின்மணத்தைக்குறித்தநொண்டிச்சிந்து.)

“ அந்தணர்நாவிமணம் - இறையவ - ரலர்ந்திடுதாழையின்மணமாகும் - வந்திடுவைசியர்மணம்-பாதிரிப்பூ- வகுத்தசூத்திரர்மணமிருப்பையின்பூ ”.

பிராமணசாதி - கஸ்தூரிவாசனை-க்ஷத்திரியசாதி-தாழம்பூவாசனை வைசியசாதி-பாதிரிப்பூவாசனை-சூத்திரசாதி- இலுப்பைப்பூவாசனை என்னுமிதனுனுமறிக.

இனையவளத்தின்பெருவரைமாட்டெய்தியிருடிக்கணம்பூசை தனையுமிழைத்துத்தவமிழைப்பத்தானேவெளிப்பட்டவருளத்தே புனையுமதியான்பாணினியப்பொருளைத்தெளிவித்தருளியவர் நினையும்விருப்புமளித்தந்தநிலையத்தகலாநிலைகொண்டான்.

(இ-ள்.) இத்தன்மையவைகளாகியவளங்களையுடையபெரியவேத கிரியினிடத்திற்சென்று- முனிவர்கணங்கள் பூசையுஞ்செய்து- தவ மூஞ்செய்யஇராந்திங்களணிந்தபரமசிவம்- அவர்களுள்ளத்திற்தோ ன்றிப்பாணினியத்தின் பொருளைத்தெரிவித்து அவர்கள்வேண்டும் வரங்களுங்கொடுத்துஅந்தவிடத்தில் பிரியாமல்வீற்றிருந்தருளினர்.

அந்நாட்டொடங்கிமுனிக்கணமாபுரியென்றந்தப்புரிப்பெயரா
முன்னாட்புகுந்தபுகலிதுவென்றுரைத்தசூதன்முகநோக்கி
மின்னாட்டியசெஞ்சடைமுனிவர்வேதாசலமீதெம்பெருமான்
பின்னாட்புரிந்தநெறியாதுபேசுகெனவும்பேசுவான்.

(இ-ள்) முன்னாள்நடந்தசரித்திரமிது அந்தநாள்முதற்கொண்டு அந்தஸ்தலத்துக்கு முனிகணமாபுரியெனப்பெயருண்டாயதென்று சொல்லிய சூதமகாரிஷிபின் முகத்தைஒளிபொருந்தியசெஞ்சடை யிணையுடையமுனிவர்கள்நோக்கிஅந்தவேதகிரியினிடத்தில்நம்மிறை வன்அதன்பிற்காலஞ்செய்தருளியமுறைமையாதோஅதனையுஞ்சொ ல்லவேண்டுமென்னச்சொல்லுகின்றார்—எ-று. (யரு)

முனிகணச்சருக்கம்-முற்றியது. ஆ திருவிருத்தம்-கூாக.



## திருமணச்சருக்கம்.

அன்னையைக்கயிலைநின்றும்போய்மணமயர்ந்ததல்லாற்
பின்னொருகாலபேதத்தமரரும்பிறருங்காண
முன்னவன்வேதவெற்பினின்றும்போய்முடித்துமீண்டா
னென்னுமோர்கதையுண்டன்னதிருடியர்கேண்மினம்மா.

(இ-ள்) பரமசிவங்கயிலாயகிரியினின்றும் இமயமலைக்கெழுந் தருளி லோகமாதாவாகிய பார்வதிதேவியாரைத் திருமணஞ்செய் துகொண்டருளியதுமன்றிப்பின்பு ஒருகாலபேதத்தில் தேவர்களு ம் மற்றையர்களும் தரிசிக்கும்படி வேதகிரியில் நின்றும் எழுந்த ருளித்திருமணஞ் செய்துகொண்டானென்கிற ஒருசரித்திரமுண்டு அதனைநைமிசாரணியமுனிவர்களேகேளுங்கள்—எ-று. (க)

இமயமால்வரைக்குவேந்தனெழுமுனிவரைப்பண்டேவச்
சிமயநால்வேதவெற்பிற்சிவபிரான்றிருமுன்போகி

யமைதராவருத்தியைக்கொண்டடிபணிந்தையவெங்க
ளுமையைநீவேட்டல்வேட்டானேங்கலந்தலைவனென்றார்.

(இ-ள்) முன்னாளில் இமயமலையரசனானவன் - சப்தரிஷிகளை யனுப்ப வேதகிரியினுச்சியில் வீற்றிருக்கும் சிவபிரானது சந்நிதியிற்போய் அடங்காத அன்புகொண்டு திருவடிகளைப் பணிந்து அய்யனே எங்களுமையம்மையைச்சுவாமிகள் திருமணங்கொண்டருளும்படி மலையரசன் விருப்பங்கொண்டிருக்கிறானென்று அந்த முனிவர்கள் விண்ணப்பஞ்செய்தார்கள்—எ-று. (உ)

உலகுய்யுநிமித்தம்பெம்மானுளங்கொண்டுதுளக்கச்சென்னி
யலகிலாமுனிவரேழுவர்நால்வருமளவளாவி
யிலகுநாட்குணிப்பவந்நாளிந்திரனயன்மாலெல்லாம்
பலகுழாத்துழையர்சூழவிரைந்தவண்பாந்துபுக்கார்.

(இ-ள்) பரமசிவம்உலகங்களுய்யும்பொருட்டுத் திருவுளங்கொண்டுதிருமுடியையசைத்தருள நித்தியர்களாகிய அந்தஎழுமுனிவர்களும் மலையரசனுடன் அளவளாவி முகூர்த்தநாள்நியமித்தவளவில் தேவேந்திரன் - பிரமதேவன் - திருமாலிவர்க ளெல்லாரும் பலகூட்டமாகிய ஏவலாளிகளும் -சூழ்ந்துவரும்படி பாந்துவிரைவாகவேதகிரியிற்சேர்ந்தார்கள்—எ-று. (ரு)

கின்னரரியக்கர்சித்தர்கருடர்கிம்புருடரும்ப
ருன்னருந்தவத்தர்நாகரேனையவுலகத்துள்ளோர்
பன்னெடுங்கடலும்வேதப்பருப்பதந்தொழவந்தென்னக்
கொன்னெடுந்தேர்விமானம்பிறவொடுங்குழீஇக்கொண்டுற்றார்.

(இ-ள்) கின்னரர்-இயக்கர்-சித்தர்-கருடர்-கிம்புருடர்-தேவர்கள் - நினைத்தற்கரியதவமுள்ள முனிவர்கள் நாகலோகத்தார். என்னுமிவர்களும். மற்றஉலகத்திலிருப்பவர்களும்- பெரியஎழுகடலும்- வேதகிரியைத்தொழுவதற்குவந்ததுபோலப்பெருமைபொருந்திய நெடியதேர்கள்- விமானங்கள் - முதலாகியமற்ற வாகனங்களுடனும் கூட்டமாகக்கூடிவந்தார்கள்—எ-று. (சு)

உற்றபோதுலகமீன்றவொருதனித்தாயையைய
னிற்றைநாண்மணஞ்செய்கின்றானிமகிரிக்கின்னேசேனை

கெற்றெனவெழுகவென்றுத்திருமுரசறைபவேதப்
பொற்றைநின்றிமயங்காறுமிடையிறப்போயிற்றன்றே.

(இ-ள்) இவர்களெல்லாரும் வந்துசேர்ந்தவுடன் உலகங்களை யெல்லா மீன்றருளியதாயாகிய ஒப்பற்றபார்வதிதேவியாரைப்-பரமசிவம்-இந்தநாளில்திருமணஞ் செய்துகொண்டருளுவதினால் சேனையெல்லாம் இமயமலைக்குச்செல்லக்கடவதென்று மணமுரசறைவித்தவுடன் வேதகிரியினின்றும் இமயமலைவரைக்கும் இடைவெளியின்றிச்சென்றது—எ-று. (ரு)

பின்னலஞ்சடையர்சீரைபிறங்கியவுடையர்தூக்குங்
கன்னலங்கரத்தரூன்றுங்கதையினரிதயத்தூயர்
நன்னிலத்துயிரையஞ்சிக்குந்தியநடையர்ஞாலத்
துன்னலர்முனிவர்தத்தம்பன்னியரொடுமுற்போனார்

(இ-ள்) பின்னலாகிய சடையுள்ளவர்களும் மரவுரிவிளங்கிக்கொண்டிருக்கிற இடையினையுடையவர்களும் கமண்டலந்தூக்கிக்கொண்டிருக்கிற கையுடையவர்களும்-ஊன்றிய தண்டமுடையவர்களும் பரிசுத்தமான இருதயமுள்ளவர்களும் நல்லநிலத்திலூரும் உயிர்களையஞ்சிமெல்லென நடக்கும் நடையையுடையவர்களும் பிரபஞ்சவாழ்க்கையைக் கருதாதவர்களுமாகிய முனிவர்கள் தங்கள் தங்கள் பத்தினிகளுடன்சென்றார்கள்—எ-று. (சு)

சித்தர்விஞ்சையர்தமாவித்தேவியர்குழாத்தினோடும்
வித்தகநல்யாழேந்திச்சென்னிபின்மவுலிமின்னக்
கைத்தொடிசுடரத்தோளிற்கற்பகமாலைநால
நித்திலவூர்திதோறுநெடுநிலவெறிப்பப்போனார்.

(இ-ள்) சித்தர்களும் - வித்தியாதரர்களும் - தங்கள்தங்களுயிர்போன்ற தேவிமார்கூட்டத்துடன் நல்லயாழேந்திக் கொண்டுசிரசில்மகுடமின்னவும்-வாகுவலயம்விளங்கவும் தோள்களில் கற்பகமலர்மாலைதொங்கவும் முத்துவிமானங்கள்தோறும் நெடியசந்திர பிரகாசம்வீசும்படிச்சென்றார்கள்—எ-று. (எ)

தந்திரர்கருடரோனைத்தகையகிம்புருடர்யாரு
மந்தரமுதன்மூவோசைவடித்தநூன்மனத்தர்காத

ருந்தியநரம்பிற்றேயுமுகிரினர்துகிர்வாயோரைப்
புந்தியும்புறனுங்கொள்ளும்புணர்ப்பினார்தணப்பப்போனார்.

(இ-ள்) கந்தருவர்களும்-கருடர்களும்-மற்றத்தகுதியுள்ளகிம்புருடர்களுமாகியஎல்லாரும்-மந்தரம்-மத்திமம்-தாரம்- என்னுமிம்மூன்று இசையை வடித்துச்சொல்லும் சங்கீதசாஸ்திரமுறைமை அமைந்திருக்கு மனமுள்ளவர்களும் - அவ்விசையைத்தேரும்-காதுள்ளவர்களும் தடவுகின்றயாழ்நரம்பினால் தேய்ந்தநகமுள்ளவர்களும் பவளம்போன்ற செவ்வாயினையுடைய தத்தமனைவியர்களைமனதிலும்புறத்திலுங் கொள்ளுகின்றபுணர்ப்பினருமாயிருப்பவர்கள்- நண்டுப்பிரியும்படிசென்றார்கள்—எ-று. (அ)

நாகருநாகிமாருநகைமணிகளுலச்செல்லப்
போகரும்போகபூமிமகளிரும்பொதுளிப்போத
மாகவெண்டிங்கட்டாரைநிரையொடுமகிழ்ந்தந்தேகப்
பாகவெம்பரித்தேர்போகப்போயினர்பகலோரெல்லாம்.

(இ-ள்) நாகர்களும் - நாகியர்களும் - ரத்தினுபாணங்கள் நெருங்கும்படிசெல்லவும் - போகபூமியாடவர்களும் - அந்தப்பூமிமாதர்களும்- நெருங்கிச்செல்லவும் - ஆகாயத்தில்சஞ்சரிக்கும் சந்திரன் இருபத்தேழுநக்ஷத்திரங்களாகிய தன்மனைவியர் கூட்டத்துடன்மகிழ்ந்துசெல்லவும் - பாகனுள்ளபச்சைப்புரவித்தேர்செல்ல அதில் சூரியர்கள் பன்னிருவருஞ்சென்றனர்—எ-று. (௯)

உருப்பசியரம்பையேனமேனகையுடனூற்கோடி
திருப்புரைமகளிரோடுஞ்சசியொருதேரிற்செல்ல
விருப்பினரமரர்வெள்ளவிமானங்கள்சூழவேழப்
பொருப்பிளநிலவின்மேகம்போற்கெனவேந்தன்சென்றான்.

(இ-ள்) உருப்பசியும் - அரம்பையும் - மேனகையும்- திருமகளையொத்தநாலுகோடித்தோழிமார்களுடனும்-இந்திராணியொருதேரிற்செல்லவும் - விருப்பமுள்ளவர்களாகிய தேவர்விமானங்கள் சூழ்ந்துவரும்படி யானையாகிய ஒருவெள்ளிமலையில் இளநிலவுடன் மேகஞ்செல்வதுபோலத் தேவேந்திரனுஞ் சென்றான்—எ-று.

தேவேந்திரன்கருமை நிறமுள்ளவனாதலால் - மேகம்போற் கூறினர். (௰)

புலகனேயரிட்டனேமிபுலத்தியன்மரீசியாதி
யுலகெலாம்விரிப்பத்தன்னோடொத்துளர்பதின்மர்சூழ
வலகுதாள்பவளத்தன்னவன்னத்தையொருவெண்கஞ்சத்
திலகுமாதுரத்தானுமூர்ந்தனனெண்கட்கோமான்

(இ-ள்) உலகங்களையெல்லாம் சிருஷ்டிக்கத்தன்னுடனொத்த - புலகன்- அரிட்டன்- நேமி-புலத்தியன்-மரீசி- முதலாகியபத்துமுனிவர்கள் சூழ்ந்துவர-மூக்கும்-காலும்-பவளத்தையொத்த அன்னவாகனத்தில் வெள்ளைத்தாமரைமலரிலிருக்கும்சரஸ்வதி யேறிவரப்பிரமதேவனுமேறிச்சென்றான் — எ-று. (௰௧)

பாற்கடற்பிறந்ததெய்வப்பாவையர்குழாந்*தற்சூழச்
சேற்கடற்புரியும்பைங்கட்டிருப்புவிவிருப்பிற்செல்லக்
கார்க்கடன்முகந்தகொண்மூப்பொன்மலைகலந்ததேய்ப்ப
மாற்கடவுளும்புள்வேந்தின்வல்விரைந்தேகிச்சென்றான்.

(இ-ள்) பாற்கடலில்தோன்றிய தேவமாதர்கூட்டம் தன்னைச்சூழும்படி சேல்மீனுக்குப்பகையைச் செய்யத்தக்க குளிர்ச்சியானகண்களுள்ள திருமகளும்சிலதேவமாதர்கூட்டம்தன்னைச்சூழும்படிபுவிமகளும்-விருப்பத்துடன்வரக் கருநீரையுண்டமேகமானது-பொன்மலையில்சேர்ந்ததையொப்பாகத்திருமாலாகியகடவுளும் - பக்ஷிகளுக்கு அரசனாகியகருடவாகனத்திலாரோகணித்துக்கொண்டு அதிவிரைவாகச்சென்றனர் — எ-று,

திருமால்நீலமேக நிறமும்கருடன்பொன்னிறமுமுடைமையால் மேகம் பொன்மலையில்வந்ததுபோலெனக்கூறினார்

* தற்சூழவென ஒருமைப்பாலாற்கூறினமையின் தேவமாதர்கூட்டம் அவ்விருவருக்குந்தனித்தனிப் பிரித்தெழுதப்பட்டது - தற்சூழஎன்பது தன்னைச்சூழவெனப்பொருள்படுமாறறிய.

மழுமறிக்கரத்தர்நான்குபுயத்தவர்மணிப்பொற்கண்டர்
விழியின்முச்சுடரர்திங்கள்வேணியர்பாணிச்சூல
முழுவைநெட்டுரிவைத்தூசருருத்திரகணத்தோர்வெள்ளங்
குழுமிமுற்செல்லநந்திபிறைவனைச்சூழுகிச்சென்றான்.

(இ-ள்) மழுப்படையுமானுமேந்தியகர்த்தர்களும் - நான்குபுயமுள்ளவர்களும் - அழகியநீலகண்டமுடையவர்களும் - சந்திரசூரியாக்கினிகளாகிய மூன்றுகண்களுள்ளவர்களும்- இளந்திங்களணிந்த சடைமுடியுடையவர்களும் - கையில் சூலமேந்தினவர்களும் பெரிய புலித்தோலாடையணிந்தவர்களுமாய் உருத்திரகணத்தவர் வெள்ளங்கூட்டமாகமுன்செல்ல- நந்திதேவர்பரமசிவத்துக்குச்சமீபத்திற்சென்றனர் — எ-று.

இந்தருத்திரர்கள் சிவத்தினின்றும்பிரிந்துபவித்துச்சுத்தபுவனவாசிகளாயிருப்பவர்கள். (௰௫)

(நான்கு முகமுள்ளவனுகலால்எண்கண்ணனென்றும்பெயர்)

பிறையெயிற்றெரிகட்பேழ்வாய்ப்பொழற்குஞ்சியாழி
நிறைசெவிப்பூழைபூழிக்காற்றெறிநெடுமூக்கண்ட
முறையகட்டவனியாற்றுதொசிகுறும்பாகப்பூதத்
தனறகடலலகைவாரியளப்பிலவளைந்தவம்மா.

(இ-ள்) பிறைபோன்றபற்களும்- தீப்போலெரிகின்றகண்களும் பெரியவாயும்-பெரிய அக்கினியொத்ததலைமயிரும்- சமுத்திரநீரெல்லாம்நிறையத்தக்ககோபுரவாயில்வழிபோன்றகாதுகளும் - பிரசண்டமாருதத்தைவீசுகின்றநெடியமூக்கும்- அண்டங்களெல்லாம்பொருந்தும்படியாகியவயிறும்- பூமிதேவிதாங்கமாட்டாமல்முதுகுநெரியும்படியானகுறியகால்களுமுடைய பூதங்களாகிய ஒலிக்குங்கடலும்- பேயாகியசமுத்திரமும்- அளவில்லாதவைகளாய்ச் சூழ்ந்தன.

குறுநடைப்பூதமேந்துங்குடையண்டகூடமூட
வுறுவிடைக்கொடிவிண்ஞெங்கவுலகராகரவென்றார்ப்ப
வெறிசுடர்வெள்ளிக்குன்றிற்பவளக்குன்றேறியாங்குச்
செறிமறைக்கரியபாதஞ்சிவன்மழவேற்றில்வைத்தான்.

(இ-ள்) குறுநடையுள்ளபூதமேந்துங் குடையானது அண்டகூடத்தைமறைக்கவும்-பொருந்தியரிஷபக்கொடியானது- ஆகாயத்தையளாவவும் - பெரியோர்கள்அரகரவென்று ஆர்ப்பரிக்கவும் - ஒளிவீசுகின்ற வெள்ளிமலையில் - பவளமலையாரோகணித்ததுபோல- பொருள்நிறைந்தவேதங்களுக்கும்- அரியதிருவடிகளைப்பரமசிவன் இளமையாகிய ரிஷபவாகனத்தின் மேல்வைத்தருளினர் — எ-று

(குடைபிடிப்பது குண்டோதரனென்னும்பூதம்.)

ஒலித்தனசங்கமெங்குமூதின தாரைசின்னங்
கலித்தனமுரசுபேரிகறங்கினகாளந்தாள
மொலித்தனபதாதிவையம்வீழ்ந்தனசுரர்பூமாரி
பலித்தனகதியெல்லோர்க்கும்பரந்தனபரவும்வேதம்

(இ-ள்) சங்கங்களெவ்விடத்தும் ஒலித்தன - தாரைகளுந்திருச்சி
ன்னங்களுமூதப்பட்டன - முரசுஎன்கிறவாத்தியமும்மற்றவாத்திய
ங்களுஞ்சத்தித்தன-எக்காளமுந்தாளமுமுழங்கின-சேனைகளாரவாரி
த்தன - தேவர்கள்பொழிபுங்கற்பகப்பூமழை பூமியில்வீழ்ந்தன-
யாவர்க்கும்பதவிகள்கிடைத்தன - துதிசெய்கின்ற வேதவோசைப
ரந்தன—எ-று. (௰௬)

எழுமுனிவரையுமுற்போந்தூதையுமிமவானோக்கி
மழுவலன்வதுவைக்கெய்துமெனப்பெருமகிழ்ச்சிமூழ்கிச்
செழுமனைப்பந்தராதிச்செயற்கையும்பிறவுஞ்செய்து
குழுவரைக்கடவுட்சேனைகொண்டெதிர்கொண்டானன்றே.

(இ-ள்) சத்தமுனிவர்களையும் - முன்வருகின்ற தூதர்களையும் ம
லையரையன்பார்த்து - பரமசிவந்திருக்கல்யாண மகோச்சவத்துக்கு
எழுந்தருளுகின்றதென்று பெரியமகிழ்ச்சியில் மூழ்கிச்செழுமை
யாகிய திருமணப்பந்தல்கள்முதலானசெய்கையும் பிறவுஞ்செ
ய்து கூட்டமாகிய மலைக்கடவுட்சேனைசூழ்ந்துவரச்சென்றெதிர்
கொண்டான் — எ-று. (௰௭)

சுண்ணமுமலருந்தூய்த்தூயண்டமுந்துகளான்மண்ட
விண்ணவர்முனிவர்வெள்ளம்விசும்பொடுநிலனும்போர்ப்ப
பண்ணவில்குழலும்யாழுஞ்செவிக்கிருபாடும்பாட
வண்ணலுமிமயத்தெல்லைக்கேற்றெருபிமணியனானான்.

(இ-ள்) வாசனைப்பொடியும்மலர்களுந்தூவித்தூவி அண்டமுந்து
ளாகநிறையவும்தேவர்கூட்டமும் முனிவர்கூட்டமும் - ஆகாயத்
தையும்பூமியையும்மூடவும் - இசைபாடுகிறவேய்ங்குழலும் வீணை
யும் திருச்செவிகளிலிருபக்கத்திலும்பாடவும் - பரமசிவமும் ரிஷ
பவாகனத்துடன் இமயகிரியினெல்லைக்குச்சமீபத்திலெழுந்தருளி
னார் — எ-று. (௰௮)

வரைமுதல்வேந்துமண்மிவானமுதருந்தியாங்குக்
குரையகல்விருப்பினோக்கிக்கசிந்துநெக்குருகித்தாழ்ந்து
புரைதபுதன்பொற்கோயிற்புனிதனைக்கொடுபுக்கங்கோர்
நிரைமணிமண்டபத்தினித்திலப்பீடத்துய்த்தான்,

(இ-ள்.) அந்தஇமயமலையரசனும் எதிர்கொண்டு தேவாமிர்தமுண்டாற்போல அளவில்லாத விருப்பத்துடனோக்கிக்கசிந்து மனமுருகிப்பணிந்து குற்றம்நீங்கியதன்பொன்கோயிலில் பரமசிவமெழுந்தருளக்கொண்டு போய் அவ்விடத்திலிருக்கு மொருரத்தினமண்டபத்திலிட்டிருக்கும் - முத்துச்சிங்காசனத்தில் வீற்றிருந்தருளச்செய்தான் —எ-று. (௰௬)

இந்திரனயன்மாலேனையிமையவர்பிறருமெல்லாந்
தந்தமவூர்திநீத்துச்சங்கரன்புறஞ்சூழ்காலை
யந்தவெற்பரையன்கோயிலண்டங்களனைத்துமொன்றாய்
வந்திவட்பிறழ்ந்ததல்லான்மற்றரிதுவமைக்கம்மா,

(இ-ள்) தேவேந்திரன் - பிரமதேவன் - திருமால் - மற்றத்தேவர்களாயிருக்கிறபிறரெல்லாரும்- தங்கள்தங்கள்வாகனங்களைவிட்டிழிந்து பரமசிவத்தின் புறத்தில் சூழ்ந்தபோது- அந்தமலையரையன் கோயில்- அண்டங்களெல்லாம் ஒன்றாய்வந்து இங்குக்கோயிலுருவமாய்ப்பிரகாசித்துக் கொண்டிருக்கின்றதென்று சொல்லலாமேயன்றிவேறேயுவமைசொல்லுதற்கரிது—எ-று. (உ௰

மூவெழுகிளைஞரோடுமுழுவதும்பிழைத்தேனென்னும்
யாவருமுய்ந்தாரென்னுமின்றேயெளியேனில்ல
மேவியகயிலையாயிற்றென்னும்வெற்பரையன்மீண்டுந்
தேவியைப்பெற்றன்றேவித்திருவருட்பெற்றேனென்னும்

(இ-ள்)-பரமசிவமெழுந்தருளியிருப்பதைநோக்கியமலையரையன் மூவேழுசுற்றத்தாரோடுநாமெல்லாரும்வாழ்ந்தோமென்பன்-எல்லாருங்கடைத்தேறினர்களென்றுசொல்லுவன்-இன்றுடன் எளியேனுடையவீடுபரமசிவம்விரும்பியகயிலையங்கிரியாயிற்றென்பன்- இதுவுமன்றிப்பார்வதிதேவியாரைப்பெற்றல்லவா- இந்தத்திருவருள்பெற்றுக்கொண்டேனென்பன்—எ-று.

எழுதலைமுறைவனாக்கும்பத்துநாள்சூதகம்- பின் எழுதலைமுறைவனாக்கும்மூன்றுநாள்சூதகம்- அதன்பின் எழுதலைமுறைவனாக்கும் - ஒருநாள்சூதகம்-என்னுங்கிரமத்தைப்பற்றிமூன்றேழாகப்பிரிக்கப்பட்டிருக்கின்றது இவ்வாறில்லாவிட்டால் இருபத்தொருதலைமுறையென்றேசொல்லப்படும். (உக)

திருவயிராணிவாணியென்றுமிந்தேவிமாரோ
டுருசெழுமமரர்மாதநாகியர்பிறருமுட்போய்க்
கிரிமகண்மருங்குதாயைக்கிடைத்தகன்றென்னவோடி
யிருகையிற்றொழுதுவாழ்த்தியிறைஞ்சினர் புறஞ்சூழ்ந்திட்டார்

(இ-ள்) சவுந்தரியமுள்ள - இந்திராணிசரஸ்வதியென்கிற இந்தத்தேவிமார்களுடன் அழகுபொருந்தியதேவமாதர்களும் நாகமங்கையரும் - மற்றையவர்களும் - உள்ளேபோய்மலைமகளாகிய பார்வதிதேவியாருக்குச் சமீபத்தில் தாயைக்கண்டபசுவின்கன்று போலச்சென்று இரண்டுகையுங் கூப்பித்தொழுது வாழ்த்தியிறைஞ்சிப்புறத்திற்சூழ்ந்தார்கள்—எ-று. (உஉ)

அணியதுவதுவையோரைகொணர்கொணரணங்கையென்று
மணிவரைக்கிறைவனேவல்விடவிடவணங்கிவாணி
கணிப்பின்மந்திரங்களோதக்கங்கைவந்தாட்டியாட்டப்
பிணிவினைமுனிந்தார்யாரும்பெருகுமத்திருத்தத்தம்பா-

(இ-ள்)திருக்கல்யாணமகோச்சவமுகூர்த்தலக்கினம்சமீபித்ததாதலினால்நம்முடையதாயைஅழைத்துக்கொண்டுவாருங்கள் அழைத்துக்கொண்டுவாருங்களென்றுமணிகள்நிறைந்தஇமயமலைக்கு அரசனாகியபர்வதராசன்-ஏவலாளர்களை அனுப்ப அனுப்பச்சரஸ்வதிதொழுது அளவில்லாத மந்திரங்களோதக்கங்கையானவள்வந்துதிருமஞ்சனஞ்செய்து அந்தத்தீர்த்தத்தைத்தெளித்ததினால் பிணிக்குலமுதலாகியவினைகளையொழித்துயாவரும்புனிதர்களானார்கள்—எ-று.(உரு)

கற்பகம்பயந்தபட்டுமரதனக்கலன்களிபாவும்
பொற்பகச்சசிகொண்டேந்தப்பூமகள்வாங்கிவாங்கி
வெற்பகத்தையன்பாவைமேல்வெயினிலவுகால
வற்பகவிரண்டும்போந்தபோதெனவணிந்துவிட்டாள்

(இ-ள்)கற்பகவிருக்ஷந்தந்தபட்டும்ரத்தினாபரணங்களெல்லாமும் பரிசுத்தமானமனமுள்ளஇந்திராணிகொண்டுவந்தளிக்கத் திருமகள்

வாங்கிவாங்கி மலையரையன்புத்திரியாகியபார்வதிதேவியார் திருமே னியில்வெய்யிலும் நிலவும்பிரகாசிக்கும்படி இரவும்பகலும்வந்த பொழுதுபோலாக அலங்காரஞ்செய்தாள்-எ-று (உச)

வலம்புரியுததித்துண்டமுத்தமாணிக்கத்தோடும்
பொலம்புரிகுடகப்பூண்பொன்மிடற்றாரத்தாம
நலம்புரிமுலைக்கட்பெய்தநகைவயிரத்துமாலை
யலம்புரிசிலம்புகாஞ்சியொன்றையொன்றடர்க்குமன்றே.

(இ-ள்) வலம்புரியும் - உததியாகியதுண்டமும் - முத்து - மாணிக்கம் - பொன் - இவைகளாற் செய்யப்பட்ட குடகமுதலாகிய ஆபரணங்களும் - கண்டத்தில்தரிக்கும் முத்துமாலை - நன்மையைச்செய்கின்ற திருத்தனபாரத்தில் அணிந்தஆபரணம் - வயிரமணிமாலை பொருந்துதலைச்செய்தசிலம்பு - மேகலை - என்னுமிவ்வாபரணங்களொன்றை யொன்று மாற்றும்—எ-று. (உரு)

(வலம்புரி- உததிஎன்பது- தலைக்கோலம்.)

எவ்வகைவடிவிற்கேனுமெத்திறத்தொளிகட்கேனு
மைவ்வகைநிறத்திற்கேனுமனைத்துள்ளவழகிற்கேனு
மெய்வ்வகைமுதன்மைதானேயெனநிற்பாள்வேறொருத்தி
கைவ்வகையணியின்மிக்காளென்பதுகருதற்பாற்றோ,

(இ-ள்.) எத்தன்மையானவடிவங்களுக்கேயாயினும் - எத்தன்மையுள்ள பிரகாசங்களுக்கேயாயினும் - ஐந்துவகையாகியநிறத்தினுக்கேயாயினும் - எல்லாஅழகுகளுக்கேயாயினும்-உண்மைவகையில் தானேமுதன்மையாகநிற்கும்பிராட்டியானவள் இப்போதுவேறொருத்திகைவிஸ்தார அலங்காரத்தினாலேமிக்காள்என்பது நினைக்கும் பகுதியதோ அல்ல—எ-று. (உசா)

மரகதக்கதிரொன்றேனுநீனிறமதியென்றேனும்
பரகதிர்ச்சுடரோயன்றிப்பாசொளிவிளக்கென்றேனும்
விரகதிற்பிரிந்தோரொப்புவிளம்புவதெளிதுமேலை
நாகதிற்பிழைக்குந்தன்மையரிதெனநடுங்குநாவே.

(இ-ள்.) பார்வதிதேவியாரைப்பரகதியொளியென்று சொல்வது விட்டு மரகதநிறமுள்ள சூரியனென்றுவது - நீலநிறமுள்ள சந்திரனென்றுவது - பசுமைநிறமுள்ளதீபமென்றுவது - தம்முடைய

உணர்வினால் ஒப்பாகச்சொல்வது-அறிவின்மை - அப்படியிருக்கச்சொல்லலாமென்று நினைத்தபடியால்இனிநாகத்தினின்றும்பிழைக்குந்தன்மைபருமையென்றுநாவானதுநடுங்காநின்றது—எ-று (உஎ)

மின்னுடைத்திருவேயாதிவேறுடைப்பெண்மையாவுந்
தன்னுடைப்பிறிவேயெனச்சத்திகாட்டுமதுபோலப்
பொன்னுடைத்தனதுமேனிமரகதப்பொலிவினுண்டைத்
தென்னுடைமடவாரெல்லாம்பசுநிறஞ்சிறப்பநின்றார்.

(இ-ள்) ஒளியினையுடைய திருமகள் முதல்வேறாகவுடையபெண்ணுருவமெல்லாம் - தன்னுடையபிறிவேயென்று சத்திகாட்டுவதுபோலப் பார்வதிதேவியார் அழகுள்ள தன்னுடைய திருமேனியின்மரகத ஒளியினால் அங்குவந்திருக்கும் அழகுள்ளமாதர்களெல்லாம் பசுமைநிறஞ்சிறப்பநின்றார்—எ-று. (உஅ)

வேறு

இவ்வழிசிறந்துடையவெம்பனையம்மென்
செவ்வழிமிழற்றுமொழிபாருமைதிரண்டு
கைவ்வழிதழீஇனர்கமலக்கமலவன்னத்
தவ்வழிசிவன்றனதிடப்புறமமைத்தார்.

(இ-ள்) இத்தன்மையாய்ச் சிறப்புற்றிருக்கிற நம்முடையசான்றோர்செவ்வழிப்பண்போல் வசனிக்குமொழியையுடைய திருமகள்முதலாகிய தேவமாதர்களெல்லாரும் - அருகிற்கூட்டமாகச்சேர்ந்து-கைகளால் தழுவிக்கொண்டு வாசனையுள்ள தாமரைமலரில் வாசஞ்செய்யும்அன்னத்தைப்போலத்திருவடிபெயர்க்கக்கூட்டிப்போய்த்திருக்கல்யாணமண்டபத்தில்எழுந்தருளியிருக்கும் பரமசிவனுடைய இடப்பாகத்தில்சேர்த்தார்கள்—எ-று. (உகூ)

சானுவைவலப்புறனுயர்த்துமுடிசாயாத்
தாய்நளினமென்முகமிறக்கியொருதோகை
மானுசாநம்பித்துருமவெற்பருகுவைகப்
போனபொலிவொத்தனள்பொருப்பரையன்மாதே.

(இ-ள்) பர்வதராசன்புத்திரியார்வலப்புறமுழங்காலை யுயர்த்தித்திருமுடியைச் சாய்த்துப்பரிசுத்தமானசெந்தாமரைமலர் போன்ற

திருமுகத்தைத்தாழ்த்திஒருமயிலானது- மான்எழுகின்ற பவளமலை யருகிற்பொருந்தச்சென்ற பொலிவையொத்தனர் - —எ-று.

வலப்புறமுழங்காலை மடக்கியுயர்த்தி யிடப்புறத்திருவடியைப் படியவைத்துட்கார்ந்திருந்தன ரென்றுணர்க. (கூ0)

சதுமுகன்விதிப்படிசடங்கவைதொடங்க
முதுகனல்வலச்சுழிசுழித்தெழலுமூன்போய்க்
கதுமெனவரைக்கிறைகரப்புனல்பொழிந்தான்
மதுவிதழியிற்கடவுண்மங்கலனணிந்தான்

(இ-ள்) பிரமதேவன்சடங்குகள்தொடங்கயிருந்த ஓமாக்கினி யானதுவலச்சுழியைச்சுழித்தெழலும் -மலையரையன்விரைவாய்ப்பரம சிவத்தின் திருமுன்னர்ச்சென்று தன்கையினால் நீர்விட்டுத்தத்தஞ் செய்தான் அப்போது தேனிறைந்தகொன்றைமாலையணிந்தபரமசி வம் திருமங்கலியந்தரித்தது—எ-று. (கூக)

மலைமகள்விரற்சிறுவிரற்கொடுமெடுத்துத்
தலைவனழல்சுற்றியபின்மற்றையவடாளை
யுலகவைதொழுங்கைதழுவிக்குழலிபோவாச்
சிலையிசையின்வைத்தனனெவர்க்குமொருதேவன்.

(இ-ள்) திருமங்கிலியந்தரித்தபின் - பார்வதிதேவியாருடையவி ரலைத்தமதுசிறுவிரலால் பற்றிக்கொண்டு பரமசிவம் ஓமாக்கினியை வலமாகவந்தபின் அந்தப்பார்வதிதேவியார் - திருவடியையுலகங்க ள்தொழுகின்ற கையாற்பற்றி - குழலிநீங்காத அம்மியின்மேல்வை த்தருளினர் - யாவர்க்குமொருவராகியகடவுள்—எ-று. (கூஉ)

பூமழையைவிண்ணவர்விசும்பிடைபொழிந்தார்
தூமலையின்வண்ணனயனிந்திரர்துதித்தா
ரேமமுறுதுந்துமியியற்றினரிசைத்தார்
நாமகண்முதற்பிறருமாசிகணவின்றார்,

(இ-ள்) தேவர்கள்ஆகாயத்தினின்றும் பூமழைபொழிந்தார்கள்- மேகவண்ணனாகிய திருமாலும் பிரமதேவனும் - இந்திரனுந்துதி செய்தார்கள் - இன்பத்தைத்தருகின்றபெரியவாத்தியத்தைக்கணங்க ள்முழக்கினர்கள்-சரஸ்வதியுமற்றத்தேவமாதர்களும் வாழ்த்துச்சொ ன்னார்கள் —எ-று, (உ௩)

எழுந்தெமதுநாயகனும்வேறொருமனையேகிச்
செழுந்தாளவேதிகைதிகழ்ந்தினிதிருந்தான்
கொழுந்தமனியக்கொடியனாளை நனிகொண்டு
வழித்துவகைபொங்கவரைமாதர்மனையுய்த்தார்.

(இ-ள்) எங்களுடையஇறையவரும் எழுந்து வேறோரிடத்திற்சென்று - செழுமையுள்ள முத்துவேதிகையிலினிதாக விளக்கமுற்றிருந்தருளினர் - செழுமையாகிய பொற்கொடியையொத்தபார்வதிதேவியாரை - மிகுந்தசந்தோஷம் பொங்க - வரையரமகளீர்கள் அழைத்துக்கொண்டுபோய்த்திருமாளிகையிற்சேர்த்தார்கள்-எ-று.

மேனையிமவானிவர்மிகக்களிதிளைத்துத்
தானையிமையோர்முனிவர்தாமரையன்மாயன்
சோனைமுகிலூர்தியிவராயவர்தொடங்கி
யேனையெவருக்குநனிபூசனையிழைத்தார்.

(இ-ள்) தாயாகியமேனையும் - பர்வதராசனும் - மிகுந்தகளிப்படைந்து தேவர்சேனைகளுக்கும் - முனிவர்களுக்கும் - பிரமதேவன் திருமால் - சோனைமழை பெய்யுமேகவாகனனாகிய இந்திரன்என்னுமிவராதியாகத்தொடங்கிமற்றையாவர்களுக்கும்-மிகுதியாகவுபசாரஞ்செய்தார்கள்—எ-று. (ருரு)

பல்லுயிர்மணம்பெறுபொருட்டெமதுபச்சை
வல்லியுடனாயகன்மணத்தறையுறைந்தா
னல்லிபல்விதித்திறநவின்றுதினநாலும்
வில்லிபல்பதாதியொடுமீள்வதுமதித்தான்.

(இ-ள்.) பலவாகியஉயிர்களும் - மணம் பெறுதல்பொருட்டாக மரகதவல்லியுடன் எம்மிறைவர் மணவறையில்சேர்ந்து - அதன்பின் நான்குதினமும் - நல்லிபல்லாகிய சடங்குகளை நடத்தி அதற்குமேல்வில்லேந்திய தேவசேனையுடன் வேதகிரிக்குமீள்வதைத்திருவுளத்திற்கொண்டனர்—எ-று. (ருசு)

அழுந்துபரிவாலிமயமன்னவனணைந்தங்
கொழுந்தமொடும்வழிவிடும்படிவழிகூடி

யெழுந்தருபதாதிமழவேறுதனிலேறிச்
செழுந்தலைவனுந்தலைவியுங்கடிதுசென்றார்

(இ-ள்) உறுதியானபரிவுடன் பர்வதராசன் - அநந்தமானதன்னுடைய சுற்றத்தாருடன்சென்று வழிவிட மார்க்கத்தில்கூடித்தேவர் சேனையெழுந்தது - பரமசிவமும் பார்வதிதேவியாரும் இளமைப் பருவமுள்ளரிஷபவாகனத்தி லாரோகணித்துக்கொண்டு எழுந்தருளினார்கள்—எ-று. (கஎ)

மன்னுமலையானுடைமடந்தையுமடந்தை
தன்னுயிரனைத்தகையதானுமினிதேகி
யன்னசுருதிக்கிரியடைந்தகமகிழ்ந்தா
னெந்நெறியினோருமுனிறைஞ்சிவிடைகொண்டார்.

(இ-ள்) நிலைபெற்ற பார்வதிதேவியாரும் அவருக் குயிரொன்று சொல்லத்தக்கபரமசிவமும்- இனிதாயெழுந்தருளி வேதாசலத்தில் சேர்ந்து திருவுள்ளமகிழ்ந்தருளினர்- அங்குவந்திருந்த எல்லாரும் பரமசிவத்தைப்பணிந்து விடைபெற்றுக் கொண்டார்கள்—எ-று.

இப்பரிசுமன்றலிமவான்மகளையெம்மான்
மெய்ப்பரிசினழைத்ததெனமெய்த்தவர்வினவிச்
செப்பரியவேதகிரியிற்பணிவுசெய்தா
ரொப்பரியயாவரெனவோதுமொருசூதன்.

(இ-ள்) நம்முடைய பெருமானாகிய பரமசிவம்பார்வதி தேவியரைத்திருமணஞ் செய்துகொண்டருளிய முறைமை யிதுவென்று சூதமுனிவர்சொல்லஉண்மையாகியதவமுள்ளநைமிசாரணியமுனிவர்கள்கேட்டுச் சொல்லுதற்கரிய வேதாசலத்தில் பூசைசெய்தவர்களின்னமும்யாரென்ன - ஒப்பற்றசூதமுனிவர்சொல்லுகின்றார்-எ-று

திருமணச்சருக்கமுற்றியது

ஆகதிருவிருத்தம் - கூசம



உ

சிவமயம்.

# கங்காசலச்சருக்கம்.

## முதலாவது - சண்டப்பிரசண்டர்கதை.

தார்விரித்தெழுஞ்சால்பலியென்ருெரு
பேர்விரித்தபெருந்திருநாட்டகஞ்
சேர்விருத்தசிரவாவெனுமுனி
யேர்விருப்பினிருவரைநல்கினன்.

(இ-ள்) மாலைமுதலியவைகளால் அலங்காரஞ்செய்யப்பட்டுவிளங்குகின்றசான்பலியென்னுந் தன்பேரைப்புகழினால் எங்கும் பரவச்செய்தபெரிய செல்வமுள்ள நாட்டினிடத்தில்வாழும் விருத்தசிரவசவென்கிறமுனிவர் - இனியவிருப்பத்துடன் இரண்டுபுதல்வரைப்பெற்ருர்—எ-று (க)

சண்டனும்பிரசண்டனுமென்றவன்
முண்டகத்துமனத்துமுளைத்தவர்
பண்டிழைத்தபழவினைத்தீமையாற்
புண்டரப்புள்ளுருவிற்பொருந்தினர்.

(இ-ள்) சண்டன் - பிரசண்டனென்று பெயருள்ளவர்களாய் அந்த முனிவருடைய நெற்றியிலும் மனத்திலுமாகத் தோன்றினவர்கள் - முன்செய்ததீவினைச்சம்பந்தத்தினால் கழுகுப்பக்ஷியுருவமாகப்பொருந்தினர்கள்—எ-று. (உ)

இன்னதன்மையிருவரைத்தந்தைபார்த்
தன்னபுள்ளரசாயின்கணீரென
றன்னர்வாழ்க்கையைநல்கினுமையயாத்
துன்னலோமதுயாவத்தொடர்ச்சியால்.

(இ-ள்) இப்படிக்கழுகுஉருவமாயிருக்கிற அவ்விருவரையும்பிதாவாகியவிருத்தசிரவாவென்பவர்நோக்கி - நீங்கள் பக்ஷிகளுக்குஅரசரா

யிருங்கசொன்று சொல்ல - அய்யரோ - எங்களுக்குநல்லவாழ்வை த்தந்தாலும் - அதுபாவசம் பந்தப்பட்டதாகையால் அதைநாங்கள்பொருந்தோம்—எ-று. (௩)

அறிவிற்சான்றவறநெறியாற்றினும்
பொறியிற்போக்கும்பிறவிபுகத்தருந்
தறியைச்சூழ்பர்க்கொவ்வவந்தாரணி
செறியக்காப்பினுந்தீநரகுய்க்குமால்

(இ-ள்) அறிவினால் பெருமைபொருந்திய தருமநெறியைச்செய்தாலும் அதுயஞ்சேந்திரியவழியிற் செலுத்தும். அன்றியும்பிறவியில்சேரும்படியுஞ்செய்யும் - கட்டுத்தறியைப்பிரதக்ஷிணஞ்செய்கின்றவர்களுக்கொப்பாக அழகுள்ளபூமியை நிலைபெறக்காத்தாலும்கொடியநரகில்சேர்க்கும்—எ-று.

சிவலிங்கமூர்த்தியைப் பிரதக்ஷிணஞ்செய்தால் பலனுண்டாகும் அதைவிட்டுக் கட்டுத்தறியைப்பிரதக்ஷிணஞ்செய்வதிற்பலனில்லாததுபோல மோக்ஷத்தைவிட்டு வேறொன்றைவிரும்புவதினாற் பயனில்லையென்பதுதாற்பரியம். (௪)

ஆதலாலில்லறத்துமரசினும்
போதலஞ்சுதும்புண்ணியமூர்த்திதன்
பாதபூசனைஞானப்பரிசினாற்
கோதிலாமுத்திப்பேறின்றுகூறென்றார்.

(இ-ள்) ஆகவினால்இல்லறத்திலும் அரசாக்ஷியிலும் பொருந்துதற்கு அஞ்சுகிறோம். பரமசிவனுடையதிருவடியினருச்சனை, ஞானமுறையால் அடையத்தக்ககுற்றமில்லாத முத்திப் பெற்றினையிப்போதுசொல்லுமென்றார்கள்—எ-று. (௫)

என்றமைந்துதிருவளாடமாதவ
னென்றமார்பந்தழீஇயெடுத்துச்சிமோந்
தன்றைநூன்முறையாய்தந்தையுந்திற
னன்றையாற்றுவர்நந்தனரல்லரோ.

(இ-ள்) இவ்வாறுசொல்லிய புத்திரரிருவர்களையும் - விரத்தசிரவாவென்னுமுனிவர் பொருந்தும்படிமார்பில் தழுவியெடுத்துஉச்சிமோந்து பழமையாகிய சாஸ்திரமுறைமைப்படி தாய்தந்தையர் உய்யும்வண்ணம்நன்மையைச்செய்கின்றவர்கள்புத்திரரல்லவா-எ-று

நீவிரீதுநினைத்ததெளிதன்று
தேவர்பூசையைச்சிந்தித்தசிந்தையாற்
பாவரென்கினுநங்குடிப்பல்சனம்
யாவருங்கரையேறுதனிண்ணமே.

(இ-ள்) நீங்கள்நினைத்த இந்தக்காரியம்எளிதானதன்று சிவபூசையைச் சிந்தித்தசிந்தையால் நம்முடைய குடியிற்பிறந்தவர்கள்பல பேர்களும் பாவகாரியர்களேயாயினும் மோக்ஷமாகிய கரையில்ஏறுதல்நிச்சயமே—எ-று. (எ)

இறைவர்ஞானமுஞ்சேதமிலாமையும்
பொறையும்பூண்டபுதல்வர்ப்பெறுவரேல்
மறவரேனுமவரையவ்வல்வினை
பிறவியேழினும்பின்றொடராதரோ.

(இ-ள்) பதிஞானமும்- முக்குற்றமில்லாமையும் - சாந்தகுணமும்பொருந்தியபுத்திரர்களைப்பெறுவார்களாகில் அவர்கள்பாவிகளாயிருந்தாலும் அவர்களையந்தவலியவினையானது எழுபிறப்பிலும்பின்தொடராது—எ-று. (அ)

மைந்தர்காணும்பொருட்டிலென்மாதவ
முய்ந்ததாலென்றுவந்துவந்தோய்கலா
னெந்தைபூசனைஞானத்தியல்பெலாஞ்
சிந்தைதேறவிதிமுறைதேற்றினான்.

(இ-ள்) புத்திரர்களே உங்கள்பொருட்டால் யான்செய்ததவம்உய்ந்தது என்றுசொல்லி ஓயாமல் பலமுறைசந்தோஷித்து எம்மையனாகிய பரமசிவத்தின்பூசையினது ஞானக்கிரமமெல்லாம் அவர்கள்மனதில்தெளியும்படிவிதிமுறையாகத்தெரிவித்தார்-எ-று.

சாத்திப்பன்மலர்தாதைதன்சேவடி
யேத்திக்கட்புனல்சோரவிருவரு
நாத்துதித்திவிநாதனைப்பூசனை
பார்த்துயுந்தலம்யாதெனப்பற்றினர்.

(இ-ள்) இவ்வாறுபோதித்தபிதாவின் திருவடிகளைப் பலமலரா லருச்சித்துத்துதிசெய்து ஆனந்தகண்ணீர்பெருக இனிப்பரமசி வத்தைத்துதித்துப்பூசைசெய்து உய்வதற்கேதுவானஸ்தலம் யாதெ னப்பற்றினர்கள்—எ-று. (௰)

என்னையாளுடையானிறைகொண்டதோர்
முன்னைவேதகிரிபுக்குமுக்கணான்
றன்னைவாழ்த்தித்தொழுமின்றநயர்காள்
பின்னையாதும்பெறுததொன்றில்லையே.

(இ-ள்) புத்திரர்களே என்னையாட்கொண்டருளும் சிவபெருமா ன் வீற்றிருந்தருளுகின்றபழமையாகிய வேதகிரியிற்சென்று பர மசிவத்தைவாழ்த்தித்தொழுங்கள் பின்புநீங்கள் பெறுதபேறு யா தொன்றுமில்லை—எ-று. (௰க)

என்பதோதவிருவருந்தாழ்ந்தெழுந்
தன்பராயந்தவேதவெற்பண்மினர்
நன்பராகநறுமலர்நீரினான்
முன்பராவிபருச்சனைமுற்றினர்.

(இ-ள்) என்றுபிதாவின்சொல்ல அவ்விரண்டு புத்திரர்களும்ப ணிந்தெழுந்து - அன்புள்ளவர்களா யந்தவேதாசலத்திற்சேர்ந்து நல்லமகரந்தமுள்ள மலரினாலும் நீரினாலும் முன்பரவுதல் செய்து அருச்சித்தார்கள்—எ-று. (௰உ)

கோடிபானுகலந்தெழுங்கோலமோ
டாடுசேவடியான்வந்தணுகிநம்
மூடுவேட்கையுளாயினகளென்றலு
மீடலாமுத்தியேயென்றிவர்சொனார்

(இ-ள்) கோடிசூரியர்களேககாலத்தி லொன்றாகக்கூடி யுதயமா கும் அழகுடனே நடனஞ்செய்யுந்திருவடியையுடைய பரமசிவம் அவர்கள்முன்வந்தெழுந்தருளி உங்களுள்ளத்திலிருக்கும் விருப்பு

லதைச்சொல்லுங்களென்ன ஒப்பில்லாதமூர்த்தியே யடியேங்களுக்கு வேண்டியதென்றார்கள்—எ-று. (௰௩)

உற்றவிந்தக்கிரதயுகஞ்சென்ற
பிற்றைமூர்த்தியையீதுநம்பேரவை
யிற்றைநாண்முதலெப்திச்சிவகணக்
கொற்றநீர்மையுங்கொண்மெனநல்கினன்.

(இ-ள்) பொருந்தியஇந்தக்கிரேதாயுகஞ்சென்றபின்பு-உங்களுக்கு மோக்ஷத்தைத்தந்தருளுகிறோம் - நம்முடையசந்நிதியில் சேர்ந்து இன்றுமுதல்சிவகணங்களுக்குத் தலைவராயிருங்களென்று அநுக்கிரகஞ்செய்தருளினர்—எ-று. (௰௪)

சண்டப்பிரசண்டர்கதை-முற்றிய்து.

# உ-வது-சம்பாதிசடாயுகதை.

தகைசம்பாதியேசடாயுவென்பவர்
நகைமதிநிறத்தவரொருவைநாயகர்
மிகையுடனொருவருக்கொருவர்வெவ்வலி
வகையினிற்பெரியமென்றிகலும்வன்மையார்.

(இ-ள்) ஒளிபொருந்திய சந்திரனைப்போலவெண்மைநிறமுள்ளவர்களும் - கழுகுகளுக்கிறைவர்களும்பெருமை பொருந்தியவர்களுமாகியசம்பாதிசடாயுவென்பவர்கள் மேன்மையுடனொருவருக்கொருவர் மிகுந்தபலத்தின்வகையினால் நான்பெரியவன்நான்பெரியவனென்றுபகைக்கும்வன்மையராய்—எ-று. (௧)

மூத்தசம்பாதியுமுரட்சடாயுவா
மேத்தருந்தம்பியுமிரவிமீமிசை
போய்த்தனிதிரும்புதுந்திரும்பும்போதுநங்
காய்த்திறல்காண்வருங்காண்பவர்க்கென்பார்

(இ-ள்) மூத்தசம்பாதியும் - பலம்பொருந்தியசடாயுவென்கிறன் துதற்கரிய தம்பியும்நாம்-சூரியனுக்குமேல்போய்த்திரும்புவம்-தி

ரும்பும்போது - பார்க்கின்றவர்களுக்கு நம்முடைய சரீரபலந்தெரியுமென்பவர்களாய்—எ-று. (௨)

(காய்த்திவ் எனற்பாலது காய்த்திறலெனமருவிற்று.)

ஒட்டியதிருவர்க்குமொத்தவண்ணமாய்க்
கட்டியசடைமுனிக்கணத்தைச்சான்றறி
விட்டெரிமேருவினின்றும்விண்ணகத்
தெட்டினர்பறந்தனரெண்ணில்காலமே.

(இ-ள்) இவ்வாறுசபதம்பேசியது - இருவருக்கு மொத்தவண்ணமாய்க்கட்டியசடைமுடியையுடையமுனிவர் கணத்தைச்சாக்ஷியாக வைத்துக்கொண்டு ஒளிவிட்டு வீசுகின்றமேருகிரியினின்றும் - ஆகாயத்தையெட்டியெண்ணில்காலம்பறந்தார்கள்—எ-று. (௩)

காவதமெண்ணிலகடப்பக்கண்டவத்
தேவருமுனிவருந்தெருமந்தோடினர்
பூவகவனமெலாஞ்சருகுபோன்றன
தாவருஞ்சிறையிடைத்தயங்குகாற்றினே.

(இ-ள்) இவர்கள் அளவில்லாதகாதங்கள் கடக்கப்பார்த்த தேவர்களும்முனிவர்களும் - மயங்கி யோடினார்கள் - பூமியிலிருக்கு மேகங்களெல்லாம் அவர்களுடைய கெடாதசிறைக்காற்றினால் உலர்ந்தசருகுபோலாயின—எ-று. (௪)

விஞ்சையர்சித்தர்மெய்த்தவர்கள்விண்ணுளோ
ரஞ்சுவைக்கின்னரரனந்தந்தேர்களு
மஞ்சுறழ்விமானமும்வழிவிட்டோடின
செஞ்சிறையறைந்திவர்செல்லுஞ்செவ்வியே

(இ-ள்) இவ்வாறுஇவர்கள் சிறைகளையடித்துக்கொண்டுசெல்லுந்தன்மையினால்வித்தியாதரர்கள் - சித்தர்கள் - உண்மைத்தவநெறியிலிருக்குமுனிவர்கள் - தேவர்கள் - அழகியமதுரகீதமுள்ள கின்னரர்கள் - என்னுமிவர்களேறிச் செல்லுகின்ற அநந்தந் தேர்களும் - மேகம்போல்செல்லும் விமானங்களும்வழிதப்பியோடின-எ-று.

அரம்பையரணிந்தபூணலங்கல்வீழ்ந்தன
வரம்பெறுகற்பகவனங்கள்பேர்ந்தன

நிரம்பியசுரநதிநீத்தஞ்சிந்தின
பரம்பியசிறகரிற்பரந்தவேகமே.

(இ-ள்) பரவிய இவர்கள்சிறகினுண்டானவேகத்தினால்அரம்பை யர்களணிந்த ஆபரணங்களுமாலைகளும்வீழ்ந்தன-சிரேஷ்டம்பொ ருந்திய கற்பகச்சோலைகள் வீழ்ந்தன-நிரம்பியகங்கைவெள்ளஞ் சிந்தின—எ-று. (௬)

விண்டலநடுங்கினவடமலைமீக்கனை
கொண்டலுமொதுங்கினவுடுக்கூடின
கண்டுகண்முகிழ்த்தனகலங்கிமெய்ந்நிரை
மண்டலமரகதவாசியேழுமே.

(இ-ள்) ஆகாயம்நடுங்கின-ஆரவாரமிகுந்தன-மேகமும் ஒதுங்கி ன-நக்ஷத்திரங்கள்கூடின-சூரியமண்டலத்துப் பச்சைக்குதிரைகளேழு ம் - பறந்துசெல்கின்றவர்களைக் கண்டு மனங்கலங்கிக்கண்களைமூ டின—எ-று. (௭)

பாவவெஞ்சிறையுடைப்பறவைமேனிகொண்
டிரக்கமொன்றின்றியேயிகலையாற்றுவா
ராக்கர்கொலவுணர்கொலோநேர்ந்துளாரென
வுரக்கதிர்மண்டலக்கணங்களோடினார்.

(இ-ள்)பாவம்படிசிறைகளையுடையஇந்தப்பக்ஷிகளின்வேடங்கொ ண்டு- இரக்கமென்பது சிறிதுமில்லாமல் - ராக்ஷதர்களோ - அசுர ர்களோ - போர்செய்யும்படி யடுத்தவர்களென்று - பலம்பொருந் திய சூரியமண்டலத்திலிருக்கும் கணங்களோடினார்கள்—எ-று.

ஓதினர்வெய்யவற்குழைநின்றொரு
மாதவனஞ்சவென்றுரைக்கும்வாய்மையா
னாதவன்மண்டலத்தஞ்சலார்வரும்
பேதையரிருவரைநோக்கிப்பேசினான்.

(இ-ள்) ஓடினகணங்கள் சூரியதேவனுக்குச் சொன்னார்கள் - அ ப்போது அங்குநின்ற அஞ்சவென்று சொல்லப்படும் - வாய்மை பழகிய ஒருமுனிவன் - சூரியமண்டலத்தில் அஞ்சாதவர்களாய்

வரும் பேதையராகிய அந்தப்பக்ஷிகளிருவரையுநோக்கிச்சொல்லு கின்றான் —எ-று. (௯)

வேறு.

ஆயிரக்கதிரண்ணறன்
கோயிலைக்குறுகச்செல்வீர்
தீயெடுத்தொருசெந்துகில்
வாயடக்கமதிப்பிரால்.

(இ-ள்) ஆயிரங்கிரணங்களுள்ளசூரியதேவருடையகோயிலைச் சேரும்படி செல்லுகின்றீர்கள்-ஆதலால்இனித்தீயையெடுத்துஒருவஸ்திரத்தினிடத்தில்அடக்கிக்கொள்ளவும்எண்ணங்கொள்வீர்கள் —எ-று.

தம்மைமிக்கதாத்தினோர்
வெம்மையுட்கிவெருக்கொளா
ரிம்மையிற்படுமின்னலோ
வம்மையிற்படுக்குமே.

(இ-ள்.) தம்மிலமிகுந்ததாமுள்ளவர்களுடைய- வெம்மையைக்கண்டுமனமுட்கி அஞ்சாதவர்கள் இப்பிறப்பில்மாத்திரமோதுன்பப்படுவது மறுபிறப்பில்அங்குந்துன்பப்படுவார்கள் —எ-று. (௰௧)

பாயவாண்மைபடைத்துளார்
சேயதேவர்குடேசிகர்
தாயர்தந்தையர்தம்மிடே
காயவெவ்வலிகாட்டலே.

(இ-ள்) மிகுந்தபராக்கிரமம்படைத்தவர்கள்-சேய்மையாகியதேவர்கள்-ஆசாரியர்- தாயர்-தந்தையர்- என்னுமிவர்களிடத்திலோ- தங்கள்சரீரபராக்கிரமத்தைக்காட்டுதல்—எ-று. (௰௨)

அடுத்தசெங்கதிரையனைத்
தடுத்தவுங்கடருக்கெலா
மெடுத்தநாள்விதியாவையுந்
[illegible]மைகெடுக்குமால்.

(இ-ள்) மார்க்கத்திற்செல்லும்படி பொருந்தியசூரிய தேவனைத்த
பித்த உங்களிறுமாப்பையெல்லாம் - தினந்தோறுஞ் செய்யும்படி
யேற்படுத்தியிருக்கிறவிதிகளைக்கெடுத்ததீமையேகெடுத்துவிடும்.

சூரியன்கதிதப்பினால்காலங்கள்தப்பும்-அவைதப்பவேசந்தியா
வந்தனமுதலாகிய கிரமங்கள்தப்பிப்போம்அவ்வாறுகிரமத்தைக்கெ
டுத்ததீமையேயுங்கள்செருக்குகளைக்கெடுக்குமென்பதுதாற்பரியம்

நின்றபானுநெருப்பினு
லின்றுநீரிருவீர்களுங்
கன்றிமேனிகரிந்துவெந்
தொன்றிவீழ்கெனவோதினன்.

(இ-ள்) பொருந்திய சூரியதேவனுடைய நெருப்பினால் இன்று
நீங்களிரண்டுபேர்களும் - மனம்வெந்துமேனிகரிந்து வெந்துஒன்
றாய்வீழக்கடவீர்களெனச் சாபமொழியோதினர்—எ-று. (யச)

முந்திவந்ததோர்முன்னவன்
வெந்தனன்சிறைவெந்தபின்
சிந்திமண்ணிடைசென்றுவீழ்ந்
தந்திலம்மவரற்றினன்.

(இ-ள்) முன்சென்றமூத்தவன் - சிறைவெந்தனன்- அதுவெந்த
பின் - சிறையெல்லாஞ் சிந்திப்பூமியில் சென்றுவீழ்ந்து அழுதான்

அந்தில் - அம்ம - இவ்விரண்டுஞ்சாரியை. (யரு)

பின்னர்வந்ததோர் பின்னவன்
மின்னிறஞ்சிறைவெந்திலன்
பொன்னுடம்புபொரிந்துவீழ்ந்
தின்னலின்கணிரங்கினன்.

(இ-ள்)பின்புவந்த தம்பியானவன்-ஒளிபொருந்திய சிறைவேகா
தவனாய்-பொலிவுள்ளஉடல் பொரிந்து துன்பத்தோடன்அழுதான்.

அந்தரத்திடையஞ்சனே
நொந்தழைத்தனர்நோக்கினர்

வெந்தவிக்குறைபீர்மா
றெந்தைசெப்புகெனச்சொன்னார்.

(இ-ள்.) இவ்வாறுவிழுந்தஇவ்விருவரும்வருந்தி அந்தாத்திலிருக்கும்- அஞ்சனென்னுமுனிவனைநோக்கி அலழுத்துநாங்கள்வெந்த இக்குறைநீங்குமுறைமையை அய்யனேசொல்லுமென்றார்கள் எ-று.

வேதமால்வரைமீமிசை
நாதர்பூசைநவிற்றிறு
லாதர்நும்மையகன்றுபோ
மேதமென்றவனேவினான்.

(இ-ள்.) பெரிய வேதாசலத்தின் மேல் வீற்றிருக்கும்பரமசிவத்தையருச்சித்தால் - இத்தக்குறை அறிவில்லாதவர்களாகிய உங்களை விட்டுநீங்கிப்போமென்று அம்முனிவர் அவர்களையேவினார்—எ-று.

வேறு.

எளியசிற்சிறியோர்தங்குறைபொறுத்தல்
பெரியோர்தமியற்கையென்றுந்
பாவியரும்புறம்பன்றுபொறுத்தியென
வேதகிரிப்பாங்கரேகி
வாவியின்மஞ்சனத்தாலும்வாசநறும்
போதாலுமழுவலானைக்
காவிமலர்க்களத்தானையருச்சனைசெய்
திறைஞ்சிவிழிக்கலுழிபெய்தார்.

(இ-ள்.) அஞ்சமுனிவ ரிவ்வண்ணம் எளியசிறியோர்களுடைய பிழையைப் பொறுத்தல் பெரியோர்களுடைய இயல் பென்று சொன்னால் பாவிகளாகியசிறியோங்களும் புறம்பல்ல- ஆதலால் எங்கள்பிழையைத்தேவர் பொறுத்தருளவேண்டு மென்று சொல்லி வேதகிரியினிடத்திற் சென்று அங்கிருக்குந்தடாகத்திருமஞ்சனத்தாலும் - வாசனைபொருந்திய நல்லமலர்களாலும் - மழுப்படையேந்தினவரும் நீலோற்பலமலர்போன்றகாளகண்டத்தையுடையவருமாகிய வேதகிரீசரைப்பூசைசெய்து பணிந்து ஆநந்தக் கண்ணீரருவிபொழிந்தார்கள்—எ-று. (௬௩)

ஆயதிரேதாயுகத்திவிருவருக்கு
மொருவருமொப்பரியான்றோன்றித்
தாயவுடற்பழுதழுதைத்தணித்துவலி
பணித்ததன்பின்சம்பாதிக்குத்
தூயசிறகுசாலவிளைத்தருளுரைக்
இராமன்விடுதூதர்தம்மாற்
சேயசிறைபிறக்குமெனத்திருவருளோச்
சுமந்தவருஞ்சென்றாரன்றே.

(இ-ள்) அந்தத்திரேதாயுகத்தில்-சம்பாதிசடாயுவென்னுமிருவருக்கும் - ஒருவருமொப்பில்லாத பரமசிவந்தரிசனங் கொடுத்தருளி அவர்களுடலிற்பொருந்தியவெப்பத்தைத்தணித்தருளிப் பழைய படிபலமுண்டாகக் கிருபைசெய்து அதன்பின்பு சம்பாதியைநோக்கி - கற்புள்ளசீதையைத்தேடுகின்ற இராமன்விடுகின்ற தூதர்களால் உனக்குச்சிறையுண்டாகுமென்று அனுக்கிரகஞ்செய்ய அந்தத்திருவருளைப் பெற்றுக்கொண்டு அவர்கள்சென்றார்கள்—எ-று.

சம்பாதிசடாயுகதை முற்றியது

## ௩-வது சம்புகுத்தன்மாருத்தன்கதை.

சம்பாதிசடாயுவென்பார்தணந்ததற்பின்
துவாபரத்தேதவம்பல்காலஞ்
செம்பாதியுமைக்களித்தாருருத்திரகோ
டிக்கிரியிற்செய்துவாழ்வோர்
வெம்பாவங்கடிந்தசம்புகுத்தன்மா
ருத்தனெனவிளம்பும்பேரோர்
பைம்பாலுந்தேனுமுடன்கலந்தெனமற்
றுடன்பிறந்தபரிவின்மிக்கோர்

(இ-ள்) சம்பாதிசடாயுவென்பவர்கள் - சென்றபின்பு துவாபர யுகத்தில்பார்வதிதேவியாருக்குத்தமது திருமேனியில்சரியாக இடப்

பாகந்தந்தருளியசிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றருத்திரகோடிக்கிரியில் நெடுங்காலந்தவஞ்செய்துகொண் டிருப்பவர்களாகிய கொடியபாவத்தைக்கடிந்தசம்புகுத்தன் - மாகுத்தனென்று சொல்லுகின்றபெயரினையுடையவர்களாய் - பாலுந்தேனுங்கலந்ததுபோல் உடன்பிறந்தபரிவில்மிகுந்தவர்கள் — எ-று. (க)

ஒருடலுக்கோருயிரொத்திருவருமவை
 யகாலத்திவரின் மூத்தோன்
பேருடையசிவம்பெரிதுபெரிதென்று
 சொலக்கேட்டுப்பின்பிறந்தோன்
ஒருநெறியுமறியாதுசத்திபெரி
 தேபெரிதென்றுரைப்பவிந்தப்
போருமுனிவுந்தணியாதூழ்வினைபுக்
 குழிமாறுபுகுந்துநின்றார்.

(இ-ள்) இரண்டுடலுக்கொரு உயிரையொத்து - இவ்விருவரும் வாழுங்காலத்தில் இவர்களில் மூத்தவன் - பேருடையசிவமேபெரிது பெரிதென்று சொல்லக்கேட்டு - தம்பியானவன் ஒருமுறைமையும் அறியாமல் சத்தியேபெரிது பெரிதென்றுசொல்ல - இந்தச்சண்டையுங் கோபமுந்தணியாமல் ஊழ்வினை நேரிட்டு இவ்வாறுபகைகொண்டிருந்தார்கள் — எ-று. (உ)

எம்முனிவர்க்குரைப்பினுமற்றெம்மனோர்
 தெரிப்பரிதென்றெவருமஞ்சத்
தம்முனிவுதணியாதுசங்கரனே
 சான்றிதற்குச்சாலுமென்று
வம்முனிவர்கலந்தேகியமலனைமுற்
 புணர்த்தியம்பவமலனுங்கேட்
டும்முனிவுவிடுமின்களிருவொருபி
 யொருமொழியேயாமொடுக்கமென்றான்.

(இ-ள்) இதனையெந்த முனிவர்களுக்குச் சொன்னாலும் - அவர்கள் எம்போலியர்கள் தெரிந்து சொல்வதரியதென்று எல்லாரும்பயங்கொள்ள அவ்விருவரும் - தங்கள்கோபந்தணியாமல் இதற்குப்

பரமசிவமே சாக்ஷியாமென்று அம்முனிவர்களிருவருங்கூடிச்சென்றுபரமசிவத்தின்முன்பணிந்துவிண்ணப்பஞ்செய்யத்திருவுளத்திற்கொண்டு- சிவம்- சத்தி- என்கிற இருமொழியு மொருமொழியோடொக்குமாதலால் உங்கள் கோபத்தைவிடுங்களென்று திருவாய்மலர்ந்தருளினர்—எ-று. (௫)

பிறைமுடியோனிரண்டுமொன்றென்றருளுமரு
ளைமறுத்துப்பின்னோன்பின்னும்
பொறையிலனுய்ச்சத்தியேபெரிதென்ன
முன்னவனும்புகைந்துபொங்கி
மறைநெறியிற்சிவத்தையேபெரிதென்ன
விருவர்தங்கண்மாறுநோக்கி
யிறையுமிறைவியுந்தம்மின்முகமுகம்பார்த்
திளநிலவொத்திலங்கநக்கார்

(இ-ள்) சந்திரசேகரனுகிய பரமசிவம் - இரண்டுமொன்றென்று அருள்செய்ததிருவருளை மறுத்து இளையவன் - பின்னும்பொறுமையில்லாதவனுய்ச் சத்தியேபெரிதென்றுசொல்ல - மூத்தவனும் புகையுயிர்த்துப்பொங்கி வேதமுறைப்படி சிவத்தையே பெரிதென்றுசொல்ல இப்படிபேசுகிற இவ்விருவர்களுடைய மாறுபாட்டினைநோக்கிப்பரமசிவத்தின்திருமுகத்தைப்பராசத்தியும்பராசத்தியின்திருமுகத்தைப்பரமசிவமும்பார்த்துஇளந்திங்களையொத்துவிளங்கும்படிநகைத்தருளினர்கள்—எ-று. (௬)

பத்தியுமாமணியுமமுதுஞ் சுவையுந்திலமுநெய்யும்பணியும்பொன்னு, மத்தியுமோதமும்போலப்பிரியாததனைப்பிரிவித்தடைந்ததீதாற், சத்திபெரிதென்றோனைச்சத்தியுமச்சிவம்பெரிதுதானென்றோனை, நித்தியனுஞ்சிவனுமிருசமுகாகிச்சுழலுமின்கணீவிரென்றார்.

(இ-ள்) ஒளியும் மாணிக்கமும் - அமுதமும்மதுரமும் - எள்ளும்எண்ணெயும்-பொன்னும்பூஷணமும் - சமுத்திரமும்அலையும்போல- ஒன்றுப்பிரியாமலிருக்கிறசங்களைப்பிரித்தடைந்தகுற்றத்தினல் - சத்திபெரிதென்றவனைச்சத்தியும் - சிவம்பெரிதென்றவனை

நித்தியனுகியசிவரூபம் - நீங்களிரண்டுபேருங் கழுகுகளாகிச் சுழலக் கடவீர்களென்று சபித்தார்கள்—எ-று. (௫)

இருவருமற்றொருவைகளாய்நடுநடுக்கி
யெமைப்பொறுமையெந்தாயெம்போ
யுருவமிதுவிடும்போதுரையெனவி
வ்வுகஞ்சென்றுலக்குங்காலத்
தருவமிலித்தருங்காறுந்தவமுமருச்
சனையுமிந்தத்தலத்தேநீவிர்
புரியுமெனப்பின்னுமிறைவிபுரமின்
னேந்திறையும்புகன்றுவிட்டார்.

(இ-ள்) அவ்விருவரும் அப்போதே கழுகுகளாகி நடுநடுங்கி-எங் கள்குற்றங்களைப் பொறுத்தருளி - எங்களையனே - யெங்கள்தா யே - இந்தக்கழுகுருவம் விட்டுப்போகுங்காலமுங்கட்டளையிட்டருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய - இந்தயுகஞ்சென்று நீங்கு ம்போது அந்தவரமுங்களுக்குத் தந்தருளினோம் - அப்படிவருகி றவரைக்கும் இனித்தவமும் அருச்சனையும் - நீங்கள் இந்தத்தலத்தில் செய்யுங்களென்று இளையவனுக்குப்பராசக்தியும் - மூத்தவனுக்குப் பரமசிவமுங்கட்டளையிட்டருளினார்கள்—எ-று. (௬)

வீடாதபெருவினையும்வீடநதிதவம்பூசைவிருப்பிற்றுற்றி
வாடாதசம்புகுத்தன்மாகுத்தன்பண்டையுருமாறியபின்னர்
கோடாததுவாபரம்போய்க்கலியுகநாட்டொடங்கிமறைக் குவட்
டின்பாங்கர்ப் பூடாவும்விருத்தாவுமெனுமுனிவர்தவநெடுநாட்பு
ரிந்துநின்றார்.

(இ-ள்) ஒழியாதபெரியவினையும் ஒழியும்படி தவமும் பூசையும் அன்புடன்செய்து-வாடாதசம்புகுத்தன் மாகுத்தனென்னுமிருவரு ம்பழையஉருவம் அடைந்தபின்பு-மாறுதலில்லாத துவாபரம் போ ய்க்கலியுகம்வந்தநாள்தொடங்கி வேதாசலத்தினிடத்தில்-பூடா -விருத் தா- என்னு முனிவரிருவரும் நெடுநாள்தவஞ்செய்து கொண்டிருந் தார்கள்—எ-று. (௭)

சம்புகுத்தன் மாகுத்தன்கதை முற்றியது.



உ

சிவமயம்.

# பூடாவிருத்தாகதை.

இளவன்முன்னவனிருவருமருந்தவமிழைத்த
வளவின்முக்கணனுவந்துமக்கெமதுருவளித்தேம்
வளருங்கற்பமொன்றவ்வெல்லைவைகுமின்வைகிற்
கிளருமுத்தியும்பின்வழங்குதுமெனக்கிளந்தான்.

(இ-ள்) இளையவனும்மூத்தவனும் அரியதவஞ்செய்தவளவில்பரமசிவம் திருவுளத்தில் சந்தோஷமடைந்து - உங்களுக்குநம்முடையதிருமேனியருளிச்செய்தோம் - நிகழ்கின்ற ஒருகற்பவளவில் அந்தப்பதவியிலிருங்கள் - அவ்வாறிருந்தால் விளங்காநின்றமுத்தியும் பின்பு தருகிறோமென்று அருளிச்செய்தனர் — எ-று. (க)

அனையமுத்தியைப்பெறுவதோரளவுமைம்புலன்க
ணினையுநன்னெறிநிற்றலார்கண்டவர்நிமல
வினையமெங்ஙனமன்னதுயாங்ஙனம்வேற்றோர்
புனைவருங்கதியிக்கணந்தருகெனப்புகன்றார்.

(இ-ள்) அந்தக்கதியைப்பெறுமளவும் பஞ்சேந்திரியங்கள் நன்மார்க்கத்திலிருப்பதை யார்கண்டவர்கள்நிருமல மூர்த்தியே- வினையேமாகிய நாங்களெங்கே அந்தக்கதியெங்கே - ஆதலாற்பிறர்கற்பனைசெய்தற்கரிய அந்தக்கதியையிப்போதே அருளவேண்டுமென்றார்கள் — எ-று. (உ)

நமதுவண்ணமேதரித்தலைவேண்டிலீர்நவிற்று
மெமதுதண்ணளியேயலைச்சுமந்திலீரிகத்தி
ருமதுமேனியுங்கங்கத்துமேனியாயுதித்துத்
தியிதவார்கடலுலகிடைத்திரியுமென்றுரைத்தான்.

(இ-ள்) நம்முடையதிருமேனிபோல் உருவந்தரிப்பதை விரும் பாதவர்களாய் நம்முடையதிருவருளாலுரைத்த ஏவலையும் ஏற்றுக் கொள்ளாமல் நீக்கிவிட்டீர்கள் ஆதலால் உங்களுருவங்கழுகுஉருவ மாகப்பிறந்து பேரோசையுள்ள கடல்சூழ்ந்தஉலகத்தில் திரியுங்க ளென்று சபித்தருளினர்—எ-று. (௫)

அரியமாதவராகியும்வினைபிடித்தலைப்பக்
கரியகண்டன்மாமொழிமறுத்தலக்கணேகலந்தா
ருரியவல்வலியுடையருந்தமைப்படைத்துடைய
பெரியரேவலைக்கடப்பரோற்பிழைப்பரோபிழையார்.

(இ-ள்.) அருமையாகிய தவமுனிவர்களாயிருந்தும் - தீவினைபற் றியலைப்பதினால் - காளகண்டமூர்த்தியாகிய பரமசிவத்தின்வார்த் தையைக்கடந்து துன்பத்தையடைந்தார்கள் - உரியதானமிகுந்த பலமுள்ளவர்களேயானாலும் தம்மையடிமையாகப்படைத்த பெரி யோர்களிட்டஏவலைக் கடப்பார்களாகில் பிழைப்பார்களோ பி ழையார்கள்—எ-று. (௬)

இருவரும்பயந்தெங்குறைபொறுத்தியென்றிறைஞ்சி
யுருவமின்னதாய்ப்பிறப்பினுமுனதடித்தொழும்பின்
மருவுதன்மையுஞ்சாபத்தினிறுதியும்வகுத்துத்
திருவுளம்புரிகென்னலுஞ்சிவபிரான்விளம்பும்.

(இ-ள்.) அந்த இருவர்களும்பயந்து எங்கள்குறையைப்பொறு த்தருளும்- ஆண்டவனேயென்றுபணிந்துகழுகுருவமாகப்பிறந்தா லும்-உன்னுடைய திருவடித்தொண்டில் மயக்கமில்லாமையும்-இந் தச்சாபத்தின்முடிவும் கட்டளையிட்டருளவேண்டுமென்று விண் ணப்பஞ்செய்தவளவில் சிவபிரான் திருவாய்மலர்ந்தருளுகின்றனர்.

காசியன்வயிற்பிறந்திருகழுகமாயுங்கண்
மாசிறுண்டத்திம்மலைமிசைக்கிறைவான்கங்கை
வீசவந்தெழுமப்புனல்படிந்தெம்மைவிருப்பிற்
பூசிமின்கலியுகக்கடைமுத்தியும்பெறுமின்.

(இ-ள்) காசிபரிஷியிடத்திலிரண்டு கழுகுகளாகப்பிறந்து உங்களுடையகுற்றமில்லாகழுக்குகளால்இந்தமலையின்மேல்கீறினால், அதில்ஆகாயகங்கைஅலைவீசவந்துண்டாகும் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து-விருப்பத்துடனெம்மைப் பூசைசெய்யுங்கள்- அவ்வாறு பூசித்துக்கலியுகமுடிவில்முத்தியும்அடையுங்கள்—எ-று. (௬)

என்னக்கைதொழுதிருவருங்காசிபனிடைப்போய்த்
துன்னச்சம்புவோடாதியாம்பெயரொடுந்தோற்றி
மின்னற்செஞ்சடையான்சொன்னகொள்கையேவிளைத்து
நன்னர்த்தெய்வமாமறைக்கிரியுறைந்தனர்நல்லோர்

(இ-ள்) இவ்வாறு அருளிச்செய்தவுடன் அவ்விருவருங்கைகுவித்துத்தொழுது காசிபமுனிவரிடத்திற்போய்-சம்பு- ஆதியென்னும் பெயருடன்பிறந்து மின்னலையொத்தசெஞ்சடையுள்ள பரமசிவன்கட்டளையிட்டபடிசெய்து அந்தநல்லோர்கள் தெய்வத்தன்மையுள்ள வேதகிரியில் வாசமாயிருந்தார்கள்—எ-று. (எ)

இந்தவாறுகந்தொறுந்தொறுமிருவராயெண்மர்
வந்துவான்கழுகுருவமாய்வழிபட்டவழியா
லந்தநாண்முதலசலங்கங்காசலமவ்வூர்
முந்துநாமங்கங்காசலபுரமென்றுமொழியும்

(இ-ள்) இவ்வாறு உகங்கள்தோறும் இரண்டிரண்டுபேர்களாயெட்டுப்பேர்-சிறப்புள்ள கழுகுருவமாய்ப்பூசித்த முறைமையால்அந்தநாள்முதற்கொண்டு அந்தக்கிரியானது கழுகாசலமென்றும்அந்தவூரானது-கங்காசலபுரமென்றும் பெயர்சொல்லப்படும்—எ-று,

தென்றமிழ்க்கதுகழுக்குன்றமாமெனச்செவ்வே
யொன்றறத்தொகுத்தோதியசூதனைநோக்கி
நன்றிசைத்தனையுந்தனமிதற்குப்பின்னடந்த
வென்றியெத்திறம்விளம்பெனத்தவர்க்கவன்விளம்பும்

(இ-ள்) தென்தமிழ்க்கும் கழுக்குன்றமாமென்று செவ்வையாகப் பலவாறுதொகுத்துச்சொல்லிய சூதமுனிவனை நைமிசாரணிய முனிவர்கள்நோக்கி இந்தச்சரித்திரத்தைநன்மையுடனேசொன்னீர்

நாங்களதனைக்கேட்டுய்ந்தோம் இதன்பின்புநடந்தமேன்மை யெவ்வாறோ அதனைச்சொல்லவேண்டுமென்ற அம்முனிவர்களுக்கு அந்தமுனிவர்சொல்லுகின்றனர் —எ-று. (கூ)

கங்காசலச்சருக்கமுற்றியது-

ஆக திருவிருத்தம்-கூகூ௰.

## பசுவராகச்சருக்கம்.

தொல்லைவானவர்சூழ்கழுக்குன்றத்தி
னெல்லையாயதன்கீழ்த்திசையெல்லையின்
வில்லைவிண்மிசைவீசுபொன்மாளிகை
மல்லையென்றொருமாநகருண்டரோ.

(இ-ள்) பழமையில் - தேவர்கள்சூழ்கின்ற திருக்கழுக்குன்றத்தி னெல்லையாணதின் கீழ்த்திசையினிடத்து -பிரகாசத்தை ஆகாயத்தின்மேல் வீசும்படியாகியபொன்மாளிகைகளையுடைய மல்லையென்னும்பெயருள்ள க்ஷேத்திரமொன்றுண்டு—எ-று. (க)

சூழுமாமணியாற்றிருத்தோன்றலால்
வாழும்வாழ்க்கையர்மாளிகையார்ப்பினால்
வீழுமோதைவிழுக்கடலென்பதோ
ரேழும்வாயடக்குந்தகைத்தென்பவே.

(இ-ள்) சூழ்கின்றபெருமைபொருந்திய ரத்தினங்களினாலும் திருமகள்தோன்றுதலினாலும் - வாழ்கின்றவாழ்க்கையினையுடையவர்களுடைய மாளிகைகளினார்ப்பினாலும் அலையெழுந்துவிழுவதாலுண்டாகும் ஓசையையுடைய மேன்மைபொருந்திய எழுகடலையும் தன்னிடத்திலடக்கிக்கொண்டிருக்குந் தகையினையுடையது அந்த க்ஷேத்திரமென்றுபெரியோர்சொல்வார்கள் —எ-று.

கடலைக்குறிக்கும்போது - திரு-இலக்குமியும் - நகரத்தைக்குறிக்கும்போது செல்வமுமாகக்கொள்க-மணியும்ஆர்ப்புமிரண்டுக்குமொக்கும். (உ)

நாளுமந்நகருக்கொருநாயகன்
சோளமன்னன்சுரகுருவென்பவ
னாளும்வையங்கடையுகத்தாதியிற்
றாளிரண்டுந்தொழத்தொழத்தங்குவான்.

(இ-ள்) எந்நாளும் அந்தநகருக்கு ஒப்பற்ற அரசனாயிருப்பவன் சோழராசன்- சுரகுருவென்னும்பெயருள்ளவன்-அவன் இவ்வுலகத்தில் கலியுகத்தின்முதலில் -அரசுசெய்யும்போது தன்னுடைய இரண்டுபாதங்களையும் பரமன்னர் தினந்தோறும்வந்துதொழத் தங்குகின்றவன் —எ-று. (௬)

நீதிப்போதநிறைத்துக்கடையுக
மாதிப்பேருகமாக்கிநிரந்தரஞ்
சோதிப்பானுவெனச்சுடராழியிற்
காதிப்போரிற்பகையடுங்காவலான்.

(இ-ள்) நீதியினையும் ஞானத்தையும் எங்கும்நிறைத்து-கலியுகத்தைக்கிரேதாயுகமாக்கி-எப்போதும்பிரகாசம்பொருந்திய சூரியனைப்போலஒளியுள்ள ஆக்கினைச்சக்கரத்தினால்பூமியிலிருக்கும்பகைவரைப் போரிற்கொன்று வெல்லுகின்ற காவலையுடையவன்—எ-று.

காவன்மன்னனொருபகற்கானகத்
தேவிலங்கடப்போதருசிந்தையா
னேவலாளரைநோக்கியெயினரைக்
கூவல்செய்மின்விரைந்தெனக்கூவினான்.

(இ-ள்) இத்தகைமையுடைய காவல்மன்னனாகிய சுரகுருவென்பவன் - ஒருநாள் கொடியமிருகங்களைக் கொல்லும்படி கானகத்திற் செல்லுகின்ற மனமுள்ளவனாய் ஏவலாளிகளைநோக்கிவிரைவில் வேடர்களை அழையுங்கள் என்றுசொல்லினன்—எ-று. (௭)

புலிக்குழாமும்பொருகளிற்றீட்டமுங்
கலிக்கும்வாளரியாவுங்கலந்தெனை
வொலிக்கும்வாரியுலகம்பொருதுடல்
சலிக்குமாறுசவரர்சூழியினார்.

(இ-ள்) புலிக்கூட்டமும் -பொருதுகின்றயானையின்கூட்டமும்- ஆரவாரிக்கும் சிங்கங்களுமாகிய இவையெல்லாங் கூட்டமாகக்கூடி னதுபோது - ஒலிக்காநின்ற சமுத்திரஞ்சூழ்ந்த பூமியானது தாங் கமாட்டாமல் உடல்சலிக்கும்படிவேடர்கூடினார்கள் —எ-று. (சு)

கிரியின்றோற்றமனையகிளர்ச்சிய
ரெரியுநோக்கரிடியுறழ்வார்த்தையர்
வரியும்வேங்கைவடகவெங்கச்சைய
ரரியின்றோற்புனைந்தார்த்தசெருப்பினர்.

(இ-ள்) அந்தவேடர்மலைதோன்றுதல்போலக்காணப்படுகிறதேக த்தையுடையவர்கள் - எரிகின்ற பார்வையையுடையவர்கள்- இடியி னையொத்தவார்த்தையுடையவர்கள் - வரிபொருந்திய புலித்தோலா லாகியகச்சையணிந்தவர்கள் - சிங்கத்தோலாற் செய்யப்பட்டசெரு ப்பணிந்திருப்பவர்கள்—எ-று, (எ)

நீள்வரைப்புடைநீடுமிறாலெனத்
தோள்வரைப்புறந்தூக்கியதூணியர்
வாள்வரைச்சிலையார்வனமாக்களி
ணாள்வரைக்குநமனொத்தவாளியார்.

(இ-ள்) பெரியமலையின்புறத்தில் நீடியதேன்கூடுபோலப் புச ாகியமலையின்புறத்தில் தூக்கிக்கொண்டிருக்கிற தூணியையுடை யவர்கள் - மலையொத்ததாய்க் கொலைத்தொழில் செய்யத்தக்கவில் லையுடையவர்கள் மிருகங்களின் ஆயுளை அளவிட்ட நமனையொத்த பாணங்களையுடையவர்கள்—எ-று, (அ)

வயங்குமாவின்மணந்தெரிதுண்டத்த
வியங்குங்காலவினப்பகைசிந்தைய
புயங்கதேர்தொடர்பூட்டியகண்டத்த
வுயங்குநாவினுமிழியுலப்பிலார்.

(இ-ள்) காட்டில்சஞ்சரிக்கிற மிருகங்களினாற்றத்தைத் தெரிகின் றமூக்கினையுடையதுகளும் - ஓடுகின்றகால்களையுடையதுகளும்-தம் மினப்பகைபொருந்திய சிந்தையினையுடையதுகளும் -சர்ப்பத்தை

வொத்த சங்கிலிபூட்டியகழுத்தையுடையதுகளும் - வருந்தும்நர் பிணையுடையதுகளுமாகிய அளவில்லாதநாய்களையுடையவர்கள்.

இந்திரன்கணெனப்பலகண்ணுள
சிந்தைநூலர்செயுங்கொலைசெய்வன
வந்தகன்வலைபோன்றடுமாக்களை
வந்துசூழ்வனவார்வலைச்சும்மையார்

(இ-ள்) தேவேந்திரன் கண்களைப்போல்பலகண்களையுடையன- நூலிழையினிடத்துக் கருத்துள்ளவர்களாகிய நெய்தற்றொழிலாளிகள் நூலைவருத்துவதுபோலவருத்தத்தைச்செய்வன -யமனுடைய வலைபோன்று மிருகங்களைவந்துசூழ்வனவாகிய வார்வலைக்கூட்டத்தை யுடையவர்கள்—எ-று. (ய)

வேட்டினங்களிவ்வாறுமிடைந்தன
பாட்டிருங்கடலொத்தபதாதியி
னீட்டமுன்னொழுந்ததிமையவர்
நாட்டதிர்ந்ததுநாயகன்பேரியே.

(இ-ள்) வேடுவகூட்டமிவ்வாறு வந்துநெருங்கின - பெருமைபொருந்திய பெரியசமுத்திரத்தையொத்த சேனைக்கூட்டமும்-முன்னேபுறப்பட்டது - ராசனுடையபேரிமுழக்கம் - தேவருலகவாயில்முழங்கிற்று—எ-று. (யக)

இரவிதன்குலத்தெய்தினவர்க்கெலாங்
குரவன்பாகனைநோக்கக்கொணர்ந்ததேர்
புரவிபூண்டதொன்றேறின்னபோயினான்
பரவைபோய்த்திடர்பட்டதுதூளியே.

(இ-ள்) சூரியகுலத்தில் வந்தவர்களுக்கெல்லாம் - குரவனாகியசுரதருராசன் - சாரதியைநோக்கினவளவில் - அவன்கொண்டுவந்தகுதிரைகட்டிய ஒருதேரிலேறிக்கொண்டு சென்றான் - அப்போதெழுந்ததூளியினால் - சமுத்திரந்திடர்ப் பட்டுப்போயது—எ-று.

மந்திரக்கிழவோன்வயமாவொடுஞ்
சிந்துரத்தொடுந்தேரிற்பின்போதர

முத்திரைத்தமுரசமுஞ்சங்கமு
மத்திரைக்கடலஞ்சப்பரந்தவே

(இ-ள்) மந்திரியானவன் வெற்றிபொருந்தியகுதிரைக்கூட்டத்துடனும் யானைக்கூட்டத்துடனும் தேரின்பின்செல்லுதலும் முத்திரையொலித்தபேரிகையும் சங்கமும் அழகிய அலையுள்ளகடல் அஞ்சும்படிபரந்தன — எ-று. (௯௬)

உவரிவார்திரையொத்திருபாங்கரும்
கவரிவீசக்குவிகைநிலாத்தரத்
தவருமீனுமுதற்பலதாழ்ந்தெழ
விவரும்வெங்கைக்கொடியொன்றெடுப்பவே

(இ-ள்) சமுத்திரத்தினீண்ட அலையையொத்து இருபக்கமும்சாமரம்வீசவும்-குடையானது நிலைவைத்தரவும் விற்கொடியுமீனக்கொடியு மற்றுமுள்ள கொடிகளுந் தாழ்ந்துவர உயர்ந்தபுலிக்கொடியொன்றெடுக்கவும் — எ-று.

சோழராசனது - புலிக்கொடி - சேரராசனது - விற்கொடி பாண்டியராசனது - மீனக்கொடி. (௯௭)

கஞ்சுகத்தர்கனற்சொரிகண்ணினர்
வெஞ்சொல்மிக்கவர்வேத்திரக்கையினர்
மஞ்சையொத்தவர்மன்னன்மெய்காப்பின
ரஞ்சமுற்றுமகற்றினர்சூழவே.

(இ-ள்) சட்டையணிந்தவர்களாகிய காவலாளர்கள் தீப்பொறியைச்சொரிகின்ற கண்களையுடையவர்களும் அதிர்க்கும் வெப்பமொழியையுடையவர்களும் வெள்ளிப்பிரம்பு கையிற் பற்றினவர்களும் மேகத்தையொத்தவர்களும் அரசனுடைய சரீரசவரக்ஷணையிலுள்ளவர்களாய் எல்லாரும் பயப்படும்படிக்கூட்டத்தைவிலக்கிக்கொண்டு செல்லவும் — எ-று. (௯௮)

வீக்குமங்கியர்கச்சையர்விற்கையர்
தூக்குதூணியர்தோலுடனுந்தகர்
தாக்குவேலினர்தண்டினருண்டையர்
நீக்கிலாப்படைவீரர்நெருங்கவே

(இ-ள்) அங்கியென்னும் நெடுஞ்சட்டைபூண் டிருப்பவர்களும் கச்சுத்தரித்திருப்பவர்களும்வில்பிடித்தகையர்களும் அம்பறாத்தூணிகட்டிக்கொண் டிருப்பவர்களும் கேடகமும் வாளுமுடையவர்களும் தாக்கும்படியாகிய வேலாயுதமுள்ளவர்களும் தண்டாயுதமேந்தினவர்களும் உண்டைவில்லுடையவர்களுமாய்ப் படைவீரர்கள் நீக்கமில்லாமல்நெருங்கிவரவும்—எ-று.

உண்டையர் - என்பதற்கு- அணிவகுப்பினை யுடையவர்களெனக்கூறினுமமையும். (யகா)

குணிப்பிலாதகொடிநெடுந்தேர்களுந்
தணிப்பிலாததவழ்மதக்குன்றமுங்
கணிப்பிலாதகவனத்துவாசியும்
பணிப்பிரான்முடிசோரப்பரம்பவே.

(இ-ள்) அளவில்லாதநெடியகொடித்தேர்களும் - தணிக்குதற்கில்லாதகோபமுள்ளயானைகளும் - இவ்வளவெனத்தொகை சொல்லவொண்ணாதகுதிரைகளும்-ஆதிசேஷனுடையபணாமுடிகள் சோரும்படிபரவிவரவும்—எ-று. (யஎ)

பாழிவான்கொடித்தேர்முனம்பார்த்திப
ராழிமேருவைச்சூழ்ந்தெனவார்த்தெழ
வூழிகாறுமொருகுடைப்பாரொடும்
வாழியீண்டெனவந்திகர்வாழ்த்தவே.

(ள்-ள்) பலம்பொருந்தியபெரியதேரின்முன் அரசர்கள்மகமேருவைச்சமுத்திரஞ்சூழ்ந்ததுபோல ஆரவாரித்துச்செல்லவும்- ஊழிகாலமளவும் - ஒற்றைக்குடையுட னிவ்வுலகத்தையாண்டு கொண்டிருக்கக்கடவையென்று புகழ்வோர்கள்வாழ்த்தவும்—எ-று. (யஅ)

இன்னநஞ்சிவன்வேகவெற்பெல்லையைத்
துன்னினன்புடைவீரரைத்தூண்டினன்
மின்னுதாரகைவிண்ணிற்பரந்தென
மன்னன்சேனைவனத்திற்பரந்ததே.

(இ-ள்) நம்முடையபரமசிவன் வீற்றிருக்கும் இந்தவேதகிரியெ ல்லையில்வந்துசேர்ந்து - புறமெங்கும் வீரர்களையேவினான் - அவ் வாறு - ஏவப்பட்ட அரசனுடையசேனைவீரர் - பிரகாசிக்கா நின் றநக்ஷத்திரங்கள் ஆகாயத்திற்பரந்ததுபோலக்காட்டிற்பரவினர்.

காடு - ஆகாயமும் - சேனைவீரர்கள் நக்ஷத்திரங்களாகவும் கொள்க, (௰௯)

வேடர்பார்வையிற்சேரலர்மிக்கல்
ராடன்மாவினடிச்சுவடாய்ந்தனர்
காடுமாடத்திற்சாலதர்ப்பெற்றென
மூடிகோலிவலைதொடுக்கினார்.

(இ-ள்) வேடர்கள் பார்வைமிருகத்துடன் செல்லாதவர்களும்- அதிகரிக்காதவர்களுமாய்ச்சென்று போர்செய்யத்தக்க மிருகங்க ளினுடையகாலடிச்சுவட்டினைக் கண்டுபிடித்துக்காடானது வீடு கள்போலச் சாளரங்கள்பெற்றதென்று சொல்லும்படி அந்தக்காட் டுக்குள்ளே வலைகள்சூழக்கட்டினார்கள்—எ-று.

பார்வைமிருகமாவது -மிருகசாதியில் ஒவ்வொன்றைக் குட் டிமுதல்வளர்த்து அதுகளைக்கொண்டு அந்தந்தமிருகங்களைப்பிடி ப்பதற்காகப் பழக்கிவைத்துக்கொண்டிருப்பது. (௨௰)

போர்த்துவார்வலைகானம்புதைத்தபி
னார்த்துவாய்விட்டலமருமாக்களைக்
கூர்த்தவாளெயிற்றுக்கொடுஞாளியுந்
தூர்த்தவாளியுமேவித்துரப்பரால்.

(இ-ள்) பெரியவலைகளைக்கட்டிக்காட்டினை மூடியபின்வாளைப் போல் கூர்மைபொருந்திய பற்களையுடைய நாய்களையும் மிகுந்த பாணங்களையுமேவி வாய்திறந்தாரவாரித்துச் சுழலுகிறமிருகங்களை த்துரத்துவார்கள்—எ-று. (௨௧)

மேவியாவர்க்குமேற்செய்தீவினை
யாவிபோயுழிப்போயடுமாறென

வேவும்வாளியுளாளியுமெங்கணு
மாவினீட்டஞ்செலச்சென்றுமாய்க்குமால்.

(இ-ள்) யாவர்களுக்கு முன்செய்ததீவினை யொழியாது நின்று பிராணனீங்கிப்போனபின்பும்- அதனுடன்சென்று வருத்துவதுபோல ஏவுகின்றபாணங்களும் நாய்களும் - மிருகக்கூட்டம் ஓடியிடமெங்குஞ்சென்றுகொல்லுகின்றன—எ-று. (உஉ)

உழுவையேனமுழைகவயங்கலை
வழுவையாளியமாவெண்குமான்மதந்
தழுவுமாப்பிணவோடுதனித்தனி
குழுவெலாங்கொன்றுகொன்றுகுவிப்பரால்.

(இ-ள்) புலிகள் - பன்றிகள் - மான்கள் - காட்டுப்பசுக்கள் - கலைமான்கள் - ஆனைகள் - சிங்கங்கள் - மரையென்னுமிருகங்கள் - கஸ்தூரிமிருகங்கள் - இவைகளைப்பொருந்திய பெண்மிருகங்கள் என்கிறஇந்தமிருககூட்டங்களையெல்லாந் தனித்தனியாகக்கொன்று குவிப்பார்கள்—எ-று. (உ௩)

யானைக்கன்றுகளையும் - புலி - பன்றி - மான் - இவற்றின்குட்டிகளையும் சினைபுள்ளபெண்மிருகங்களையுங் கொலைசெய்யார்கள் இதற்கு மேற்கோள் - பெரியபுராணத்திருவிருத்தம்.

துடியடியனமடிசெவியன துறுகயமுனிதொடரார்
வெடிபடவிரிசிறுசுருளைகண்மிலைசபடுகொலைவிரவார்
அடிதளர்வுறுகருவுடையனவணைவுறுபிணையலபார்
கொடியனவெதிர்முடுகினுமுறுகொலைபுரிசிலைமறவோர்.

கானவேழங்கணக்குவையேய்ந்தன
வேனராசியிருட்குவைபோன்றன
மானமாக்கண்மதிக்குவையொத்தன
கூனல்வார்சிலைவேடர்குவிப்பவே.

(இ-ள்) பெரியதும் வளைவுமாகிய வில்லைவேடர்வளைத்ததினால் துணிபட்டுவிழுகிறயானைகள் மேககூட்டத்தை யொத்தன பன்றிக்கூட்டங்கள் இருட்கூட்டம் போன்றன - பெருமைபொருந்தியசிங்கக்கூட்டங்கள் சந்திரகூட்டத்தையொத்தன—எ-று. (உச)

ஆளியாதிவிலங்கினரற்றலு
மீளிவேடர்பயிற்குரல்விம்மலும்
வாளிநாண்விட்டொலித்தலுமாத்தொடர்
ஞாளியார்த்தலுஞாலநடுக்குமால்.

(இ-ள்) சிங்கமுதலாகிய மிருகங்களினாரவாரமும் - பலம்பொருந்தியவேடர்கள் - அந்தந்தமிருகக்குரல் போலக்கூவுகின்ற ஓசையும் - பாணங்கள் - வில்நாணியைவிட்டொலிக்குமோசையும் - மிருகங்களைத்தொடர்ந்துபற்றுகிற நாய்கள்குரைக்கிற ஓசையும்பூலோகத்தைநடுக்கும்—எ-று. (உ௫)

அந்தவெல்லையேனமழற்கணுஞ்
சிந்தமீதிருவெண்பிறைசேர்ந்திரா
வந்ததின்றெனவேடர்மருட்கொளப்
பந்தவார்வலைபோயறப்பாய்ந்ததால்.

(இ-ள்) அவ்வாறுவேடர்கள் வேட்டையாடும்போது ஒருபன்றியானது கண்கள்தீப்பொறியைச் சிந்தும்படி-தன்னிடத்திலிரண்டுவெண்பிறையைச்சேர்த்துக்கொண்டு - இரவிருள்வந்ததோவென்றுவேடர்கள்கண்டுமயக்கங்கொள்ளத்தக்கதாகப்பந்தப்படுத்தியிருக்கிறநீண்டவலைபறந்துபோம்படிப்பாய்ந்தது—எ-று. (உ௬)

வலைதுமிந்தனஞாளிகண்மாய்ந்தன
தொலைவிலம்புசொரிகரஞ்சோர்ந்தன
கொலைவல்கேழலிதன்றுருகூற்றுவந்
தலையநம்மையடர்த்ததின்றென்பரால்

(இ-ள்) வலைகளறுந்தன - அநேகநாய்களிறந்தன - மாளாதபாணங்களையேவுகிற வேடர்கைகளறுந்தன - இதுகொல்லவல்லபன்றியல்ல - எமனேயிப்பொது பன்றிரூபங்கொண்டுவந்து நம்மைக்கொல்லுகின்றதென்பார்கள்—எ-று. (உ௭)

செல்லுமொற்றர்திரள்கடந்தோய்யென
வெல்லுமன்னன்முனேடிநம்வேடனா

யொல்லென்ஞாளியையோர்கணந்தாழ்த்தியேற்
கொல்லுமேனமொன்றென்றுகைகூப்பினார்

(இ-ள்) செல்லுகின்றதூதர்கூட்டங்கள்-சேனையைக்கடந்துசெல்லுகின்றஅரசனுக்கெதிரில் விரைவாகவோடிமகாராசாவே நீரின்னமொருக்ஷணப்பொழுது தாமசப்பட்டிருப்பீராஞல் நம்முடையவேடர்களையும் ஒல்லென்கிறவோசையுண்டாகக் குரைக்கா நின்றநாய்களையும் - ஒருபன்றியானது கொன்றுவிடுமென்று கைகுவித்துத்தொழுதுசொன்னார்கள்—எ-று. (உஅ)

மன்னனெங்ஙனமெங்ஙனமற்றது
தன்னையெய்துமுன்போமெனத்தாழ்க்கலன்
மின்னினெப்தெனவிற்கணைகைக்கொளாச்
சொன்னசொற்குமுன்றேர்செலத்தூண்டினான்.

(இ-ள்) அவர்கள்சொன்னவார்த்தையைக்கேட்டஅரசனானவன்-அந்தப்பன்றி யெங்கிருக்கின்றது எங்கிருக்கின்றது - அது ஓடிப்போவதற்குமுன்னே நீங்கள் அவ்விடத்திற்குப்போங்களென்றுசொல்லித்தானும்தாமசமாயிராமல் வில்லும்பாணமுங்கையிற் பிடித்துக்கொண்டு அவர்கள் சொன்னசொல்லுக்குமுன் மின்னல்தோன்றிமறையுங்காலவளவில் அதிகவிரைவாகத்தன்தேரைச் செலுத்தினான்—எ-று. (உகூ)

மறவரோட்டமுஞாளியின்வாட்டமும்
புறவெலாமறையும்படைப்பூசலு
மிறைவனேனத்தொடுங்கண்டெடுத்தவி
னிறையவாங்கிநெடுங்கணையொன்றெய்தான்

(இ-ள்) வேடர்களோடு மோட்டத்தையும்- நாய்களுடையவாட்டத்தையும் - அந்தவனமெங்குமொலிக்கா நின்றசேனைகளுடையவோசையினையும் - இவ்வாறுண்டாகச்செய்யும் பன்றியினையும் அவ்வரசன்கண்டு எடுத்தவில்லை நன்றாகவளைத்து ஒருபெரியபாணத்தையேவினான்—எ-று. (கூ0)

அருவிபோன்றிழிசோரியலைத்தெழ
வெருவிவீழ்ந்தவேனமும்விட்டிமுன்

மருவுசாபத்தின்வருபசுவையு
முருவிவாளிசென்றோடியதென்பவே.

(இ-ள்) அந்தப்பாணமானது மலையருவிபோல இழிகின்றவுதிரமானதுஅலைத்துப் பெருகியோடவும் பன்றியயர்ந்துவிழவும் கொன்றுமுன்னேநந்திதேவருடையசாபத்தினால் அங்குமேய்ந்துகொண்டிருக்கும் பசுவினுடலையும் உருவிக்கொண்டு அப்புறஞ்சென்றோடியது—எ-று. (௬௧)

பன்றிவேட்டைதனிற்பசுப்பட்டதின்
றென்றுசேனையுந்தானுமிறையவ
னின்றுதுண்ணெனநெஞ்சகமஞ்சினன்
வென்றிவிற்கீழ்விழக்கையுஞ்சோர்ந்துளான்.

(இ-ள்) அதைக்கண்ட அரசனானவன்-இந்தப்பன்றிவேட்டையில் ஒருபசுவானது இறந்துவிட்டதேயென்று அவனும் அவனுடைய சேனையும் மனந்திடுக்கிட்டுப் பயந்து வெற்றியொருந்தியவில் கீழ் விழும்படிதன்கையுஞ்சோர்ந்தவனானான்—எ-று. (௬௨)

பட்டதேனுப்பசும்பொற்றிலதமு
மட்டிலாங்குழலும்மலர்க்கண்களு
மிட்டபூண்முலையுமிடைக்கொம்பருங்
கட்டுந்தூசுங்கொண்டோர்கன்னியாயதே.

(இ-ள்) அங்கிறந்தபசுவானது பொன்னிறமுள்ள திலதமும்-தேனொழுகும்படியான அளகபாரமும் -நீலோற்பலமலர்போன்றகண்களும்-ஆபரணமணிந்ததனங்களும் -பூங்கொம்பையொத்த இடையும் - உடுத்தவஸ்திரமுங்கொண்டு ஒருபெண்ணுருவமாயது-எ-று.

ஆனகன்னியரசமற்றஞ்சலை
தேனுவன்றுதிலோத்தமையான்பண்டு
ஞானநந்திநவிற்றியசாபத்திக்
கானுறந்துன்கணையினுய்ந்தேனென்றாள்.

(இ-ள்) பெண்ணுருவமானவள் அரசனைநோக்கி நீயஞ்சவேண்டுவதில்லை-நான்பசுவேயல்ல-திலோத்தமையென்பவளாம் -முன்னம்

ருண்முள்ளநந்திதேவர்கூறிய சாபத்தினால் இந்தவனத்தில்-பசுரூ
பமாய் வாசஞ்செய்துகொண்டிருந்து இப்போது உன்பாணத்தி
னால் அந்தச்சாபம்நீங்கிப் பிழைத்தேனென்றுசொன்னாள்—எ-று.

என்றுவேந்தனைப்போற்றியிமையவர்
துன்றுபூமழைபெய்யச்சுருதியங்
குன்றுதாழ்ந்துதுறக்கங்குறுகினாள்
பன்றிமாயிகன்மெய்யுறப்பட்டதே.

(இ-ள்) இவ்வாறுசொல்லி அந்தவேந்தனைத்துதிசெய்து தேவர்க
ள் மலர்மாரிபொழிய வேதகிரியைப்பணிந்து சுவர்க்கலோகம்
போய்ச்சேர்ந்தாள்- அந்தப்பன்றியானதுமாயிகனென்னும்இராக்ஷ
தவுருவம்பெற்றது—எ-று. (கூ௫)

அந்தமாயிகனுமவரக்கனு
மெந்தைவந்தனையெங்கதிதந்தனை
யுய்ந்தனுன்பொருட்டென்றுவப்புறுஞ்
சிந்தையான்விடைகொண்டுசென்றனனே.

(இ-ள்) இராக்ஷதவுருவம்பெற்ற மாயிகனென்பவனும்-அவ்வர
சனைநோக்கி-ஐயனே நீவந்து எங்களுக்குக்கதிகொடுத்தாய் - உன்
னால் நாங்கள்பிழைத்தோ மென்றுபுகழ்ந்து - சந்தோஷம்நீங்காத
சிந்தையுடையவனாய் விடைபெற்றுக்கொண்டுபோனான்—எ-று.

பசுவராகச்சருக்கமுற்றியது.

ஆக திருவிருத்தம் எஉகூ





சிவமயம்.

# தீர்த்தச்சருக்கம்.

வெய்யவன்மரபிற்சுரகுருவேந்தன்
வியந்திவைநோக்கிவெம்பரிசூழ்
வையமதுகைத்துப்போந்துழியெயினர்
மாட்டொருஞமலிநீர்வேட்டுச்
செய்யகுன்றேறிச்சிறந்தசம்பாதி
தீர்த்தத்துமூழ்கியுண்டெழுந்து
தொய்யலங்குட்டங்கடிந்துபொன்வடிவாய்ச்
சுடர்விடக்கடிதுமீண்டதுவே.

(இ-ள்) சூரியகுலத்தில்வந்த சுரகுருவென்னும் அரசனானவன் இந்தச் செய்கைகளைக்கண்டு அதிசயித்து வெவ்விதான குதிரைகள் பூட்டியதேரைச் செலுத்திக்கொண்டு போம்பொழுது வேடர்களிடத்திலிருக்கும்நாய்களில் ஒருநாயானது நீருண்ணவிருப்பங்கொண்டு அந்தமலையிலேறிச் சிறப்புள்ள சம்பாதி த்தீர்த்தத்தில்மூழ்கி நீருண்டெழுந்து தன்பழுள்ள குஷ்டநோய்நீங்கிப்பொன்வடிவமாயொளிவிடத்தக்கதாகவிரைவில்திரும்பிவந்தது—எ-று. (க)

(அம் - சாரியை.)

பட்டிமுன்படுநோய்க்குட்டமுமதுபோய்ப்
பசும்பொனினிறமதுபிறழக்
கிட்டியதிறனுங்கண்டதிசயித்த
கெழுதகுமந்திரக்கிழவோ
னெட்டியகடவுட்புண்ணியக்கிரியீ
தென்றுநாயடிச்சுவடோர்ந்து
கட்டியபரித்தேரிழிந்துகானிடைப்போய்க்
கடிமலர்த்தடஞ்சுனைகண்டான்.

(இ-ள்) அந்தநாயானது முன்கொண்டிருந்த குஷ்டநோயும்இ
ப்போது அந்தநோய்நீங்கிப் பொன்னிறம்விளங்கும்படி பொருந்
திய தன்மையுங்கண்டதிசயித்த மேன்மைபொருந்திய மந்திரியான
வன்நெடியதான தெய்வத்தன்மையுள்ள புண்ணியமலையிதுவெனக்
கருதிக்குதிரைகட்டியதேரைவிட்டிழிந்து நாயடிச்சுவட்டைப் பார்
த்துக்கொண்டுகோட்டுக்குள்போய்வாசனைபொருந்தியமலர்கள்நிறை
ந்த அந்தப்பெரியசுனையைக்கண்டான்—எ-று. (உ)

நீடியசுனையிற்புழுக்குலங்குழுமி
நிறைதல்போலிறையவன்காட்ட
நாடியநயனமனங்கவராது
நனியருவருத்தவன்கூசி
மூடியகனிவாயோடுநீராட
முழுவதுமுடற்பிணிதணிந்து
கூடியவிதழ்வாயளவுமேதவளக்
குட்டமாறாதுபட்டதுவே.

(இ-ள்) பெரியதாகிய அந்தச்சுனையில் அநேகம் புழுக்கூட்டங்
குலவி நிறைந்திருத்தல்போலப் பரமசிவங்காட்டினதால்- அதை
நோக்கியபார்வையும் மனமும்பற்றமல் அந்தமந்திரியானவன் மி
கவும் அருவருத்துக்கூசி வாயைமூடிக்கொண்டு அந்நீரில் ஸ்நான
ஞ்செய்தவளவில்சரீரமுழுவதுமிருந்தநோய்தீர்ந்து உதடுவாயிவை
மட்டும் வெள்ளைக்குஷ்டநோய்நீங்காமலிருந்தது—எ-று. (ங)

மெய்யிடைப்பிரிந்துவாயிடைப்புணர்ந்த
வெண்ணிறக்குட்டமதறிந்து
பையுளுற்றமைச்சன்வாய்விடுத்தாழ்ந்தும்
பருகியுமதுவிடாதமையா
லையனதருளையையுறுங்கருத்த
ராயிம்ஞொத்தவமிழைத்து
மூப்புமதடையாவொன்பதையுலகத்
துயிர்க்கெலாமுணர்த்தினன்மாதோ.

(இ-ள்) சரீரத்தில்நீங்கி வாயினிடத்திலிருந்தவெள்ளைநிறக்குஷ்ட ரோயைப்பார்த்து அம்மந்திரியானவன் வாய்மூடியதைவிட்டுஸ்நானஞ்செய்தும் அந்நோயுண்டும் - நீங்காமையினால் பரமசிவத்தினுடைய திருவருளைச்சந்தேகிக்குங் கருத்துள்ளவரானவர்களெவ்விதத்தவஞ்செய்தாலும் - ஈப்புமுறைமை யடையார்களென்பதை உலகத்திலுள்ளவுயிர்களுக்கெல்லாந்தெரிவித்தான்—எ-று. (ச)

இத்திறனறிந்தோரிரணியசேதா
வெனும்பெயரமைச்சனுக்குரையார்
நித்திலமணிவெள்வாயனென்றுரைப்பர்
நிறம்பிறிதாகிமற்றவனு
மத்திருவரைவிட்டிழிதலும்பிணிதீர்ந்
தாகமண்ணியமணிகடுத்த
வித்தகவமைச்சன்மேனிகண்டமையான்
வியந்தனன்சுரகுருவேந்தன்.

(இ-ள்) இந்தமுறைமையை யறிந்தவர்கள் - அம்மந்திரிக்கு இரணியசேதாவெனும் பெயர்சொல்லாமல் - முத்துமணிவெள்வாயனென்று சொல்லுவார்கள் - இவ்வாறுநிறம்வேறாகி அவன்மலையைவிட்டிழிந்தவுடன் - முன்னிருந்தவியாதிநீங்கிச் சரீரமுழுவதுங்கழுவிய மாணிக்கத்தையொத்தஞானமுள்ளமந்திரியினுடைய சரீரத்தைக்கண்டமையால்சுரகுருவேந்தன் சந்தோஷித்தான்-எ-று.

வியத்தகுகழுக்குன்றெல்லையைத்தொழுது
வேந்தனவ்வெல்லைவிட்டகல
நயத்தகுமெருவையாயசம்பாதி
நற்றவர்கொற்றவனெதிர்போய்
வயத்தகுமவரைத்தொடங்கியுந்தடுத்தும்
வளநகர்விளக்குவித்திவனுக்
குயத்தகுநெறியுமுரைத்துமென்றணிகத்
தொலிகடன்மறிக்குநருடன்றார்.

(இ-ள்) வியப்படையத்தக்க திருக்கழுக்குன்றத்தினெல்லையை வணங்கி-அரசனந்தஎல்லையைவிட்டுநீங்கினவளவில்- விருப்பங்கொள்

ளத்தக்க கழுகுருவமாயிருக்குஞ் சம்புஆதியென்னும் நல்லமுனிவர்கள் அந்தராசனுக்கெதிரிற்சென்றுவெற்றிபொருந்திய இவர்களையடுத்தும்-தடுத்தும்-வளப்பம்பொருந்தியஇந்தத்தலத்தின்மகிமையைத்தெரிவித்துக்கதிபெறத்தக்கவழியுந் தெரிவிப்போமென்று அவனுடையசேனைகளை மறித்தவர்களாய்ப் போர்செய்தார்கள்—எ-று.

தந்திரக்கடலைத்தடுத்தனுமபயன்
றடுதனைப்பொருமினென்றேவச்
சிந்துரத்திரளுமிவுளியுந்தேருஞ்
சேனையுந்திரண்டுகொண்டெறிந்த
குந்தமுமெழுவுங்குலிசமுமழுவுங்
கோல்களுஞ்சூலமுமவர்க்குக்
கந்தநாண்மலராமிவர்க்கவர்மூக்கிற்
கடிமலர்விடுப்பினும்படையாம்.

(இ-ள்) இவ்வாறுசேனைசமுத்திரத்தைத்தடுத்தவளவில்-அந்தச்சோழராசன் இப்போதிங்கேதடுப்பவர்களுடன்போர்செய்யுங்களென்றேவ - யானைக்கூட்டமும் - குதிரைக்கூட்டமும் - தேர்க்கூட்டமும் - வீரர்தொகுதியுஞ் சேர்ந்துகொண்டெறிந்தவேலும்-எழுத்தடியும் - வச்சிராயுதமும் - மழுவாயுதமும் - பாணங்களும் சூலங்களும் - சம்பு -ஆதி-யென்னுமிருவர்களுக்கும்வாசனை பொருந்தியமலர்போலாம்- அவர்கள் மூக்கினால் மலரையெறிந்தாலும்இவர்களுக்குப்படையாகும்—எ-று. (எ)

தேவர்கொல்புனிதமுனிவர்கொலெனவந்
தெறும்படைபுடைத்தெதிர்தடுத்தீர்.
யாவர்கொல்சமூகின்வடிவெடுத்துடையீ
ரொன்றுவின்னேக்கியண்ணாந்து
காவலனுரைப்பவிருவருந்தமது
கதியெலாமுணர்த்தியித்தலநீ
கோவதமியற்றியிறத்தலின்மறித்தோங்
கொடுவினைவிடுதினக்கென்றார்.

(இ-ள்) நீங்கள் கழுகுருவமெடுத்திருக்கின்றீர்கள் அப்படியிருந்தும் என்னுடைய சேனையைச் சின்னாபின்னப்படுத்தித் தடுத்தீர்கள்-ஆதலால் தேவர்களோ முனிவர்களோ யாவர்களோவென்று அண்ணாந்து பார்த்து அந்த அரசன் சொன்னவளவில் - அவ்விருவருந் தங்களுடைய செதிகளையெல்லாஞ் சொல்லி - இந்தத்தலத்தில்நீ கோவதை செய்து யாதொரு பரிகாரமுஞ் செய்துகொள்ளாமல் போவதினால் நாங்கள் மனமிரங்கி யுனக்குப்பாவவிமோசனமாகும் பொருட்டுத் தடுத்தோமென்றார்கள்.—எ-று. (அ)

என்றலும்வலிதுவழிதடுத்தேயு
மிகலியுமறிவிலேன்பவத்தைச்
சென்றகற்றுவதுகடனெனக்கருணை
செய்தனர்தெய்வமாமுனிவர்
வன்றிறற்பெரியோர்பெருமையித்திறனன்
மற்றென்கொலுரைப்பதென்வினைபோய்
நன்றுறத்திருத்தநல்லுமித்தலமு
நவிற்றுமினெனத்தொழுதிரந்தான்.

(இ-ள்) இவ்வாறு அவர்கள் சொன்னவளவில்இவர்கள்வலிவில்வந்து வழிதடுத்தும்போர்செய்தும்- அறிவிலாதஎன்னுடையபாவத்தை நீக்குவதே தங்கள்கடமையாகக் கிருபைசெய்தார்கள் - தெய்வத்தன்மையுமுள்ளமுனிவர்கள் சாபானுக்கிரகமுள்ள பெரியோர்களென்னுமிவர்களுடைய பெருமையிப்படிக்கொத்ததல்லவா - வேறே சொல்லத்தக்கதென்னிருக்கின்றதென்று தனக்குளெண்ணிக்கொண்டு அவர்களைநோக்கி - என்வினைநீங்கி நன்மையினையடையும்படி - இந்தத்தீர்த்தவிசேஷமுந்தலவிசேஷமுஞ்சொல்லுங்களென்று அவர்களைப்பணிந்து இரந்துகேட்டுக்கொண்டான்—எ-று (கூ)

கங்கைகாளிந்திவாணிவைதரணி
கவுதமமலப்பிரதாணி
துங்கபத்திரைநர்மதைகம்பைபம்பை
சோமுகைமுகரிதென்குமரி
சிங்கைகண்டகிவேத்திரவதிபிராமி
தேவிகைபினாகினிபாலி

கொங்குலாம்பொருநைதாம்பிரபருணி
சோவதிசிந்துகோமதியே

(இ-ள்) இவ்வாறுவினவிய அரசனைப்பார்த்து அரசனே கேட்பாயாக - கங்காநதி- காளிந்திநதி - சரஸ்வதிநதி - வைதரணிநதி- கவுதமைநதி - மலப்பிரதரணிநதி- துங்கபத்திரைநதி -நருமதைநதி கம்பைநதி - பம்பைநதி- கோமுகைநதி - பொன்முகரிநதி-தென்குமரிநதி - சிங்கைநதி - கண்டகிநதி - வேத்திரவதிநதி- பிராமிநதி தேவிகைநதி - பினாகிநதி-பாலிநதி-வாசனை பொருந்திய பொருநையென்று சொல்லப்பட்டதாம்பிரபரணிநதி -சோவதிநதி-சிந்துநதி கோமநதி—எ-று (௰)

அளகைநந்தினிமந்தாத்திரிபெண்ணை
யம்பையேயிந்திரதனையை
வளவர்காவேரியுருத்திரைசரயு
வைகைமுத்தாநதிமுதலா
யுளபெருங்கடவுணதியெலாங்குழீஇக்கொண்
டொலிகடற்கிறைவனைக்குறுகி
யிளமுலைத்தலையிற்புணர்தலைத்தலைநா
ளிரந்திருமருங்கினுமிருந்தார்.

(இ-ள்) அளகைநதி - நந்தினிநதி - மந்தாத்திரிநதி பெண்ணைநதி-அம்பைநதி - இந்திரபுத்திரநதி - சோழராசர்களுக்குரியகாவேரிநதி - ருத்திரநதி-சரயுநதி - வைகைநதி- மணிமுத்தாநதி - இவைமுதலாயிருக்கும் பெரியதேவநதிகளெல்லாம் - கூட்டமாகச்சேர்ந்துகொண்டு சமுத்திர ராசனிடத்திற்சென்று தங்கள்தங்கள்தனபாரங்களில் புணர்வதையிரந்து முன்னாளிலிருபக்கத்திலுமிருந்தார்கள்—எ-று. (௰௧)

வேறு.

அந்தநாள்வருணனதன்பினாற்றல
ரிந்தநாளெனக்கெனக்கென்பியாவரு
முந்தியும்பிந்தியுமுறைபிறழ்ந்துநின்
றுந்திகளொருவருக்கொருவர்சீறினார்.

(இ-ள்) வருணன்வேண்டினகாலத்தில் அவனுடைய அன்பினைப் பூர்த்திசெய்யாமலிருந்து இந்தநாள் எனக்கெனக்கென்று இவர்க ளெல்லாருமுன்னிட்டும் பின்னிட்டும் முறைமைமாறிநின்று நதிக ளாகியமாதர்களெல்லாரும்ஒருவர்க்கொருவர்கோபித்தார்கள்-எ-று.

சீறுபுதன்மனைத்தேவிமாரெலா
மாறுகொண்டெதிர்ந்தனர்வருணன்கண்ணுறீஇ
யேறியபயத்தினைிதற்கென்செய்துமென்
றூறியவனைவர்க்கும்பொதுநின்றோதினான்-

(இ-ள்) தன்மனைவியர்களெல்லாரு மிவ்வாறொருவரோடொருவ ர் கோபத்துடன் பகைகொண்டெதிர்க்க அதனைச் சமுத்திரராச ன்பார்த்து அதிகரித்தபயமுள்ளவனாயிதற்கென்னசெய்வோமென் று கலக்கமேலிட்டு அவர்களுக்கெல்லாம் பொதுவாகநின்றுசொன் னான்—எ-று. (௱௩)

அலைக்கையாற்றனித்தனியனைவர்தம்மைமயு
முலைக்கண்மேனவமணிமுரணச்சூட்டவுந்
தொலைக்கலாவமுதமேசொரிந்துபோற்றவுங்
கொலைக்கணீர்சிவந்ததெக்குறையினாலென்றான்.

(இ-ள்) என்னுடைய அலைக்கையினால் தனித்தனியாக உங்களெ ல்லாருக்கும் மார்பினிடத்திற்பொருந்தும்படி நவரத்தினமாலைகள் சூட்டவும்- ஒழிக்கப்படாத அமுதமூட்டி யுபசரிக்கவும்நீங்கள்கண் சிவந்ததெக்குறையினாலென்றான்—எ-று. (௱௪)

கங்கைதன்கணவனைக்கனன்றுதொல்குல
மங்கையரெவர்க்குந்தமகிழ்னரன்பலாற்
பங்கையப்பணிலமாநிதிபயந்தன
வுங்கையிற்பொருட்பொருளாகக்கொள்வரோ.

(இ-ள்) கங்கையானவள் தன்கணவனைக் கோபத்துடனேக்கிப் ப ழமையானகுலமாதர்களுக்கெல்லாந் தங்கள் தங்கள் கணவனுடைய அன்பேயல்லாமல் பத்மநிதியும் சங்கநிதியும்-கொடுத்தாலும் அவை களையொருபொருளாகத் தங்கள்கையில்வாங்குவார்களோ—எ-று.

பொற்றொடியவர்பதிபுரப்பதில்லரேற்
சுற்றமுமரதனத்தொகையும்வாழ்க்கையும்
பெற்றுடைவடிவமும்பிறவுமெய்தியெ
னுற்றுயிரிருப்பினுமிராமையொப்பரால்.

(இ-ள்) பொன்னாற்செய்த வளையலணிந்த கைகளையுடையவர்க ளாகியமாதர்கள் தத்தங்கணவர்களால் ஆதரிக்கப்படுதலில்லாதவர்க ளாகில் பந்துகளும் ரத்தினத்தொகைகளும்-வாழ்க்கையும் - இயல் பாகப்பெற்றுள்ள அழகும்-மற்றவைகளும் - பெற்றிருந்தும்பய னென்னை உயிருடன் பொருந்தியிருந்தாலும் உயிரில்லாதவர்களை யொப்பாவர்கள்—எ-று. (௯௬)

அவரவர்செய்வினையளவுமெல்லையு
மவருவருறுபதத்துறுதிறங்களாற்
றுவரவிர்சடையனுற்றுய்ப்பதன்றியே
யெவரெவர்க்குதவவற்றெய்துஞ்செல்வமே.

(இ-ள்) அவரவர்கள்செய்த வினைப்பயன்களால் சுகதுக்கங்களி னளவும். அவற்றையனுபவிக்குங்காலமும் அவரவர்கள்பொருந்திய பதவிகளில்பொருந்தும்விதமாகப்பவளம்போன்றசெம்மைநிறமு ள்ளசடாமகுடத்தையுடைய பரமசிவத்தினால் அனுபவிப்பதன்றிம ற்றையெவரெவர்களுக்கு வந்துதவுஞ்செல்வமே—எ-று. (௯௭)

நாயெனத்திரிபவுநகரத்தேனமுந்
தீயவுண்டியையமுதச்சிறப்பென்றுங்கணுமாற்
றூயவுமென்மையுஞ்சுமப்பினல்லது
மாயவெப்போகமோமகிழற்பாலதே.

(இ-ள்) நாயாய்த்திரிகின்றவைகளும் - நகரங்களிலிருக்கும் பன் றிகளும்- தீயவாகியவுணவையுமிக்கசிறப்பாகவுண்ணும்- அறுபோ லபரிசுத்தமானவைகளும் - இழிவானவைகளும்அனுபவிக்கப்படுவ தல்லது இந்தமாயாபோகம் மகிழத்தக்கதே—எ-று. (௯௮)

எற்றைநாள்வரையுடலெடுத்தியங்குநா
ளற்றைநாள்வரையுமுணமலனாட்டுமாற்

பொற்றிருவருமெனமானப்போக்கலர்
கற்றவருயிரினுங்காப்பர்காவலாய்.

(இ-ள்) எவ்வளவுநாள்வரைக்கும் -இவ்வுடலெடுத்து உயிர்கள்சஞ்சரிக்கும்நாளோ அந்தநாள்வரைக்கு முனவினைப்பரமசிவனூட்டுவான்-பொன்னுள்ள செல்வம் வருமென்று மானத்தையிழந்து விடார்கள்-நாயகனே கற்றுள்ளவர்கள் -மானத்தையுயிரினுங்விசேஷமாகக்காப்பார்கள்—எ-று. (௰௯)

ஆதலின்மைந்தராமவர்கட்காயினு
மாதர்கட்காயினும்வரிசையான்வரு
மேதகவுண்டியேயுண்டிமேம்படாப்
பாதகவுண்டியிற்பசிசிறந்ததே.

(இ-ள்) ஆகையால் ஆடவர்களுக்கேயானாலும் - மாதர்களுக்கேயானாலும் - முறைமையாகவருகின்ற மேன்மைபொருந்திய உணவேஉணவாவது - மேன்மையில்லாத பாதகவுண்டியைப்பார்க்கிலும் - பசியுடனிருப்பதுசிறந்தது—எ-று. (உ௰)

அனைவருக்கும்பொதுவாக்கஞ்செய்வனென்
றெனையுமற்றோரையுமிணையிற்கூறினை
வினையனதுயர்ச்சியும்வேறுவேறுள்ள
மனைவியர்மாட்சியும்வகுத்தியம்பலாய்.

(இ-ள்) எல்லாருக்கும் பொதுவான உபசாரஞ் செய்தேனென்று - என்னையுமற்றவர்களையுஞ் சமமாகச்சொல்லினை - வினையேனாகியஎன்னுடைய மேன்மையினையும்-இன்னமுமுள்ள மற்றமனைவியர்களுடையபெருமையினையும் வகுத்துச்சொல்லுகின்றிலை-எ-று.

முற்படுவோரிவர்முதன்மைமேன்மையிற்
பிற்படுவோரிவரெனப்பிரித்திலை
யற்படுமுடுக்குலமனைத்துங்கூடினும்
விற்படுமதிக்கெதிர்விளங்கித்தோன்றுமோ.

(இ-ள்) மூதன்மையினாலும் - மேன்மையினாலும் - முன்னிவர்பின்னிவரென்றுபிரித்திலை இராத்திரியிலுண்டாகிறநக்ஷத்திரக்கூட்டங்களெல்லாமொன்றாய்க்கூடினும் - ஒளிபொருந்திய சந்திரனுக்கெதிரில்பிரகாசித்துக்காணப்படுமோ—எ-று. (உஉ)

சிறுமையும்பெருமையுந்தெரிந்திலாயெனப்
பொறுமையொன்றின்றியேபொங்குங்கங்கையை
யறமலகுலமினார்க்கன்பர்பாற்செயுந்
திறமலசினமெனவருணன்றேற்றுவான்.

(இ-ள்) அவரவர்களுடைய சிறுமையும் பெருமையுந்தெரிந்து சொல்லுகின்றிலை யென்றுபொறுமையென்பதுகொஞ்சமுமில்லாமல் மனங்கொதிக்குங்கங்கையை நோக்கித்தங்கணவரிடத்தில் கோபங்கொள்ளுதல்குலமாதர்களுக்குத்தகுதியுடையது மல்ல -தருமமுமல்லவென்றுசொல்லிக்கங்கையைத்தேற்றுகின்றவனானான்-எ-று(உ௫)

யாதுயான்செய்குறையெய்துந்தோறுமென்
போதுலாமலைக்கையிற்புணர்ந்திலன்கொலோ
காதலாற்றிலன்கொலோகனநதிக்கெலா
மாதிநாயகியெனநின்னையார்சொல்லார்.

(இ-ள்) நானுனக்குச் செய்யுங்குறையாது - நீவருந்தோறும்-அலையாகிய என்கையினால் உன்னைநான்புணர்ந்திலேனோ- அன்றியு முன்னாசையைத் தீர்த்திலேனோ - பெருமைபொருந்திய நதிகளுக்கெல்லாம் - உன்னைமுதன்மையான நாயகியெனச்சொல்லாதவர்களார்—எ-று. (உ௬)

பாருடன்வானமும்பாதலாதியும்
பேரிடனினக்கெனப்பெருகுகின்றனை
கூர்விழிச்சிவனைமுன்புதைத்தகோதைகை
வேர்வையிற்பிறந்தனைவினையும்போக்குவாய்

(இ-ள்) பூலோகமுந்தேவலோகமும்பாதாளலோகமுதலானவைகளும்உனக்குப்பெரியஇடமென்று சொல்லும்படிப்பெருகுகின்றனை பரமசிவனுடைய கண்களைமூடிய பார்வதிதேவியாருடைய கைவியர்வையில் உற்பத்தியாயினை எல்லாருடைய பாவங்களையும் போக்குவாய்—எ-று. (உ௭)

இமையவெற்பிழிந்தனைசகரரென்பவர்
தமைவிசும்பேற்றினைசன்னுமாதவ
னமைசெவித்தோன்றினையமலைநின்புகழ்
சமைதரப்புகழ்வதுதமியற்கொல்லுமோ.

(இ-ள்) இமயமலையிலிருந்திழிந்தனை சகரர்களைச் சுவர்க்கத்திலேற்றினை-சன்னுமகாரிஷியினுடைய காதின்வழியாகவுந் தோன்றினை நீ அமலமாயிருப்பவள் உன்புகழிவ்வளவென்று அமையும்படியென்றூற்புகழக்கூடுமோ—எ-று. (உசு)

என்றவன்பகிரதிக்கினிமைகூறலு
மன்றலங்காளிந்திவாணிகாய்ந்தெழ
நன்றவர்க்குஞ்சிலநவிற்றினன்மற்றைத்
துன்றுபன்னதிகளுந்துனிதொடங்கினர்.

(இ-ள்) சமுத்திரராசன் இவ்வாறுகங்கைக்கு இனியவார்த்தைசொன்னபோது மணங்கொண்டுள்ள காளிந்தியுஞ் சரஸ்வதியுங்கோவித்தெழ-அவர்களுக்குஞ்சிலநல்லவார்த்தைசொல்லினன்- இதையறிந்துமற்றையநதிதேவிமார்களுமூடல்கொண்டார்கள்—எ-று (உஎ)

அகந்தைகொண்டொருவருக்கொருவரார்த்தெழுந்
திகழ்ந்தனரென்னில்யாரென்னில்யாரெனுப்
புகுந்தனர்பூசலிற்பொருமையாற்றலர்
மிகுந்தனர்வருணனின்றமைத்தும்வெம்மையே.

(இ-ள்) இவ்வாறு அந்தநதிதேவிகளெல்லாரும் ஒருவருக்கொருவர் போர்செய்தெழுந்து ஒருவரையொருவரிகழ்ந்து என்னைவிடயார்சிறந்தவர்க ளென்னைவிடயார் சிறந்தவர்களென்று - பொருமைக்குணத்தைத் தணிக்காதவர்களாய்ப் போர்செய்யத்தொடங்கினூர்கள்- அதைச்சமுத்திரராசன்கண்டு சாந்தஞ்சொல்லியுங் கோபமிகுத்தார்கள்—எ-று. (உஅ)

வேறு.

நல்லுவாயுணர்த்துஞ்சீற்றநதிகண்மாறுமைநோக்கி
பொல்லொலிவருணன்சிறிபுலாசமீரூமுண்டா

மெல்லியிதீர்த்தநும்மிற்பெரியன வெம்மனோர்க்கு
மல்லமுக்கணனும்போற்றியளப்பரிதாராளப்பார்

(இ-ள்) நல்லவார்த்தைகள் சொல்லியும்-அந்தநதிதேவிமார்- கோபந்தணியாமையைப்பார்த்துச் சமுத்திரராசன் உரத்தசொல்லுடன்கோபித்து உங்களிலும்பெரியதீர்த்தங்கள் பதினான்கு உலகங்களிலும் அளவில்லாதவைகளுண்டு அவைகளையென்போலிகளுமல்ல பரமசிவனும்போற்றியளப்பரிதென்றால் மற்றையாராளப்பவர்கள்-எ-று. (உ௯)

கருதிகளனந்தங்கோடிகுமேச்சுரனெனும்பேர்பாட
வருசிவலிங்கங்காவிரிக்கரைவருமந்த
வரியதோர்மூர்த்திதீர்த்தம்பலர்தொழவமருமாங்கே
தெரியுறுங்கீழ்மைமேன்மைசிறிதினிப்பொறுமினென்றான்.

(இ-ள்) அனந்தங்கோடிவேதங்கள் குமேச்சுரனென்னும் பெயரோதச் சுயம்புவாகத்தோன்றிய ஒருசிவலிங்கங் கோதாவிரித்தீர்த்தக்கரையினுண்டு-அருமையாகிய அந்தமூர்த்தியுந்தீர்த்தமும் யாவருந்தொழும்படிபொருந்தியிருக்கின்றன அங்கேயுங்களுடையகீழ்மையுமேன்மையுந்தெரியும்சற்றே பொறுத்திருங்களென்றுசொன்னான்—எ-று. (௩௰)

நெடிதுநாட்சென்றுமின்னுநீவெயமதிகலையெல்லாங்
கடிதுதீர்த்திலையென்றேதங்கணவனைநதிகணோக்கிக்
கொடுமொழிமொழியக்கோடகுமேசுரன்கோயிற்கண்ணான்
வடபகிரதியேயாதிமனைவியரொடும்போய்த்தாழ்ந்தான்.

(இ-ள்) நெடுநாள்சென்றும் அவர்களுடையகோபந்தணியாமல் நீஎங்களுடைய விரோதத்தை யின்னமுந்தீர்த்திலை யென்றுதங்கள் கணவனை நதிகளெல்லாம்பார்த்துக்கொடியவார்த்தைகள் சொல்லவேசமுத்திரராசன்கங்கைமுதலானதேவிமாருடன்கோடிகுமேசுரன் கோயிலுக்குச்சென்று பணிந்தான்—எ-று. (௩௧)

கங்கையேயாதியாமென்காந்தையரினத்தோடேடித்
தங்களிற்பொருமைகூர்ந்துதனித்தனிபெரியமென்று
வங்கினையலைப்பப்போந்தேனையநீதீர்த்தாலன்றி
வந்தவெந்கடற்குமேசன்னைவருவனீடையென்றான்.

(இ-ள்) பரமசிவனே கங்கைமுதலாகிய என்மனைவியர்கள் பொ றாமையதிகரித்துத்தனித்தனிநான்பெரியவள்நான்பெரியவளென்று தங்களுக்குள் பகைகொண்டு அவ்விடத்திலென்னைவருத்தினதால் அ டியேனிங்குவந்தேன் அய்யனே யிதனைத்தேவர் தீர்த்தாலல்லது-நா னினிக் கடலிடத்துக்குப்போகேனிங்குத்தானே யிருக்கிறே னென் றுபணிந்தான்—எ-று. (ருஉ)

கோடிசங்கரத்துளெம்மான்வருணனைக்குழைந்துநோக்கி
வாடியஞ்சலையென்றாற்றிவானதியாதியோரை
யூடியவழக்காறேடுமொருவருக்கொருவர்நம்மை
நீடியபெரியமென்னுப்பெண்மதிநினைத்துப்போந்தீர்

(இ-ள்.) கோடீஸ்வரலிங்கத்துள்மூர்த்தித்திருக்கும்நமதுபரமசிவ ம்திருவுளமிரங்கிவருணனைநோக்கி நீமனம்வாடிஅஞ்சாதேயென்று தேற்றிக்கங்கைமுதலாகிய நதிகளைப்பார்த்து நீங்கள்ஒருவருக்கொ ருவர் நாம்பெரியம் நாம்பெரியமென்று பெண்புத்தியில்நினைத் துஊடியவழக்குடன்வந்தீர்கள்—எ-று. (ருரு)

(கோடியென்பதுநதிக்கரை.)

நனியுமக்கேற்றம்யாதுநமதுருத்திரகோடிக்கட்
பனிவருந்தீர்த்தங்கோடிபரந்துளவவற்றின்வீசும்
புனிதவெண்டிவலையொன்றினூற்றொன்றுபுகலப்பற்றீர்
முனிவரர்சுரர்முப்போதுமூழ்கித்தம்வினைகளைவார்

(இ-ள்) உங்களுக்கு மிகுந்தமேன்மையென்னிருக்கின்றது நம் முடைய ருத்திரகோடித் தலத்தினிடத்தில் குளிர்ச்சிபொருந்திய கோடிதீர்த்தங்கள் பரவியிருக்கின்றன - அந்தத்தீர்த்தங்களில்வீசு கின்ற பரிசுத்தமும் வெண்மைநிறமுமுள்ள ஒருதுளியினுடைய பாகம் நூற்றிலொன்று சொல்லப்போதாதீர்கள் - அந்தத்தீர்த்தங் களில் தேவர்களுமுனிவர்களும் திரிகாலங்களிலும் ஸ்நானஞ்செய் துதங்கள்பாவங்களைத்தீர்ப்பார்கள்—எ-று. (ருச)

சிங்கமேற்குருவந்தெய்தச்சிறந்தமாமகமிக்காலை
யங்குநாம்போதநீரும்போதுமினரசோடெல்லுஞ்

சங்கரன்போக்கக்கோடிசங்கர தீர்த்தத்தோடும்
கங்கையைமுதலோர்யாரும்வருணனுங்கதழ்ந்துபோனார்

(இ-ள்) சிங்கராசியில் குருவந்துபிரவேசிக்கச் சிறந்தமாமகநக்ஷத்திரமிப்போது-ஆதலால் அந்தருத்திர கோடிதலத்துக்கு நாமெழுந்தருளுகிறோம் - நீங்களுமுங்கள் கணவனுடன் அங்கேவாருங்களென்றுபரமசிவமெழுந்தருளக்கோடீசுவர தீர்த்தத்துடன் கங்கைமுதலாகியநதிகளும் வருணனும் விரைந்துசென்றார்கள் —எ-று, (௬௫)

உருத்திரகோடித்தானத்துமையொருபாகன்போகித்
திருத்தங்கள்பலவுங்காட்டச்சென்றுசென்றிறைவரோடும்
விரித்தபன்னதியுமூழ்கிவைகித்தம்வினையுநீங்கிக்
கருத்தழுக்காறுமாறிப்பணிந்துதங்கதியிற்போனார்.

(இ-ள்) உருத்திரகோடிதலத்தில் பார்வதிபாகனுகியபரமசிவமெழுந்தருளி அங்கிருக்கும் பலதீர்த்தங்களையுங்காட்ட அவைகளில் தங்கள் கணவனுடன் நதிகளெல்லாம் ஸ்நானஞ்செய்து அங்குவாசமாயிருந்து தங்கள்பாவங்களையும்நீங்கி-மனதிலிருந்த பொறாமையும்மாறிப்பணிந்துதங்கள்தங்களிடத்திற்போய்ச்சேர்ந்தார்கள்-எ-று.

இன்னெறித்திருத்தங்கோடிகோடியுளிலக்கமிந்த
மின்னுறுமிலக்கந்தன்னுளயுதமற்றயுதத்துமிட
யுன்னுமாயிரமாமாயிரத்தினுமொருநூற்றுள்ளும்
பன்னிரண்டுளதுகேட்டிபருதியங்குலத்துவேந்தே.

(இ-ள்.) இம்முறைமை பொருந்திய தீர்த்தங்கள் - கோடியுண்டு இந்தக்கோடிக்குள்லக்ஷஞ்சிறந்தது - இந்தலக்ஷத்துக்குள் - பதினாயிரஞ்சிறந்தது இந்தப்பதினாயிரத்துக்குள் -ஆயிரஞ்சிறந்தது-ஆயிரத்துக்குள் நூறுசிறந்தது - நூற்றுக்குள் பன்னிரண்டுசிறந்தது - சூரியகுலராசனே அவைகளைச்சொல்லுகிறேன்கேட்பாயாக— எ-று

வேறு.

திருமலைக்குக்கீழ்ப்புலத்தொன்றிந்திரமாப்பொய்கை
தெல்கிழ்சம்புருத்திரகோடித்தடமென்றிரண்டா

மரிது தென்பால்வயிட்டமொன்று நிருதியின்மெய்ஞ்ஞான
மகத்தியமார்க்கண்டமுடன்கோசிகநான்கமரு
மருவுகுடபானந்திவருணையிரண்டிலங்கும்
வடமேலையகலிகையொன்றிக்கிரிவான்முகட்டி
னிருவரும்யாங்கண்டதொன்றுண்டெமது பெயரதுவா
மித்திறம்பன்னிருதீர்த்தமெவ்வினையுந்தொலைக்கும்.

(இ-ள்) சிறப்புள்ள இந்தவேதகிரிக்குக் கீழ்த்திசையில் ஒருதீர்த்தமிருக்கின்றது - அதன்பெயர் பெருமைபொருந்திய இந்திரதீர்த்தம் - தென்கிழக்கில் சம்புதீர்த்தம் -உருத்திரகோடித்தீர்த்தம்-என்றிரண்டு - அவையாவர்க்கு மரியனவாயிருப்பது - தென்றிசையில்வசிஷ்டமென்னுமொருதீர்த்தம்-நிருதியில்மெய்ஞ்ஞானம்- அகத்தியம் - மார்க்கண்டம் - கோசிகம்-என நான்குதீர்த்தமுண்டு -பொருந்தியமேற்குத்திசையில் நந்தி-வருணமென இரண்டுதீர்த்தம்விளங்கும் - வடமேற்கில் அகலிகையெனவொருதீர்த்தம் - இந்தமலையினுச்சியில்நாங்களிருவருங் கண்டதாகிய தீர்த்தமுண்டு அதுசம்பாதிதீர்த்தமென்று எங்கள்பெயரால் வழங்குகின்றது - இவ்வாறுள்ளதாகிய பன்னிரண்டு தீர்த்தங்களும் எவ்விதபாவங்களையும் நீக்கும்—ஏ-று. (௫அ)

காணினுங்கைதொடினுமள்ளித்தெளிப்பினுமுட்கொளினுங்
கணப்பொழுதுமுழுகினும்போய்க்கால்வழுக்கிவிழினும்
பாணியிரிதிரையினொருபனித்திவலைபடினும்
படருங்காற்றணுகினுமெய்ப்பாதகமுங் கடிபோஞ்
சேணுலகுதொழுமித்தத்தடந்தொறுநீர்முகந்து
செனுமடிபோரயமேதத்திறநிகராம்விரதம்
பூணுமவர்படிந்தியற்றிலனந்தமெனப்பலிக்கும்
புராரியென்றுந்தீர்த்தமென்றுமிரண்டிலையிப்புரிக்கே.

(இ-ள்) பார்த்தாலுங்கைகளாற் பரிசித்தாலும் அள்ளித்தெளித்துக்கொண்டாலும் - உட்கொண்டாலும் - க்ஷணப்பொழுது ஸ்நானஞ்செய்தாலும் - அங்கே போய்க்கால்சறுக்கி விழுந்தாலும் பரந்தஅந்தத்தீர்த்தத்தில் ஒருதுளி தெறித்தாலும் அதில்பரந்துவருகிறகா

ற்றுமேலேபட்டாலும் உண்மையாகிய பாதகங்களெல்லாங் குடி
போகும் - விண்ணுலகத்தார்தொழத்தக்க இந்தத்தீர்த்தங்கள் தோ
றும்நீர்மொண்டுகொண்டொரு அடியெடுத்துவைத்துச் செல்லுதலொ
ரு அசுவமேதயாகபலத்தை யொப்பாகும்-விரதம்அனுஷ்டிக்கின்றவ
ர்கள்இந்தத்தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து அனுஷ்டித்தால் ஒன்று
அநந்தமாகப்பலிக்கும்-இந்தக்ஷேத்திரத்தில்சிவமென்றுந்தீர்த்தமெ
ன்றுமிரண்டில்லையிரண்டுஞ்சமானமேயாம்—எ-று. (௫௯)

தீர்த்தச்சருக்கம் முற்றியது.

ஆ. திருவிருத்தம் - ௭௬௩

# தலவிசிட்டச்சருக்கம்.

வேதமுருத்திரர்கோடிநந்தியொடிந்திரனும்
விழுத்தகுநாராயணனும்பிரமனுமேல்வசுவும்
ஆதவருஞ்செய்பரிதிகளுமுனிகணமுமெம்மோ
டடுத்தநாலிருகங்கமாயவருமுதலோ
ரோதமுற்றவிருவினையுந்தொலைபவருச்சித்த
ரிவர்திருப்பேரிக்கிரியுமிப்புரியுந்தரிக்கு
மோதலுறுமிவையுமன்றிச்சிவபுரந்தென்கயிலை
யொண்கதலிவனத்தருமகோடியுமென்றுரைக்கும்.

(இ-ள்) வேதங்களும் ருத்திரகோடியரும் -நந்திதேவரும்தேவே
ந்திரனும் மேன்மைபொருந்திய நாராயணமூர்த்தியும்-பிரமதேவ
னும்-வசுதேவர்களும்-ஒளிசெய்கின்றசூரியர்களும் -முனிகணங்களு
ம் - எங்களுடன்பொருந்திய எட்டுக்கமூர்த்துருவபாவந்தவர்களுமா
கிய இவர்கள் முதலானவர்கள் குற்றம்பொருந்தியஇருவினையுந்திரு
ம்படி யிங்குவந்து பூசித்தார்கள் ஆதலாலிம்மலையுமித்தலமும்மி
க்கப்புள்ள இவர்களுடையபெயரைத் தரித்திருக்கின்றது சொல்லுகி
ன்றஇவைகளுமல்லாமல்சிவபுரம்- தென்கயிலைபிரகாசம்பொருந்திய

கதலிவனம்- தர்மகோடியென்று மிந்தப்பெயர்களாலுஞ்சொல்ல ப்படும்—எ-று. (க)

எத்தனைபேருருத்திரருமெழுவகைமங்கையரு
   மீராறுபொற்கரனுமிமகரனுமருச்சித்தார்
மெய்த்தவமார்க்கண்டனுடன்சம்புமுனிகும்பன்
   விறல்வயிட்டன்விச்சுவாமித்திரன்மெய்ச்சனகன்
வைத்தவகலிகையிறரும்வருணனும்போய்ப்பணிந்தார்
   மற்றெனைவானவருமுனிவரும்வணங்கித்
தத்தமதுகுறைமுடித்தாரொருவிரிஞ்சன்றனையோர்
   தனித்தனிவந்தாற்றுவார்தாழ்ந்தாரித்தலமே.

(இ-ள்) எத்தனைபேரென்னில்உருத்திரர்களும்சப்தமாதர்களும்சு ப்பிரமணியசுவாமியும்சந்திரனும்பூசித்தார்கள் - இவர்களுமல்லாம ல்-உண்மைத்தவமுள்ள மார்க்கண்டமுனிவர்-சம்புமுனிவர்-அகஸ்தி யமுனிவர்-தவபலமுள்ள வசிஷ்டமுனிவர் - விசுவாமித்திரமுனிவ ர் - வாய்மையுள்ள சனகமுனிவர் - அகலிகை - வருணன் -இன் னம் - அனேகம்பேரும்போய்ப் பணிந்தார்கள் இவர்களுமன்றித் தேவர்களும் - முனிவர்களும் பணிந்து-தங்கள்தங்கள்குறையைநி றைவேற்றிக்கொண்டார்கள். ஒப்பற்ற பிர்மதேவனையொத்தவர்கள் தனித்தனிவந்து பூசைசெய்து பணிந்தார்களிந்தத்தலத்தில் - எ -று

வேறு.

இந்தவேதாசலஞ்சூழெல்லையேழனாக்காதத்தும்
பந்தபாதகமொன்றொன்றாய்ப்படுமொருதருமஞ்செய்சாற்
றந்தநேர்கோடியாகித்தருமகோடிப்பேர்சாருஞ்
சிந்தருச்சடையான்வைகிச்சிவபுரமெனவுஞ்செப்பும்

(இ-ள்) இத்தன்மையுள்ள வேதகிரியைச்சூழ்ந்த எழனாக்காதஎல் லையிலும் செய்கின்றபந்தமாகிய பாதகங்கள்செய்த தெவ்வளவோ அவ்வளவில் பொருந்தும்-தருமமோவென்றால் ஒன்றுசெய்தாலு ம்-அதுகோடியாய்ப்பெருகி அந்தக்காரணத்தினால் இதுதருமகோ டித்தலமென்று பெயர்பொருந்தும் - கங்காநதிநீங்காத சடாமுடி யையுடைய பரமசிவம் வீற்றிருந்தருளுங் காரணத்தால்சிவபுரமெ ன்றுஞ்சொல்லப்படும்—எ-று. (ரு)

அரைபரவசைத்தோன்யார்க்குமருடரக்கருதிவெள்ளி
வரையினுங்குவடுமூன்றுவைத்துவையென்றென்றேவப்
புரைதபுபருப்பதத்திற்காளத்திப்பொருப்பிலிந்த
வுரைதெரிவேதவெற்பினந்திவந்துய்த்துப்போனான்.

(இ-ள்) திருவரையில். சர்ப்பக்கச்சணிந்த பரமசிவம் இவ்வுலகத்திருக்கும்யாவருக்குங்கிருபைபிரசாதித்தருளத் திருவுளத்திற்கருதி இக்கயிலாயகிரியின்சிகரங்களில் மூன்றுசிகரங்கொண்டுபோய்வைத்துவையென்றுகட்டளையிட்டருள நந்திதேவர் அந்தக்கட்டளையைப்பெற்றுக்கொண்டு குற்றம்நீங்கிய ஸ்ரீசைலத்திலும்திருக்காளத்திமலையிலும் மேன்மைவிளங்கும் இந்த வேதகிரியிலுங் கொண்டுவந்துவைத்துச்சென்றார்—எ-று. (௪)

கயிலையிற்சிகரமூன்றுங்காளத்திபருப்பதத்தோ
டெயில்கெழுவேதவெற்பினொவ்வொன்றாயிருக்குமாற்று
லயிலவன்றந்தைக்கிந்தவசலங்கண்மூன்றுமென்றும்
வெயிலவன்குலவேந்தேதென்கயிலையாய்விளங்குங்கண்டாய்.

(இ-ள்) சூரியகுலராசனே கயிலாயகிரியின் சிகரங்களுக்குள் மூன்றுசிகரங்கள்காளத்திமலையிலும்-ஸ்ரீசயிலத்திலும்-மதில்சூழ்ந்த வேதகிரியிலு மொவ்வொன்றாயிருக்கு முறைமையினால் அவை வேலாயுதக்கடவுளுடைய திருத்தாதையாகியபரம சிவத்துக்குஎந்நாளுந்தென்கயிலையாய்விளங்கிக்கொண்டிருக்கும்—எ-று. (௫)

பாதலத்தளவுமோர்தாட்பதுமமுமண்டகூட
மீதலத்தளவுமோர்தாட்கமலமும்விடுத்தெம்மையன்
றீதலைத்தகற்றுமாலவனத்தெதிர்சினத்தகாளி
வாதலைத்தாடியிந்தவரையின்வந்திளைப்புமாய்த்தான்

(இ-ள்) பாதாளலோகவரையில் ஒருதிருவடித்தாமரையும்-அண்டகூடமாகிய மேலுலகமட்டும் - ஒருதிருவடித்தாமரையும் செலுத்தி - நம்முடைய கர்த்தாவாகிய பரமசிவம் அடியார்களுடைய குற்றங்களையெல்லாங் - கெடுத்து நீக்கத்தக்கதாகிய திருவாலங்காட்டில்

தமக்கெதிரில் கோபங்கொண்டு வந்தகாளியினுடைய வாதாட்டத்தினைக்கெடுத்துஊர்த்ததாண்டவஞ்செய்து இந்தவேதகிரியில் வந்து இளைப்புநீங்கினார்—எ-று. (௭)

உருத்திரகோடியென்னவுவந்தினிதொருகாற்கூறிற்
கருத்துறநூறுகோடியெழுத்தைந்துகழறலேய்க்குந்
திருத்தகுமந்திரத்தாடயலொன்றுதேடித்தம்வாய்
வருத்தினுமிதன்மேலெய்தும்பேறினிமற்றொன்றுண்டோ.

(இ-ள்) உருத்திரகோடியென்றுமகிழ்ச்சியுடனினிதாக ஒருதரஞ்சொன்னாலும்கருத்திற்பொருந்தநூறுகோடிபஞ்சாக்ஷரஞ் செபித்தலொக்கும் - இன்னமுமுள்ளமேன்மைபொருந்திய மந்திரங்களுக்குள்வேறோர்மந்திரத்தை ஆராய்ந்துதங்கள்வாக்கில்வர உச்சரித்தாலும் இதற்குமேலாகப் பொருந்தும்பேறு வேறுண்டோ—எ-று.

இம்மறைக்கிரியைநாடியாவர்போதலைப்புக்காலுந்
தம்மனைக்கடையினின்றுதண்புனன்மூழ்கிநீறு
மெம்முடைப்பெம்மான்கண்மாமணிகளுமினிதுசாத்தித்
தம்முடைக்கரத்துத்தூயபவித்திரந்தரித்துமன்றோ

(இ-ள்) இந்தவேதகிரியைக்குறித்து எவர்கள் செல்லத்தொடங்கினாலும் - தங்கள்மனையினிடத்திலிருந்து குளிர்ச்சிபொருந்தியநீரில் ஸ்நானஞ்செய்து விபூதியும் நம்முடைய பெருமானது திருநேத்திரமணியாகிய உருத்திராக்ஷமணிகளு மினிதாகத்தரித்துக் கொண்டும் - தங்களுடைய கைவிரலில் பரிசுத்தமான பவித்திரந் தரித்துக்கொண்டும்—எ-று. (அ)

மும்மைபாற்பிராணயாமமியற்றுபுமோனமாகி
யெம்மையாளுடையான்வேதக்குன்றகத்தேகுமெல்லை
வெம்மையினிடையூறேதும்வினைதராதமலன்காக்க
நம்மையென்றெழுத்தஞ்சோர்ந்துநகர்ப்புறத்தகலுங்காலே.

(இ-ள்) மூன்றுதரம்பிராணயாமஞ் செய்து மௌனமாகிநம்மையடிமையாகக் கொண்டருளும் பரமசிவனுடைய வேதகிரியி

னெல்லையிற்செல்லும்போது கொடுமையாகயாதொருஇடையூறும் உண்டாகாதவண்ணம் - பரமசிவம் நம்மைக்காக்கக்கடவ தென்று பஞ்சாக்ஷரங்களை யுச்சரித்துக்கொண்டு ஸ்தலத்தின்புறத்திற்செல் லும்போது—எ-று.

பிராணாயாமமென்பது-பிராணவாயுவை இரேசக பூரக கும்பக ஞ்செய்தல். (௯)

தூயவூணொருபோதுண்டுபிறவயிற்சோறுமாதர்
காயமுங்களவுந்தீயகருத்துந்தீமொழியுநீக்கி
மேயபாதுகையோடூர்திவிரிகுடையடைக்காயெண்ணெய்
யாயவுமகற்றிநித்தியமுமாற்றிமாதோ

(இ-ள்) பரிசுத்தமுள்ள உணவுஒருகாலமுண்டு - அன்னியர்வீட்டுப்போசனமும் - மாதருடைய தேகபரிசமும் - களவும்- கொடிய எண்ணமும் கொடியவார்த்தையும் நீங்கிப்பொருந்திய மிதியடி-வாகனம் - விரிக்குங்குடை-தாம்பூலம்- எண்ணெய்-என்னு மிவைகளையும் நீக்கி நித்தியநியமங்களாகிய அநுஷ்டானங்களையு முடித்துக்கொண்டு—எ-று. (௰)

தந்தமருடன்சென்றேனுந்தான்றனிகுறுகியேனு
மிந்தமாநகரத்தெய்தியினிதுடற்றூய்மையாற்றி
நந்தியந்தீர்த்தநண்ணிநடுத்திலம்பெய்துகாரி
செந்திருவருள்பெற்றாடித்தென்புலர்கடன்செய்தம்பா

(இ-ள்) தங்களுடைய சுற்றத்தாருடன்சென்றாகிலும் - தான்தனியே சென்றாகிலும் பெருமைபொருந்திய இந்தக்ஷேத்திரத்திற்சேர்ந்து இனிதாகத் தேகசுத்திசெய்துகொண்டு - அழகுபொருந்திய நந்திதீர்த்தத்தில் அணுகி நடுவில் எள்ளும்போட்டு வயிரவருடைய நல்ல அருளைப் பெற்றுக்கொண்டு ஸ்நாநஞ்செய்து பிதிர்தருப்பணமுஞ்செய்து—எ-று. (௰௧)

களையடைந்தியன்றதானம்வேதியர்கரத்தீந்திந்த
வளைவலமைங்கான்முக்காற்புரிந்துமால்வரைபுக்கேனு
நிறைபலக்கேறவஞ்சிநிலத்தினின்றேனுமீசன்
குரைகழற்பூசைசெய்துஞ்செய்வித்துங்குழைந்துதாழ்ந்தே.

(இ-ள்) சுனையிற்சேர்ந்து இயன்றமட்டில் பிராமணர்கள்கையில்தானமுங்கொடுத்து ஐந்துதரம் அல்லது மூன்றுதரங்கிரிப்பிரதக்ஷிணஞ்செய்து-இந்தப்பெரியமலைமேலேறியாவது- மலையிலேறப்பயந்து சுனையில்நின்றாவது வேதகிரீசருடைய வீரகண்டையணிந்ததிருவடிகளுக்குப் பூசைசெய்தும்-செய்யப்படாதவருணத்தார் அருச்சகரைக்கொண்டுசெய்வித்தும் மனமுருகிப்பணிந்து -எ-று.

எள்ளளவேனு மங்கணனுத்துணையிருந்தவேனு
முள்ளளவுமுளத்திற்கள்ளாதுடைமைபங்கன்பணிக்கென்றீந்து
வள்ளன்முன்பெழுத்தஞ்சோதியிருந்தெழீமாற்றியூணு
நள்ளிருட்கடந்தவ்வாம்றேநறும்புனலாடியிப்பால்

(இ-ள்) அக்காலத்து எள்ளளவுபொருளிருந்தாலும் அணுவளவுபொருளிருந்காலும் தங்[illegible]குள்ளளவு மனதில் ஒளிக்காமல் சிவபணிக்காகக் கொடுத்துப் பரமசிவத்தினுடைய சந்நிதிக்கெதிரிலிருந்து பஞ்சாக்ஷரஞ்செபித்தெழுந்து -ஆகாரமும் நித்திரையும் நீக்கி இரவு சென்றபின் மேற்சொல்லிய முறைமைப்படி நல்லதீர்த்தத்தில்ஸ்நானஞ்செய்து அதன்பின் -எ-று. (ருக)

நியமமுமியற்றித்தான நல்கியந்தமலன்கோயில்
வியன்மதில்வலஞ்சூழ்ந்துட்போய்மெய்ப்பதம்வணங்கிவாழ்த்தி
யியனெறிமறையோர்க்கன்னமீந்தரனடியார்தம்மை
யயினிகொடருச்சித்தன்னோர்பணிசுமந்தருந்தித்தானும்.

(இ-ள்) நித்தியநியதிகளை முடித்துத்தானங்கொடுத்து அந்தப் பரமசிவத்தின் ஆலயத்தினுடைய பெரியமதிலின் புறத்தில் பிரதக்ஷிணஞ்செய்து உள்ளேபோய்ப் பரமசிவத்தினுடைய திருவடிகளை வணங்கித்துதிசெய்து - பொருந்தியநல்லொழுக்கமுள்ள பிராமணர்களுக்கு அன்னம்படைத்தலாகிய சந்தர்ப்பணைசெய்து சிவனடியார்களை அன்னத்தினாலருச்சித்து அவர்களுடைய ஏவலைப்பெற்றுக்கொண்டு தானும்போசனஞ்செய்து— எ-று. (ருச)

அன்னம்படைத்து- எனச்சொல்லவேண்டுவதை- அன்னத்தினால் அருச்சித்து என வுபசாரமாகக்கூறினர்.

இவ்வழியிறைஞ்சிடீள்வோரெழுகடல்வளாகந்தங்கள்
கைவ்வழியொருசெங்கோலிற்காப்பிடையடையக்காத்து
மெய்வ்வழிநுகர்ச்சிமுற்றிவினையிரண்டொப்பாய்முத்திக்
குய்வ்வகையடைவர்கண்டாயொளிர்மதிக்கவிகைவேந்தே.

(இ-ள்) பிரகாசிபாநின்றசந்திரனையொத்தவெண்குடையினையுடைய அரசனே இந்தமுறைமைப்படி வணங்கிச்செல்லுகின்றவர்களெழு சமுத்திரஞ்சூழ்ந்தஇவ்வுலகமுழுவதும்-தங்கள்கைவழியிற் செல்லும் செங்கோற்காவலுக்குட்படும்படி அரசாட்சிசெய்து - தேகசம்பந்தமான இன்பங்களை அநுபவித்து அதற்குமேலிருவினையொப்புவந்து உப்யுங்கிரமத்தில் மோக்ஷம்அடைவார்கள் - —எ-று.

இருவினையொப்பின்விவரம் பெரியோர்கள் முன்னிலையிலறிந்துகொள்ளத்தக்கது. (மரு)

போதலைக்கருதிப்பெம்மான்புரத்திடையடையும்போதிற்
கோதிலாவணிமைவைகுருத்திரகோடிமூதூர்
காதலித்தணுகில்வண்ணமாங்கலற்றுதாழி
னேதிலானேனுமுத்தியெய்துமீதுண்மைகண்டாய்.

(இ-ள்) இவ்வாறு தரிசனத்தின்பொருட்டுச்செல்லுதலைக்கருதி நம்பிறைவனாகிய வேதகிரீசர்தலத்திற்சேரும்போது-அந்தத்தலத்தின்சமீபத்திலிருக்கும் குற்றமில்லாத பழமையாகிய ருத்திரகோடித்தலத்தில் விருப்பத்துடன் சென்றாலும் - பரமசிவத்தின் வண்ணமாகிய சாரூபங்கிடைக்கும் -சென்று பணிவானாகில் அவன் குலமுதலியவற்றில் அன்னியனேயானாலும் மோக்ஷமடைவன் அரசனேயிதனையுண்மையாகநம்பு—எ-று. (மசா)

கையசையாதெழுத்தோராைந்தன்றிக்கருதிடாது
பையவீரடிக்குநாப்பணோரடிப்பாற்பேறாது
செய்யசூலகட்டின்மூற்றிச்செல்கின்றசெல்வமாதர்
தொய்படிநடையிற்சூழும்வலத்தினர்முத்திசூழ்வார்.

(இ-ள்) கைகளையசைக்காமலும் பஞ்சாக்ஷரமேயன்றி மற்றொன்றினையுங் கருதிடாமலும் பெயர்த்துவைக்குமிரண்டடியின் மத்தியில் - ஒருஅடியின் விசாலத்துக்குமேல்அதிகரிக்காதவண்ணஞ் செவ்விதானகருப்பமானது வயிற்றில்நிறைந்துநடக்காநின்றசெல்வமுள்ளமாதர்களுடைய சோர்வுள்ளகால்நடையைப்போலமிருதுவாகவலஞ்சூழ்ந்து வருகின்றவர்கள் மோக்ஷத்தையடைவார்கள்.

யாவரேயெனினுமிவ்வாறிம்மறைக்கிரிசூழ்ந்தேகும்
பூவர்சேவடிச்சுவட்டிற்பூப்பொழிந்திறைஞ்சிப்பூழி
யாவலோடள்ளிச்சென்னிநுதலகத்தணிவரெல்லாத்
தேவராதியருமென்றாலதன்பயன்றெரிக்கலாமோ

(இ-ள்) எத்தன்மை யுடையவர்களேயானாலும் இங்குக் கூறிய முறைமைப்படி யிந்தவேதகிரியைப் பிரதக்ஷிணஞ்செல்லுகின்ற செந்தாமரைமலர்போன்ற பாதச்சுவட்டினிடத்தில் மலர்களாலருச்சித்துப்பணிந்து அந்தமண்பொடியைஆசையுடன்அள்ளிச்சிரசிலும் நெற்றியிலும் தரித்துக்கொண்டவர்களை தேவர்கள்முதலான எல்லாருமென்று பெரியோர்கள் சொல்லுவார்களாகில் அந்தச்சுவட்டின்பயனைத்தெரிந்துசொல்லக்கூடுமோ—எ-று. (௰௮)

தேவராதியருமென்றதனால் - தேவர்கள் - அரசர்கள் - மற்றுமுள்ள செல்வவான்கள் என்னும் யாவரையுங் குறிக்கப்படுகின்றது.

கோடியற்பலசெய்தோர்க்குமுருத்திரகோடியீசர்க்
காடியின்மதியகத்தோரபரத்தட்டமிநாட்பூசை
நீடியவுவாவிரண்டுநிரப்பினுமனையதேயாம்
பாடியல்பருந்தின்பந்தர்படுநிழற்படைக்கைவேந்தே

(இ-ள்) ஆகாயத்திற்பொருந்திய பருந்துகளாகிய பந்தலினுடைய நிழல்படும் வேலாயுதமேந்தியகையையுடையஅரசனே இவ்வாறு அனேகங்கோடிசெய்தவர்களுக்கும் ருத்திரகோடீசர்க்கு ஆடிமாதத்தில்வரும் அபரபக்ஷத்து அட்டமித்திதியிலும்நீடியபர்வத்திலும் அமாவாசையிலுஞ் செய்தவர்களுக்கும் வரும்பலன் ஒருதன்மையதேயாகும்——எ-று.

அரசர்கள்போர்செய்தலைக்குறித்து வேலாயுதமெடுத்துக்கொண்டுசெல்லும்போது தங்களுக்கிரையகப்படுமென்று பருந்துகள் ஆகாயத்திற்சூழ்வதியல்பு. (௰௯)

சிறார்விளையாட்டின்மண்ணிற்சிவாலயமியற்றினுலு
முறாரலர்சிவலோகத்தையுருத்திரகோடீசர்க்கு
மறுதிரந்தேனுங்கோயில்வகுத்தவர்முத்திதன்னிற்
பெறுநிலைபில்லையென்னும்பெருமறைமுறையிட்டோதும்.

(இ-ள்) சிறுபிள்ளைகள் விளையாடலில்-மண்ணினால் சிவாலயமுண்டாக்கினாலும்-அவர்கள் சிவலோகத்தைப் பொருந்தாதவர்களல்லர் - பொருந்தத் தக்கவர்களேயாம் - உருத்திரகோடீசருக்கு இரந்தாகிலும் ஆலயம்வகுத்தவர்கள்-சிவலோகத்தில்-இடம்பெறாதவர்கள்-இல்லையில்லையென்று பெரியவேதங்கள் முறையிட்டுச்சொல்லுகின்றன—எ-று.

இரந்தலிசுந்வென்றுசுருதி தன்னமறுத்துவிடாமல் இரந்தாவது ஆலயஞ்சமைக்கவேண்டுமென்னுங் கருத்துப்பற்றி மருதுளன்றனர் பிறர்பொருளைக்கொண்டு ஆலயஞ்சமைத்தலினால்பொருள் கொடுத்தவர்களுக்குப் பலனேயன்றி யிரப்பவர்களுக்குப் பலனில்லையென்று கருதவேண்டுவதின்று இவர்களுக்கும் பயனுண்டென்னுந்துணிவுதோன்றப்பெறாதவரில்லையென்றார். (உ0)

உருத்திரகோடீசன்றிருப்பணிக்குவந்தேதேனுங்
கருத்துடன்கொடுக்குமாந்தர்கல்வியுந்தவமுங்காண்பர்
திருத்தகவருமாய்வாழ்வர்செல்லுந்திசையும்வெல்வர்
வருத்திடிணிக்குமஞ்சார்மறுமைமுத்தியினுஞ்சேர்வார்

(இ-ள்) உருத்திரகோடீசருடைய திருப்பணிக்காக எவ்விதப்பொருளாவது சந்தோஷித்து உள்ளும்புறம்பு மொத்துக்கொடுக்குமாந்தர்கள்-கல்வியினையுந்தவப்பயனையு மடைவர்கள்-இதுவுமன்றி செல்வத்தில் முதன்மையானவர்களுமாவர்கள் செல்லுந் திக்குகளெங்கும்வெற்றியும் அடைவார்கள்-வருத்துகின்ற நோய்களுக்கும் அஞ்சார்கள்—எ-று. (உக)

திருமலைச்சொக்கிபாகன்றிருப்பணிக்கெனவேதேனு
மரிவையருதவிற்காந்தர்க்கணிகலம்போல்வாரியாண்டு
முரிமைமங்கலமுநீங்காரொளியுடைமகார்ப்பெற்றுய்வார்
பெருமனைவெறுக்கைமாறார்கற்பினும்பிழைத்தலெய்தார்

(இ-ள்) திருமலைச்சொக்கநாயகி பாகனாகிய வேதகிரீசுவரருடைய திருப்பணிக்கென்றுஎவ்விதப்பொருளாவது மாதராயுள்ளார்கொடுப்பாராகில் தத்தங்கணவர்களுக்குப் பூஷணம் போன்றவர்களாயிருப்பார்கள்-அன்றியும் தங்களுக்குரியதாகிய மங்கலத்தையெந்தநா

ளும் நீங்கார்கள்-நல்லகுணமுள்ள புத்திரர்களைப்பெற்று அவர்களால் நற்கதியடைவார்கள் - தங்கள்பெரியவீட்டினிடத்தில் திரவியம் ஒழியாதவண்ணம்பெற்றிருப்பார்கள்-பதிவிரதைத்தன்மையிலும்தவறுதலடையார்கள்—எ-று. (உஉ)

வேதவெற்பிறைவன்கோயிற்பணிக்கெனவிழைந்தேதேனு
மீதலின்மறைஞர்வேள்வியிருந்தவமுடிப்பர்வேந்தர்
பூதலம்புரப்பரிப்பர்பொற்குவைகுவிப்பர்வெண்மைச்
சாதரும்விளையத்துய்ப்பரேனையர்தாமுமுய்வார்.

(இ-ள்)வேதகிரியில் வீற்றிருக்கும் வேதகிரீசருடைய ஆலயத்திருப்பணிக்கென்று பிராமணர்கள்தங்கள்மனதில் விரும்பியதெதுவாகிலுங்கொடுப்பதினால்-யாகங்களையும் பெரியதவங்களையும்நிறைவேற்றுவார்கள்-அரசர்கள் பூமியையாள்வார்கள் -வைசியர்கள்பொற்குவைகுவிப்பார்கள்-சூத்திரர்கள்-விளையும்பொருளாகியதானியங்களையனுபவிப்பார்கள்மற்றையவருணத்தாரும் உய்வார்கள்-எ-று.

மற்றையவருணத்தார் - அநுலோமர் - பிரிதிலோமர் -முதலானவர்கள் இதன்விவரம் விரித்தெழுதிற்பெருகும்.

இட்டிகையொன்றிற்கேனுமினிதொருசிலைக்கேயேனுங்
கட்டியவிலைதந்தோருங்கைத்தொழிலிழைத்திட்டோரும்
பட்டிகைமருங்குல்பாகன்கயிலையிற்பசும்பொற்கோயில்
விட்டிமைத்தொளிரத்தேவர்வணங்கவீற்றிருப்பர்வேந்தே

(இ-ள்)அரசனே ஒருசெங்கல்லுக்காகிலும் இனிதாக ஒருகருங்கல்லுக்காகிலும் - ஏற்படுத்தியவிலைப்பொருள் கொடுத்தவர்களும்-அந்தப்பணியைக்குறித்துக்கைத்தொழில் செய்தவர்களும் -உடையணிந்தஇடையினையுடையபார்வதிபாகனாகிய பரமசிவன்வீற்றிருந்தருளும்கயிலாயகிரியிலிராநின்ற பொற்கோயில் விளங்கிப்பிரகாசிக்கத்தேவர்களெல்லாரும் வணங்கும்படி வாசமாயிருப்பார்கள்.

கோயில்விளங்கவென்றது - இவர்கள்பெருமையைச்சிறப்பித்துநின்றது.

சுருதிவெற்புடையான்கோயில்சூழ்மதிலொருகல்லேனு
மரிதுதன்கருமராடியகற்றினுளத்தில்வீழ்வான்

பிரிதருமேனும்பேய்நாயோரிபேரோந்தியாகித்
திரிதரும்யோனிதோறுமுய்வதெத்திறத்துமெய்தான்.

(இ-ள்) வேதகிரியையுடையவராகிய பரமசிவனது ஆலயத்தைச்சூழ்ந்த திருமதிலிலுள்ள ஒருகல்லையாவது தன்காரியத்தைக்குறித்து நீக்கினவன் நரகத்தில்வீழ்வான் - அதைவிட்டுநீங்கினாலும் பேய் - நாய் - கிழநரி - பெரியஓந்தி யென்னுமிவைகளாய்ச்செனித்துத்திரிவன் - அன்றியும் யோனிபேதங்கள்தோறும் பிறந்து அதினின்று முய்யுந்திறமெவ்விதத்தும் அடையமாட்டான்-எ-று.

இந்தவேதாசலத்தினெல்லையெம்பிரானுக்கென்றோர்
பந்தமீயிடினுமெம்மான்பதிபுகும்பசுமட்கோயி
லந்தமோடியற்றின்மற்றையவையெய்துஞ்செங்கலீட்டிற்
சந்தமேனியதாங்கல்லிற்சமைக்குமேற்சரணஞ்சாரும்.

(இ-ள்) இந்தவேதகிரியினிடத்தில் எம்மிறைவனாகிய வேதகிரீசருக்காக ஒருபந்தமிட்டவர்கள் - சிவலோகஞ்சேர்வார்கள் - பசியமண்ணால் ஆலயஞ்சமைப்பித்தால்சாமீபம் சாரூப்பிய மென்பவைகளையடைவார்கள்- செங்கல்லுக்குள் நல்லஅழகுபொருந்திய கல்லினாற்சமைப்பித்தால் திருவடியைச் சேர்வார்கள்—எ-று. (உசு)

அருமறைக்கிரிசூழெல்லைபரனுக்கிட்டிகையோரொட்டுத்
திருமதிற்குதவிற்றேவர்பதத்திற்போய்த்தெய்வயாண்டி
னொருபதினாயிரத்தோர்கோடிவாழ்ந்தோர்குடைக்கீ
ழிருநிலமுழுதுங்காத்துப்பரத்தினுமினிதிற்சேர்வார்.

(இ-ள்) யாவர்க்குந்தரிசனங்கிடைப்பதற்கரிய வேதகிரியைச்சூழ்ந்தவெல்லையில் சிவாலயத்திருமதிற்பணிக்காக எட்டுச்செங்கல் கொடுத்தால் தேவருலகத்திற்சென்று பதினாயிரத்தொருகோடிதேவவருஷமளவும் வாழ்ந்துபின் ஒருகுடைநிழலில் இந்தப்பூமிமுழுவதுங்காத்து மோக்ஷத்திலுமினிதாகச் சேர்வார்கள்—எ-று. (உஎ)

வேறு.

இனையவேதவெற்படிக்கணேதிருதிதிக்கெல்லை
சினையில்வான்றொடும்வடமரஞ்சிறந்தததொன்றுளதா
லனையதாருவின்ஞானதீர்த்தத்தருகோங்கும்
வினைகள்யாவையுமதனிழல்குறுகினும்விளியும்.

(இ-ள்) இத்தன்மையுள்ள வேதகிரியின்டிவாரம் நிருதிதிக்செல்லையில் கிளைகளால் ஆகாயத்தைத்தொடும் படியான சிறப்புள்ளஒரு ஆலமரமிருக்கின்றது - அந்தவிருக்ஷமானது விஞ்ஞானதீர்த்தத்தினருகே யோங்கியிருக்கின்றது - அதினுடைய நிழலில் சென்றிருந்தாலும் வினையெல்லாம் நீங்கிவிடும்—எ-று. (உஅ)

சருகுசூடினுமடிமண்மீதிடினுமத்தருவி
னருகில்வேதியர்க்கூட்டினுமடுத்தவிஞ்ஞானம்
பெருகுநீர்கொடுபிதிர்கடம்பெருங்கடன்செயினு
முருகுநீழலிற்செபிக்கினுமுத்திசித்தியதாம்.

(இ-ள்) அதனுடையசருகினை முடியில் தரித்துக்கொண்டாலும் அதனடிமண்ணை நெற்றியில் தரித்துக்கொண்டாலும் அதனிழலில் பிராமணசந்தர்ப்பணைசெய்வித்தாலும்-விஞ்ஞானத்தடத்தின்நீராக்கொண்டுதிலதருப்பணமுதலிய பிதிர்கடன்செய்தாலும்- மிகுந்த அதனிழலில்பஞ்சாக்ஷர செபஞ்செய்தாலும்மோக்ஷஞ்சித்தியாகும்

ஒல்லுங்கைப்பொருளெத்துணையேனுங்கொண்டொருவர்
செல்லும்வேள்விமற்றிழைப்பினுமுழுப்பயன்சிறக்குஞ்
சொல்லுமந்திரத்தேதொன்றுசெபிப்பினுந்துயரம்
வெல்லுமாயிரகோடியாய்த்தழைத்தெழும்வேந்தே

(இ-ள்)அரசனேபொருந்தியகைப் பொருள்எவ்வளவிருந்தாலும் இயன்றமட்டிலந்தத் திரவியத்தைக்கொண்டு நடத்தும் யாகத்தைச் செய்வித்தாலும்- பூரணமானபலன்சித்திக்கும்-சொல்லுகின்றமந்திரங்களிலேதொன்று செபித்தாலும் அதுஆயிரங்கோடிமந்திரமாகத்தழைத்துத் துயரங்களையெல்லாம் வென்றுவிடும்—எ-று (கூ0)

பாகசாலைமுனிந்தவேதாசலப்பதியின்
ரேமகைமார்சிந்துமோரவிழ்ச்சுவையெறும்பேனுங்
காகமேனும்வந்தருந்துமேல்வினையவர்கடப்பார்
யோகர்ஞானியர்க்கூட்டினூர்பயனெங்ஙனுரைக்கேம்.

(இ-ள் சமையல்வீட்டில்மாதர்கள் சிந்துகின்ற மதுரமுள்ள ஓரவிழ்சாதத்தை யிந்த வேதாசலமென்னும்க்ஷேத்திரத்தில் எறும்பா

கிலுங்காக்கையாகிலும் வந்துண்ணுமாகில் அந்தமாதர்கள் தீவினையைக்கடப்பார்கள்- யோகிகளுக்காவது ஞானிகளுக்காவது அமுதுபடைப்பவர்கள் அடையும்பயனையென்னென்று சொல்லுவோம்—எ-று (௯௧)

கூனுங்குஞ்சமும்செவிடருங்குருடுமெப்பங்கு
மானமன்னுயிர்க்கதிதியர்க்காதுலர்பிறர்க்கு
மானிடக்கையர்மறைக்கிரிசூழல்வாயன்ன
தானநல்குவார்சிவபதத்தணவுவர்தணவார்.

(இ-ள்) கூனர்களுங்குறளையர்களும்-செவிடர்களும்-குருடர்களும்-மூடவர்களுமாகியமனிதவுயிர்களுக்கும் - அதிதியர்க்காவது இரவலர்க்காவது மற்றையாருக்காவது இடத்திருக்கரத்தில்மானேந்தியிருக்கும்பரமசிவம்வீற்றிருக்கிற வேதகிரியினிடத்தில்அன்னதானஞ்செய்கின்றவர்கள் - சிவபதத்திற் சேர்வார்களேயன்றிச் சேராதொழியார்—எ-று. (௯௨)

ஐயமுச்சியம்போதருந்தவர்க்கிடவன்ன
மையவங்கைகொண்டேகுவார்நடக்குமோரடிக்கு
வெய்யதோர்கற்பஞ்சிவபதம்வேதவெற்புடையான்
செய்யதொண்டருக்கிசையுமூணளிப்பதார்தெரிப்பார்.

(இ-ள்) உச்சிப்பொழுதிலே தவசிகளுக்குப் பிக்ஷையிடஅன்னங்கையிலெடுத்துக்கொண்டு அடிவருந்தநடப்பவர்கள்-நடக்குமோரடிக்கு ஒருகற்பகாலம் சிவபதத்திலிருப்பார்கள்- வேதகிரீசருடைய அடியார்களுக்கு வேண்டியபடி அன்னம் படைப்பவர்களடையும்பல னிப்படிக்கொத்ததென்று தெரிந்துசொல்லத்தக்கவர்கள்யார்—எ-று. (௯௩)

ஒருகைநீர்மறைக்கிரியெல்லவேட்டவர்க்குதவிற்
பெருகுபானுவைப்பணிதொடுநாட்பெருமேருத்
தருகைமேம்படுதலங்களிற்செய்தனதழைக்கும்
பருகுநீர்ப்பந்தர்வைத்தவனானன்றுபரனே

(இ-ள்) இந்தவேதகிரிக்ஷேத்திரத்தில்-தாகவிருப்பமுள்ளவர்களு க்குஉச்சிக்காலத்தில் ஒருகைநீர்விட்டாலும்சூரியகிரணபுண்ணியகா லம்வரும்போது மகமேருவளவு சொர்ணதானம் மற்றோர்தலங்க ளிற் செய்தபலன்கிடைக்கும் - யாவருமுண்ணும் படிதண்ணீர்ப்ப ந்தல்வைத்தவன்மானிடனேயானாலும் அவன்தேவனே—எ-று. (கூச)

வளவயற்பொதும்புடுத்தமூதூர்பலமறையோர்க்
களவின்மெய்த்தவர்க்குருத்திரகோடியூடளித்தோர்
கிளையுஞ்சேனையும்வெறுக்கையுங்கெழுமமண்ணாண்டு
களையுங்காயத்தராயபின்கதியையுங்காண்பார்.

(இ-ள்) வளப்பமுள்ள கழனியும் சோலையுஞ்சூழ்ந்த பழமையா கியபலகிராமங்கள்பிராமணர்களுக்கும் அளவில்லாத உண்மைத்தவ முள்ளமுனிவர்களுக்கும் இந்தருத்திரகோடித்தலத்தில் தானமாகக் கொடுத்தவர்கள்சுற்றமும்பதாதியும்திரவியமுமிகுதியாகப்பொருந் த இந்தப்பூமியையாண்டு சரீரம்நீங்கினவர்களானபின்பு மோக்ஷத் தையுமடைவார்கள்—எ-று. (கூரு)

மடந்தனக்கெனமுனிவர்க்கோர்மனையளவளித்தா
னடந்துமுத்தியிற்புகுவனோன்மடத்தறநடப்ப
வடைந்துவேதவெற்பெல்லையினிடத்துடனடிமை
மிடைந்தபல்பொருடருபவர்பெறுவதார்விரிப்பார்.

(இ-ள்) வேதகிரித்தலத்தில்தபசிகளுக்கு மடங்கட்டும்பொருட்டு ஒருமனையளவுநிலங் கொடுத்தால் முத்தியிலிந்தக்காயத் துடன்போ வார்களேயானால் அந்தமடதர்மம் நடக்கத்தாம் அங்குச்சென்று விளைநிலமும் அடிமையாளும் நிறைந்தபல பொருள்களென்னு மிவைகளைக்கொடுப்பவர்கள் பெறும்பலனை யளவிட்டுச்சொல்பவ ரார்—எ-று. (கூசா)

இறக்கவுத்தரகாசியிற்கமலைவெல்லையிற்போய்ப்
பிறக்கவம்பலந்தரிசிக்கமுத்தியைப்பெறுவார்
சிறக்கவெத்துணைதூரத்துக்கழுக்குன்றச்சிகர
முறக்கையாற்றொழவக்கணத்தெய்துவருமவோய்

(இ-ள்) அறிஞனே காசியிலிறந்தால்- திருவாரூரெல்லையிற் பிறந் தால்சிதம்பரந்தரிசித்தால் முத்தியடைவார்கள் -சிறப்புடைய இந்

தத்திருக்கழுக்குன்றச்சிகரத்தை யெவ்வளவு தூரத்தில் தரிசனமானு லும் அங்கிருந்தபடியே கைகளால்தொழுதால் அப்பொழுதேமு த்தியையடைவார்கள்—எ-று. (௬எ)

மறைமலைக்கொழுந்தையுமலையான்மடந்தையையு
மிறைவமற்றெமதிருவராலெழுஞ்சுனைதனையு
நிறையுநந்திதீர்த்தத்தையுநினைத்தெந்தநாட்டி,
னுறைபுனற்படிந்தாலுமெப்பாவமுமகலும்.

(இ-ள்) அரசனே - வேதகிரிக்கொழுந்தாகிய பரமசிவத்தையும் மலைச்சொக்கநாயகியாகிய பார்வதிதேவியாரையும் எங்களிருவராலு ண்டாகிய சுனையினையும்-நிறைந்துள்ள நந்திதீர்த்தத்தையும்- மனதி ல்நினைத்து எந்தநாட்டிலுள்ள தீர்த்தத்தில் முழுகினாலும் எவ்வித பாவங்களுநீங்கும்—எ-று. (௬அ)

இருக்குமூர்தருநடக்குமேற்பறக்குமென்றிசைத்த
வருக்கமாமுயிர்யாவையுமறைப்பெருங்கிரியின்
பெருக்குநாற்புறத்தெல்லையிற்பிறந்தனவிறந்தாற்
கருக்கண்மீண்டொருகாலத்துங்கலக்குமோகலவா

(இ-ள்) இருப்பவை-ஊர்கின்றவை - நடக்கின்றவை மேலே பற க்கின்றவை - என்றுசொல்லப்படும் வர்க்கமாகிய உயிர்களெல்லாம் பெரிதான வேதகிரியினாற்புறத் தெல்லைக்குள் - பிறந்தாலுமிற ந்தாலும் - மறுபடிகருவினிடத்துவந்துசேருமோசேராவாம்-எ-று

மறைமயக்கிரியெல்லையின்வந்திமைப்பொழுது
பொறையுயிர்த்திருந்தேகுவார்பரபதம்புகுந்தா
லிறைவனைப்பலகாலமுந்தொழுதெழுந்திகவா
துறைபவர்க்குறுங்கதியினதளவையாருரைப்பார்.

(இ-ள்) வேதசொரூபமானவேதகிரியினெல்லையில்வந்து இமைப் பொழுது இளைப்பாற்றிக்கொண்டு செல்லுகின்றவர்கள்சிவபதஞ் சேர்வார்களென்றால் வேதகிரீசனைப்பலகாலமுந்தொழுதெழுந்து அவ்விடம்விட்டு நீங்காமல் வாசமாயிருப்பவர்களுக்குப்பொருந்து ம்பதவியினுடைய அளவையார்சொல்லத்தக்கவர்கள்—எ-று.(௬௯)

யாண்டிறப்பினுமிறந்தவர்க்கென்னவாரணவெற்
பாண்டவ்வெல்லைவந்துறுகடனியற்றினுமவர்போய்க்

பாவங்கள் - மாற்று அதிகரித்த பொன்னைத்திருடுந் தீங்கினையொக்கு மென்று நான்குவேதங்களுஞ் சொல்லுகின்றன—எ-று. (௬௬)

பட்டுடைமகளினப்பெண்பகினிசெவ்வணியிற்பாவை
நட்டவருடன்பிறந்தோர்நந்தனர்தாரஞ்சேர்தல்
கட்டுதற்குரியோன்வைகக்கன்னியைக்கொடாதுவைத்த
லெட்டுமக்குரவன்பன்னியிடைப்புணர்ந்தமையோடொக்கும்

(இ-ள்) பட்டுடையுடுத்தியபுத்திரி - இனத்துப்பெண் -உடன்பிறந்தவள் - சூதமாதர் - சிநேகருடைய மனைவியர்-சகோதரர்மனைவியர் - புத்திரர்களுடையமனைவியர்- என்னுமிவர்களைப்புணர்தல் மாங்கலியசூத்திரங் கட்டுதற்குரியவனிருக்க அவனுக்குக்கன்னிகையைக் கொடாதுவைத்தல் - என்னுமிவ் வெட்டுப்பாவமும் குருபத்தினியினிடத்திற்சேர்ந்ததையொப்பாகும்—எ-று. (௬௭)

எவையெவைசெய்யும்பாவத்திவையிவைக்கிணையாமென்னு
மவையவையெல்லாமிந்தவாரணக்கிரியைச்சார்ந்தா
னவையறச்சிதறுமீண்டுநண்ணினர்தீயோரேனுஞ்
சுவைநலத்தூயோர்நண்ணார்தூயவரோனுந்தீயோர்

(இ-ள்) குற்றத்தையுண்டாக்கும் பாவங்களில் எந்தப்பாவங்கள் அவைகளுக்கு அவைகளே யொக்குமென்று சொல்லப்பட்டமகாபாதகங்களெல்லாம் இந்த வேதகிரியினிடத்திற்சேர்ந்த மாத்திரத்தில் குற்றமறச்சிதைந்துவிடும் -இந்தத்தலத்திற் பொருந்தியிருப்பவர்கள் கொடியவர்களேயானாலும் மிகுந்தபரிசுத்தர்களாவர் - இங்குவசிக்காதபேர் பரிசுத்தர்களேயானாலும் கொடியவர்களேயாவர்.

மாதரைச்சுதரைத்தூயதவத்தரைவதைத்தார்கோவை
வேதரைச்சிதைத்தார்நன்றிமெய்ந்நெறிமறந்தார்செம்பொன்
காதலிற்களவுசெய்தார்கள்ளுண்டார்வினையோடெல்லாம்
போதருத்திரகோடிப்பேர்புகலினும்பூழியாமால்.

(இ-ள்) மாதர்களையும் - மைந்தர்களையும் - பரிசுத்தராகிய தவசிகளையுங்கொலைசெய்தவர்களும்-பசுக்களையும்பிராமணர்களையுங்கொலைசெய்தவர்களும்-ஒருவர்செய்த உதவியினையும்உண்மையினையுமறந்தவர்களும் - செம்பொன்னைவிருப்பத்துடன் திருடினவர்களும்-மது வினையுண்டவர்களுமாகிய இவர்களுடைய வினைகளும் பாவங்களும்ருத்திரகோடியென்னும் பெயரினைவாக்கினாற்புகழ்ந்து சொன்னாலும்பொடியாய்விடும்—எ-று. (௬௧)

மாலயன்மகவான்வைகும்பதத்தினுமறைக்குன்றஞ்சூழ்
சோலையிற்கிருமியாகித்தோன்றலேபோதுந்*தோன்றல்
மேலையபிதற்கொன்றில்லை கோக்கொலைவினைத்தநீயிக்
காலைவந்தருச்சியாதுபோதியோகதியுந்தோராய்.

(இ-ள்) திருமால்-பிரமதேவன்-தேவேந்திரன்என்னுமிவர்கள் வாசமாயிருக்கும் பதவிகளிலிருப்பதைப்பார்க்கினும் -இந்த வேதகிரியைச்சூழ்ந்தசோலையில்புழுக்களாகிப்பிறந்திருத்தலே போதுமானது - அரசனே இதற்கு யாதொருசந்தேகமுமில்லை- கோவத்திசெய்தநீயிப்போதுவந்து பரமசிவத்தை அருச்சனைசெய்யாமலும் அடையுங்கதியினையறியாமலும் போகின்றனையோ—எ-று. (௬௨)

(*தோன்றல்-தோன்றால்எனநீண்டது.)

பருதியங்குலத்துவேந்தேயாதலிற்பரிந்துநின்னைப் [ஞ்
பொருதிவண்மறித்துச்சொல்வேமென்பதுபுரிந்துபோந்தே
சுருதியங்குன்றத்தானைத்தொழுதுபூசித்தல்வேண்டும்
வருதியீண்டெனச்சம்பாதிமாதவர்மீட்பமீண்டான்.

(இ-ள்) நீசூரியகுலத்துவேந்தனேயாகையால்பரிவுகொண்டுபோர்செய்து உன்னைமறித்துச்சொல்வோமென்பதை விரும்பிவந்தோம் ஆதலால் வேதகிரீசனைத்தொழுது பூசித்தல்வேண்டும் வாவென்று சம்பு ஆதியென்னுமுனிவர்கள்மீட்பத்திரும்பிவந்தான்—எ-று.

சூரியர்கள் இந்தத்தலத்தில் முன்பூசித்ததினாலும்தாங்களிங்கே வந்து தவஞ்செய்வதற்குச் சூரியன்காரணமாதலினாலும் சூரியகுலத்து அரசனிடத்தில் அவர்களுக்குத்தயையுண்டாயது.

தலவிசிட்டச்சருக்கம் முற்றியது.

ஆக திருவிருத்தம் - அ௱௰௫.

# சூரகுருச்சருக்கம்



உவர்விளை நிலம்புகவொழுகுமாறுபீன்
டிவர்விளைகழனிநாடெய்துமாறெனக்
கவர்படுதடத்தினுங்கழுக்குன்றெல்லையிற்
றவருடைத்தடைக்கையான்றானைமீண்டதே.

(இ-ள்) உப்புவிளையும் நிலத்தில்செல்லும் ஆறுனது செறிந்கவி ளைகழனியிற்செல்லுதல்போல திருக்கழுக்குன்றத்தெல்லையிலிருக் கும்கவர்வழிகளினும் விற்பிடித்தகையையுடைய அவ்வரசனது சே னைதிரும்பிநடந்தது—எ-று. (க)

வானையுந்திசையையுந்தூளிமாய்த்தெழக்
கானைவிட்டரசனுங்கழுக்குன்றெய்தலுஞ்
சேனையுங்கடலுமச்சிலம்பைமாநிலத்
தானையங்கடறழீயெனத்தழீயதே.

(இ-ள்) ஆகாயத்தையுந் திக்குகளையும் தூளிமறைத்தெழும்படி அவ்வரசன் வனத்தைவிட்டுத் திருக்கழுக்குன்றத்திற்சென்றவளவில் சேனைசமுத்திரமானது அந்தத் திருக்கழுக்குன்றமலையைப் பூமியி ன்ஆடையாகியஅழகுள்ளகடல்சூழ்ந்ததுபோலச்சூழ்ந்தது-எ-று.

தாட்டொடுகழன்மன்னன்றானைமாக்கடன்
மாட்டிடைவிடாதெழமறையின்மாக்குன்ற
மூட்டுதெள்ளமுதம்வந்துதிப்பவாரியி
னாட்டுமத்தாமெனநடுத்திகழ்ந்ததே.

(இ-ள்) முழங்காலளவும் நீண்டகைகளையுடைய அவ்வரசனது சேனைக்கடல் நாலுபுறத்திலுஞ் சூழ்ந்திருப்பதினால் அந்தவேதகி ரியானதுதேவர்களுக்கூட்டும்படியான அமுதமுண்டாகச் சமுத்தி ரத்தில் நாட்டியமத்தென்றுசொல்லும்படி நடுவில்விளங்கியது.

பாருளோர்மவுலியுங்குடையும்பற்பல
வாரணமால்வரையதனைச்சூழ்வது
மேருவையளப்பிலவெயிலுந்திங்களுஞ்
சீருடைவலம்புரிதிறத்தையொத்தவே.

(இ-ள்) அந்தச்சாரலில்பாவியிருக்குஞ்சேனைவீரர்களுடைய பலவாகிய ரத்தினக்கிரீடங்களும் வெள்ளைக்குடைகளும் - பெரிய

வேதகிரியைச்சூழ்ந்திருப்பது- அளவில்லாதசூரியர்களுஞ்சந்திரர்களும்-மகமேருவைச்சிருடன்வலஞ்செய்யுந்தன்மையையொத்தது

வானவர்பூமழைமதுவின்மாரியுங்
கானருவியுமலர்க்கழுக்குன்றின்புற
மானையின்மதமுமாவிலாழிபாழியுஞ்
சோனையின்வழிதரத்தொய்யல்பட்டதே.

(இ-ள்) தேவர்கள்பொழிகின்ற பூமழையின்தேனும் - காட்டிலோடுகின்ற அருவிநீரும் - ஆனைகளின்மதநீரும் - குதிரைகளின் வாய்நுரைவெள்ளமும்-சோனைமாரிபோல் அந்தத் திருக்கழுக்குன்றத்தின் புறத்தில்பெருகுவதினால்சேறுபட்டது—எ-று. (ரு)

கானொழிந்தரசனுங்கங்கமாதவர்
வானிழற்கொடுகுடைநிழனுமாற்றிப்பின்
சேனையைநிறீமறைக்கிரியைத்தேரிழிந்
தானமிலமைச்சனேயுடன்கொண்டேறினான்.

(இ-ள்) அரசனானவன் அந்தக்காட்டினைக்கடந்தவுடன் தேரைவிட்டிழிந்து கழுகுருவமாயிருக்கிற முனிவர்களுடைய அருளாகியபெரியநிழலைப்பெற்றுக்கொண்டு-வானில்நிழல்செய்யுந்தன்குடையினிழலைமாற்றிப் பின்னாலே சேனையை நிறுத்திவிட்டு மந்திரியைமாத்திரம் அழைத்துக்கொண்டு வேதகிரியின்மேலேறினான்-எ-று. (சு)

முன்னிருபதத்தினுமுதல்வனைத்தொழும்
பன்னிருவருங்குலத்தொருவன்பான்மையாய்ப்
பின்னருமருச்சனைபுரியப்போந்தென
மன்னவனணிகலன்வயங்கப்போயினான்.

(இ-ள்) ஆதியில் வேதகிரீசருடைய திருவடிகளைப்பணிந்தபன்னிரண்டு சூரியர்களும் - தங்கள்குலத்திலொரு அரசன்வடிவமாய்ப் பின்பும் வேதகிரியையருச்சிக்கவந்ததுபோல ஆபரணங்கள்விளங்கும்படி யவ்வரசனுஞ்சென்றான்—எ-று. (எ)

கழுகெனுமுனிவராற்கழறக்கேட்டந்த
முழுவரையடிநடுமுடியின்மூன்றினு
மிழிவறவிலிங்கமூர்த்தியற்றிப்பூசையும்
வழிமுறைபாற்றினன்வணங்கிப்போற்றினான்.

(இ-ள்) கழுகுருவமாயிருக்கிறமுனிவர்களாற்சொல்லக்கேள்விப்பட்டு அந்தப்பெரிய மலையினுடைய அடிநடுமுடியென்னு மிம்மூன்றிடத்திலும் குற்றமற மூன்றுசிவலிங்கந்தாபித்து ஆகமவிதிப்படிபூசைசெய்துவணங்கித்துதித்தான்—எ-று. (அ)

அன்புறத்துதிசெயுமரசன்பாதக
மின்புறச்சிரத்துநின்றெழுந்துகாகமாய்
வன்புறப்பறந்துநான்மறைக்குன்றத்தினுந்
தென்புறக்குன்றிடைச்சென்றுவீழ்ந்ததே.

(இ-ள்.) அன்புபொருந்தத்துதிசெய்கின்ற அவ்வரசனுடையபாதகமானது இன்பமடையும்படி சிரசில்நின்றும் காக்கைவடிவமாயெழுந்துவன்மையுறப்பறந்துவேதகிரியின்தென்றிசைமலையில் போய் வீழ்ந்தது—எ-று. (௯)

பொழிந்தனர்விண்ணவர்பூமழைக்குழா
மொழிந்தனரெண்ணிலாமுனிவராசிகள்
வழிந்தனர்கட்புனல்வணங்கிநோக்கின
ரொழிந்தனரில்லைபேருவகைவெள்ளமே.

(இ-ள்) தேவர்கள்பூமாரி மிகுதியாகப்பொழிந்தார்கள்-அளவில்லாதமுனிவர்கள்-ஆசீர்வசனங் கூறினார்கள் -அன்றியும் அங்கிருந்து பார்த்தவர்களெல்லாரும் ஆனந்தபாஷ்பம் பொழிந்து பணிந்து மிகுந்தசந்தோஷத்தில்நின்றும் நீங்காதவர்களானார்கள்—எ-று-(௰)

அந்தரதுந்துமி பார்த்ததன்னவன்
றந்திரங்களித்தது தரணியன்றியும்
வெந்தெரிநிரயத்துமேனின்றேறின
சுந்தரமூவெழுசுற்றமுற்றுமே.

(இ-ள்) தேவதுந்துமிகளொலித்தன - அந்தவரசனுடைய சேனைகளிப்படைந்தது - அப்போதுகண்ட உலகத்தாரும் அவர்களுமன்றி அவர்களுடைய இருபத்தொருதலைமுறையாரும் வெந்தெரிகின்றநரகத்தினின்றுமேறினார்கள்—எ-று. (௰௧)

அனையதுகண்டதிசயித்தமைச்சனுந்
தனைதரவிலிம்மென்றனைத்துத்தூயநீர்

புனைமலர்மாலையாற்பூசித்தேத்தினன்
வினைபெருவிளக்கெதிரிருளின்வீந்தவே.

(இ-ள்) அத்தன்மையைக்கண்டு அதிசயித்து மந்திரியானவன்-அப்போதேயொரு சிவலிங்கந்தாபித்துப் பரிசுத்தமுள்ள நீரினல் திருமஞ்சனஞ் செய்து மலர்மாலைகள்சாத்தி யருச்சித்துத்தோத்திரஞ்செய்தனன் - அப்பொழுதே அவனுடைய பாவங்களெல்லாம் பெரியதீபத்துக்கெதிரிலிருள் மாய்வதுபோலமாய்ந்தன—எ-று.

(வேறு) காவிதியோடந்தமறைக்கிரியிழிந்துகொடிநுடங்குங்கனக
மாடத், தூவிமதிற்கோபுரஞ்கோயில்வீதிமணிமாளிகையுந்
தொகுத்துழுதூர், மேவியதொல்வளம்புதியவளமாக்கித்
தைப்பூசவிழாக்கண்டேத்திப், பாவியனுய்ந்தனனென்றுஞ்
சம்பாதிமாதவர்தம்பதத்தில்வீழ்ந்தான்.

(இ-ள்)மந்திரியுடன் அந்தவேதகிரியினின்றுமிழிந்துமேலே கொடிகள்அசைந்துகொண்டிருக்கும் படியாகிய சொர்ணமயமானவீடுகளும் மதில்களுங்கோபுரங்களும் பொன்னினுற் கோயில்களும் வீதிகளும் -திருமாளிகைப் பத்திகையுமேற்படுத்திப் பழமையாகிய அந்தக்ஷேத்திரத்தில் பொருந்தியமுன்வளங்களை யெல்லாம்புதியவளமாகச் செய்வித்துத் தைப்பூசநக்ஷத்திரத்தில் திருவிழாநடத்தித் தரிசித்துப் பாவியேனுகிய நான்உய்ந்தேனென்று - சம்பு-ஆதியென்னு மவ்விரண்டுமுனிவர்களுடைய் பாதங்களில்வணங்கினன்.

தங்களிருபதம்பணிந்தசுராகுருவைச்சம்பாதிதவத்தோர்நோக்கித்
திங்களெனுமொருகுடைக்கீழ்ப்புவிகாத்துப்பாகதியின்சேர்
கென்றேத்த, வங்கெதிருங்கடலுமெனச்சேனையொடுமெல்லையிற்
போயமைச்சனேடுமங்கலமும்முரசார்ப்பதிலம்புரந்துபோந்து
சிவன்மருங்குவாழ்ந்தான்.

(இ-ள்) தங்களுடைய இரண்டுதிருவடிகளையும் பணிந்தசுராகுருவாசனைச்சம்பாதி யென்னுமுனிவர்கள் பார்த்துச்சந்திரனென்று சொல்லும்படியான ஒற்றைக்குடைக்கீழவி லிவ்வுலகத்தைக்காத்துப் பின்பு பரகதியைச்சேரக்கடவை யென்று வாழ்த்திவிடைகொடுக்க அரசனுனவன் சமுத்திரம்போன்ற சேனையுடன் தன்னுடையராசதானியாகிய மல்லைநகரத்தில் மந்திரியுடன் போய்ச்சேர்ந்து மங்க

ளுமுள்ளமும்முரசங்களும் சதாகாலம் ஆர்வாரிக்கும்படி அரசாட்சி செய்து அதற்குமேல்சாமீப்பிய பதம்பெற்றுவாழ்ந்தான்—எ-று. (மும்முரசாவன-மணமுரசு-ரணமுரசு-செயமுரசுஎன்பவை.)

என்றிசைத்துவிழிகண்முகிழ்த்தானந்தக்களிதிளேப்பவிருந்
தான்சூதனன்றிசைத்தான்சூதனமக்கென நைமிசாரணிய
நல்லோரெல்லாம், வென்றியடைத்தனம்பாவக்கடலுடைந்
துய்ந்தனங்கதியும்விளைந்ததென்று, வொன்றியபத்தியராயிக்
கழுக்குன்றேசிவனமக்கென்றுளத்திற்கொண்டார்.

(இ-ள்-) சூதமகாரிஷியானவர் இவ்வாறுசொல்லிக்கண்களைமூடிக்கொண்டு ஆனந்தக்களிப்புண்டாகத்தியானத்திலிருந்தார் - இவரிவ்வாறிருக்க நைமிசாரணிய முனிவர்கள்இந்தச்சூதமுனிவர் திருக்கழுக்குன்றச்சரித்திரத்தை நமக்குநன்றாகச்சொல்லினர் -அதைக்கேட்டுநாம்வென்றியடைந்தோம்பாவக்கடலு டைந்து உய்ந்தோம் மோக்ஷசாம்பிராச்சியமும் கிடைத்ததென்று மிகுந்தபக்த்தியுள்ளவர்களாய்த் திருக்கழுக்குன்றமே நமக்குப் பரமசிவமென்று உள்ளத்திற்கொண்டார்கள்—எ-று. (௰௪)

இன்னதிருக்கழுக்குன்றப்புராணத்தையிசைத்தோர் மற்றிசை
யினென்றோரு, மன்னசுவை செவிக்கொண்டோர் வரைந்தோரஞ்ச
கயிற்றோடலகமீந்தோர், நன்னாருச்சனைபுரிந்தோர் வேதமருச்சி
த்ததொரு நாதன்பாதத், துன்னருமுத்தியும்பெறுவர்மறுமையிலி
ம்மையிற்செல்வத்துவகைகூர்வார்.

(இ-ள்,) இத்தன்மையுள்ள திருக்கழுக்குன்றப்புராணத்தைச்சொல்லுகின்றவர்களும் - சொல்லுமென்றவர்களும்- அந்தச்சரித்திரமாதுரியத்தைக்காதினாற்கேட்பவர்களும் - எழுதினவர்களும்அந்தப்புத்தகத்துக்குமையிட்டுக்கயிறுகோத்து கொடுப்பவர்களும்-அன்றியும்இந்தப்புராணத்தை நன்மையுடன் பூசித்தவர்களும் -வேதங்களாற்பூசிக்கப்பட்ட வேதகிரீசருடைய திருவடிகளில் கிடைப்பதற்கரிய மோக்ஷம்பெறுவார்கள் - இப்பிறப்பிற்செல்வமுள்ளவர்களா யிருப்பார்கள்—எ-று. [சுரகுருச்சருக்க முற்றியது.] (௰௫)

ஆ-சருக்கம் - உ௬ - ஐ திருவிருத்தம்-அ௬உ

திருச்சிற்றம்பலம்,

